# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்
## உரைக்கொத்து

### பாகம் - இரண்டு



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 527

# தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்

# உரைக்கொத்து

## இரண்டாம் பாகம்

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்

திருவையாறு *சாமி. கங்காதரன்*

*7, முதல் மாடி, அக்ரகாரம்,*

*பாகூர், பாண்டிச்சேரி.*




*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*

**சரசுவதி மகால் நூலகம்,**

**தஞ்சாவூர்.**

*2009* ]

[ *விலை :* **ரு. 440-00**

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் உரைக்கொத்து (இரண்டாம் பாகம்) |
| பதிப்பாசிரியர் | : திருவையாறு சாமி. கங்காதரன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 527 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2009 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 888 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக் கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : இலக்கணம் |
| விலை | : ரூ. 440/- |

# வெளியீட்டாளர் முகவுரை

தொன்மையாலும், நிறைநூல் முறை நன்மையாலும் சிறந்தது தொல்காப்பியநூல். தமிழில் இறவாமல் 3000 ஆண்டுகளுக்குமேல் நின்று நிலவும் பழமை போலவே, குறைவிலா நிறைவு, அறிவுசால் செறிவு, நிரம்பிய வளம், வரம்பிகாமல் வரையறுத்து வடித்த முறை மொழி வளர்ச்சிக்கு என்றும் உதவும் கட்டமைப்பு ஆகியவற்றில் ஒப்புயர்வற்ற சிறப்பு வாய்ந்த (இலக்கண)நூல் தொல்காப்பியர் பெயரால் வழங்குகிறது. தமிழில் மட்டுமல்லாது உலகில் பல மொழிகளிலும் வழங்கும் புகழ்வாய்ந்த எல்லா இலக்கணங்களிலும் இல்லாத இயல் வளமும், எழிலும், பயனும், பண்பும் வாய்ந்தது இந்நூல். வேறெந்த மொழி நூலுக்கும் இல்லாத பழமையும், பெருமையும் அழகும், அருமையும் வாய்க்கப்பெற்ற இந்நூல் தமிழரின் தனிப்பெரும் செல்வமாகும்.

இந்நூற்கு இடைக்காலத்தில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் கல்லாடனார், தெய்வச்சிலையார் ஆகியோர் தத்தம் புலமை நலம் தோன்ற உரை வகுத்தளித்தனர். நம் காலத்தும் பாவலரேறு பாலசுந்தரனார், வெள்ளைவாரணனார், ச.சோ. பாரதியார் முதலான சான்றோர் உரை வகுத்துளர். தொல்காப்பியப் பதிப்பில் பல சான்றோர்கள் ஈடுபட்டுள்ளனர். 19ஆம் நூற்றாண்டு முதல் தொல்காப்பியப் பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. இப்பதிப்புப் பணியில் தஞ்சை சரசுவதி மகாலும் ஈடுபட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியம், இலக்கண விளக்கம், பிரயோக விவேகம் முதலான நூல்களை இந்நிறுவனம் வெளி யிட்டுள்ளது. 2008ஆம் ஆண்டில் இத்துறை முறைபோகிய வித்தகர் திரு. டி. வி. கோபாலய்யர் பதிப்பித்தளித்த தொல்காப்பியம் - சொல்லதிகாரம்- உரைக்கொத்து வெளியிடப்பட்டது.

மேலும் இந்நூலகம் 2007இல் வெளியிட்ட தொல்காப்பியம் எழுத்ததிகாரம் உரைக்கொத்து முதற் பகுதியின் ஆசிரியர்

திரு. டி. எஸ். கங்காதரன் அவர்கள் ஆவார். அதில் அவர் தொல்காப்பியனாரின் காலம், சமயம், பிறப்பிடம் முதலான செய்திகளையும், தொல்காப்பியம் முதலுரையாசிரியரான இளம்பூரணர் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் தொடர்ந்து நச்சினார்க்கினியரின் வரலாற்றினையும் தக்க அகப்புறச் சான்றுகளோடு விளக்கியுள்ளார்.

இவ்விரண்டாம் பகுதி அகத்தோத்துப் பற்றிய உயிர் மயங்கியல் முதலான எஞ்சிய மூன்று இயல்களையும் கொண்டது.

சற்றே விரிவான பதிப்புரை நூல் முழுவதற்கும் அம் முதற்பகுதியில் இடம்பெற்றுள்ளமையால், உரைக்கொத்துப் பற்றிய விளக்கவுரைகள் இப்பதிப்புரையில் இடம் பெற்றில.

உரைகளை ஒப்பீடு செய்வார்க்கும் நூல்களை ஒப்பீடு செய்வார்க்கும். தமிழ் மொழியில் காலப்போக்கில் எழுந்த மாற்றங்களை அறிய விழைவார்க்கும், இலக்கணக் கோட்பாட்டு வளர்ச்சியினை மதிப்பீடு செய்வார்க்கும் தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் முதல் மற்றும் தற்போதைய இரண்டாம் பகுதியாகிய இப்பதிப்பும் பெரும்பயன் நல்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர்(பொறுப்பு) வகிக்கும் சைவத் தமிழ்ப்புலவர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர உழைத்த கணினிப் பணியாளர் அனைவருக்கும் எனது இனிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**எம். எஸ். சண்முகம்,** இ.ஆ.ப.,
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்*
*இயக்குநர்,*
**சரசுவதி மகால் நூலகம்.**

தஞ்சாவூர்,
21 - 9-2009

# பொருளடக்கம்





# பதிப்புரை

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் - உரைக்கொத்து இரண்டாம் பகுதி இதுபோது வெளியிடப்பெற்று நூல் நிரம்புகிறது. முதற்பகுதி, புறத்தோத்துப் பற்றிய நூன்மரபு முதலான ஆறு இயல்களைக் கொண்டது; இவ்விரண்டாம் பகுதி அகத்தோத்துப் பற்றிய உயிர்மயங்கியல் முதலான எஞ்சிய மூன்று இயல்களையும் கொண்டது.

சற்றே விரிவான பதிப்புரை நூல் முழுவதற்கும் முதற்பகுதியில் இடம்பெற்றுள்ளமையால், உரைக்கொத்துப் பற்றிய விளக்கவுரைகள் இப்பதிப்புரையில் இடம்பெற்றில.

பண்டையுரையாசிரியன்மார் இருவர்தம் உரைக்கும் விளக்கமாக நிகழும் உரைக்குறிப்புக்களில், அன்னார் உரையிற்காணும் சொற்றொடர் சிலவற்றுக்கு விளக்கமும், மலைவாகக் காணப்படுவனவற்றிற்கு ஏற்ற அமைதியும், ஒரோவழி அவர்தம் உரையுள் காணப்படும் பிழையும் எனப் பல்திறங்களை உணரலாம். பிறர் சுட்டும் மறுப்புரைக்கு ஏற்ற அமைதியும், அன்னோர் உரையிடைத் தோன்றும் மலைவும் இடம்பெறுதலோடு, அவர்தம் உரைகளிற் சிலவற்றது ஏற்புடைமையும் தழுவியுரைக்கப்படுதலும் காணலாம்.

பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார், வே. வேங்கடராசலு ரெட்டியார், ச. பாலசுந்தரம்அவர்கள் - இலக்கணத் திறனாய்வாளர் இம் மூவரும் தம் ஆய்வுரையுள் பண்டை யுரைகாரர் கூற்றுள் குறைகாணும் இடங்கள் பலவும் எஞ்சாமல் ஆவலப்பட்டுள. அன்னார்தம் கூர்த்த மதியுரைகள் பொருந்துழியெல்லாம் போற்றியுரைக்கப்பட்டுள.

ஒத்த நூற்பாக்கள் சுட்டப்பெறுபவற்றுள் இவ் விரண்டாம் பகுதிக்கண் தொன்னூல் விளக்கமும் சுவாமி நாதமும் நீக்கப்பட்டுள, அவற்றுள் புணரியற் செய்திகளது நிரம்பாமை கருதி.

பிற்சேர்க்கைப் பகுதியுள் அகரவரிசைத் தொகுப்பிடை இளம்பூரணத்திற்கு **அடிகளாசிரியர்** பதிப்பும், நச்சினார்க் கினியத்திற்கு புன்னாலைக் கட்டுவன் **சி. கணேசய்யர்** பதிப்பும் பெரிதும் உபகாரப்பட்டுள. மிகையாகத் தோன்றிய சிலவற்றைக் களைந்துள்ளேன். அவ்வொப்புரவாளர் இருவர்க்கும் எளியேனது நன்று உரித்தாம்.

தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீடாகிய இவ்வுரைக் கொத்துப் பதிப்புப் பன்முகத்தானும் நலம் நிறைந்து, ஈவோர் கொள்வோர் என இரு சாரார்க்கும் பயன்படவேண்டும் என்னும் வேணவாவினேன். தமிழறிஞருலகம் இவ் வெளியீட்டினை மகிழ்ந்து வரவேற்கும் என்னும் பெரு நம்பிக்கையுடையேன்.

எல்லாம் வல்ல ஐயாறன் அருள் துணை நிற்க !

புதுச்சேரி, திருவையாறு **சாமி.கங்காதரன்**

22 - 7 - 2009



## நச்சினார்க்கினியப் பதிப்புக்களில் புகுந்துள்ள பிழைகளும் அவற்றின் திருத்தங்களும்

### உயிர் மயங்கியல்

**சூ. 204.** புலி போலத் தந்தான்.

புலி போலத் தாவினான் - என்பதே ஏற்றது.

'கேசவனை விடுத்துப் போகி யோளே'

'கேள்வனை விடுத்துப் போகி யோளே' - என்பதே நல்ல பாடம்.

**சூ. 210.** செய்யிய என்று சொல்லப்படுகின்ற வினையெச்சம்.....

செய்யிய என்று சொல்லப்படும் வினையெச்சம் - என்றலே ஏற்றது. இந்நூற்பா உரையில் உள்ள ஏனையவற்றை நோக்க, சொல்லப்படும் என்பதே ஈண்டு இருக்கவேண்டிய சொல் என்பது தெளிவாகும்.

செய்யும் என்பதன் பொருட்டாகிய மனவென் இறுதிச் சொல்....

செய்யும் என்பதன் எச்சப்பொருட்டாகிய மன வென் என்றிருத்தல் வேண்டும். நச்சினார்க்கினியருக்குச் செய்ம்மன என்பது பெயரெச்சமாம்.

சொல். 224 ந. சூத்திரஉரையில், செய்ம்மன - மன ஈற்றுப் பெயரெச்சமாய் எதிர்காலம் உணர்த்தும் செய்ம்மன என்னும் சொல்லும் - என்ற விளக்கத்தையும் நோக்குக.

1. நீ செல்க.

2. சில்ல குதிரை

3. இக்காலத்துப் பல்ல, சில்ல என்பன வழங்கா.

நீ வருக - என்றிருத்தலே நன்று. செலவும் கொடையும் படர்க்கை இடத்தன. (சொல். 30) சில்ல தொல்காப்பியம் வழங்காத சொல், எனவே, இக்காலத்துப் பல்ல என்பது வழங்காது - என்றிருத்தல் வேண்டும். 1. நீ செல்க.

2. சில்ல குதிரை

3. இக்காலத்துப் பல்ல, சில்ல என்பன வழங்கா.

நீ வருக - என்றிருத்தலே நன்று. செலவும் கொடையும் படர்க்கை இடத்தன. (சொல். 30) சில்ல தொல்காப்பியம் வழங்காத சொல், எனவே, இக்காலத்துப் பல்ல என்பது வழங்காது - என்றிருத்தல் வேண்டும்.

**சூ. 211.** வாழிய என்னும் செயவென்கிளவி - வாழிய என்று சொல்லப்படும் செயவென் எச்சக் கிளவி.

சொல்லமைப்பையும் வரலாற்றையும் சொற்பொருள் விளக்கத்தையும் நோக்க, வாழிய என்னும் சேயஎன் கிளவி என்ற மூலமும், வாழுங்காலம் நெடுங்காலம் ஆகுக என்னும் பொருளைத் தரும் வாழிய என்று சொல்லப்படும் கிளவி என்ற பொருளுமே நச்சினார்க்கினியம் ஆகும். 'வாழிய' முற்றாகவே விளக்கப்பட்டுள்ளது. வாழிய ஒருபோதும் செயவென் எச்சம் ஆகாது. செயவென் எச்சம் வாழ என்பதே. செய்யிய என்னும் எச்சமே வாழிய என வரும். ஈண்டுச் செய்யிய என்னும் எச்சவாழிய குறிப்பிடப்படவில்லை.

'வாழ்த்தியல் வகைநாற் பாற்கும் உரித்தே' செய். 109

'வாழ்த்தியல்வகையே நாற்பாக்கும் உரித்தே' என்பதே நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். செய். 109 நோக்குக.

**சூ. 214** அகர ஈற்றுச் சுட்டு அல்லாத குற்றெழுத்து ஒரெழுத்தொருமொழி ஆகுவன இன்மையின்.....

அகரஈற்றுச்....ஓரெழுத்தொருமொழி ஆகுதல் இன் மையின் - என்பதே தவறற்றது.

அருத்தாபத்தியான் 'தம்முன் தாம் வரின்' எனவே, தம்முன் பிறவரின், லகரம் றகரஒற்றாகாது அகரம் கெடும் என்று கொள்ளப்படும்.

அருத்தாபத்தியான் 'தம்முன் தாம் வரின் லகரம் றகர ஒற்றாகும்' எனவே, தம்முன்.......கொள்ளப்படும் - என்றிருத்தல் வேண்டும். அப்பொழுதே அருந்தாபத்தி நன்கு விளங்கும்.

**சூ. 215.** லகரம் திரிந்தும் திரியாதும் உறழ்ந்தும் முடிதலும் கொள்க.

திரிதலும் திரியாமையுமே உறழ்தல் ஆதலின், திரிந்தும் திரியாதும் உறழ்ந்து முடிதலும் கொள்க - என்றிருத்தல் வேண்டும்.

இவை தோன்றும் என்று எடுத்து ஓதிய சிறப்புவிதியான், அகரம் கெட நின்ற லகர ஒற்றின் முடியாகலின், 'தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்' என்பதனான் முடியாது.

இவை 'தோன்றும்' என்று எடுத்து ஓதிய மிகையான், அகரம் கெட.....முடிபாகலின், 'தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்' (369), 'மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்' (367) என்பனவற்றான் முடியா என்றே இருத்தல் வேண்டும்.

**சூ. 219.** இஃது ஈற்று வல்லெழுத்தும் அத்தும் வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

இந்நூற்பாவில் கூறப்படுவது அத்துச்சாரியை மாத்திரமே. வல்லெழுத்து அதிகாரத்தால் (216) வந்தது. இஃது இயைபு வல்லெழுத்தோடு அத்து வகுத்தலின்....கூறுகின்றது - என்றே இருந்திருக்க வேண்டும். இயைபு வல்லெழுத்து என்பதே ஏற்ற சொல் என்பது இந்நூற்பாவின் விளக்க உரையால் உணரலாம்.

**சூ. 220.** இஃது ஈற்று வல்லெழுத்தும் வற்றும் வகுத்தலின், *எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.*

இஃது இயைபு வல்லெழுத்தொடு மாட்டேற்றான் வற்று வகுத்தலின்......கூறுகின்றது-என்றே இருந்திருக்கவேண்டும். இதனைப் பதவுரை நோக்கி உணரலாம். சூ. 244, 267, 268, 279 உரை நோக்குக.

**சூ. 223.** *உவாஅப் பதினான்கு, இராஅப் பகல் என வரும். இஃது எழுவாயும் பயனிலையும் அன்றி உம்மைத் தொகை ஆதலின் மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறா தாயிற்று.*

*எடுத்துக்காட்டுக்கள் இரண்டாயிருத்தலின், இவை எழுவாயும்......பெறா ஆயின - என்றிருத்தல் வேண்டும்.*

**சூ. 224.** *பலவற்று இறுதியும் - பன்மைப் பொருளை உணர்த்தும் ஆகார ஈற்றுப் பெயரெச்சமறையும் முற்றுமாகிய வினைச்சொல்லும்.*

*பெயரெச்சமறையோ, வினையெச்சமோ, வினை யெச்சமறையோ இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது. அவை பன்மைப் பொருளை உணர்த்தா. பன்மைப் பொருளை உணர்த்துவன முற்றுக்களேயாம். ஆகவே, ஆகார ஈற்று மறையாகிய முற்றுவினைச்சொல்லும் - என்றே நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருத்தல் வேண்டும்.*

*செய்யா என்னும் சூத்திரத்து உம்மையான் பெற்ற வல்லெழுத்தினை விலக்கலின்.*

*செய்யா என்னும் சூத்திரத்து உம்மையான் பெயரெச்ச மறைச்சொல் பெறப்பட்டதே அன்றி, வல்லெழுத்துப் பெறப்படவில்லை. வல்லெழுத்து 'அவ்வியல் திரியாது' என்பதனாலேயே பெறப்பட்டது. ஆதலின் செய்யா என்னும் சூத்திரத்துப் (222) பெற்ற வல்லெழுத்தினை விலக்கலின் - என்றே இருந்திருத்தல் வேண்டும்.*

**சூ. 226.** இஃது....கூறுகின்றது, அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின்.

இஃது.....கூறுகின்றது, வல்லெழுத்தோடு அகரம் வகுத்தலின் - என்றே இருத்தல் வேண்டும், இந்நூற்பாவில் அகரம் வகுத்தல் ஒன்றே இருத்தலின்.

**சூ. 227.** அகரம் இன்று - முற்கூறிய அகரம் பெறுதலின்றி வல்லெழுத்துப் பெற்றுமுடியும்.

முற்கூறிய அகரம் பெறுதலின்று. வல்லெழுத்துப் பெற்று முடியும் - என்பதே நேரிய உரை.

**சூ. 230.** தளாஅத்துக்கோடு என அத்துப் பெறுதலும் கொள்க, அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின்.

'யாமரக் கிளவி' என்பதனைக் 'குறியதன் முன்னர்' (226) என்பதன் பின் வையாத அதனான்.....

பொருள் விளங்கிக்கொள்ளாத தவற்றால் இங்ஙனம் பதிப்பிக்கப்பட்டுளது. தளாஅத்துக் கோடு என அத்துப் பெறுதலும் கொள்க - என்றிருத்தல் வேண்டும். அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின், 'யாமரக் கிளவி' (229) என்பதனைக் 'குறியதன் முன்னரும்' (226) என்பதன் பின் வையாத அதனான்..... என்றே பொருள் புலப்பாட்டோடு பதிப்பித்திருத்தல் வேண்டும். இத்தகைய பொருட்புலப்பாடு பாடம் சொல்லும் நல்லாசிரியர்க்கும் அவரிடம் பயின்ற நன்மாணாக்கர்க்குமே ஏற்படும்.

**சூ. 231.** 'ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன' என்று ஞாபகமாகக் கூறிய அதனான், மாங்கோடு என அகரம் இன்றியும் வரும்.

'மாமரக் கிளவியும் ஆவும் மாவும், ஆமுப்....அவற்றோ ரன்ன'......வரும். இவ்வாறு இருந்தாற்றான் மாங்கோடு என்பதனைக் கூறும் பொருத்தம் புலப்படும். 'மாமரக்கிளவி' என்பதே தேவையான தொடர்; 'ஆமுப் பெயரும்' என்பதன்று.

அங்காக் கொண்டான்.....எங்காக் கொண்டான் என இவற்றுள் ஏழாம்வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கள் வல்லெழுத்துப் பெறுதலும்....

அங்காக் கொண்டான்........எங்காக் கொண்டான் என இவ்வீற்றுள் ஏழாம்.....பெறுதலும்.......என்றிருத்தல் வேண்டும்.

ஆவின்கோடு மாவின்கோடு எனச் சிறுபான்மை இன் பெறுதலும்....

ஆவின்கோடு....சிறுபான்மை உருபிற்குச் சென்ற சாரியை ஆகிய இன் பெறுதலும்.....எனக்கொள்க. சூ. 279, 285 உரை நோக்குக.

சூ. 232. 'ஆனொற்று அகரமொடு நிலையிடன் உடைத்தே'

பதவுரையை நோக்குமிடத்து, நூற்பா 'ஆனொற்று அகரமொடும் நிலையிடன் உடைத்தே' என்று பதிப்பிக்கப் பெறுதலே ஏற்றது.

இஃது அ இ உ என்ற சுட்டுஇடைச்சொற்கள் பற்றிய நூற்பா ஆகலின், இகரஈற்றுச் சுட்டு இடைச்சொல்.... எய்து வித்தது - என்றே இருத்தல் வேண்டும். சூ. 255, 256, 257 உரை நோக்குக.

'ஈகாண் தோன்றும்எம் சிறுநல் லூரே' என்றதும்..... என்றதும், இது என்னும் சுட்டுமுதல் உகரஈறு ஆதலின் அது செய்யுளகத்துப் புறனடையான் முடியும் என உணர்க.

'ஈதுகாண் தோன்றும்' என்பதே சுட்டுமுதல் உகரஈறு. எனவே, ஈதுகாண் தோன்றும்எம் சிறுநல்லூரே என்றதும்,.... என்றதும், இது.....ஆதலின் செய்யுளகத்தன. அது புறனடை யான் (483) முடியும் என உணர்க - என்றிருத்தல் வேண்டும்.

*சூ. 240.* நாடுரி என வரும்; இதனான் யகாரமும் விலக்குண்டது.

உடம்படுமெய் கோடல் ஒருதலையன்று (சூ. 140 உரை.ந) என்று நச்சினார்க்கினியர் கூறுதலின், உடம்படு மெய்யாகிய யகாரமும் விலக்குண்டது என்ற விளக்கம் தேவையின்று. 164ஆம் நூற்பாவில் 'தத்தம் கிளவி தம்அகப் பட்ட, முத்தை வரூஉம் காலம் தோன்றின், ஒத்த தென்ப ஏயென் சாரியை' என்ற பொதுவிதியாகிய ஏகாரம் வருதல் விலக்குண்டது - என்பதே ஏற்றது. எனவே, நாடுரி என வரும்; இதனால் ஏகாரம் விலக்குண்டது - என்றிருத்தலே தக்கது.

ஈண்டை நிலைமொழியும் வருமொழியும் நிலை மொழியாய் நின்று பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க.

மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று என்று எதனையும் ஐயமின்றித் தெளிவாகக் குறிப்பிடும் நச்சினார்க்கினியர் உரை பின்வருமாறு இருந்திருக்க வேண்டும். "ஈண்டை நிலை மொழியும் வருமொழியும் நிலைமொழிகளாய் நின்று பிற பொருட்பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க. நாழிக்காயம், உரிக்காயம் - சுக்கு - தோரை - பாளிதம் - என வரும்". இங்ஙனம் வரையப்பட்டாற்றான் நச்சினார்க்கினியர் கருதிய பொருள் தெளிவாக உணரப்படும்.

*சூ. 246.* கப்பிதந்தை சென்னிதந்தை....என்பதனுள் இயல்பு....முடிந்தது. கப்பிதந்தை சென்னிதந்தை.... என்பதனான் இயல்பு....முடிந்தன - என்பதே நேரிது.

*சூ. 247.* ஈற்று வல்லெழுத்து விலக்கி....

இயைபு வல்லெழுத்து.....சூ. 248 உரையை நோக்குக.

*சூ. 253.* அவ்வாறு முடியுழி இயைபு வல்லெழுத்து மிகா.

அவ்வாறு......மிகாது. மிகுவது ஒரே வல்லெழுத்து ஆதலின் ஒருமைவினையே ஏற்றது.

**சூ. 260.** இயற்கைத் தம் ஒற்று மிகூஉம் - தமக்கு இனமாகிய வல்லொற்றும் மெல்லொற்றும் மிக்கு முடியும்.

தமக்கு இயற்கையாகிய வல்லொற்றும்....முடியும் - என்றே இருத்தல் வேண்டும். சூ. 268 உரையை நோக்குக.

**சூ. 262.** இதற்கு அம்முப்பேறும் கொள்க.

இதற்கும் அம்முப்பேறும் கொள்க. முன்னர் உதிக்கு அம்முப்பேறு குறிப்பிட்டமையின் இதற்கும் என்ற எச்ச வும்மை புணர்த்தல் இன்றியமையாதது.

**சூ. 265.** உயர்திணைப் பெயர் எடுத்தோதி முடிப் பாராதலின்....

எடுத்தோதியே முடிப்பாராதலின் - என்றிருத்தல் வேண்டும். சூ. 153 உரையை நோக்குக.

**சூ. 271.** 'ஆடூஉ மகடூஉ' ஆயிரு பெயர்க்கும்

'ஆடூ மகடூ' - என்றிருத்தல் வேண்டும், இவை ஊகார ஈற்றுப்பெயர் ஆதலின்.

**சூ. 272.** தெளிவுப்பொருளினும் சிறப்புப் பொருளினும் வந்து பெயர்க்கு....எகர ஒகரம்....

தெளிவுப் பொருளினும்....... ...முறையே வந்து பெயர்க்கு.... எகரஒகரம்..... - என்றிருத்தல் வேண்டும்.

இவை....முன்னிலை ஏவல் பொருட்டாய் வந்தன.

இவை.....முன்னிலை ஏவல் பொருளவாய் வந்தன. பன்மை கொண்டது, இருவேறுபட்ட பொருளின ஆதலின்.

**சூ. 273.** யானோஒ கொடியன்.

யானோஒ கொடியேன் - எனத் தன்மை ஒருமைக்குரிய ஏன் ஈறாதலே ஏற்றது.

**சூ. 276.** ஊகார ஈறு அல்வழி போல....

ஊகார ஈற்று அல்வழிபோல - என்றலே ஏற்றது.

ஏகார ஈற்று வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக் கண்ணும்...

ஏகார ஈறு வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக் கண்ணும் - என்பதே ஏற்றது.

**சூ. 283.** பனை ஆவிரை என நிறுத்தி அம்மு வருவித்து ஐகாரம் கெடுத்து ஒற்றின்மேலே அகரம் ஏற்றி....

பனை.....ஒற்றின்மேலே அம்மின் அகரம் ஏற்றி - என்றே இருத்தல் வேண்டும்.

**சூ. 285.** மேல் ஐகாரம் கெடுத்து.......கெடாது நிற்க என்றலின்.

மேல் ஐகாரம் கெடுத்து.....கெடாது நிற்க வல்லெழுத்துப் பெறும் என்றலின் - என்பதே ஏற்றது.

**சூ. 286.** நெடியவற்றுக்கோடு என ஐகார ஈற்றுப் பண்புப் பெயர்க்கு....

நெடியவற்றுக் கோடு என ஐகார ஈற்றுப் பண்புகொள் பெயர்க்கு - என்றே இருத்தல் வேண்டும்.

**சூ. 287.** இயல்பு வல்லெழுத்து (கழகப் பதிப்பு)

இயைபு வல்லெழுத்து - எனக் கொள்க.

*சூ. 288.* *'வேணவா நலிய வெய்ய உயிரா'*

*இவ்வடி நற். 61 - என இடம் சுட்டப்பெறல் வேண்டும்.*

***சூ. 290.*** மாறுகோள் எச்சம் - மாறுகோடலையுடைய எச்சப்பொருண்மை என்பதே உரை. சூ. **275.** உரையை நோக்குக.

*சூ. 295.* *'அவ்விரு ஈற்றும்'*

*அவ்விரு வீற்றும் - அவ்விரு கூற்று முடிபின்கண்ணும்* **என்பது நச்சினார்க்கினியர் உரை.**

**'நிலைமொழி' என்றதனான்.....**

*நிலைமொழி என்ற சொல் நூற்பாவில் இல்லை.* **ஆதலின் 'நிலை' என்றதனான் - என்றே இருத்தல் வேண்டும்.**

**வேற்றுமைக்கண் உருபு தொகையாயுழி இயல்பாதல் கொள்க.**

**.......இயல்பாதலும் கொள்க - என்ற உம்மை வேண்டும்.**



# புள்ளி மயங்கியல்

**சூ. 299.** 'உயவல் யானை வெரிநுச் சென்றனன்' (அகநா.65)

'சென்றன்ன' - எனக் கொள்க

யானையினது முதுகின்மேல் சென்றனன் என விரிக்க.

யானையினது.....சென்றன்ன என விரிக்க - என்பதே ஏற்றது.

பொருந் என்பது ஒரு சாதிப்பெயரும், பொருந்துதல் என்னும் வினைப்பெயருமாம்.

பொருந்.....பொருநுதல் என்னும் வினைப் பெயருமாம் - என்பதே ஏற்றது.

**சூ. 300.** 'வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங் குடை' (அகநா. 37) என்பதில் நகரஇகரமே இட்டெழுதுக.

வெரிந் என்பதன் நகரம், வருமொழி 'நிறுத்த' என்ற சொல்லை நோக்கிச் சந்தியில் கெட, வெரிந் என்பது நிறுத்த என்பதனொடு சேரும்போது 'வெரிநிறுத்த' என நகர ஒற்றுக் கெட, இறுதி ரகர இகரமேயாக இருத்தலின் நச்சினார்க்கினியர் வெரிநிறுத்த என்புழி ரகஇகரமே இட்டெழுதுக என்று கூறியதனை நோக்குக.

**சூ. 302.** இது கூறுகின்றது.

இது.....கூறுகின்றது, அல்வழிமுடிபு தொகை மரபினுள் 'மொழி முதலாகும்' (147) என்பதனான் முடிக்கப்பட்டமையின் - என்றிருத்தல் வேண்டும். சூ. 235 உரையை நோக்குக.

**சூ. 305.** அதிகார வல்லெழுத்து அன்மையின் சாரியை வல்லெழுத்துக் கொடுக்க.

.....இன்மையின் என்பதே பொருந்துவது. அன்மைச் சொற்கு இங்குப் பொருத்தமான பொருள் இல்லை.

சூ. *306.* தொழிற் பெயரெல்லாம் - ணகார ஈற்று முதனிலைத் தொழிற்பெயரெல்லாம் - என்ற உரைச்செய்தி விடுபட்டுள்ளது.

சூ. *307.* இஃது இவற்றுள் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி இயல்பு கூறுதலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

இஃது இவ்வீற்றுள்......இயல்பு கூறுதலின், எய்தியது விலக்கிற்று - என்றே இருத்தல் வேண்டும். எய்தியது விலக்கி இயல்பு கூறுதல் பிறிதுவிதி கூறுதல் ஆமோ ? எய்தியதனை விலக்கிய அளவில், இயல்பு தானே போதருதலின், அதனைப் பிறிதுவிதி என்பது யாங்ஙனம் பொருந்தும் ?

பெயரெல்லாம்....திரிதலின்றாய் இயல்பாய் முடியும்.

பெயரெல்லாம்.....திரிதல் இலவாய்....முடியும் - என்பதே ஏற்றது.

ஏழாம் வேற்றுமைப் பொருண்மை உணரநின்ற

ஏழாம் வேற்றுமை இடப்பொருண்மை உணர நின்ற - எனக்கொள்க. எடுத்துக்காட்டுக்களை நோக்க இத்திருத்தம் புலனாம்.

சூ. *310.* உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் மகரக்கேடு கொள்க. நுங்கை, எங்கை செவி-தலை-புறம் - எனவும், தங்கை-செவி-தலை-புறம்- எனவும்....

உயர்திணைப் பெயர் என்பதற்கு ஏற்ப நங்கை, எங்கை-தலை-செவி-புறம்- எனவும், விரவுப்பெயர் என்பதற்கு ஏற்ப நுங்கை-செவி-தலை-புறம்- எனவும்- கோடலே நேரிது.

சூ. *311.* குளாஅம்பல் என்புழி, ஆகாரத்தை அகரமாக்குக.

குளாஅம்பல் என்புழி, ஆம்பல் என்பதன் ஆகாரத்தை அகமாக்குக - என்றிருத்தல் வேண்டும், தெளிவு கருதி.

சூ. *314.* வேழக்கரும்பு, கலக்கொள், நீலக்கண் என்னும் பண்புப்பெயர்கள் மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடிந்தன.

*பண்புப்பெயர்கள் என்ற தொடர்பண்புத்தொகைக்கண் - என்றிருத்தல் வேண்டும்.*

சூ. *316.* உண்டாதல் என்னும் வினைக்குறிப்புப் பெயர் வருமொழியாய் வருங்காலத்து....

உண்டாதல் என்னும் பொருள்படும் வினைக்குறிப்புப் பெயர்.....காலத்து - என்பதே ஏற்றது.

இரண்டு காலமும் காட்டும் ஈறுகள் தொக்க முதனிலைச் சொல்லாய்......

காலம் காட்டும் ஈறுகள் இரண்டும் தொக்க - என்றிருத்தல் வேண்டும்.

செய்யும் என்னும் பெயரெச்சத்து உம் ஈறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தும். செய்த என்னும் பெயரெச்சத்து அகரஈறு க ச ட ற ஊர்ந்து (சொ. 415 ந., 482 ந.) இறந்த காலம் காட்டும் (ஷை 276).

சூ. *319.* நாழி மண்டை வட்டில் அகல்.....

வட்டி - என்பதே பொருந்தும். சூ. 170 உரை, 452 - 455 நோக்குக.

சூ. *323.* வல்லெழுத்தை விலக்கி மெல்லெழுத்து விதித்தலின்.....

வல்லெழுத்தே அன்றி மெல்லெழுத்தும் விதித்தலின் - என்ளறிருத்தல் வேண்டும்.

**சூ. *325.*** மகர ஈற்றிற்கு - நும் என்பதன் மகர ஈற்றிற்கு என்றிருத்தல் வேண்டும்.

'மகர இறுதி' (310) என்பதனான் மகரம் கெடுக்க.

'மகர இறுதி' (310) என்பதன்கண் 'துவர' என்பதனான் மகரம் கெடுக்க.

**சூ. *326.*** நகரத்துள் உகரம் கெட்டுப்போக.....

நகர உகரத்துள் உகரம் கெட்டுப்போக - என்றிருத்தல் வேண்டும்.

புள்ளி ரகரம் - புள்ளியொடு புணர்ந்து ரகரம் என்றிருத்தல் வேண்டும்.

**சூ. *327.*** ஞ க ர ஈற்றுத் தொழிற்பெயர் போல நிற்குமென....

ஞகாரஈற்றுத்....போல மகர ஈற்றுத் தொழிற்பெயர் நிற்குமென - என்றிருத்தல் வேண்டும்.

இவை குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டல் *(160)*

இவை.......இரட்டல் (160) என்பதனான் இரட்டின - எனக்கொள்க.

**சூ. *337.*** இதுவும் அது, திரிபு விலக்கி அகரம் விதித்தலின்.

இது திரிபு விலக்கி அகரமும் வல்லெழுத்தும் விதித்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது என்றிருத்தல் வேண்டும். சூ. *336* உரைப்பாயிரம் நோக்குக

*சூ. 338.* வெள்ளாளன் என நின்றதனை அன்கெடுத்துப் பிரித்து னகார ஒற்றினை ணகார ஒற்றாக்கி வெள்ளாண் குமரி..... என முடிக்க.

.....பிரித்து ளகார ஒற்றினை ணகாரஒற்றாக்கி - என்பதே நேரிது.

னகரம் திரிதலை விலக்கி இயல்பாக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருத்தது.

னகரம்....என்றலின், எய்தியது விலக்கியது - என்பதே நேரிது. இயல்பாகப் புணர்தல் பிறிதுவிதி ஆகுமா?

*சூ. 339.* இதுவும் அது, தன் திரிபு வல்லெழுத்தினோடு உறழ்க என்றலின்.

இஃது இயல்பு விலக்கித் திரிபுவல்லெழுத்தினோடு உறழ்க என்றலின் பிறிதுவிதி வகுத்தது.

*சூ. 341.* இதுவும் அது, உறழ்ச்சியும் வல்லெழுத்தும் விலக்கி மெல்லெழுத்து விதித்தலின்.

இதுவும் அது, உறழ்ச்சியும் வல்லெழுத்தும் அன்றி, மெல்லெழுத்தும் விதித்தலின் - என்பதே நேரிது. உறழ்ச்சியும் வல்லெழுத்தும் விலக்கப்பட்டில என்பது அறிக.

*சூ. 349.* இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

'அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே' (155) என்பதனான் இயல்பு புலப்படுதலின், இஃது எய்தியது விலக்கியது - என்பதே இந்நூற்பாவின் பாயிரமாதல் வேண்டும். சூ. 307, 338 என்பனவும் இத்தகையன.

*சூ. 351.* இது மேலதற்கு ஒருவழி எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருத்தது.

இயல்பு கூறுதலின், இது மேலதற்கு....எய்தியது விலக்கியது என்றே இருத்தல் வேண்டும்.

இவ்வீற்றிற்குத் திரிபு கூறுதலின் அதனையும் விலக்கி இயல்பாம் என்பதூஉம் கூறினார்.

அதனையும், என்பதூஉம் என்பவற்றின் உம்மைக்குப் பொருளின்று ஆதலின், அதனை விலக்கி இயல்பாம் என்பது கூறினார் - என்றலே பொருந்தும்.

**சூ. *354.*** வேற்றுமைக்கண் அகரம் திரியாது கெடுக.

வேற்றுமைக்கண் னகரம் திரியாது கெடுக - என்பதே நேரிது.

**சூ. *356.*** 'பொலம்படப் பொலிந்த கொய்சுவல் புரவி'

'பொலம்படைப்....புரவி' என்பதே ஏற்றது.

**சூ. *357.*** வல்லெழுத்து மிகும்-

வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகும் - என்று பதவுரையில் இருத்தல் வேண்டும்.

**சூ. *358.*** இது விரவுப்பெயருள் ஒன்றற்கு எய்திய வல்லெழுத்து விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இஃது......வல்லெழுத்து விலக்கிற்று - என்றிருத்தல் வேண்டும். சூ. *307, 338, 349* நோக்குக.

**சூ. *363.*** இஃது இவ்வீற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இது இவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தியது.....வகுத்தது- என்பதே நேரிது.

**சூ. *367.*** இது னகாரம் என்றலின் அவற்றிற்கு எய்தாதது எய்துவித்தது.

இது 'னகாரம் ஆகும்' என்றலின், அவ்வீற்றிற்கு.... எய்துவித்ததது - என்றலே நேரிது.

**சூ. *369.*** லகரம் றகரமாய்த் திரிதலே அன்றி ஆய்தமாகத் திரியும்.

லகரம்....அன்றி ஆய்தமாகவும் திரியும் - என்பதே ஏற்றது.

**சூ. *370.*** இஃது 'அல்வழி எல்லாம் உறழ்' *(368)* என்பதனை விலக்கி இயல்பாக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இஃது....*(368)* என்பதனோடு, இயல்பாக என்றலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது - என்றிருப்பதே ஏற்றது.

**சூ. *371.*** தாம் வேற்றுமை முடிபின் இயல்பிற்றாய்.....

இயல்பினவாய் - என்றிருத்தல் வேண்டும்.

**சூ. *372.*** வல்லெழுத்து மிகாது முடிக்க.

வல்லெழுத்து மிகாதும் முடிக்க - என உம்மை விரித்து எழுதுக.

இல்லை, இல் (எழு. 222)

(சொல். 222 சேனா.) என்றிருத்தல் வேண்டும்.

'மையில் வாண்முகம்' - கலி. 7 : 8 என இடம் குறிக்க.

**சூ. *373.*** மாட்டெறிதலின் பிறிதுவிதி வகுத்தது.

.....எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது என்றிருத்தல் வேண்டும்

**சூ. *374.*** எய்தியது விலக்கி.....

எய்தியது ஒருவழி விலக்கி - என்றிருத்தல் வேண்டும்.

**சூ. *376.*** தொழிற்பெயரொடு மாட்டெறிதலின்....

ஞகார ஈற்றுத் தொழிற்பெயரொடு மாட்டெறிதலின் - என்றிருத்தல் வேண்டும். சூ. 373 - பாயிரத்திலும் இவ்வாறே இணைத்துக் கொள்க.

**சூ. 377.** இஃது .....வல்லெழுத்து மிக்கது. அதிகார வல்லெழுத்து இன்மையின்.

இஃது....வல்லெழுத்துமிக்கது, அதிகாரவல்லெழுத்து இன்மையின் - என நிறுத்தக்குறி இடுக.

**சூ. 378.** மூன்றும்.....உருபு புணர்ச்சியின் இயல் பிற்றாய்....

......இயல்பினவாய் - என இருத்தல் வேண்டும்.

**சூ. 384.** 'உரித்துமாகும்' என்ற உம்மையை வருதலும் உரித்தாகும் என மாறுக - என்று இத்தொடர் இடையே விடுபட்டுள்ளது, பதவுரை நோக்கி உணரப்படும்.

**சூ.385.** தமிழவரையர் என்றாற் போல்வன வல்லெழுத்துப் பெறாது அக்குப்பெற்றன.

தமிழதரையர் என்றாற் போல்வன....பெற்றன - என்றிருத்தல் வேண்டும். 'வல்லெழுத்துப் பெறாது' எனவே வருமொழி வன்கணத்தில் தொடங்கியதாதல் வேண்டும் என்பது பெறப்பட்டமை குறித்துணரத்தக்கது.

**சூ. 399.** இது மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இது.....எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது என்றிருத்தல் வேண்டும்.

**சூ. 403.** திரிபும் இயல்பும் விலக்கி....

திரிபும் உறழ்வும் (398) இயல்பும் விலக்கி - என்றிருத்தல் வேண்டும்.

**சூ. 404.** இக்கிடந்தது 'மக்கட்டலை'

'இக்கிடந்தது மக்கட்டலை'-இஃது ஒரே தொடர்.

**சூ. 405.** 'விண்ணுக்குமேல்' 'மண்ணுக்கு நாப்பண்'

'விண்ணுக்கு மேல்.....மண்ணுக்கு நாப்பண்' (கோவை.162) என்றே எழுதுக.



# குற்றியலுகரப் புணரியல்

*சூ. 406.* குற்றுகரத்தை இருமொழிக்கண்ணும் புணர்க்கின்றமையின்....

குற்றுகரத்தை இருவழிக்கண்ணும் புணர்க்கின்றமையின்- எனவே இருத்தல் வேண்டும்.

*சூ. 415.* இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது, அம்மு வகுத்தலின்.

இஃது.....கூறுகின்றது, வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தலின் - என இருத்தல் வேண்டும்.

*சூ. 417.* பாயிரத்தில், 'எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது' எனத் திருத்துக.

*சூ. 418.* ஒற்றுநிலை திரியாது அக்கொடு வரூஉம் (பதவுரையுள்)

ஒற்றுநிலை திரியாது அக்கொடும் வரூஉம் - என்பதே ஏற்றது. உரையை நோக்குக.

அக்கிளை மொழியும் உள என மொழிப - அக்கிளையான சொற்களும் உள....

அக்கிளை மொழி உள என மொழிப - அக்கிளையான சொற்கள் உள.....

இதற்கு 'உம்மையை முன்னர் மாறுக' என்ற உரைப் பகுதியை நோக்குக.

*சூ. 423.* சுட்டு முதலாகிய உகரத்திற்கு...

சுட்டு முதலாகிய ஆய்த இறுதிக்கு - என்றிருத்தல் வேண்டும். உரையை நோக்குக.

**சூ. 425.** கரட்டுக் காணம்...

கரட்டுக் கானம் - என்றிருத்தல் வேண்டும். அதுவே பொருளுடைய சொற்றொடர்.

**சூ. 428.** வல்லெழுத்து விலக்கி இயல்பாம் என்றலின்.

வல்லெழுத்து மிகுதலே அன்றி இயல்புமாம் என்றலின் - என்றிருத்தல் வேண்டும். உரையை நோக்குக.

**சூ. 429.** ஏழாவதன் இடப்பொருட்டாகிய பிறவும் இயல்பாய் முடிவனவும் கொள்க.

ஏழாவதன் காலப்பொருளவாகிய பிறவும் இயல்பாய் முடிவனவும் கொள்க - என்பதே ஏற்றது. எடுத்துக் காட்டுக்களால் இக்கருத்து உறுதிப்படும்.

**சூ. 430.** வினைக்குறிப்பாய் நின்றதொரு சொற்பண்பை உணர்த்துங்கால் வேறு முடிபு பெறுதல்....

வினைக்குறிப்பாய்....சொல் பண்பை உணர்த்துங்கால்- என்றிருத்தல் வேண்டும்.

இது பொருண்மை சுட்டாது உண்மைத் தன்மைப் பண்பை ஈண்டு உணர்த்திற்று.

உண்மைத்தன்மைப்பண்புதான் பொருண்மை எனப் படுவது. சொல். 67 ந. உரை நோக்குக. எனவே இது பொருள் சுட்டாது உண்மைத்தன்மைப்பண்பை ஈண்டு உணர்த்திற்று - என்றே இருத்தல் வேண்டும்.

**சூ. 433.** நிறுத்த முறையானே...ஆறு ஈற்றுக் குற்றுகரமும் புணருமாறு உணர்த்தி இனி அவ்வீற்று எண்ணுப்பெயர் முடிக்கின்றார்.

நிறுத்த முறையானே....குற்றுகரமும் பொருட்பெயர் முதலியவற்றின்கண் புணருமாறு உணர்த்தி - என்றிருத்தல் வேண்டும். முன்னைய நூற்பாக்களை நோக்குக. ஆசிரியர் எண்ணுப்பெயர் நிறைப்பெயர் அளவுப்பெயர்களை விதந்து ஓதியே முடிப்பார் என்பது. சூ. 166 உரையை நோக்குக.

***சூ. 443.*** ஏழு குற்றியலுகரஈறு அன்மை உருபியலுள் காண்க.

ஏழ் குற்றியலுகர.....காண்க - என்றே இருத்தல் வேண்டும். சூ. *194, 388-394* காண்க.

***சூ. 446.*** முதல் ஈரெண்ணின் ஒற்று ரகரமாய் உகரம் வந்து இடைநிலை ரகரம் கெட்டு.....

முதல் ஈரெண்ணின்.....வந்து இடைநிலை ரகரம் இரண்டற்குக் கெட்டு - என்றிருத்தல் வேண்டும். சூ.*439* நோக்குக.

***சூ. 449.*** அவ்வளவுப் பெயர் ஒன்பதினும்...

**அவ்வளவுப்பெயர் நிறைப்பெயர் ஒன்பதினும் - சூ.*170* உரை.**

***1. அது முன்னர்க்காட்டினாம்.***

***2. அகல் உழக்கு என்பன மேல்காட்டினாம்.***

***3. ஏழு குற்றுகர ஈறு அன்மையின் மாட்டேறு ஏலாதாயிற்று.***

***1. அது முன்னர்க் காட்டுதும் - இந்நூற்பா உரையுள் அடுத்து உள்ளது.***

**2. அகல் உழக்கு என்பன மேல்காட்டுதும். சூ. *458* உரை.**

***3. ஏழ் குற்றுகரஈறு அன்மையின்....சூ. 194, 388-394 காண்க.***

காட்டுதும், காட்டுதும், ஏழ் - என்பனவே ஈண்டைக்கு ஏற்ற சொற்கள்.

**சூ. 450.** 'யகரம் வரினும் எட்டன்முன் இயல்பே'

அகரம் வரினும் - எனத் தெளிவு கருதி உடம்படுமெய் இன்றிப் பதிப்பித்திருக்கலாம்.

'ஞ ந ம ய வ' (144) என்னும் சூத்திரத்துக் கூறியவற்றைக் கூறுதலின்.

'ஞநமயவ'(144) முதலிய சூத்திரங்களுள் கூறிய வற்றைக் கூறுதலின் - என்றிருத்தல் வேண்டும். *144, 150, 160, 444*ஆம் சூத்திரங்களுள் கூறியன ஈண்டுப் பயன்படுதலைக் காண்க.

**சூ. 459.** 'ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது'

'ஒன்பான் இறுதி உருவுநிலை திரியாது' என்பதே ஏற்றது, உருபு - வடிவு; உருபு -வேற்றுமை முதலியன என்பது நச்சினார்க்கினியர் கோட்பாடு ஆகலின். சூ. 470இலும் இத்திருத்தம் கொள்க.

உருபு என்பதனான் - உருவு என்பதனான் என்றே இருத்தல் வேண்டும்.

'அளவாகு மொழிமுதல்' (121) என்பதனானும், 'நிலைஇய' என்னும் இலேசானும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க.

'அளவாகு மொழிமுதல்' (121) என்பதனுள் 'நிலைஇய' என்னும் இலேசான் இன்னின்....கொள்க - என்றே இருத்தல் வேண்டும்.

**சூ. 473.** அந்நூறு என்பதனோடு ஒன்றுமுதல் ஒன்பான் எண்கள்.....புணருமாறு கூறுகின்றது.

அந்நூறு....ஒன்றுமுதல் எட்டு எண்கள்....கூறுகின்றது- என்பதே ஏற்றது. வரலாறுகளையும் நோக்குக.

***சூ. 474.*** 'அளவும் நிறையும் ஆயியல் திரியாது'.

திரியா - என்பதே ஏற்ற பாடம். 477ஆம் நூற்பாவையும் நோக்குக.

திரியாது என்றதனான் - திரியா என்றதனான் எனக்கொள்க.

***சூ. 477.*** இன்னின் அகரம் றகரமாகத் திரிந்து....

இன்னின் னகரம்....திரிந்து - என்பதே ஏற்றது. சூ. 121 நோக்குக.

***சூ. 478.*** 'நிலை' என்னாதனான் ஒற்றுத் திரித்து முடிக்க.

'நிலை' என்றதனான்.....முடிக்க - என்பதே ஏற்றது.

மாட்டேறின்றி வருவனவற்றிற்கெல்லாம் 'முடிபுநிலை' என்றதனான் முடிக்க.

.......முடிபு 'நிலை' என்றதனான் முடிக்க - என்றே இருத்தல் வேண்டும்.

***சூ. 480.*** அஃது 'அளந்தறி கிளவியும்' (446) என்பதனுள் ஒருமண்டை எனமுடித்ததாம்.

அஃது.....ஒரு மண்டை என முடிந்தாம் - என்றே இருத்தல் வேண்டும். சூ. 446 உரையுள், அகல் உழக்கு என்பன முன்னர் முடித்தும் என்று நச்சினார்க்கினியர் வரைந்துள்ள தனை நோக்கின், முடித்தாம் என்பதே ஏற்றதாக உள்ளது.

ஒன்பது மா என முடிக்க.

ஒன்பது மா எனவும் முடிக்க என்ற உம்மை வேண்டும், முன்னர் ஒன்பதின்மா என்று முடித்தமையின்.

நெடுமுதல் குறுகி உகரம் வந்து புணருமாறு கூறினார்.

ஏழ்என்பது நெடுமுதல்.....கூறினார் - என்றே இருத்தல் வேண்டும். இன்றேல், எழுவாய் இன்மையின், அடுத்த வாக்கியத்தோடு உள்ள பொருள்தொடர்ச்சி தெளிவாக விளங்காது.

**சூ. *481.*** இன்சாரியையது உகரக்கேடும் எகர நீட்சியும் கொள்க.

**இச்செய்தி முதற்பத்தியில் கூறப்பட்ட கெழு என்ற சாரியை பற்றியது ஆதலின், இச்சாரியையின் உகரக்கேடும் எகர நீட்சியும் கொள்க - என்றே இருத்தல் வேண்டும். பின்வரும் தொடர்களையும் நோக்கி இத்திருத்தத்தை உறுதி செய்க. இதுவே பழைய பதிப்பில் உள்ள பாடம் என்பதும் நோக்குக.**

**சூ. *482.*** ஊரன் வெற்பன் முதலிய வினைப் பெயர்களும் பிறவும்.....

**....முதலிய உடைப்பெயர்களும் பிறவும் - என்றிருத்தல் வேண்டும். சொல். 167 ந. நோக்குக.**

**இவ்வாசிரியர் புணர்க்கப்படாத இச்சொற்களையும்...**

**.....'புணர்க்கப்படா' என்ற இச்சொற்களையும் - என்றே இருத்தல் வேண்டும். இந்நூற்பாவின் பொருளை நோக்கி இவ்வாறு முடிவு செய்க.**

*சூ. 483.*

*1.* 'மரவ நாகம் வணங்கி மாற்கனம்'

*2.* 'பொன்னந் திகிரி முன் சமத் துருட்டி'

*3.* 'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நாலிசை' என்னுமடிகள்

*1.* 'மரவ நாகம் வணங்கி மாற்கணம்'

*2.* 'பொன்னந் திகிரி முன்சமத் துருட்டி' புறநா. 365

*3.* 'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை' நற்.62 எனச் சொற்பிழை நீங்க இடஞ்சுட்டி அமைதல் வேண்டும்.

எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம் இத்தனைத் திருத்தங்களை எதிர்நோக்கி உள்ளது. திருத்தங்களுள் சில பின்னைய பதிப்புக்களில் கொண்டுவரப்பெற்றிருக்கலாம். 1966ஆம் ஆண்டைய கழகப்பதிப்பையும், 1933ஆம் ஆண்டைய கழகப்பதிப்பையும் கொண்டு செய்யப்பட்ட திருத்தங்களே ஈண்டுக் காட்டப்பட்டுள. கணேசய்யர் பதிப்பும், கு. சுந்தரமூர்த்தி பதிப்பும் சில திருத்தங்களை மேற்கொண்டு பதிப்பிக்கப்பட்டிருக்கலாம்.



# சுருக்கெழுத்து விளக்கம்

| | |
|---|---|
| அகநா. | அகநானூறு |
| ஆசாரக். | ஆசாரக்கோவை |
| இ. கொ. | இலக்கணக்கொத்து |
| இ. வி. சூறா. | இலக்கணவிளக்கச் சூறாவளி |
| இள. | இளம்பூரணம் |
| எழு., எழுத். | எழுத்ததிகாரம் |
| எழு. உயிர்ம. | உயிர் மயங்கியல் |
| எழு. உருபி. | உருபியல் |
| எழு. குற்றிய. | குற்றியலுகரப் புணரியல் |
| எழு. தொகை. | தொகை மரபு |
| எழு. மொழி. | மொழி மரபு |
| எ. ஆ. | எழுத்ததிகார ஆராய்ச்சி |
| ஐங். | ஐங்குறு நூறு |
| கலி., கலித். | கலித்தொகை |
| கா. | காரிகை |
| குறிஞ்சிக். | குறிஞ்சிக்கலி |
| குறுந் | குறுந்தொகை |
| சங். | சங்கரநமச்சிவாயர் (உரை) |
| சிலப். பதி. | சிலப்பதிகாரம் பதிகம் |
| சிறுபாண். | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | சீவக சிந்தாமணி |
| சீவ. குண. | குணமாலையார் இலம்பகம் |
| சீவக. பதுமை. | பதுமையார் இலம்பகம் |

| | |
|---|---|
| சூ. | சூத்திரம் |
| சே. சேனா. | சேனாவரையம் |
| சொல். | சொல்லதிகாரம் |
| சொல். இடை. | இடைச்சொல்லியல் |
| சொல். பெய. | பெயரியல் |
| சொல். விளி. | விளிமரபு |
| சொல். வினை. | வினை |
| சொல். வேற்.மயங். | வேற்றுமை மயங்கியல் |
| தி.வே.கோ. | கோபாலய்யர் |
| ந., நச். | நச்சினார்க்கினியம் |
| நற். | நற்றிணை |
| நன். | நன்னூல் |
| நன். சங். | சங்கர நமச்சிவாயர் உரை |
| நன். பத. | பதவியல் |
| நன். பாயி. | பாயிரம் |
| நன். மெய். | மெய்யீற்றுப் புணரியல் |
| நாலடி. | நாலடியார் |
| நெடு. | நெடுநல்வாடை |
| பக. | பக்கவெண் |
| பட். | பட்டினப்பாலை |
| பரிபா. | பரிபாடல் |
| பரி., பரிமே. | பரிமேலழகர் |
| பிர. கா. | பிரயோகவிவேகம் காரிகை |
| பி.வி. | பிரயோகவிவேகம் |

| | |
|---|---|
| பி.வி. சமாகப். | **சமாகப்படலம்** |
| பி.வி. திங்ஙுப் | **திங்ஙுப் படலம்** |
| புறநா. | **புறநானூறு** |
| பு.வெ.மா. | **புறப்பொருள் வெண்பாமாலை** |
| பெருங். | **பெருங்கதை** |
| பெரும்பாண். | **பெரும்பாணாற்றுப்படை** |
| பே., பேரா. | **பேராசிரியம்** |
| பொருந. | **பொருநராற்றுப்படை** |
| பொ., பொரு. பொருள் | **பொருளதிகாரம்** |
| பொ. உவம. | **உவமவியல்** |
| பொ. களா. | **களவியல்** |
| பொ. கற். | **கற்பியல்** |
| பொ. செய். | **செய்யுளியல்** |
| பொ. புறத். | **புறத்திணையியல்** |
| பொ. மர. | **மரபியல்** |
| மணி. | **மணிமேகலை** |
| மதுரைக். | **மதுரைக்காஞ்சி** |
| மலைபடு. | **மலைபடுகடாம்** |
| முல்லைப். | **முல்லைப்பாட்டு** |



# எழுத்ததிகாரம்-இரண்டாம் பகுதி
# உரைக்கோத்து

## ஏழாவது

## உயிர் மயங்கியல்

### இளம்பூரணம்

### *204. அகர ஈற்றுப் பெயர்க்கு வன்கணம் வருவழி அல்வழிமுடிபு*

**அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை அல்வழிக் கசதபத் தோன்றின்**
**தத்தம் ஒத்த ஒற்றுஇடை மிகுமே**

*என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உயிரீறு வன்கணத்தொடும் சிறுபான்மை பிறகணத்தொடும் மயங்கிப் புணரும் இயல்பு உணர்த்தலின், உயர்மயங்கியல் என்னும் பெயர்த்து.*

*மேல் உருபுபுணர்ச்சி கூறி, ஈண்டுப் பொருட்புணர்ச்சி*[1] *கூறுகின்றமையின், மேலதனோடு இயைபுடையதாயிற்று.*

*இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், அகர ஈற்றுப் பெயர்க்கு வன்கணத்தோடு அல்வழி முடிபு கூறுதல் நுதலிற்று.*

*(இ-ள்.) அகரமாகிய இறுதியையுடைய பெயர்ச்சொல் முன்னர் வேற்றுமை அல்லாதவழிக்கண் கசதப முதல் மொழி வருமொழியாகத் தோன்றின், தத்தமக்குப் பொருந்தின அக் கசதப-க்கள் ஆகிய ஒற்று இடைக்கண் மிகும் எ-று.*

(உ-ம்.) விளக்குறிது, அதக்குறிது, சிறிது தீது பெரிது-எனவரும்.

'ஒத்த ஒற்று' என்னாது 'தத்தம் ஒத்த ஒற்று' என்றதனான், அகரஈற்று உரிச்சொல் வல்லெழுத்து மிக்கும் மெல்லெழுத்து மிக்கும் முடியும்; இடைச்சொற்களுள் எடுத்தோதாதவற்றின் முடிபும், அகரம் தன்னை உணரநின்ற வழி முடியும் முடிபும்[2] கொள்க.

(உ-ம்.) தடக்கை, தவக்கொண்டான்-என இவை உரிச்சொல் வல்லெழுத்துப் பேறு. தடஞ்செவி, தடந்தோள்-என இவை உரிச்சொல் மெல்லெழுத்துப் பேறு.

'மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை' (குறுந். 66) என்றது இடைச்சொல் முடிபு. அக்குறிது சிறிது தீது பெரிது-என அகரம் தன்னை உணர நின்றவழி வல்லெழுத்து மிகுதி.

அவ் யாது என்பதற்கு இடையெழுத்து மிகுதி.

அவ்வழகிது என்பதற்கு உயிர்க்கணத்து முடிபு. (1)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**204.** 1) வேற்றுமையுருபு தொக்கு நின்ற பொருட் புணர்ச்சியும் கூறுகின்றமையின் - என எச்சவும்மை தொக்கதாகப் பொருள்கொள்ள வேண்டும், அல்வழிப் புணர்ச்சியும் ஆசிரியர் கூறுகின்றாராகலின்.

அல்வழி முடிபும் பொருட்புணர்ச்சியேயாம் என்க.

2) அகர எழுத்துத் தன்னை யுணர நின்றவழிப் பெயரேயாம்; இடைச்சொல் அன்று.

## நச்சினார்க்கினியம்

### 203. அகர ஈற்றுப்பெயர் வன்கணம் வருவழி அல்வழிக்கண் முடியுமாறு

**அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை அல்வழிக் கசதபத் தோன்றின்**
**தத்தம் ஒத்த ஒற்றுஇடை மிகுமே**

என்பது சூத்திரம். உயிரீறு நின்று வன்கணத்தொடும் சிறுபான்மை ஏனைக்கணங்களொடும் மயங்கிப் புணரும் இயல்பு உணர்த்தினமையின், இவ்வோத்து உயிர் மயங்கியல் என்னும் பெயர்த்தாயிற்று. மேல் பெயரோடு உருபு புணருமாறு கூறி, பெயர் வருவழி உருபு தொக்குநின்ற பொருட்புணர்ச்சியும் [1] கூறுகின்றமையின், உருபியலோடு இயைபுடைத்தாயிற்று.

இச்சூத்திரம் அகரஈற்றுப் பெயர் அல்வழிக்கண் வன்கணத்தொடு புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* அகர.....முன்னர் - அகரமாகிய இறுதியை யுடைய பெயர்சொல் முன்னர்; வேற்றுமை.. ... தோன்றின் - வேற்றுமை அல்லாதவிடத்துக் கசதப முதல் மொழிகள் வருமொழியாய்த் தோன்றுமாயின்; தத்தம் ஒத்த... மிகும் - தத்தமக்குப் பொருந்திய அக் கசதப-க்கள் ஆகிய ஒற்று இடைக்கண் மிகும் எ-று.

*(உ-ம்.)* விளக்குறிது நுணக்குறிது அதக்குறிது சிறிது தீது பெரிது-என ஒட்டுக. இவை அஃறிணை இயற்பெயராகிய[2] எழுவாய், வினைக்குறிப்புப் பண்பாகிய பயனிலையொடு முடிந்தன.

'ஒத்த' என்றமையாது 'தத்தம் ஒத்த' என்றதனான், அகரஈற்று உரிச்சொல் வல்லெழுத்து மிக்கும் மெல்லெழுத்து மிக்கும் முடியும் முடிபும், அகரம் தன்னை உணரநின்றவழி [3] வன்கணத்தொடு மிக்கு முடியும் முடிபும் கொள்க.

தடக்கை தவக்கொண்டான் வயக்களிறு வயப்புலி குழக்கன்று எனவும், தடஞ்செவி, கமஞ்சூல் எனவும், அக்குறிது சிறிது தீது பெரிது எனவும் வரும்.

இனி, இடைச்சொல் வல்லொற்றுப் பெற்று வருவன உளவேல், அவற்றையும் இவ்விலேசினான் முடித்துக் கொள்க. (1)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*(கணே. என்று குறிப்பிடப்பட்டவை கணேசய்யர் வரைந்த குறிப்புக்கள். பிறவெல்லாம் பதிப்பாசிரியர் வரைந்தன.)*

***203.*** *1) உருபு தொக்கு நின்ற பொருட்புணர்ச்சி வேற்றுமைப்பொருட் புணர்ச்சி; பிறவெல்லாம் அல்வழிக் கண் வந்த பொருட்புணர்ச்சி என்க.*

*2) அஃறிணை இயற்பெயர் - பால்பகா அஃறிணைப் பெயர்.*

*3) அகரமாகிய எழுத்துத் தன்னை யுணர நின்றவழி (அகர ஈற்று)ப் பெயராம்.*

**(பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் இயற்றிய எழுத்திதிகாரக் குறிப்புரை)**

## சாத்திரியார் உரைக்குறிப்பு

*பண்டைய உரைகாரர்கள், உயிர்மயங்கியல் புள்ளி மயங்கியல் குற்றியலுகரப்புணரியல் இவற்றுள் வேற்றுமை வழிக் கூறப்பட்ட புணர்ச்சிகளை வேற்றுமைப் பொருட் புணர்ச்சி எனக் கொண்டனர். அவ்வாறு கொள்ளாது, ஆங்கெல்லாம் வேற்றுமையுருபு நிற்கும்போதும் தொகும் போதும் வரும் புணர்ச்சிகளை ஆசிரியர் கூறினர் எனக் கொள்ளுதல் பொருந்தும். '' மண்ணினைக் கொணர்ந்தான்' என்றவிடத்து வல்லெழுத்து மிகுதியை 'ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்' (281) என்ற சூத்திரத்தானும், 'கயிற்றாற் கட்டினான்' 'காக்கையிற் கரிது' என்றவிடத்து னகரவொற்று றகரவொற்றாய்த் திரிந்ததை 'னகார இறுதி' (333) என்ற சூத்திரத்தானும், 'ஊருக்குச் சென்றான்' என்றவிடத்து வல்லொற்று மிகுதியை 'வன்தொடர்மொழியும்' (415)*

என்ற சூத்திரத்தானும், அவனது கால் என்றவிடத்து இயல்பு புணர்ச்சியை 'ஒற்றுஇடை இனமிகா' (413) என்ற சூத்திரத் தானும் கொள்ளல் தகும்.

ஆதலின், "மேல் உருபுபுணர்ச்சி கூறி ஈண்டுப் பொருட் புணர்ச்சி கூறுகின்றமையின் மேலதனோடு இயைபுடைய தாயிற்று" என்ற இளம்பூரணர் கூற்றும், "மேல் பெயரோடு உருபு புணருமாறு கூறிப் பெயர் வருவழி உருபு தொக்கு நின்ற பொருட்புணர்ச்சி கூறுகின்றமையின் உருபியலோடு இயைபுடைத்தாயிற்று" என்ற நச்சினார்க்கினியர் கூற்றும் பொருந்தா. பொருட்புணர்ச்சி என்றதற்கு வேற்றுமையுருபு நில்லாது அப்பொருள் நிற்குமிடத்து வரும் புணர்ச்சி எனப் பொருள்கொள்ள வேண்டும். அவ்வாறாயின், இவ்வியலில் கூறப்பட்ட விதிகளில், நிலைமொழி, வினையெச்சம் பெயரெச்சம் வினைமுற்று உரையசைக்கிளவி இவை முதலியனவாக இருத்தல் இயலாது. 205, 210, 212, 223, 225, 237ஆம் சூத்திரங்களில் வினையெஞ்சு கிளவி முதலியவற்றை ஆசிரியர் கூறியுள்ளார். உருபியலில், பகுதிக்கும் வேற்றுமை யுருபிற்கும் இடையில் வரும் மாறுதல்களை விரிவாகக் கூறிய ஆசிரியர், யானையை + கண்டான் முதலிய இடங்களிலுள்ள புணர்ச்சியை உரையிற்கோடலால் கொள்ள வைத்தார் என்பது நேரிதாகாது.

[நிலைமொழி ஈற்றுருபு வருமொழியொடு புணர் வதையும் இம்மூன்று மயங்கியலுள்ளும் ஆசிரியர் விதித்துள்ளார் என்னும் சாத்திரியார் கொள்கையை ச.பாலசுந்தரம் அவர்களும் தழுவிக்கொண்டார்.

வேற்றுமையுருபு தொக நிலைவருமொழிகள் புணரும் பொருட்புணர்ச்சியே பெரும்பான்மை என்னும் கருத்துப் பற்றி உரைகாரர்கள் உரைத்துப் போந்தனர். அல்வழிப் புணர்ச்சியும் பொருட்புணர்ச்சியே. அவ்விருவர்தம் உரையுள் 'பொருட்புணர்ச்சி**யும்** கூறுகின்றமையின்' என்னும் எச்சவும்மை ஏடெழுதுவோரால் விடப் பட்டிருக்கலாம் என்று கருதவேண்டியுள்ளது.]

**204.** **அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**

... .... ...... ... ... ... ..

... ... ... ... ... .. **ஒற்றுஇடை மிகுமே.**

உரிச்சொல் என்பது தாது எனத் தெய்வச்சிலையார் வெளிப்படையாக எச்சவியல் முதற்சூத்திரத்தில் விளக்கி யிருக்கின்றமையானும், தவ என்றதை வினைப்போலி எனச் சேனாவரையர் கூறுகின்றமையானும், தட என்றது அவர் கூற்றில் பெயர்ப்போலி ஆகும் ஆதலானும், இச்சூத்திரத்தி லுள்ள 'பெயர்நிலை முன்னர்' என்றதனானே 'தடக்கை' என்றதைக் கொள்ளவும், அடுத்த சூத்திரத்துள்ள 'வினையெஞ்சு கிளவி' என்றதனானே 'தவக்கொண்டான்' என்றதைக் கொள்ளவும் சாலுமெனத் தோன்றுகிறது.

அக்குறிது, அவ்யாது, அவ்வழகிது - என்ற இடங்களில் அகரம் தன்னையே குறித்தலான், அது பெயராகுமேயன்றி இடைச்சொல் ஆகாது.

[இடைச்சொல்லையும் உரிச்சொல்லையும் ஆசிரியர் கிளந்தோதியே முடிப்பர் என்பது உரையாளர் கொள்கை யாதலின், கிளந்தோதாதவழி அவற்றை அன்னோர் உரையிற் கோடலானும் இலேசு முதலியவற்றானும் கொள்வாராயினர் என்க.]

**(ச. பாலசுந்தரம் அவர்களது ஆராய்ச்சிக் காண்டிகையுரை)**

## பாலசுந்தரம் உரைக்குறிப்பு

வேற்றுமைப்புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சி என்னும் இரண்டனுள், வேற்றுமையுருபு தொக அப்பொருள்படப் புணரும் புணர்ச்சியும், உருபுகள் பெயரோடு ஒட்டி ஒரு சொல்லாய் நின்று குறித்துவரு கிளவியொடு புணரும் புணர்ச்சியும், வேற்றுமைப் புணர்ச்சி எனப்படும். அல்லாதவை அல்வழிப் புணர்ச்சி எனப்படும்.

**203.** **அகர இறுதிப்** ... ... ... ... **ஒற்றிடை மிகுமே.**

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்ப் பொருளவாயும் பெயர்களைச் சார்ந்தும் வருமிடத்து அவை பெயராகக் கொள்ளப்படும் என்பார் 'பெயர்' என்னாது 'பெயர்நிலைக் கிளவி' என்றார். அந்நெறியானே தடக்கை - வயக்களிறு - என உரிச்சொற்கள் பெயர்நிலைக் கிளவியாய் நின்று புணர்ந்தன. மெலி மிகுந்த கமஞ்சூல் - தடஞ்செவி - என்பன ஓசை கருதிய செய்யுள் விகாரமாம்; அன்றிப் புறனடையாற் கொள்ளலுமாம். இனி, வரிவடிவைச் சுட்டிக் கூறுமிடத்து, அக்குறிது - அப்பெரிது - எனத் தன்னை உணர்த்தி நின்றவழிப் பெயர்நிலைமை எய்திற்றாகலின், எழுத்தும் இவ்விதி பெற்றதென்க.

## இளம்பூரணம்

### *205. அகர ஈற்று வினையெச்சமும் இடைச்சொல்லும் மேலைமுடிபு பெறுதல்*

**வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்**
**என-என் எச்சமும் சுட்டின் இறுதியும்**
**ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்**
**ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே.**

இச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், அகரஈற்று வினைச்சொல் முடிபும், இடைச்சொல் முடிபும் கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* அகரஈற்று வினையெச்சம் ஆகிய சொல்லும், உவமம் ஆகிய சொல்லும், என - என்று சொல்ல வருகின்ற எச்சச்சொல்லும், சுட்டாகிய அகரஈறும், ஆங்க என்று சொல்லப்படும் உரையசை ஆகிய சொல்லும், மேலைச் சூத்திரத்துச் சொன்ன வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* உணக் கொண்டான், தினக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என்பன வினையெச்சம்.

மேலன எல்லாம் இடைச்சொல்:

புலிபோலக் கொண்டான் - சென்றான் தந்தான் போயினான் என்பன உவமம். கொள்ளெனக் கொண்டான்[1] - என்பது எனவென் எச்சம். அக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன்-என்பன சுட்டின் இறுதி. ஆங்கக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என்பன உரையசைக் கிளவி. (2)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***205.*** வினையெஞ்சு கிளவி உவமக்கிளவி முதலிய இனமில்லாதவற்றை உடன் எண்ணுதலான் இச்சூத்திரம் ஒப்பக்கூறல் என்னும் உத்தியாம். (பொ.665 பேரா.)

'ஞாங்கர்க்... ... ...மிகுமே' என்னும் அடியை 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்னும் உத்திக்கு எடுத்துக் காட்டாகக் கொள்வர். (ஷி)

*1)* கொள்ளெனக் கொண்டான் - கொள்ளுதற்குரிமை யுடையன் ஆகிய காரணத்தால் கொண்டான் என எனவென் எச்சம் பொருள் விரியும்; என - 'என்று கூறியதனால்' எனப் பொருள் செய்யலாகாது.

**நச்சினார்க்கினியம்**

***204. அகர ஈற்றுள் வல்லெழுத்து மிக்கு முடிவன***

**வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்**
**எனஎன் எச்சமும் சுட்டின் இறுதியும்**
**ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்**
**ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே.**

இஃது அகரஈற்று வினைச்சொல்லும் இடைச் சொல்லும் புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) வினையெஞ்சு கிளவியும் - வினையை ஒழிபாகவுடைய அகரஈற்று வினைச்சொல்லும்; உவமக் கிளவியும் - உவமவுருபாய் நின்ற அகரஈற்று இடைச் சொல்லும்; என என் எச்சமும் - என என்னும் வாய்பாட்டான் நின்ற அகரஈற்று இடைச்சொல்லும்; சுட்டின் இறுதியும் - சுட்டாகிய அகர ஈற்று இடைச்சொல்லும்; ஆங்க... ... ... கிளவியும் - ஆங்க என்னும் அகரஈற்று உரையசை இடைச்சொல்லும்; ஞாங்கர்க்... ... மிகும் - முன்னர்க் கூறிய வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உண-தாவ-சாவ-என நிறுத்தி, கொண்டான் - சென்றான்-தந்தான்-போயினான்- என வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க. இவ்வினையெச்சம் ஒழிந்தன எல்லாம் இடைச்சொல் என்றுணர்க.

புலிபோலக் கொன்றான்-சென்றான் - தாவினான் - போயினான் எனவும், கொள்ளெனக் கொண்டான்-சென்றான்-தந்தான்-போயினான்-எனவும்-அக்கொற்றன் - சாத்தன் - தேவன் - பூதன் எனவும், ஆங்கக்கொண்டான்-சென்றான்-தந்தான் போயினான் ‘ஆங்கக் குயிலும் மயிலும் காட்டிக், கேள்வனை விடுத்துப் போகி யோளே’ எனவும் வரும்.

உவமம் வினையெச்ச வினைக்குறிப்பேனும், ஒன்றனொடு பொருவப்படுதல் நோக்கி உவம இயலின்கண் ஆசிரியர்வேறுபடுத்திக் கூறினார். என என்னும் எச்சமும் இரு சொல்லையும் இயைவிக்கின்ற நிலைமையான் [1] இடைச் சொல் ஓத்தினுள் வேறு ஓதினார். ஆங்க என்பது ஏழனுருபின் பொருள்பட வந்ததல்லாமை ‘ஆங்க உரையசை’ (சொல்.274) என்னும் இடையியற் சூத்திரத்தானும் உணர்க[2]. இவை இயல்புகணத்துக்கண் முடியும் முடிபு ‘ஞ ந ம ய வ’ எனும் (144) என்புழிக் கூறியதேயாம். அவை தாவ - புலிபோல - கொள்ளென - ஆங்க - என நிறுத்தி, ஞ ந ம ய வ முதலிய மொழி ஏற்பன கொணர்ந்து புணர்த்தி இயல்பாமாறு ஒட்டிக்கொள்க. சுட்டு மேற் கூறுப. (205-208) (2)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***204.*** இச்சூத்திரம் இனமல்லவற்றை யுடன் எண்ணுதலின் 'ஒப்பக்கூறல்' என்னும் உத்திக்கு இனமாம். (பொ. 665 பேரா.)

முன் சூத்திரத்தே 'தத்தம் ஒத்த ஒற்று' என்று கூறியது இச்சூத்திரத்தே சொல்லிய வல்லெழுத்தே என்று புலப்படுத்தியமை 'வந்தது கொண்டு வாராததுணர்த்தல்' என்னும் உத்தியாம்.

*1)* எனவென் எச்சம் நிலைமொழி வருமொழித் தொடராகவே குறிக்கப்படுதல் காண்க, முடிக்குஞ் சொல் வாராவழிப் பொருள்படாமையின்.

*2)* சிறிது பொருள் பயப்பவருவது உரையசை என்றும், பொருள் பயவாது ஒரு சொல்லைச் சார்த்திச் சொல்ல வருவது அசைநிலை என்றும் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். 'ஆங்க' ஆங்கு என்னும் இடப்பொருள்பட வந்திலது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***205.*** **வினையெஞ்சு கிளவியும்... ... வல்லெழுத்து மிகுமே.**

சுட்டினை இடைச்சொல்லாக நச்சினார்க்கினியர் கூறுதல் பொருந்தாது. அவற்றைச் சுட்டுப்பெயரின் தாதுவாக மொழி நூல் வல்லோர் கொண்டனர்.

[சுட்டினை எழுத்தாகக் கூறாது இடைச்சொல்லாகக் கோடலே பண்டை யுரையாளர்தம் துணிபு. வினைச்சொற் பகுதியே தாது எனப்படும் என்பது வடமொழியாளர் கருத்து. சேனாவரையரும் அதுவே கூறினார்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***204.*** **வினையெஞ்சு கிளவியும்... ... வல்லெழுத்து மிகுமே.**

'சுட்டின் இறுதி' என்பதன்கண், 'இன்' தவிர்வழி வந்த சாரியையாம்.

## இளம்பூரணம்

### 206. அகரச்சுட்டு மென்கணத்தொடு முடியுமாறு

**சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்**
**ஒட்டிய ஒற்றுஇடை மிகுதல் வேண்டும்.**

இச்... ...எனின், அகரச்சுட்டு மென்கணத்தொடு முடியுமாறு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) அகரச்சுட்டின் முன்னர் ஞநமக்கள் முதலாகிய மொழி வருமொழியாய்த் தோன்றின், தத்தமக்குப் பொருந்திய ஒற்றுக்கள் இடைக்கண்ணே மிகுதல் வேண்டும் எ-று.

(உ-ம்.) அஞ்ஞாண் நூல் மண் - என வரும். (3)

## நச்சினார்க்கினியம்

### 205. அகரச்சுட்டின் முன் மென்கணம் முடியுமாறு

**சுட்டின் முன்னர் ஞ ந ம த் தோன்றின்**
**ஒட்டிய ஒற்றுஇடை மிகுதல் வேண்டும்.**

இது 'ஞ ந ம ய வ' (144) என்னும் சூத்திரத்தான் மென்கணம் இயல்பாகும் என முற்கூறியதனை விலக்கி, மிக்கு முடிக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

(இ-ள்.) சுட்டின் ... ... தோன்றின் - அகரச்சுட்டின் முன்னர் ஞ ந ம-க்கள் முதலாகிய மொழிவரின்; ஒட்டிய..... வேண்டும் - தத்தமக்குப் பொருந்தின ஒற்று இடைமிகுதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

*(உ-ம்.) அஞ்ஞாண் அந்நூல் அம்மணி என வரும்.*

'ஒட்டிய' என்றதனான், அஞ்ஞெளிந்தது அந்நன்று அம்மாண்டது என அகரம் தன்னை உணர நின்றவழியும்,[1] மிகுதல் கொள்க. *(3)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***205.*** அகரம் தன்னை யுணர நின்றவழி இடைச்சொல் ஆகாது பெயராம்; ஆகவே அகரவீற்றுப் பெயர்போல இருவழியும் முடியும் என்றார்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***206. சுட்டின் முன்னர்... ... ... வேண்டும்.***

"அந்நன்று அம்மாண்டது என அகரம் தன்னை யுணரநின்றவழியும் மிகுதல் கொள்க" என்றார் நச்சினார்க்கினியர். எழுவாய்த் தொடராதலின் மிகாது விட்டிசைத்தலே சிறக்கும் என்றார் சாத்திரியார்.

[எழுவாய்த்தொடர்க்கண் மிக்கபுணர்ச்சியும் உண்டு என்பதற்கு இச்சூத்திரத்துள் 'ஞநமத் தோன்றின்' என்னும் புணர்ப்பே சான்றாயிற்று.]

**இளம்பூரணம்**

***207. அச்சுட்டு இடைக்கணத்தொடு முடியுமாறு***

**யவமுன் வரினே வகரம் ஒற்றும்.**

இச்... ... எனின், சுட்டு இடைக்கணத்தொடு முடியுமாறு கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* யகரவகர முதல்மொழி அகரச்சுட்டின் முன்னே வரின், இடைக்கண் வகரம் ஒற்றாகும் எ-று.

*(உ-ம்.)* அவ்யாழ், அவ்வளை - என வரும். *(4)*

## நச்சினார்க்கினியம்

### *206. அதன்முன்னர் இடைக்கணம் முடியுமாறு*

**யவமுன் வரினே வகரம் ஒற்றும்.**

*இதுவும் அது.*

*(இ-ள்.) யவமுன் வரின் - யகர வகர முதல்மொழி அகரச்சுட்டின் முன்னே வரின்; வகரம் ஒற்றும் - இடைக்கண் வகரம் ஒற்றாம் எ-று.*

*(உ-ம்.) அவ்யாழ் அவ்வளை-என வரும்.*

*வருமொழி முற்கூறிய அதனான், அகரம் தன்னை யுணர நின்றவழியும் வகரம் மிகுதல் கொள்க.*

*அவ்வளைந்தது என வரும்.* *(4)*

## இளம்பூரணம்

### *208. உயிர்க்கணம் வருவழியும் அஃது அம்முடிபு பெறுதல்*

**உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.**

*இச்... ... ...எனின், அச்சுட்டு உயிர்க்கணத்தொடு முடியுமாறு உணர்த்... ... ...ற்று.*

*(இ-ள்.) உயிர் முதல் மொழி அகரச்சுட்டின் முன்னர் வரினும், மேற்கூறிய வகரம் மிக்குமுடியும் அவ்வியல்பின் திரியாது எ-று.*

*(உ-ம்.) அவ்வடை, அவ்வாடை - என ஒட்டுக.*

*இடைமிக்க வகரத்தினை 'நெறியியல்' (தொகை. 18) என்ற இலேசினான் இரட்டுதல் கூறினமையின், இது நிலைமொழித் தொழில் என்பது கூறப்பட்டது.*

திரியாது என்றதனானே, மேல் (6) சுட்டு நீண்டவழி வகரக்கேடு கொள்க. (5)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

உரையிடை அடைப்புக்குறியுள் இடப்படும் எண்கள் அவ்வவ் வியற்கண் நிகழும் சூத்திரத் தொடரெண் எனக் கொள்க.

### நச்சினார்க்கினியம்

## *207. உயிர்க்கணம் முடியுமாறு*

**உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.**

இதுவும் அது.

(இ-ள்.) உயிர்முன்... ... ...திரியாது - உயிர்கள் அகரச்சுட்டின் முன் வரினும், முற்கூறிய வகரம் மிக்குவரும் இயன்பின் திரியாது எ-று.

அ என நின்ற சுட்டின்முன்னர் அடை என வருவித்து வகரம் ஒற்றித் தன்உரு இரட்டி, அவ்வடை அவ்வாடை அவ்விலை அவ்வீயம் அவ்வுரல் அவ்வூர்தி அவ்வெழு அவ்வேணி அவ்வையம் அவ்வொழுக்கம் அவ்வோடை அவ்வெளவியம் - என ஒட்டுக.

'நெடியதன் முன்னர்' (160) என்பதனுள் 'நெறியியல்' என்றதனான் இரட்டுதல் கூறினமையின், அது நிலைமொழித் தொழில் என்பது பெறப்பட்டது. வருமொழி முற்கூறிய வதனான், அகரம் தன்னை யுணர நின்றவழியும் வகரம் மிகுதல் கொள்க. அவ்வழகிது என வரும்.

'திரியாது' என்றதனான், மேல் (உயிர்.6) சுட்டு நீண்ட வழி வகரக்கேடு கொள்க. (5)

### சாத்திரியார் உரைக்குறிப்பு

***208.* உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.**

'திரியாது' என்றதனானே, மேற்சுட்டு நீண்டவழி வகரக் கேடு கொள்க என்றார் இளம்பூரணர். இவ்வாறு கொள்ளாது, 'ஆயிரு திணையின்' (சொல். 1) 'ஆயிரண்டு' (எழுத். 85) முதலிய ஆசிரியர் வழக்கே அதற்கு ஞாபகமாகக் கொள்ளல் கூடும்.

[ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியதற்கு, இச்சூத்திரத்துள் இலேசினான் விதியமைத்தார் உரையாசிரியர். இலேசினானும் அமைக்க முடியாதவழியே ஞாபகத்தான் கொள்ளல் அமையும்.]

"வருமொழி முற்கூறியவதனான், அகரம் தன்னை உணர நின்றவழியும் வகரம் மிகுதல் கொள்க; அவ்வழகிது என வரும்" என்றார் நச்சினார்க்கினியர். தன்னை யுணர நிற்கும் அகரம் பெயராகும் அன்றிச் சுட்டாகாது என்க.

[தன்னை யுணர நின்றவழி அகரத்தைச் சுட்டாகக் கருதிற்றிலர் நச்சினார்க்கினியர். அதனைப் பெயராகவே கொண்டு, இயைபு நோக்கி, ஈண்டே முடிபு கூறினார் என்க.]

**இளம்பூரணம்**

***209. அச்சுட்டு செய்யுட்கண் நீடல்***

**நீட வருதல் செய்யுளுள் உரித்தே.**

இச்... ... என்... ...எனின், அகரச்சுட்டு செய்யுளுள் முடியுமாறு கூறு... ...ற்று.

(இ-ள்.) அகரச்சுட்டு நீளும்படியாக வருதல் செய்யுளிடத்து உரித்து எ-று.

(உ-ம்.) 'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' (சொல். 1) என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின், இம்முடிபு வன்கணம் ஒழிந்த கணம் எல்லாவற்றொடும் சென்றது. உதாரணம்[1] பெற்றவழிக் கொள்க. (6)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***209.*** *1)* 'ஆவைந் தெழுத்தும் '*(61)*, 'ஆமுப் பெயரும்' *(230)*, 'ஆவயின்' *(251)* என இயல்புகணத்துக்கண் உதாரணம் கண்டு கொள்க.

**நச்சினார்க்கினியம்**

## *208. செய்யுட்கண் அகரச்சுட்டு நீடல்*

**நீட வருதல் செய்யுளுள் உரித்தே.**

இஃது எய்தியது விலக்கிச் செய்யுட்கு ஆவதொரு விதி கூறுகின்றது.

*(இ-ள்.) நீட... ...உரித்து - அகரச்சுட்டு நீடவருதல் செய்யுளிடத்து உரித்து எ-று.*

(உ-ம்.) 'ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே' *(சொல். 1)*, 'ஆயிரு பாற்சொல்' *(ஷை 3)* என வரும். இது வருமொழி வரையாது கூறலின், வன்கணம் ஒழிந்தகணம் எல்லாவற்றொடும் சென்றது. அவற்றிற்கு உதாரணம் வந்த வழிக் காண்க[1]. இந்நீட்சி இருமொழிப் புணர்ச்சிக்கண் வருதலின் 'நீட்டும்வழி நீட்டல்' *(ஷை 403)* ஆகாமை உணர்க. *(6)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***208.*** 'ஆமுப்பெயர்' *(229)*, 'ஆவயினான' *(200)* எனக் காண்க. அ+முப்பெயர், 'ஆமுப்பெயர்' ஆயிற்று.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***209.*** **நீட வருதல் செய்யுளுள் உரித்தே.**

சுட்டு நீண்டவிடத்து யகரவகரங்கள் உடம்படு மெய்யாக வருதலும், வருமொழிமுதல் இரட்டிக்காமல் இருத்தலும்,வருமொழி முதல் வல்லினமாயிருக்க அதற்கு இனமெல்லினம் தோன்றலும் ஆசிரியர் வழக்கினான் அறியக்கூடும்.

*(உ-ம்.)* ஆயிரண்டு *(எழுத். 85)*, ஆவறு மூன்று *(சொல்.56)*, ஆங்கண் *(கற்பு. 31)*, ஆவகை *(களவு. 22)*, ஆவயின் *(கற்பு. 8)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**208.** **நீட வருதல் செய்யுளுள் உரித்தே.**

'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' *(எச்ச. 61)* என்றதனான், நீண்டு என்னும் செய்தென் எச்சம் திரிந்து நின்றது. அன்றி, மாத்திரை நீட வருதல் என மாத்திரையை அவாய்நிலையாற் கொள்ளலுமாம். வரையறையின்மையின், யகர உடம்படுமெய் பெற்றது. *(அ+இடை=ஆயிடை)*

## இளம்பூரணம்

### *210. 'சாவ' வன்கணம் வருவழி இறுதி வகரம் கெடுதல்*

**சாவ என்னும் செயஎன் எச்சத்து**
**இறுதி வகரம்[1] கெடுதலும் உரித்தே.**

இச்... ...என்... ...எனில், மேல் 'வினையெஞ்சு கிளவியும்' *(2)* என்ற முடிபிற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* சாவ என்று சொல்லப்படும் செயவென் எச்சத்து இறுதிக்கண் அகரமும் அதனான் பற்றப்பட்ட வகர ஒற்றும் கெடாது நிற்றலே அன்றி, கெட்டு முடிதலும் உரித்து எ-று.

*(உ-ம்.)* சாக்குத்தினான் சீறினான் தகர்த்தான் புடைத்தான்- எனவரும்.

இதனை வினையெஞ்சு கிளவியும் *(2)* என்றதன்பின் வையாத முறையன்றிக் கூற்றினான், இயல்புகணத்தும் அந்நிலைமொழிக் கேடு கொள்க.

*(உ-ம்.)* சாஞான்றார்[2] - என வரும். (7)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***210.*** 1) இறுதி வகரம்: உம்மைத் தொகையாகக் கொண்டனர் உரையாசிரியன்மார் இருவரும்.

2) சாஞான்றார் - சாவத் தூக்கிலிட்டுக்கொண்டார்.

**நச்சினார்க்கினியம்**

***209. 'சாவ ', வன்கணம் வருவழி முடியுமாறு***

**சாவ என்னும் செயஎன் எச்சத்து**
**இறுதி வகரம் கெடுதலும் உரித்தே.**

இதுமேல் வினையெஞ்சு கிளவி என்ற எச்சத்திற்கு எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) சாவ... ...வகரம் - சாவ என்று சொல்லப்படும் செயவென் எச்சத்து இறுதிக்கண் நின்ற அகரமும் அதனாற் பற்றப்பட்ட வகரமும்; கெடுதலும் உரித்து - கெட்டு நிற்றலும் உரித்து, கெடாது நிற்றலும் உரித்து எ-று.

(உ-ம்.) கோட்டிடைச் சாக்குத்தினான் எனவரும். சீறினான் தகர்த்தான் புடைத்தான் [1] என ஒட்டுக. கெடாதது முன்னர் (204) முடித்தாம் [2].

இதனை 'வினையெஞ்சு கிளவி' (204) என்றதன் பின் வையாததனான், இயல்பு கணத்தும் இந்நிலைமொழிக் கேடு கொள்க.

(உ-ம்.) சாஞான்றான்[3] நீண்டான்[4] மாண்டான்[5] யாத்தான் வீழ்ந்தான் அடைந்தான் - என ஒட்டுக. (7)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***209.*** 1) 'சாப்புல்லற் பாற்று' (குறள். 829)

2. செயவென் எச்சம் இறுதி கெடாமல் முடிந்தமை.

3. சாவுமாறு தூக்கிலிட்டுக் கொண்டான்.

4. சாவுமாறு நெடுந்தூரம் சென்றான், நெடுநாள் பட்டினி கிடந்தான்.

5. மாண்டான் - மாட்சிமைப்பட்டான். (உயிரைப் போக்குமாறு மாண்டான்)

இச்செயவென் எச்சம் ஈறுகெடுதலை ஆசிரியர் **உடம்பொடு புணர்த்துக் கூறிய இடம் சில வருமாறு;**

'பன்மையும் ஒருமையும் பாலறி வந்த' வினை. 11,18, 21,24.

'அறிய வந்த' என்னும் 'செய' வென் எச்சத்து இறுதி யகரம் கெட்டு 'அறிவந்த' என வருமாறு காண்க.

'செய்தக்க அல்ல' (குறள். 466) என்புழியும் அது.

பிரயாகவிவேகமும் இந்நயத்தைச் சுட்டியுள்ளது (கா.35).

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**209. சாவ என்னும்... ...கெடுதலும் உரித்தே.**

இறுதி வகரம் என்பதற்கு, இறுதியும் அதனாற் பற்றப்பட்ட வகரமும் எனப் பொருள்கூறின், உரித்து என்னும் பயனிலையொடு இயையாமை காண்க. வேற்றுமை நயம் கருதிக்கூறும் இடத்தன்றி, உயிர்மெய்யை ஓரெழுத்தாகக் கோடலே இவ்வாசிரியர் கருத்து.

['கெடுதலும்' என்பது ஒருமை எழுவாய்]

**209.** [உரையாசிரியன்மார் 'இறுதிவகரம்' என்பதற்குக் கூறிய பொருள், பன்மையொருமை மயக்கத்திற்கு இடனாகிறது என்று குறித்தார் இவ்வுரைகாரர் பாலசுந்தரம். இளம்பூரணருரையுள் 'கெட்டுமுடிதலும் உரித்து' என

முடிதலின் அம்மயக்கமின்று. நச்சினார்க்கினியருரையுள் ஏடெழுதுவோர் பிழையெனக் கருதல் வேண்டும்.

ஒற்றுமை நயம் கருதியவிடத்தும், உயிர்மெய்யை ஈரெழுத்தாகக்கொண்டு இவ்வுரைகாரர் உரைகூறியுள்ளமை சூ.472-இல் காணப்படும்; ஈறுசினை: உம்மைத்தொகை என்றும் விளக்கினார். ஆகலின் ஒற்றுமைநயம் பற்றியோ, வேற்றுமை நயம் பற்றியோ பொருள்காண்டற்கண் இவ் விடத்தே விசேடமின்மை அறியப்படும்.

இவ்வமைதியை 211ஆம் சூத்திரவுரையுள்ளும் கொள்ளல் வேண்டும்.]

## இளம்பூரணம்

### *211. அகரஈற்றுள் இயல்பாய் முடியும் சொற்கள்*

**அன்ன என்னும் உவமக் கிளவியும்**
**அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்**
**செய்ம்மன என்னும் தொழில்இறு சொல்லும்**
**ஏவல் கண்ணிய வியங்கோள் கிளவியும்**
**செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்**
**செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அம்ம என்னும் உரைப்பொருள் கிளவியும்**
**பலவற்று இறுதிப் பெயர்க்கொடை உளப்பட**
**அன்றி அனைத்தும் இயல்புஎன மொழிப.**

இச்... ...என்... ...எனின், இஃது அகர ஈற்றுள் ஒருசார் பெயர்க்கும் வினைக்கும் இடைக்கும் முன் எய்தியது விலக்கியும், எய்தாதது எய்துவித்தும் முடிபு கூறு... ...ற்று.

அன்ன என்பதும் செய்யிய என்பதும் பலவற்றிறுதிப் பெயர்க்கொடை என்பதும்[1] எய்தியது விலக்கின. மற்றையன எய்தாதது எய்துவித்தன.

(இ-ள்.) அன்ன என்று சொல்லப்படும் உவமவுருபு ஆகிய இடைச்சொல்லும், அணியாரைக் கருதிய விளியாகிய நிலைமையுடைய உயர்திணைப் பெயர்ச்சொல்லும், செம்மன என்று சொல்லப்படும் வினைச்சொல் ஆகிய அகர ஈற்றுச் சொல்லும், ஏவலைக் கருதின வியங்கோள் ஆகிய வினைச்சொல்லும், அம்ம என்று சொல்லப்படும் உரையசைப் பொருண்மையையுடைய இடைச்சொல்லும், பன்மைப் பொருள்களின் அகர ஈற்றுப் பல என்னும் பெயர்ச்சொல்லும் ஆகிய அவ்வனைத்துச் சொல்லும் இயல்பாய் முடியும் என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) பொன்னன்ன குதிரை செந்நாய் தகர் பன்றி- எனவும், ஊர கொள் செல் தா போ - எனவும்,

உண்மன குதிரை செந்நாய் தகர் பன்றி - எனவும்,

செல்க குதிரை செந்நாய் தகர் பன்றி - எனவும்,

உண்ட குதிரை செந்நாய் தகர் பன்றி - எனவும், இதன் எதிர்மறை உண்ணாத குதிரை செந்நாய் தகர் பன்றி-எனவும், அதன் குறிப்பு நல்ல குதிரை செந்நாய் தகர் பன்றி - எனவும், உண்ணிய கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவும், அம்ம கொற்றா சாத்தா தேவா பூதா - எனவும், பல குதிரை செந்நாய் தகர் பன்றி - எனவும் வரும்.

'ஊர கொள்' என்பது 'உயிர் ஈறாய் உயர்திணைப் பெயர்' (தொகை.11) என்பதனுள் அடங்காதோ எனின், ஊரன் என்பது ஊர என்றே ஈறு திரிந்து நின்றமையின் அடங்காதாயிற்று என்பது.

'விளிநிலைக் கிளவி' ஆகிய பெயரை முன் வையாத தனான், செய்த என்பதன் மறையன்றிச் செய்யும் என்பதற்கும் மறையாகிய செய்யாத என்பதும் [2] அவ்வியல்பு முடிபு உடைத்தெனக் கொள்க.

அது வாராத கொற்றான் - எனவரும்.

**உரையிற்கோடல்** என்பனான், வியங்கோள் முன்வைக்கற் பாலதனை [3] முன்வையாது செய்ம்மன என்பதனை முன் வைத்ததனான், இவ்வியல்பு முடிபின்கண் செய்ம்மன என்பது சிறப்புடைத்து என்பது பெறப்பட்டது. அதனான், ஏவல் கண்ணாத வியங்கோளும் இவ்வியல்பு முடிபு உடைத்தெனக் கொள்க.

அது 'மன்னிய பெரும நீ' (புறநா.6) என வரும்[4].

'பலவற்றிறுதிப் பெயர்க்கொடை' என்பதனை அம்ம என்பதற்கு முன்வையாததனான், பல என்பது மேற்கூறும்(11) செய்யுள் முடிபின் திரிந்து முடிதல் ஈண்டை இயல்பின் சிறப்பு இன்று[5] என்பதூஉம், அகர ஈற்றுள் கூறாத முற்று வினையும் வினைக்குறிப்பும் இவ்வியல்பு முடிபின என்பதூஉம் பெறப்படும்.

(உ-ம்.) உண்டன குதிரை - என்பது முற்றுவினை; கரிய குதிரை[6] - என்பது முற்றுவினைக் குறிப்பு.

**நன்னிலம் முடித்தல்** என்பதனான், பல என்பதன் இனமாகிய சில என்பதற்கும் இவ்வியல்பு கொள்க.

(உ-ம்.) சில குதிரை - என வரும். (8)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*2//.* இனமில்லவற்றை உடன் எண்ணுதலான் இச்சூத்திரம் 'ஒப்பக்கூறல்' என்னும் உத்தியாம். (பொ. 665 பேரா.)

உண்மன குதிரை - உண்ணும் குதிரை. செய்யும் என்னும் பெயரெச்சப் பொருட்டாகச் 'செய்ம்மன' நிகழ்தல் நச்சினார்க்கினியருரையாற் போதரும். இளம்பூரணருரை விளக்கம் அது. சேனாவரையர் அதனை முற்றென்பர். தெய்வச்சிலையார் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாகிய வினையாலணையும் பெயராகக் கொண்டார்.

*1)* போல என்ற உவமக் கிளவியை 'அன்ன' விலக்கிற்று. செய என்னும் வினையெஞ்சு கிளவியைச் 'செய்யிய' விலக்கிற்று.

'பலவற் றிறுதிப் பெயர்க்கொடை என்பதும்' - இத் தொடர் பொருளின்றிச் செல்வதால் நீக்கப்படும் இடைச்செருகல் எனக்கொள்க. அது நீக்கப்பட்டது.

*2)* செய்த செய்யும் என்னும் இரண்டு வாய்பாட்டுப் பெயரெஞ்சு கிளவிக்கும் பொதுவான எதிர்மறை 'செய்யாத' என்பதாம். அது முக்காலத்துக்கும் பொதுவாக நிற்றல் காண்க.

*3)* 'முன்னிலை வியங்கோள்' என்னும் வினையியற் சூத்திரத்துள் (25), வியங்கோள் செய்ம்மன என்பதன் முன்னர் வைக்கப்பட்டுள்ளது.

*4)* ஏவற்பொருண்மையை முற்ற முடித்தலைக் கருதாத வியங்கோள் 'ஏவல் கண்ணாத' தாம். அஃறிணைக்கண் வரும் வியங்கோள் அன்னதாதல் அறியப்படும். 'மன்னிய பெரும நீ' என்று வாழ்த்தியவழி, வாழ்த்தப்பட்டான் சாவாது நிலைபெறுதல் கூடாமையின், 'மன்னிய' என்னும் வியங்கோள் ஏவற்பொருண்மையை முற்ற முடித்தலைக் கண்ணாததாயிற்று.

*5)* 'பலாஅஞ் சிலாஅம்' என்னும் திரிந்த செய்யுள் முடிபு, இச்சூத்திரத்திற் கூறப்படும் இயல்பு முடிபினும் சிறப்பிற்றன்று.

*6)* 'குதிரை கரிய' என்னும் எழுவாய்த் தொடர் நிலைமாறி நின்றமையின் குறிப்பு வினைமுற்றுத் தொடராம்.

**நச்சினார்க்கினியம்**

***210. அகரஈற்றுள் இயல்பாய் முடிவன.***

**அன்ன என்னும் உவமக் கிளவியும்**
**அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்**
**செய்ம்மன என்னும் தொழில்இறு சொல்லும்**
**ஏவல் கண்ணிய வியங்கோள் கிளவியும்**
**செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்**
**செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்**
**பலவற்று இறுதிப் பெயர்க்கொடை உளப்பட**
**அன்றி அனைத்தும் இயல்பென மொழிப.**

இஃது அகர ஈற்றுள் ஒருசார் பெயர்க்கும் வினைக்கும் இடைக்கும் முன் எய்தியது விலக்கியும், எய்தாதது எய்துவித்தும் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்.) அன்ன... ...கிளவியும் - அன்ன என்று சொல்லப்படும் உவமவுருபாகிய அகரஈற்று இடைச் சொல்லும்;

அண்மை... ... கிளவியும் - அணியாரைக் கருதின விளியாகிய நிலைமையினையுடைய அகரஈற்று உயர் திணைப் பெயர்ச்சொல்லும்;

செய்ம்மன என்னும் தொழில் இறு சொல்லும்-செய்ம்மன என்று சொல்லப்படும் தொழிற்சொல் பொருள் தருங்கால் உம் ஈற்றான் இறும் சொல்லும்[1]

ஏவல்... ... கிளவியும் - ஒருவரால் ஏவல் தொழின்மை கருதிக் கூறப்பட்ட ஏவற்பொருண்மையை முற்ற முடித்தலை உணர்த்தும் அகரஈற்று வினைச்சொல்லும்;

செய்த... ...கிளவியும் - செய்த என்று சொல்லப்படும் பெயரெச்சமாகிய அகரஈற்று வினைச்சொல்லும்;

செய்யிய... ...கிளவியும் - செய்யிய என்று சொல்லப் படும் வினையெச்சமாகிய அகரஈற்று வினைச் சொல்லும்;

அம்ம... ... கிளவியும் - அம்ம என்று சொல்லப்படும் எதிர்முக மாக்கிய அகரஈற்று இடைச்சொல்லும் (சொ. 278);

பலவற்று.. ....பெயர்க்கொடை[2] - பன்மைப் பொருளை உணர்த்தும் அகரஈற்றுப் பெயர்கள் ஐந்தனையும் முற் கூறியவற்றொடு கூட்டிக் கொடுத்தல்;

உளப்பட - உள்ளிட்டு; அன்றி... ... மொழிப - அவ் வெட்டுச் சொல்லும் இயல்பாய் முடியும் என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) பொன்னன்ன குதிரை செந்நாய் தகர் பன்றி - என இது 'வினையெஞ்சு கிளவியும்' (204) என்பதனான் மிக்கு முடிதலை விலக்கிற்று.

ஊர கேள் செல் தா போ - என 'உயிரீ றாகிய' (153) என்னும் சூத்திரத்தான் இயல்பாய் முடிவது, ஈண்டு னகரம் கெட்டு அகர ஈறாய் விளியேற்று முடிந்தமையின்[3], எய்தாதது எய்துவித்தது.

உண்மன குதிரை செந்நாய் தகர் பன்றி - என்பன வற்றிற்கு உண்ணும் என விரித்தும், யானுண்மன நீயுண்மன அவனுண்மன - என நிறுத்திக் கூழ் சோறு தேன் பால் - என வருவித்தும் முடிக்க. இவற்றிற்கும் அவ்வாறே விரித்துக் கொள்க. இங்ஙனம் செய்யும் என்பதன் எச்சப்பொருட்டாகிய மனவென் இறுதிச்சொல் அக்காலம் வழங்கியதாதலின், ஆசிரியர் அதனையும் வேறாக எடுத்தோதினார்.

யானும் நின்னோடு உடன் வருக - அவன் செல்க - அவள் செல்க - அவர் செல்க - என நிறுத்தி, காட்டின்கண் செறுவின்கண் தானைக்கண் போரின்கண் என வருவித்து முடிக்க. இவை ஏவற்பொருண்மையை முற்ற முடியாதன. அஃறிணை ஏவற்பொருண்மையை முற்ற முடியாமை வினையிலுள் வியங்கோட்கண்ணே (சொ. 228) பொருளியலும் செய்யுளியலும் பற்றிக் கூறுதும்.

மனவும் வியங்கோளும் எய்தாதது எய்வித்தது.[6]

உண்ட குதிரை செந்நாய் தகர் பன்றி: இதுவும் அது. இதற்கு உரிய உண்ணாத குதிரை என்னும் எதிர்மறையும், நல்ல குதிரை என்னும் குறிப்பும் கொள்க.

உண்ணிய கொண்டான் சென்றான் தந்தான் போயினான்: இது முன்னர் வினையெச்சம்[7] வல்லெழுத்துப் பெறுக என்றலின், எய்தியது விலக்கிற்று.

அம்ம கொற்றா சாத்தா தேவா பூதா - என்பது இடைச் சொல் ஆதலின், எய்தாதது எய்துவித்தது. இது கேளாய் கொற்றனே என எதிர்முகமாக்கியவாறு காண்க.

பல்லகுதிரை பலகுதிரை சிலகுதிரை உள்ளகுதிரை இல்லகுதிரை - செந்நாய் தகர் பன்றி என ஒட்டுக. இக்காலத்துப் பல்ல என்பது வழங்காது, இதுவும் விளக்குறிது[7] என்றாற் போலப் பலக்குதிரை என வல்லெழுத்து எய்தியதனை விலக்கிற்று.

விளிநிலைக்கிளவியாகிய பெயர் முற்கூறாததனானே, செய்யும் என்பதன் மறையாகிய செய்யாத என்பதற்கும் இவ்வியல்பு முடிபு கொள்க. அது வாராத கொற்றன் என வரும்.

இவ்வியல்பு முடிபிற்குச் செய்ம்மன சிறத்தலின் வியங்கோட்கு முன் வைத்தார்.[9]

'ஏவல் கண்ணிய' என்றதனான் ஏவல் கண்ணாததும் உளது என்று கூறி 'மன்னிய பெருமநீ' (புறநா. 61) என உதாரணம் காட்டுக[10] எனின், அது பொருந்தாது; கூறு கின்றான், அவன் நிலைபெற்றிருத்தல் வேண்டும் என்றே கருதிக் கூறுதலின், அதுவும் ஏவல் கண்ணிற்றேயாம்.

எல்லாவற்றினும் சிறந்த பலவற்றிறுதி முற்கூறுக எனின், அது வழக்கிற்கும் செய்யுட்கும் வேறுவேறு முடிபுடைத்து என்றற்கும், செய்யுள்முடிபு இவ்வியல்பு போல் சிறப்பின்று [11] என்றற்கும், அகர ஈற்றுள் முடிபு கூறாது நின்ற முற்றுவினையும் வினைக்குறிப்பும் இவ்வியல்பு முடிபு பெறும் என்றற்கும் பின் வைத்தார்.

உண்டன குதிரை: இது முற்றுவினை; கரியன குதிரை: இது முற்றுவினைக்குறிப்பு. இஃது [12] இயல்புகணத்து முடிபு ஞநமயவ (114) என்புழிப் பொருந்துவன எல்லாம் கொள்க. (8)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***210.*** 1. செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் போல மன ஈற்றான் முடியும் (நிகழ்காலமும் எதிர்காலமும் காட்டவல்ல) பெயரெஞ்சு கிளவி.

2. ‘பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்’ (பெய. 14)

இவை 174, 213, 220 ஆம் சூத்திரங்களில் இடம்பெறுவன.

3. ‘அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும்’. (விளி. 14)

4. ஏவிய பொருளை யுணர்ந்து அதனை முற்ற முடிக்கவல்லன உயர்திணைப் பெயரே என்றவாறு.

5. நீ: இருதிணைக்கும் பொதுவாகிய விரவுப்பெயர். அஃறிணை விரவுப்பெயருள் உயர்திணைப் பெயரே ஏவற் பொருண்மையை உணர்ந்து முற்ற முடிக்கவல்லன.

6. இவையிரண்டும் இச்சூத்திரத்துள் முன்னர் எய்தாதது எய்துவித்த செய்தி எனச் சாதியொருமையாக முடிக்கப் பட்டது.

7. பெரும்பான்மையும் செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; சிறுபான்மை செய்தென வாய்பாடும் பொருந்தும்.

8. விளக்குறிது: இவ் அவ்வழிமுடிபு இவ்வியல் முதற் சூத்திரம் விதித்தது.

9. 'இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய' வினைச் சொற்களை எண்ணும் 'முன்னிலை வியங்கோள்' (வினை. 25) என்னும் சூத்திரத்தே வியங்கோட்குப் பின்னரே செய்ம்மன வைக்கப்பட்டமை காண்க.

10. இளம்பூரணர் இவ்வுதாரணம் காட்டினார்.

11. செய்யுள்முடிபு 213ஆம் சூத்திரத்தான் பெறப்படும்.

12. இஃது : மிகைச் சொல்லாக இருத்தலின் களையப் படும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*211.* **அன்ன என்னும்... ... ...**
**பலவற்று இறுதிப் பெயர்க்கொடை உளப்பட**
... ... ... ... ... **இயல்பென மொழிப.**

'பலவற்றிறுதிப் பெயர்' என்பதற்கு அகர ஈற்றுப் பண்புப்பெயர் எனக் கூறுவதே பொருந்தும்.

['பலகுதிரை' என்று காட்டிய உதாரணத்தை நோக்கிச் சாத்திரியார் பண்புப்பெயர் என்றார் போலும். பலகுதிரை இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாதலன்றி, வண்ணம் முதலியவை பற்றி முன்மொழி நிகழும் பண்புத்தொகை யாகாமையின், பல 'பல்லவை நுதலிய' அகர ஈற்றுப் பொருட் பெயரேயாம்.]

'செய்ம்மன என்னும் தொழில் இறு சொல்' என்றதற்கு நச்சினார்க்கினியர், "செய்ம்மன என்று சொல்லப்படும், தொழில்சொல் பொருள் தருங்கால், உம் ஈற்றான் இறும் சொல் " எனப்பொருள் கூறுதல் பொருந்தாது. அதற்குச் செய்ம்மன என்னும் வினையாகிய அகரஈற்றுச் சொல் என்பதே நேர் பொருளாகும்.

['செய்ம்மன' வை நச்சினார்க்கினியர் பெயரெச்சமாகக் கொண்டார். அவ்வாய்பாடு பெயரெச்சமாகப் பொருள் படுமிடத்து, உம் ஈற்றான் விரிக்கப்படும்; படவே, செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் போல எதிர்வும் நிகழ்வுமாகிய காலம் காட்டும் - என்பதே அவர் கண்ட உரைக்குப் பொருள். சாத்திரியார் கூறும் பொருந்தாமை அவ்வுரையுள் இன்மை காண்க.

செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெஞ்சு கிளவிக்கு அவ்வீற்றான் முடியும் எதிர்மறை இன்மையின், உரையாளர் இருவரும் செய்யாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தை இலேசினாற் கொண்டனர்.

செய்ம்மன என்பது வினைமுற்றிற்கும் வினைக்குறிப் பிற்கும் உபலக்கணமாகக் கொள்ளலாம் என்றார் சாத்திரியார். அதற்கு வினைக்குறிப்பு எங்ஙனம் நிகழும் ?]

## இளம்பூரணம்

### 212. *'வாழிய ' இறுதி யகரம் கெடுதல்*

**வாழிய என்னும் சேயஎன் கிளவி**
**இறுதி யகரம் [1] கெடுதலும் உரித்தே.**

இச்...என்...எனின், ஏவல் கண்ணாத வியங்கோள்களில் ஒன்றதற்கு எய்திய இயல்பு விலக்கி விகாரம் கூறு...ற்று.

(இ-ள்.) வாழிய என்று சொல்லப்படுகின்ற அவ்வாழும் காலம் அண்மைய அன்றிச் சேய்மைய [2] என்று உணர்த்தும்

சொல், தன் இறுதிக்கண் அகரமும் அதனால் பற்றப்பட்ட யகர ஒற்றும் கெடாது முடிதலே அன்றி, கெட்டு முடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) வாழி கொற்றா - என வரும்.

'சேய என் கிளவி' என்றதனான், அம்முடிபு இவ் வாழிய என்பதற்கு ஏவல் கண்ணாத நிலையது [3] என்பது விளக்கிய நின்றது.

ஒன்றென முடித்தல் என்பதனான், பிறகணத்துக்கும் இவ்விதி கொள்க.

(உ-ம்.) வாழி ஞெள்ளா - என வரும். (9)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*212.* 1) இறுதி யகரம் : உம்மைத்தொகை.

2) சேய்மைய ஆகுக என இச்சொல்லை விரித்துரைக்க.

3) இளம்பூரணர், 'வாழிய' சேய என்பதனான் விசேடிக்கப்பட்டமையான் ஏவல் கண்ணாத நிலையிற்றா யிற்று என்று கருதுவர். முன்சூத்திரத்து உரையிற்கோடலான் கொண்ட கருத்து விளக்கம் இது.

**நச்சினார்க்கினியம்**

***211. 'வாழிய' இறுதி யகரம் கெடுதலும் உண்மை***

**வாழிய என்னும் சேயஎன் கிளவி**
**இறுதி யகரம் கெடுதலும் உரித்தே.**

இஃது எய்தியதன் மேல் சிறப்புவிதி வகுத்தது.

(இ-ள்.) வாழிய...கிளவி - 'வாழுங்காலம் நெடுங் காலம் ஆகுக' என்னும் பொருளைத் தரும் வாழிய என்று சொல்லப்படும் கிளவி; இறுதி...உரித்து - இறுதிக்கண் அகரமும் அதனாற் பற்றப்பட்ட யகர ஒற்றும் கெட்டு முடிதலும் உரித்து எ-று.

'கெடுதலும்' எனவே, கெடாது முடிதலே பெரும் பான்மை என்றவாறு.

(உ-ம்.) வாழி கொற்றா சாத்தா தேவா பூதா -என வரும்.

வாழிய என்பதே பெரும்பான்மை. வாழிய யான் நீ அவன் அவள் அவர் அது அவை - என இது மூன்றிடத்தும் சேறலின், 'உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்' (151) என்புழி முன்னிலை இயல்பாம் என்றதன்கண் அடங்காதாயிற்று. இது குறிப்பு வியங்கோள்.[1]

ஒன்றென முடித்தலான், இஃது இயல்புகணத்தும் கொள்க. வாழி ஞெள்ளா எனவரும். இவை வாழ்த்தப்படும் பொருள் வாழவேண்டும் என்னும் கருத்தினனாகக் கூறலின் ஏவல் கண்ணிற்றேயாம். அல்லாக்கால், 'வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே' (செய்.101) என்பதற்கும், வாழ்த்தியலாகச் சான்றோர் கூறிய செய்யுள்களுக்கும் பயனின்றாம் என்றுணர்க. (9)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*211.* 1) குறிப்பு வியங்கோள், மூவிடங்களுள் இன்ன தெனக் குறிப்பான் அறியப்படுதலின்.

"சேய என்பது முற்றுமொழியாய் அஃறிணைப் பன்மையில் வருமாயினும், ஈண்டு வாழிய என்பதனான் விசேடிக்கப்பட்டமையின் வியங்கோள் முற்றாதலை உணர்த்துமென்க". **கணே.**

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***2/2.*** **வாழிய என்னும்... ... கெடுதலும் உரித்தே.**

'சேயென் கிளவி' என்ற பாடமே பொருந்தும். அதற்கு மகாலிங்கையர் பதிப்பில் "அதுதான் வாழும் காலம் நெடுங்காலம் என்னும் பொருளைத் தரும் சொல் " எனப் பொருள் கூறப்பட்டுள்ளது.

[நச்சினார்க்கினியர் உரைக்குச் 'சேயஎன் கிளவி' என்றலே மிகப் பொருந்துவதாம் என்க.]

**(வே,ரெட்டியார் அவர்களது எழுத்ததிகார ஆராய்ச்சி)**

## வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***2/1.*** **வாழிய என்னும்... ... ... கெடுதலும் உரித்தே.**

'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்' என்னும் அடியை, 'அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்' என்னும் அடிக்குமுன் வைத்திருப்பின் இயைபுடைய தாயிருக்கும். (சூ. 210)

'வாழிய என்னும் செய்யிய கிளவி' என்பது போன்று இச்சூத்திரத்து முதலடியும் அதற்கு ஏற்ப உதாரணமும் இருத்தல் வேண்டும்.

***2/1.*** [வாய்பாடு எவையும் பொருந்தாமையின் சேய என்பதனை வாழிய என்பதனொடு கூட்டி வாழுநாள்கள் சேயனவாகுக என்ற பொருள்படப் பதவுரை கூறினார் நச்சினார்க்கினியர் எனக்கொள்ளவேண்டியுள்ளது. செய்யிய வினையெஞ்சு கிளவியாக ஒலிக்கிறது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***2/1.*** **வாழிய என்னும் செய்கென் கிளவி**
**இறுதி யகரம் கெடுதலும் உரித்தே.**

(இ-ள்.) வாழ்க எனப்பொருள்படும், 'வாழிய' என்று கூறப்படும் செய்க என்னும் வாய்பாட்டு வியங்கோட் கிளவியின் இறுதி நிற்கும் யகர உயிர்மெய் கெடுதலும் உரித்தாகும்; உம்மையான், கெடாது நிற்றலும் உரித்தென்க.

வியங்கோள் வினைமுற்று, வருக செல்க உண்க எய்க ஓர்க-எனச் செய்க என்னும் வாய்பாட்டினான் வரும். வியங்கோள் வினையின் ஈறு ககர உயிர்மெய் என்பதனைச் சான்றோர் செய்யுளானும் ஆசிரியர் உடம்பொடுபுணர்த்துக் கூறலானும் அறியலாம். வாழ்க மன்னுக காண்க என்றாற் போல வரும் ஒருசார்ச் சொற்கள் ஈறு திரிந்து, வாழிய மன்னிய காணிய என வரினும், செய்க என்னும் முற்று வாய்பாட்டுப் பொருளுடையனவேயாம்.

[சேய - சேய்மைய - நீண்டகாலத்த. சேய என்பதனை வாய்பாடாகக் கருதாமல், வாழ்ச்சிக்காலத்திற்கு அடை மொழியாகக் கொண்டு கூட்டி உரையாசிரியன்மார் பொருள்கொண்டனர். அகரவீற்று வியங்கோள் வாய்பாடாகக் கோடலுமாம். இவ்வுரையாளர் பாடமும் ஏற்புடைத்தே.]

*212.* ]உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை - என இருத்தல் வேண்டும், அடுத்துவரும் சூத்திரச் செய்தியை நோக்குதலின்.]

**இளம்பூரணம்**

***213. 'அம்ம' இறுதி அகரம் நீடலும் உரித்தாதல்***

**உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்.**

இச்... என்...எனின், அம்ம என்பதற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்.) உரையசைப் பொருண்மையினையுடைய அம்ம என்னும் இடைச்சொல், தன் ஈற்று அகரம் அகரமாய் நிற்றலே அன்றி, ஆகாரமாய் நீண்டு முடிதலையும் வரையார் எ-று.

அம்மாகொற்றா - என வரும்.

ஒன்றென முடித்தல் என்பதனான், அந்நீட்சி இயல்பு கணத்தும் கொள்க. அம்மா ஞெள்ளா - என வரும். *(10)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***2/3.*** அம்ம என்னும் இடைச்சொல் ஒருவனை ஒருவன் 'ஒன்று கேள்' என்று சொல்லுதற்கண் வரும். (இடை.*28*). அது விளிகொள்ளும் இயல்பிற்று (விளி. *36*) ஆதலின் அம்மா என இறுதி நீடலுடைத்து. சிறிது பொருள் உணர்த்துவனவற்றை உரையசை என்றார் என்பர் நச்சினார்க்கினியர்.

**நச்சினார்க்கினியம்**

***2/2.*** ***'அம்ம இறுதி அகரம் நீடலும் உண்மை***

**உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்.**

இஃது அம்ம என்பதற்கு எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* உரைப்பொருட்கிளவி - எதிர்முகமாக்கும் பொருளையுடைய [1] அம்ம என்னும் சொல்; நீட்டமும் வரையார் - அகரமாகி நிற்றலேயன்றி, ஆகாரமாய் நீண்டு முடிதலையும் நீக்கார் எ-று.

*(உ-ம்.)* அம்மா கொற்றா சாத்தா தேவா பூதா என வரும்.

உம்மையான், நீளாமையே பெரும்பான்மையாம். வரையாது கூறினமையின், நீட்சி இயல்புகணத்தும் கொள்க.

*(உ-ம்.)* அம்மா ஞெள்ளா நாகா மாடா வடுகா ஆதா என ஒட்டுக. *(10)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***2/2.*** *1.* முன்னிலைப்படுத்தும் பொருண்மையினை யுடைய நீ கேள் என்னும் பொருள்படும் என்றவாறு.

## இளம்பூரணம்

## *2/4. 'பலாஅம் சிலாஅம்' என்னும் முடிபு*

**பலவற்று இறுதி நீடுமொழி உளவே**
**செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.**

*இச்...என்...எனின், 'பலவற் றிறுதிப் பெயர்க் கொடை' (8) என்று ஓதியதற்குச் செய்யுள்முடிபு கூறு...ற்று.*

*(இ-ள்.) பல என்னும் சொல்லின் இறுதி அகரம் நீண்டு முடியும் மொழிகளும் உள; யாண்டுள எனில், செய்யுள் ஆதலைக் கருதிய ஒன்றோடொன்று தொடர்ச்சிப்படும் செய்யுள்முடிபுடைய மொழிகளின்கண்ணே எ-று.*

*'செய்யுள் கண்ணிய மொழி' என்னாது 'தொடர்மொழி' என்றதனான், இப் பல என்பது நீளும்வழி வருமொழியாவது சில என்பதே என்று கொள்ளப்படும்.*

*'செய்யுளான' என்னாது 'செய்யுள் கண்ணிய தொடர் மொழி யான' என்றதனான், பல என்னும் மொழியீறு நீண்டவழி நிலைமொழி அகரப்பேறும் வருமொழி ஞகார மெல்லெழுத்துப்பேறும், வருமொழி இறுதி நீண்டவழி அகரப்பேறும் மகரமெல்லெழுத்துப் பேறும் கொள்க.*

*'உண்டு' என்னாது 'உள' என்றதனான்[1], சில என்னும் வருமொழி இறுதி நீடலும் கொள்க.*

*வருமாறு: 'பலாஅஞ் சிலாஅம் என்மனார் புலவர்' எனவரும். இதன் சொல்நிலை பலசில என்னும் செவ்வெண். (11)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

*2/4.1) உண்டு: ஒருமை. 'உள்ளக் களித்தலும்' என்னும் குறளிற் (1221) பரிமேலழகர் உண்டு ஒருமைச் சொல்லாதலைக் களித்தலும் உண்டு மகிழ்தலும் உண்டு என்று தனித்தனியே கூட்டியுரைத்தமையான் உணர்தலாம்.*

## நச்சினார்க்கினியம்

### *213. 'பலாஅஞ் சிலாஅம்' நிலைவருமொழிகள்*

**பலவற்று இறுதி நீடுமொழி உளவே**
**செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.**

இது முற்கூறிய பலவற்றிறுதிக்கண் சிலவற்றிற்குச் செய்யுள் முடிபு[1] கூறுகின்றது.

(இ-ள்.) பலவற்று... ...உள - பலவற்றை உணர்த்தும் ஐவகைச் சொல்லின் இறுதிஅகரம் நீண்டு முடியும் மொழிகளும் சிலஉள; செய்யுள்... ...தொடர்மொழியான - யாண்டுள எனின், செய்யுளாதலைக் கருதிய ஒன்றோடொன்று தொடர்ச்சிப்படும் செய்யுள்முடிபுடைய மொழிகளின்கண் எ-று.

உடைத்து என்னாது 'உள' என்ற பன்மையான், வருமொழிக்கண் சில என்பது வந்து நீடும் என்று கொள்க. 'செய்யுளான' என்னாது 'செய்யுள்... ...தொடர்மொழியான' என்றதனான், பல என்பதன் இறுதி அகரம் நீண்டுழி நிலைமொழி அகரப்பேறும், வருமொழி ஞகரமாகிய மெல்லெழுத்துப் பேறும், வருமொழி இறுதி நீண்டவழி அகரப்பேறும் மகரமாகிய மெல்லெழுத்துப்பேறும் கொள்க.

வருமாறு: 'பலாஅஞ் சிலாஅ மென்மனார் புலவர்' ; இதன் சொன்னிலை பலசில என்னும் செவ்வெண்[2] *(11)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***213.*** 1. 208, 213, 234, 237, 258, 288, 305, 316, 351, 481-ஆம் சூத்திரங்கள் செய்யுள் முடிபு பற்றிய விதிகள்.

2. செவ்வெண், உம்மை முதலாய எண்ணிடைச் சொல்லானன்றி எண்ணப்படும் பெயர்கள்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***2/4.*** **பலவற்று இறுதி... ... தொடர்மொழி யான.**

*(இ-ள்.) பலவற்றைக் குறிக்கும் அகரவிறுதிச் சொற்களுள் அகரம் நீளுகின்ற மொழிகளும் செய்யுட்கண் பொருந்திய தொடர்மொழிக்கண் உள.*

*'பலசில' என்ற தொடர்மொழி நீண்டதைப் 'பலாஅஞ் சிலாஅம் என்மனார் புலவர்' என்றவிடத்துக் காணலாம்.*

*வரும் சூத்திரத்தில் 'தொடர்அல் இறுதி தம்முன் தாம்வரின்' எனக் கூறப்பட்டமையான், பலசில என்றதை இரண்டு ஈரெழுத்து மொழிகளாகக் கொள்ளாது தொடர்மொழியாகக் கொள்ளல் வேண்டும். ஆகலான் 'பலவற்று இறுதி' என்றதற்குப் பல என்னும் சொல்லின் இறுதி என இளம்பூரணர் கூறும் பொருள் பொருத்தமின்று.*

*'பலசில' என்றதை ஒரே தொடர்மொழியாகக் கொள்ளுதல் நேரிதாகலான், 'சில' என்றதை வருமொழியாகக் கூறுதல் நேரிதன்று என்க. 'பலாஅஞ்சிலாஅம்' என இரண்டிடத்தும் வரும் அம்சாரியையைக் 'கிளந்த அல்ல' (483) என்னும் அதிகாரப் புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளலாம்.*

***2/4.*** *[பலவும் சிலவும் நீண்டு, பலாஅ சிலாஅ என நிற்பனவற்றையே ஆசிரியர் தொடர்மொழியாகக் கொண்டார். நிலைமொழியை வருமொழியொடு புணர்க்கும் விதிகூறும் இவ்வியலுள், ஆசிரியர் ''பலாஅஞ் சிலாஅம்' என ஒருதொடர் அமைந்து 'குறித்து வருகிளவி' பெறாது தனித்து நிற்றலைக் கூறாராதலின், இவர் கருத்து நிரம்புமாறில்லை. 'அம்' சாரியையெனின் தொடரிறுதிக்கண் அது நிற்பதன் பயன்தான் யாதோ ?]*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***213.*** **பலவற் றிறுதி ... ... தொடர்மொழி யான.**

'பலாஅம் சிலாஅம் என்மனார் புலவர்' என்பது உரையாளர் காட்டிய உதாரணம். "இதன் சொல்நிலை பலசில என்னும் செவ்வெண்" என்று அவர்கள் தாமே எழுதி யிருத்தலின், இத்தொடர் பலவும் சிலவும் எனப் பொருள்படுவதாகும். ஆயின், எண்ணுப் பொருளில் வரும் உம் என்பதற்கு ஈடாக இங்கே அம் என்பது வந்துளது. கன்னடமொழியில் எண்ணுப்பொருளில் அம் உம் இரண்டும் வருதல் ஈண்டு நோக்கற்பாலது.

பல+அம்= பலாம் என்று ஆகும். ஆயின், பலாஅம் என ஓர் அகரம் தோன்றி நிற்பது என்னோ எனின், அஃது இல்லாக்கால், பலசில என்னுமிரண்டும் அம் சேர்ந்து பலாம் சிலாம் என்றாயின என்பது அறியப்படாதாகலின், அவ் அகரம் அறிகுறியளவில் நிற்பதென்க.

மேல், 'அன்ன என்னும் உவமக் கிளவியும்' என்ற சூத்திரத்தில் கூறியவற்றுள் மூன்றதற்குச் சிறப்புவிதி கூறத் தொடங்கியவர், 'வாழிய' என்னும் சூத்திரத்தான் வியங்கோட் கிளவிக்கும், 'உரைப்பொருட் கிளவி' என்னும் சூத்திரத்தான் அம்ம என்னும் உரைப்பொருட்கிளவிக்கும், இச் சூத்திரத்தான் பலவற்றிறுதிப் பெயர்க்கும் முறையே கூறினார் எனல் பொருந்துவதாகத் தோன்றுகிறது. முன்னர் வரும் இரண்டு சூத்திரங்களும் பலவற்றிறுதிக்கே ஆதல் காண்க.

***213.*** [இரண்டு உயிர்க்குறில்கள் இனமொத்த ஒரு நெட்டுயிர் ஆதலும், இடையே தோன்றும் அகரம் அறிகுறியளவாக நிற்றலும் 'பலாஅஞ் சிலாஅம்' என்னும் முடிபிற்கு மிகவும் ஏற்ற கருத்து.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*2/3.* ‘பலவற் றிறுதி... ... தொடர்மொழி யான’.

பல்ல பல சில சில்ல என்றவற்றுள், பல்ல சில்ல என்பவை வினையொடு தொடருங்கால், நின்றாங்கே தொடரின் ஓசை நலமின்மை கருதிச் சான்றோர் தம் செய்யுளுள், ‘பல்லா கூறினும் பதடிகள் உணரார், சில்லா கொள்கெனச் செப்புந ருளரே’ என்றாற்போல வழங்கி யிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது.

உரையாசிரியன்மார் காட்டும் ‘பலாஅம் சிலாஅம் என்மனார் புலவர்’ என்ற உதாரணத்தில் வரும் பலாஅம் சிலாஅம் என்பவை பலவும் சிலவும் என்பவற்றின் விகாரமாதல் தெளிவு, அங்ஙனமாயின் இவை மகர ஈறாதலன்றி அகர வீறு எனற்கேலாமை அறியலாம். அன்றியும், வருமொழி வல்லினம் இயல்பாகப் புணரும் என்னும் அதிகார இலக்கணத்தொடு இவை பொருந்தாமையும், பல சில என்பவை தொடர்மொழி யாகாமையும் புலனாகும்.

*2/3.* [பலாஅஞ் சிலாஅம் - உம்மையாற் புணர்ந்தன. ஈண்டைக்குரியன பலாஅ சிலாஅ என்பனவாகிய அகர ஈற்றுச் சொற்கள். அவை உம்மையோடு இணைந்தே வருதலின் ‘பலாஅஞ் சிலாஅம்’ என்றே சுட்டப்பட்டன. ஆசிரியர் எண்ணுப்பெயரை விதந்தோதியே முடிப்பார் ஆகலின், பொதுவதிகாரம் மாறிய பின்னர் எண்ணுப்பெயர் பற்றிய அதிகாரத்தின்கண் முதற்சூத்திரம் இஃதாதலின், அதிகார இலக்கணத்தொடு பொருந்தாது என்னும் குற்றம் ஈண்டு இல்லை என்க. பலாஅ சிலாஅ என்பன மூவெழுத்துச் சொற்களாம். ஆகவே செய்யுளில் தொடர்மொழியாதற்கண், பல சில என்பவற்றின் நீட்சியாக இவற்றை உரை யாசிரியன்மார் கொண்டனர்.

சில்ல என்ற சொல்லை இவ்வுரைகாரர் எடுத்துக் காட்டுதல், இச்சொல்லாட்சி தொல்காப்பியனார்க்கு உடன்பாடன்றாதலின், பொருந்தாது.] - தி.வே.கோ.

## இளம்பூரணம்

### *215. பல, சில - தம்முன் தாம் வந்து புணர்தல்*

**தொடர்அல் இறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகரஒற்று ஆதலும் உரித்தே.**

இச்...என் - எனின், பல சில என்பனவற்றிற்கு இயல்பே அன்றித் திரிபும் உண்டு என, எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு... ...ற்று.

(இ-ள்.) தொடர்மொழி அல்லாத ஈரெழுத்தொரு மொழி ஆகிய பல சில என்னும் அகரஈற்றுச் சொல், தம்முன்னே தாம் வரின், தம் ஈற்றில் நின்ற லகரஒற்று றகர ஒற்றாய்த் திரிந்து முடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) பற்பல கொண்டார், சிற்சில வித்தி[1] - என வரும்.

'தன்முன் தான்' என ஒருமையால் கூறாது. 'தம்முன் தாம்வரின்' என்ற பன்மையான், மேல்நின்ற பலசில என்ற இரண்டும் தழுவப்பட்டன. 'தொடர்அல் இறுதி தம்முன் வரின்' என்னாது 'தாம்' என்றதனான், இம்முடிபின்கண் பல என்பதன்முன் பல வருக, சில என்பதன் முன் சில வருக என்பது கொள்ளப்பட்டது.

'லகரம் றகரம் ஆம்' என்னாது, ''லகரம் றகர ஒற்று ஆம்' என்ற ஞாபகத்தான்[2], அகரம் கெடும் என்றானாகக் கொள்க.

அருத்தாபத்தி[3] முகத்தான், 'தம்முன் தாம்வரின் லகரம் றகர ஒற்றாம்' எனவே, தம் முன் பிறவந்தவிடத்து லகரம் றகரஒற்று ஆகாது அகரம் கெடும் என்பது கொள்ளப்படும்.

(உ-ம்.) பல்படை பல்யானை, சில்படை சில்கேள்வி எனவரும்.

தொடரல் இறுதி என்பது, சுட்டுஅல்லது ஓரெழுத் தொரு மொழி அகரம் இன்மையின்[4], ஓரெழுத்தொரு மொழிமேல் செல்லாதாயிற்று.

'உரித்து' என்றது, அகர ஈற்று ஒருமை பற்றி[5]. *(12)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*215.* *1)* 'சிற்சில வித்திப் பற்பல விளைத்து' *(நற். 328)*

*2)* ஞாபகம் - அறிவுறுத்தல். ஈண்டு, லகர வுயிர்மெய்யுள் லகரஒற்று றகரஒற்றாகத் திரியும் எனவே, லகரத்தை யேறி நின்ற அகரம் கெடும் என்பது குறிப்பான் அறிவுறுத்தப் பட்டவாறு. 'ஞாபகம் கூறல்' என்ற உத்தி வேறு.

*3)* உரையாசிரியன்மார் இருவரும் இனம் செப்புதீ லாகிய குறிப்பினை அருத்தாபத்தி வகையாகக் கொண்டனர். *231* நச். காண்க.

*4)* மூன்று முதலிய பலவெழுத்தான் இசைப்பன தொடர்மொழியாம். தொடர்மொழி அல்லாதன ஓரெழுத் தொரு மொழியும் ஈரெழுத்தொரு மொழியுமாம். ஓரெழுத் தொரு மொழியுள் அகரச் சுட்டிடைச்சொல் முன்னர்க் கூறப்பட்டது. படவே, ஈண்டுத் தொடரல் இறுதி ஈரெழுத்தொருமொழியேயாம். 'பலவற்றி றிறுதிப் பெயர்க்கொடை' *(211)*க்கு ஈண்டு விதி கூறப்படுகிறது.

*5)* 'உரிய' என்னாது 'உரித்து' என்னார், சாதியொருமை கருதி, 'அஞ்சுவது அஞ்சாமை' *(குறள் 428)* என்புழிப் போல.

**நச்சினார்க்கினியம்**

*214.* ***பல, சில - தம்முன் தாம் வந்து முடியுமாறு***

**தொடர்அல் இறுதி தம்முன் தாம்வரின்**
**லகரம் றகரஒற்று ஆகலும் உரித்தே.**

இது பலசில என்பனவற்றிற்கு இயல்பே யன்றித் திரிபும் உண்டெனட, எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

*(இ-ள்.)* தொடர்அல் இறுதி-தொடர்மொழி அல்லாத ஈரெழுத்தொரு மொழியாகிய பலசில என்றும் அகரஈற்றுச் சொல்; தம்முன் தாம் வரின் - தம்முன்னே தாம் வருமாயின்; லகரம்...உரித்து - லகரஒற்று றகரஒற்றாகத் திரிந்து முடிதலும் உரித்து எ-று.

உம்மையால், திரியாமையும் உரித்து என்றார்.

*(உ-ம்.)* பற்பல கொண்டார், 'சிற்சில வித்தி'[1] என வரும். அகரஈற்றுச் சுட்டு அல்லாத குற்றெழுத்து ஓரெழுத் தொரு மொழியாகுதல் இன்மையின், 'தொடரல் இறுதி' எனவே ஈரெழுத்தொருமொழியே உணர்த்திற்று. 'தன்முன்' என்னாது 'தம்முன்' என்ற பன்மையான், பல சில எனநின்ற இரண்டும் தழுவப்பட்டன.

தம்முன் வரின் என்னாது 'தாம்' என்றதனான், பலவின் முன் பல வருதலும், சிலவின் முன் சில வருதலும் கொள்க. லகரம் றகர ஒற்றாம் என ஒற்றிற்குத் திரிபுகூறி அகரம் கெடுதல் கூறிற்றிலர் எனின், அது 'வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்திபெற வைத்தது என்றுணர்க[2] இதனை ஞாபகம் என்பாருமுளர்[3]. அருத்தாபத்தியான்[4], தம்முன் தாம் வரின் லகரம் றகர ஒற்றாகும் எனவே, தம்முன் பிறவரின் லகரம் றகர ஒற்றாகாது அகரம் கெடும் என்று கொள்ளப்படும்.

*(உ-ம்.)* பல்கடல் சேனை தானை பறை எனவும், பல்யானை பல்வேள்வி எனவும், சில்காடு சேனை தானை பறை எனவும்,சில்யானை சில்வேள்வி எனவும் வரும்.

*உரித்து என்றது அகர ஈற்று ஒருமை பற்றி.* (12)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*2/4.* 1. 'சிற்சில வித்திப் பற்பல விளைத்து' (நற்.323)

2. இவ்வுத்தியாவது "ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததொரு சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருண்மைக்கு வேண்டும் முடிபு கொள்ளச் செய்தல்." (பொ.665 பேரா.) இங்கே நிரம்ப வாராதது-அகரக்கேடு சொல்லாமை; லகரம் றகரமாகத் திரியுமெனவே, அதில் ஏறி நின்ற அகரக்கேடு ஈண்டுச் சொல்லப் படாததாயினும் அஃதும் இவ்வுத்தியாற் கொள்ளப்படும் என்பது. கணே.

3, 4. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

இச்சொற்றொடரைத் தியாகராச லீலையில் மகாவித்துவான் பிள்ளையவர்கள் பொன்னேபோல் போற்றி யாண்டுள்ளமை காண்க. (நாட்டுப்படலம், பாடல் 87)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*2/5.* **தொடர்அல் இறுதி... ... ஆதலும் உரித்தே.**

வகரம் (210) யகரம் (212) என்ற சொற்கள் முன்னைச் சூத்திரங்களில் வகரவொற்று யகரவொற்றுக்களைக் குறியாது, வகர யகர உயிர்மெய்களையே குறித்தவாறு போல, ஈண்டும் ஆசிரியர் லகரம் என உயிர்மெய்யையே குறித்தார் எனக் கொள்ளின் சாலும். ஆகலின் உரைகாரர்கள் 'லகரவொற்று' என்றவிடத்து ஒற்று என்றதனை மிகையாகக் கொண்டு அஃது 'அகரம்கெடும்' என்றதை ஞாபிக்கின்றது என்று கூறுவது பொருந்தாது.

"அருத்தாபத்தி முகத்தான், தம்முன் தாம்வரின் லகரம் றகர வொற்றாம் எனவே, தம்முன் பிற வந்தவிடத்து லகரம் றகரவொற்றாகாது அகரம் கெடும் என்பது கொள்ளப்படும்" என்றனர் உரைகாரர். இஃது அருத்தாபத்தி ஆகுமா? ஆகாது.

ஆதலான் இதனைப் 'பல்வேறு கவர்பொருள்' (களவு 33), பன்னகை-பன்னூறு (ஷெ 23, 32), 'பல்லாற்றானும்' (கற்பு.17), 'பல்குறிப்பினவே' (உவம.11), 'சில்வகை' (மரபு.100) முதலிய ஆசிரியர் வழக்காற் கொள்ளலாம்.

*2/5.* [ஆசிரியர் 'லகரம்' என உயிர்மெய்யையே குறித்தார் என்னும் சாத்திரியார் கூற்றைப் பாலசுந்தரம் அவர்களும் தழுவியுரைத்தார். அது பொருந்தாமை ஆண்டுக் கூறப்படும்.

உரையாசிரியன்மார் எடுத்தமொழி இனஞ்செப்பு தலையும் அருத்தாபத்தி வகையாஃக் கொண்டனர். 232 ஆம் சூத்திரத்து நச்சினார்க்கினியருரையுள்ளும் இவ்வமைதியே காணப்படும்.

'மக்களாய்ப் பிறவாமை' என்னும் அருத்தாபத்தியான் 'விலங்காய்ப் பிறத்தல்' என்பது கொள்ளப்பட்டதாகப் பரிமேலழகர் குறிப்பிடுவதும் (குறள் 236) காண்க.

ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறிய முடிபிற்கெல்லாம் உரையாளர் இலேசு முதலியவற்றான் விதியமைத்துச் சென்றுள்ளனர் என்றே கருதற்பாலம்.]

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***2/4.*** **தொடரல் இறுதி... ... ஆகலும் உரித்தே.**

மரபியல் 110 உரையிற் பேராசிரியர் கூறியதே கொண்டு, "அகரம் கெடுதல் கூறிற்றிலர் எனின், அது 'வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்திபெற வைத்தது என்றுணர்க" என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார். இவற்றால், ஆசிரியர் லகரமெய் றகரமெய்யாகத் திரியும் என்றே விதி கூறினார் என்பதும், லகரத்தின் மேல் நின்ற அகரம்

'வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்தியால் கெடுக்கப்படும் என்பதும் அவரிருவர் கருத்துமாதல் அறியப்படும். ஆயின், ஆசிரியர் 'லகரம்' என்றது லகர உயிர் மெய்யையே குறிக்கும். லகரம் என்றது லகரமெய்யையே யன்றி உயிர்மெய்யை உணர்த்துமோ எனின், உணர்த்தும். முன்னர், 'பொன்னென் கிளவி ஈறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரம்' என்னுமிடத்து, லகாரம் என்றது உயிர்மெய்யினையே உணர்த்துதல் காண்க. இதனால் லகரம் (ல) றகரமெய்யாகத் திரியும் என்பது சூத்திரத்தாற் போதருவதாகும். ஆகலின், உத்தியால் அகரம் கெடுத்தல் வேண்டா.

'பற்பல' என்று வருதலை நோக்கின், இயல்பில், பல் என்று மெய்யீறாய் இருக்கும் சொல்லே, பன்மையைக் குறிக்கும் அகரவுயிரோடு கூடிப் பல என்று நின்றதெனவும், புணர்ச்சிக்கண் பிறசொல்லோடு கூடி வரும்வழி அகர விகுதியொடு நிற்றல் வேண்டாமையின்,இயல்பாய மெய்யீறாய் நின்று புணர்ந்தது எனவும் அறிதல் கூடும்.

['வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்திநயம் தோன்றப் பேராசிரியர் கூறியதே உரையாளர் இருவரும் வழிமொழிந்தனர். சாத்திரியார் சுட்டிய கருத்தினையே இவ்வுரைகாரரும் பின்பற்றினார். உத்திநயம் பெறப்பட வேண்டும் என்னும் அவாக்கொண்டு, லகரத்தின் மேல்நின்ற அகரத்தை, இவ்வுத்தியாற் கெடுக்க என்று இருவரும் எழுதிப் போந்தனர். ஒரு மெய் மற்றொரு மெய்யாகத் திரியுமன்றி, உயிர்மெய் அவ்வாறு திரியாது என்னும் கருத்தினர் அவர் எனக்கொள்ளவும் இடனுண்டு. லகரம் உயிர்மெய்யெனக் கொள்வார், 'பொன்னென் கிளவி' (356) என்னும் சூத்திரத்தே 'முன்னர்த் தோன்றும் லகார மகாரம்' என்பதனைச் சான்றாகக் காட்டுவர். ஓரெழுத்து மற்றோரெழுத்தாகத் திரிதல் ஆங்கு ஆராய்ச்சியின்மையின், அவ்வெடுத்துக்காட்டு ஏலாது. 'செய்யுளிறுதிப்... ... ணகார மகாரம் ஈரொற்றாகும்' (51) என இரண்டும் மெய்யாக வருதல் காண்க. உயிர்மெய்யின் வேறாக

மெய்யெழுத்தை ஆசிரியர் விதந்தோதுதல், 'அல்லதன் மருங்கின்' (326) என்னும் சூத்திரத்தே 'ரகரம், நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே' என்றும், 'முன்னென் கிளவி' (355) என்னும் சூத்திரத்தே 'இல்லென் கிளவிமிசை றகரம் ஒற்றல்' என்றும் ஓதியவாற்றான் உணரப்படும். அற்றேல், 'முன்னர்த்தோன்றும் லகாரம் மகாரம்' (356) என்புழி, ('புள்ளி' யென்றும், 'ஒற்று' என்றும் விசேடியாத) லகாரத்தை மெய்யெனக் கொள்வோமெனின், அது கூடாது; என்னையெனின், லகாரமெய் மகாரமெய்யொடு மயங்காமை (23, 24) நூன்மரபிற் கூறினாராதலின், லகாரம் உயிர்மெய்யே யாதல் வேண்டுமென்க.

'பல்' என்பதே இயல்பான சொல் என்னும் இவ்வுரையாளரது கருத்தினைப் பாலசுந்தரமும் தழுவினார்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***2/4.*** **தொடரல் இறுதி ...... ஆதலும் உரித்தே.**

'றகர ஒற்றாதல்' என்றதனான், லகரம் உயிர்மெய் என்பது பெறப்படும். இதனானும் உயிர்மெய்யை ஆசிரியர் ஓரெழுத்தாக வைத்துக் கூறுமுறைமை புலப்படும்.

***2/4.*** [சாத்திரியாரும் ரெட்டியாரும் உரைத்தவாறே, உயிர்மெய் லகரம் றகரவொற்றாகத் திரியும் என்றார் இவ்வுரைகாரர். தொல்லுரையாளர்க்கு உயிர்மெய்யுள் மெய்யெழுத்தே வேறொரு மெய்யாகத் திரியும் என்பது துணிபாதலின், உயிர்மெய்யினுள் உயிர்கெடுதலை உத்தி வகையாற் கொண்டனர்.]

**இளம்பூரணம்**

***2/6. அப்புணர்ச்சியிடை வல்லெழுத்து விகற்பமாதல்***

**வல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும்.**

இச்... ...எனின், இது மேற்கூறிய இரண்டற்கும் இன்னுமொரு முடிபு வேற்றுமை உணர்... ...ற்று.

*(இ-ள்.)* மேற்கூறிய பல சில என்னும் இரண்டற்கும் அகர ஈற்றுப் பொதுவிதியில் கூறிய வல்லெழுத்து மிகுதியது இயல்பு, மிகுதலும் மிகாமையும் ஆகி உறழ்ந்துவரத் தோன்றும் எ-று.

வருமாறு: *பலப்பல சிலச்சில; பலபல சிலசில* - எனவரும்.

'இயற்கை' என்றதனான், *முற்கூறிய பற்பல சிற்சில* - என்னும் முடிபொடு, *பல்பல சில்சில* - என்னும் முடிபு பெற்று உறழ்ச்சியாதல் கொள்க.

'தோன்றும்' என்றதனான், அகரம் கெட, லகரம் ஆய்தமும் மெல்லெழுத்துமாய்த் திரிந்துமுடிதல் கொள்க.

*(உ-ம்.)பஃறானை, பன்மரம்; சிஃறாழிசை, சின்னூல்*- என வரும்.[1] *(13)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*216. 1) பல்+தானை=பஃறானை (சூ. 370, 150)*
*பல்+மரம்=பன்மரம் 368*
*சில்+தாழிசை=சிஃறாழிசை (370, 150)*
*சில்+நூல்=சின்னூல் (368, 150)*

**நச்சினார்க்கினியம்**

***215. ஆண்டு வல்லெழுத்து உறழ்ந்து தோன்றல்***

**வல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும்.**

இது முற்கூறிய இரண்டற்கும் உள்ளதொரு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்.) வல்லெழுத்து இயற்கை - முற்கூறிய பலசில என்னும் இரண்டற்கும் அகரஈற்றுப் பொதுவிதியிற் கூறிய வல்லெழுத்து மிகும் இயல்பு; உறழத்தோன்றும் - மிகுதலும் மிகாமையுமாய் உறழ்ந்துவரத்தோன்றும் எ-று.

வருமாறு: பலப்பல பலபல, சிலச்சில சிலசில என வரும். ஈண்டும் தம்முன் தாம் வருதல் கொள்க.

'இயற்கை' என்றதனான், அகரம் கெட லகரம் திரிந்தும் திரியாமலும் உறழ்ந்து முடிதலும் கொள்க.

பற்பல பல்பல, சிற்சில சில்சில என வரும்.

'தோன்றும்' என்றதனான், அகரம் கெட லகரம் மெல்லெழுத்தும் ஆய்தமுமாகத் திரிந்து முடிதலும் கொள்க.[1]

'பன்மீன் வேட்டத்து' பன்மலர், பஃறாலி பஃறாழிசை- என வரும்.

இவை 'தோன்றும்' என்று எடுத்தோதிய மிகையான், அகரம் கெட நின்ற லகர ஒற்றின் முடிபாகலின், 'தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்' *(369)* 'மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்' *(367)* என்பவற்றான் முடியா.[2] *(13)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***215.*** 1. "அகரம் இவ்விலேசினான் கெட்டது என்றலே சாலும்; *369, 367*ஆம் சூத்திர விதிகளான் லகரம் னகரமாதலும் ஆய்தமாதலும் பெறப்படும்" என்பர் சாத்திரியார்.

2. பலவற்றிறுதிப் பெயர்க்கொடையை ஆசிரியர் கிளந்தோதுதலின், இம்முடிபுகளை உரையாசிரியன்மார் இலேசினாற் கொண்டனர் எனலாம். அன்றியும், 'பல' 'சில' என்பன அகரம் கெடநின்ற விதியீறாகப் பல் சில் என நிற்றலின், அச்சூத்திரவிதிகளான் முடிக்கலாகாமை உணரப்படும்.

மொழியியலார் பல் சில் என்பனவே பல சில என ஈற்றகரம் பெற்று விரிந்தன என்பர்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***216.*** **வல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும்.**

"'தோன்றும்' என்றதனான், அகரம் கெட லகரம் ஆய்தமும் மெல்லெழுத்துமாய்த் திரிந்து முடிதல் கொள்க. பஃறானை- பன்மரம், சிஃறாழிசை, சின்னூல் எனவரும்" என உரைகாரர் கூறினர். அகரம் கெட்டவிடத்து, லகரவொற்று 'தகரம் வருவழி' *(370)*, 'மெல்லெழுத்து இயையின்' *(368)* என்ற சூத்திரங்களான் முறையே ஆய்தமாகவும் னகாரமாகவும் மாறுமாதலின் அகரக்கேட்டினை மாத்திரம் உரைகாரர் கூறியிருப்பின் நலம்.

***216.*** [சாத்திரியார் கருத்தும் சாலப் பொருந்தும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***215.*** **வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும்.**

பல் சில் என்பவை லகரவீற்று அளவைப் பெயர் களாகும். இதனைப் பன்மை சின்மை என்னும் சொல்லாக்கத்தான் அறியலாம். அம்முழுமையுணர்த்தும் அகரவீற்றொடு கூடிப் பல்ல சில்ல எனவும் பலசில எனவும் அஃறிணைப் பன்மைப் பெயர்களாக வரும்.

உரையாளர் பலசில என்பவையே அகரம் நீங்கிப் பல் சில் என நின்றன என்று கருதினர். அக்கருத்து மொழி யியலுக்கு மாறானதாகும்.

*215.* [பல சில என்பன அகரம் நீங்கிப் பல் சில் என வரும் என்று உரையாளர் கூறும் செய்தி மொழியியலுக்கு மாறானது என்று குறிப்பிடும் இவ்வுரைகாரர், *369*ஆம் சூத்திரவுரையுள், "பஃறாழிசை பஃறொடை என விதியீறாகி நின்ற லகரத்திற்கும் இஃதொக்கும்" என்று கூறுகிறார். பல சில என்பன பல் சில் என விதியீறாக நிற்பனவற்றை ஆண்டு மாத்திரம் உடன்பட்டுப்போதல் யாங்கனம்?]

## இளம்பூரணம்

## *217.* அகரஈற்றுப் பெயர்க்கு வன்கணம் வருவழி வேற்றுமை முடிபு

**வேற்றுமைக் கண்ணும் அதன் ஓ ரற்றே.**

இச்... எனின், அகர ஈற்றுப் பெயர்க்கு வன்கணத்தொடு வேற்றுமை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* அகரஈற்றுப் பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும், மேற்கூறிய அல்வழியோடு ஒரு தன்மைத்தாய்க் கசதப- முதல்மொழி வந்தவழித் தத்தம் ஒத்த ஒற்று இடைமிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* இருவிளக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் - எனவரும். விளக்குறுமை - எனக் குணவேற்றுமைக் கண்ணும்[1] கொள்க. *(14)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

*217.* 1) வேற்றுமை முடிபினைப் பொருட் பெயர்க் கண்ணேயன்றிக் குணவேற்றுமைக்கண்ணும் கொள்ளுதல் இவ்வுரைகாரர் இருவர்தம் கருத்தாகும். 330, 347 முதலிய சூத்திரவுரையுள்ளும் காண்க.

## நச்சினார்க்கினியம்

### *216. அகரஈறு, வன்கணம் வருவழி வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது, அகரஈற்றிற்கு அல்வழிமுடிபு கூறி, வன் கணத்தொடு வேற்றுமை தொக்குநின்ற முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்......ஓரற்று - அகர ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், அல்வழியோடு ஒருதன்மைத்தாய், கசதப முதல்மொழி வந்துழித் தத்தம் ஒத்த ஒற்று இடைமிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* இருவிளக்கொற்றான் சாத்தன் தேவன் பூதன் எனவரும். இளவிளக் குறுமை சிறுமை தீமை பெருமை எனக் குணவேற்றுமைக்கண்ணும் கொள்க. இருவிள என்பது ஓலை; வேணாட்டகத்து ஓரூர்; கருவூரினகத்து ஒரு சேரியும் என்ப[1]. இருவிளவிற் கொற்றன் என விரிக்க. *(14)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***216.*** இருவிளவினை எழுதும் கொற்றன், இருவிளவின் கண் வாழும் கொற்றன்.

## இளம்பூரணம்

### *218. இவ்வீற்று மரப்பெயர் முடிபு*

**மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே.**

இச்......எனின், அகரஈற்று மரப்பெயர்க்கிளவிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* அகர ஈற்று மரப்பெயராகிய சொல் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* விளங்கோடு விளஞ்செதிள் தோல் பூ - எனவரும். *(15)*

**நச்சினார்க்கினியம்**

### *217. இவ்வீற்று மரப்பெயர் மெல்லெழுத்து மிகுதல்*

**மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே.**

இஃது அகரஈற்று மரப்பெயர்க்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

*(இ-ள்.)* மரப்......மிகும் - அகர ஈற்று மரப்பெயராய சொல், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* அதங்கோடு விளங்கோடு செதிள் தோல் பூ- எனவரும். இது 'கசதப முதலிய' *(143)* என்பதனான் முடியும். *(15)*

**இளம்பூரணம்**

### *219. 'மக' இன்சாரியை பெறுதல்*

**மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை.**

இச்... ...எனின், அவ் ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* அகர ஈற்று மக என்னும் பெயர்ச்சொல்லிற்கு வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் வரும் சாரியை இன் எ-று.

*(உ-ம்.)* மகவின் கை செவி தலை புறம் - என வரும்.

சாரியைப் பேறு வரையாது கூறியவழி நான்கு கணத்துக்கண்ணும் செல்லும் என்பது ஆகலின், மகவின் ஞாண் - என இயல்புகணத்துக்கண்ணும் கொள்க. (16)

## நச்சினார்க்கினியம்

### 2/8. 'மக' இன்சாரியை பெறுதல்

**மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை.**

இஃது அகரஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) மகப்... ... சாரியை - அகர ஈற்று மக என்னும் பெயர்ச்சொல்லிற்கு வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் வரும் சாரியை இன்சாரியை எ-று.

(உ-ம்.) மகவின்கை செவி தலை புறம் என வரும். சாரியைப்பேறு வரையாது கூறியவழி நான்கு கணத்துக் கண்ணும் செல்லும் என்பது ஆசிரியர்க்குக் கருத்தாகலின், மகவின்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை - என ஒட்டுக.

மேல் (219) 'அவண்' என்றதனான், இன்சாரியை பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.[1] (16)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**2/8.** 1) நிலைமொழித் தொழிலாகிய சாரியைப் பேறு வருமொழித் தொழிலாகிய இயைபு வல்லெழுத்தினை வீழ்த்தாது என்பது உரையாசிரியன்மார் கொள்கை. எனவே, அதனை வீழ்த்த இலேசினான் விதிக்கவேண்டும் என்று அன்னோர் கொண்டனர். 216ஆம் சூத்திரவிதியாற்பெறும் அதிகார வல்லெழுத்தினை 'அவண்' என்ற இலேசினான் விலக்கினார் நச்சினார்க்கினியர்.

இக்கொள்கையை இடையறாது உரையாசிரியர் இருவரும் கடைப்பிடித்துக் குறிப்பிடுமாற்றை உரை நெடுகக் காணலாம். 253, 263, 294ஆம் சூத்திரத்தில் இரண்டாமடியுள் ஆசிரியர் விதித்துள்ள இவ்வல்லெழுத்து வீழ்வினை, அவ்வாறு விதியாத சூத்திரத்தும் உரையாசிரியர் கொண்டுள்ளமை யாதேனும் ஓர் இலேசு பற்றியே என்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**219. மகப்பெயர் கிளவிக்கு இன்னே சாரியை.**

வரும் சூத்திரத்திலுள்ள 'அவண்' என்றதனான், மகவின்கை என மேல் இன்சாரியை பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்வைக்கொண்டனர் உரைகாரர். கசதபக்கள் ஈரொற்றாக யரழ இவற்றின் பின்னரே வரும் என்பது,

'யரழ என்னும் மூன்றும் ஒற்றக்
கசதப ஙஞநம ஈரொற்று ஆகும்' (48)

என்ற சூத்திரத்தில் ஆசிரியர் உணர்த்தியமையின், இன்சாரியை வரும்போது இயைபு வல்லெழுத்து வாராது என்பது பெறப்படுமாகலின் உரைகாரர் கூற்றுப் பொருத்தமின்று.

**219.** [சாரியைப்பேறு இயைபுவல்லெழுத்து மிகுதலை விலக்காது என்பது உரையாளர்தம் கொள்கை. 'ஒற்றிடை மிகா' எனவே, சாரியை வகுப்ப வல்லெழுத்து வீழா என்பது பெற்றாம் என்பது நச்சினார்க்கினியர் உரை (சூத். 263). இவ்வாறே 250, 294ஆம் சூத்திரவுரையிலும் அவர் குறித்துப் போந்தமை காண்க.

பிற்கால உரையாளர்கள், முன்னுரைகாரர்தம் இக் கருத்தினை விடாது மறுத்துப்போதலை அவர்கள்தம் உரைக் குறிப்பிற் காணலாம். அம்மூன்று சூத்திரங்களிலும் இரண்டா மடியில் ஆசிரியர் வலியுறுத்திப் போன விதியை, அது விதிக்கப்படாத இடத்தெல்லாம் இலேசு முதலியவற்றான் தழுவிக்கொண்டனர் தொல்லுரையாளர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**2/8. மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை.**

சாரியை பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க என்பர் உரையாசிரியன்மார். அகரவீறாக நின்றவழி வல்லெழுத்து மிகும் என்பது விதி. நிலைமொழி சாரியை பெற்று ஒருசொல்லாய் நிற்றற்கண் அது னகரவீறாவது அன்றி அகரவீறாகாது. அல்வழிப் புணரியலுள் இன்சாரியைக்கு விதித்த விதி பெறுதலே முறைமை என்பதை ஓராமல், நிலைமொழியும் வருமொழியும் மகக்கை - மகச்செவி - என முன்னரே புணர்ந்து கிடந்தன போலக் கருதிக்கொண்டு, இயைபு வல்லெழுத்து வீழ்க்க எனக்கூறுதல் மொழியியலுக்கும் இந்நூல் நெறிக்கும் ஒவ்வாத கோட்பாடாகும்.

சாரியை பெற்றவழி வல்லெழுத்துக் கெடாது என்பது ஆசிரியர் கருத்தாயின், 'ஆடூ மகடூ ஆயிரு பெயர்க்கும், இன்னிடை வரினும் மானம் இல்லை' (271), 'பெற்ற மாயின் முற்றஇன் வேண்டும்' (279), 'ஏழென் கிளவி உருபியல் நிலையும்' (388) என வரும் இடத்தெல்லாம் வல்லெழுத்து இயல்பாகும் என ஓதியிருப்பார்மன் என்க.

**2/8.** ["சாரியைப்பேறு இயைபு வல்லெழுத்துப் பேற்றினை விலக்காது ஆதலின் அதனைக் கிளந்தோதியே விலக்கவேண்டும்" என்பது பற்றிய தொல்லுரையாளர் தம் கருத்துச் சில வருமாறு:- ஆசிரியர் உயர்திணைப்பெயர் - விரவுப்பெயர் - தொடக்கங் குறுகும் பெயர் - சுட்டு வினாப் பெயர் - அளவுப்பெயர் - இவற்றை விதந்தோதியே முடிப் பார். நீ என்பது நின் என்றாகிப் பொருட்புணர்ச்சி பெறும். இவை பொதுவிதியான் கொள்ளப்பெறும் வல்லினம் மிகுங்கொல் என்னும் ஐயத்தையறுத்து, நின் - அதன் - முதலாக னகர ஈற்றனவாகியே நின்று இவை வருமொழி யொடு புணரும் என்பதற்காக வல்லெழுத்துப் பேறு விலக்கப் பட்டது. கோ அஃறிணைப் பெயராதலின் ஒன்சாரியை

பெற்றுப் புணரும். அது சாரியை பெறாமல் பொதுவிதியான் ஒகர எழுத்துப்பேற்றொடு வல்லெழுத்து மிக்கு வருதலும் கூடுமோ என்று ஐயுறாமைப் பொருட்டுச் "சாரியை பெற்றநிலை ஒன்றே அதற்குண்டு" என்பதனை விளக்க அதிகார வல்லெழுத்து விலக்கப்பட்டது.

நாட் பெயரைப் பற்றிய 'நாட்பெயர்க்கிளவி... ... கெடுதல் என்மனார் புலவர்'(331) என்ற சூத்திரத்தின் **இறுதியடி, நாட்பெயர் ஏனைய பெயர் போல 'அத்தின்மேல்** ஒற்றுமெய் கெடுதல்' என்ற பொதுவிதி பெறும் என்பதனை வலியுறுத்துகிறது. வலியுறுத்தாதவழிப் பொதுவிதி இதற்கு ஏலாது.

ஆடூ மகடூ உயர்திணைப் பெயராகலானும், ஏழ் என் கிளவி எண்ணுப்பெயராகலானும் இவை பொதுவிதி ஏலா.

சே என் மரப்பெயர் மெல்லெழுத்து மிகுதலைக் கூறிப் பின்னர், சே என்னும் பெயர் பெற்றம் என்னும் பொருளில் வரின் இன்சாரியை பெறும் என்றார். ஆண்டு இன்சாரியை 'புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதவ' வந்த சிறப்பிற்றாகலின், அப்பொருள் நிலைக்கு உதவாத பொதுவிதி இதற்கு ஏலாது.

அதிகாரவல்லெழுத்து ஆசிரியர் விதந்து கூறும் உயர்திணைப்பெயர் முதலியவற்றுக்கு ஏலாது.]-தி.வே.கோ.

## இளம்பூரணம்

### *220. அஃது அத்துச்சாரியையும் பெறுதல்*

**அத்துஅவண் வரினும் வரைநிலை இன்றே.**

**இதுவும் அது.**

(இ-ள்.) மேற்கூறிய இன்னே அன்றி, அத்து என்னும் சாரியை இயைபுவல்லெழுத்தினோடு[1] அம் மக என்னும் சொல்லிடத்து வந்து முடியினும் நீக்கும் நிலைமை இன்று எ-று.

*(உ-ம்.) மகத்துக்கை செவி தலை புறம் - எனச் செய்கை அறிந்து முடிக்க.*

*'அவண்' என்றதனான், மகப்பால் யாடு*[2] *- என வல்லெழுத்துப் பேறும், மகவின் கை - என மேல் இன் சாரியை பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்வும்*[3] *கொள்க.*

*'நிலை' என்றதனான், மகம்பால் யாடு - என மெல்லெழுத்துப் பேறும் கொள்க. (17)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***220.*** *1) அதிகாரத்தான் வந்து இயையும் வல்லெழுத்து (217)*

*2) மகவிற்கு அளிக்கும் பாலை வழங்கும் ஆடு.*

*3) வேற்றுமையதிகாரத்தான் வந்த வல்லெழுத்தை, இன்சாரியைப்பேறு விலக்காது ஆதலின், இம்மிகையான் அவ்வல்லெழுத்தைக் கெடுக்க என்றார். சாரியைப்பேறு அதிகாரத்தான் வரும் வல்லெழுத்தினை வீழ்த்தாது ஆதலின் அதனை இலேசான் கெடுத்து முடிக்கவேண்டும் என்பது இவ்வுரையாளர்தம் கொள்கை. இவ்வியல் சூத்திரங்கள் 51, 61, 92 ஆம் எண்ணுடையவற்றைக் காண்க.*

**நச்சினார்க்கினியம்**

***219. அஃது அத்துப் பெறுதலும் உளதாதல்***

**அத்துஅவண் வரினும் வரைநிலை இன்றே.**

இஃது இயைபுவல்லெழுத்தோடு அத்து வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

*(இ-ள்.) அவண் - முற்கூறிய மகவிடத்து; அத்து வரினும்...இன்று - இன்னேயன்றி அத்துச்சாரியை(யும் இயைபு வல்லெழுத்தும்) வந்து முடியினும் நீக்கும் நிலைமை யின்று எ-று.*

(உ-ம்.) மகத்துக்கை செவி தலை புறம் எனவரும்.

'அவண்' என்றதனான், மகப்பால் யாடு[1] என வல்லெழுத்துப் பேறும், மகவின்கை என மேல் இன்சாரியை பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வும், விளவின்கோடு என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபுவல்லெழுத்து வீழ்வும் கொள்க.

'நிலை' என்றதனான், மகம்பால் யாடு என மெல்லெழுத்துப் பேறும் கொள்க. *(17)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***219.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

### *221. 'பல' வற்றுச் சாரியை பெறுதல்*

**பலவற்று இறுதி உருபியல் நிலையும்.**

இச்.....எனின், அவ்ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) பல என்னும் அகரஈற்றுச் சொல் உருபு புணர்ச்சிக்கண் வற்றுப் பெற்றுப் புணர்ந்த இயல்பின்கண்ணே (சூ.175) நிற்கும் எ-று.

(உ-ம்.) பலவற்றுக்கோடு[1] செவி தலை புறம் - என வரும். *(18)*

**இளம்பூரணர் உரைக்குறிப்பு**

***221.*** 1) பலவற்றுக்கோடு செவி தலை புறம் என்னும் புணர்மொழிகளிடை வரும் வல்லெழுத்து அதிகார வல்லெழுத்து என்க.

**நச்சினார்க்கினியம்**

## 220. பலவற்றிறுதி வற்றுப் பெறுதல்

**பலவற்று இறுதி உருபியல்[1] நிலையும்.**

*இஃது இயைபு வல்லெழுத்தொடு மாட்டேற்றான் வற்று வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.*

*(இ-ள்.) பலவற்றிறுதி - பல்ல பல சில உள்ள இல்ல என்னும் பலவற்றை உணர்த்தும் அகரஈற்றுச் சொற்களின் இறுதி; உருபியல் நிலையும் - உருபியற்கண் வற்றுப்பெற்றுப் புணர்ந்தாற்போல (174), உருபினது பொருட்புணர்ச்சிக் கண்ணும் வற்றுப்பெற்றும் புணரும் எ-று.*

*இயைபு வல்லெழுத்து அதிகாரத்தான் (216) கொள்க.*

*(உ-ம்.) பல்லவற்றுக்கோடு பலவற்றுக்கோடு சிலவற்றுக்கோடு உள்ளவற்றுக்கோடு இல்லவற்றுக்கோடு செதிள் தோல் பூ என ஒட்டுக.*

*உருபு விரிந்துழி நிற்குமாறு போலன்றி, அவ்வுருபு தொக்கு அதன்பொருள் நின்று புணருங்கால் வேறு பாடுடைமையின், அவ்வேறுபாடுகள் ஈண்டு ஓதினார் இத்துணையும் என்றுணர்க.[2] (18)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*220. 1. இம்மாட்டேறு விதித்தல் 253, 263, 281, 294, 320, 322, 324, 378, 419, 422-ஆம் சூத்திரங்களிற் காண்க.*

*2. வேற்றுமையுருபு தொக, நிலைவருமொழிகள் அவ்வேற்றுமைப் பொருள்படப் புணரும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி இவை எனக் குறிப்பிட்டார். இயல் தொடக்கத்தில் வரைந்த தோற்றுவாய்க்கேற்ப.*

### இளம்பூரணம்

### *222. ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு*

**ஆகார இறுதி அகர இயற்றே.**

இச்......எனின், ஆகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு உணர்.......ற்று.

(இ-ள்.) ஆகாரஈற்றுப் பெயர் அல்வழிக்கண் அகரஈற்று அல்வழியது இயல்பிற்றாய், வல்லெழுத்து வரும்வழி வல்லெழுத்துப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) அராக் கடிது, தாராக் கடிது சிறிது தீது பெரிது - என வரும். (22)

### நச்சினார்க்கினியம்

### *221. ஆகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் (பிசு) முடியுமாறு*

**ஆகார இறுதி அகர இயற்றே.**

இஃது ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஆகார... ... இயற்று-ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் அகரஈற்று அல்வழியது இயல்பிற்றாய் (203), வல்லெழுத்து வந்துழித் தத்தம் ஒத்த ஒற்று இடைமிகும் எ-று.

(உ-ம்.) மூங்காக் கடிது, தாராக்கடிது [1] சிறிது தீது பெரிது என ஒட்டுக. (19)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**221.** 1. மூங்கா-கீரி தாரா-நாரை விசேடம்.

## இளம்பூரணம்

### *223. 'செய்யா' என்னும் வினையெச்சமும் அற்றாதல்*

**செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அவ்வியல் திரியாது என்மனார் புலவர்.**

இச்......எனின், ஆகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு உணர்... ...ற்று.

*(இ-ள்.)* பெயரே அன்றிச் செய்யா என்று சொல்லப் படும் ஆகார ஈற்று வினையெச்சச் சொல்லும்[1], வல்லெழுத்து மிக்கு முடியும் அவ்வியல்பின் திரியாது என்று சொல்லுவர் எ-று.

*(உ-ம்.)* உண்ணாக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

*'திரியாது'* என்றதனான், செய்யா என்னும் பெயரெச்சமும்[2] அவ்வாறு முடியுமெனக் கொள்க.

*(உ-ம்.)* உண்ணாக் கொற்றான் - என வரும். *(20)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

*223. 1)* இவ்வும்மையைப் பெயரேயன்றி என இறந்தது தழீஇயிற்றாகக் கொண்டார் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் எதிரது தழீஇயிற்றாக இவ்வாய்பாட்டுப் பெயரெச்சத்தையும் கொண்டார்.

2) செய்த செய்யும் என்னும் உடன்பாட்டுப் பெயரெச்சங்கட்கு மறையாகியது இவ்வாய்பாட்டுப் பெயரெச்சம்.

## நச்சினார்க்கினியம்

### *222. செய்யா வாய்பாட்டு வினையெச்சமும் அற்றாதல்*

**செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அவ்வியல் திரியாது என்மனார் புலவர்.**

இஃது ஆகார ஈற்று வினைச்சொல் முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* செய்யா...கிளவியும் - செய்யா என்னும் வினையெச்சமாகிய சொல்லும்[1] (உம்மையான் பெயரெச்ச மறையாகிய சொல்லும்), அவ்வியல்...புலவர் - வல்லெழுத்து மிக்கு முடியும் அவ்வியல்பின் திரியாது என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* உண்ணாக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், உண்ணாக் கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும் வரும். *(20)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***222.*** 1. இவ்வாய்பாட்டு வினையெச்சம் வினை. 31ஆம் சூத்திரத்தே இடம்பெற்றிலது. செய்ந என்பதன் எதிர்மறை வாய்பாட்டுப் பெயரெச்சம் செய்யா என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சமாம். பிற்காலத்தார் இதனை ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் என்ப. ஈறுகெட்ட இவ்வாய்பாடே சங்க விலக்கியத்துள்ளும் காணப்படும். செய்யாத என்னும் வாய்பாடு பிற்காலத்தது. திருக்குறளில் 148, 448, 480, 568, 945, 970ஆம் குறள்களில் இவ்வாய்பாடு காணப்படுதல் வள்ளுவனார் காலத்தைச் சங்ககால இறுதிக்கண் கொள்விக்கும் என்ப.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***223.*** **செய்யா என்னும்... ...என்மனார் புலவர்.**

நச்சினார்க்கினியர், உம்மையால் பெயரெச்ச மறையாகிய சொல்லும் 'அவ்வியல் திரியாது' எனக் கூறினார். உம்மை எச்சவும்மை ஆகலான், அஃது ஆகார இறுதியைக் குறித்தல் நேரிதேயன்றி, முன்னரோ பின்னரோ காணப்படாத பெயரெச்சத்தைக் குறிக்கும் என்றது நேரிதாகாது. அதனை

'அறியாப் பொருள்' (சொல்-31) முதலிய ஆசிரியர் வழக்காற் கொள்ளின் நலம்.

**223.** [எச்சவும்மை செய்யா என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தைத் தழுவுதற்கண் யாது இடர்ப்பாடுளது? சங்கவிலக்கியத்துள் இவ்வாய்பாட்டுப் பெயரெச்சமன்றிச் 'செய்யாத' என்னும் அகர ஈற்று எதிர்மறைப் பெயரெச்சம் காண்டலரிது. 'பிறன்மனை நோக்காத' (148) எனவும் 'உளவரை தூக்காத' (480) எனவும் இவை முதலாகத் திருக்குறளில் இவ்வாய்பாடு பயிலவருதல் வள்ளுவனார் காலத்தைச் சற்றே பின்தள்ளும் என்ப.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**222. செய்யா என்னும்... ...என்மனார் புலவர்.**

இச்சூத்திரத்தாற் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் ஒன்றுண்டு என்பதனை உடம்பொடு புணர்த்தலான் கொள்ளவைத்தார் ஆசிரியர்.

இனி, 'உரையிற்கோடல்' என்னும் உத்தியான், 'அறியாப் பொருவயின்' எனவும் 'வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்' எனவும், உண்ணாக்கொற்றான் - வாராக்கொற்றன்- எனவும், எதிர்மறைப் பெயரெச்சம் ஈறுகெட்டு மிக்கு வருதலை அடக்கிக்கொள்க.

**222.** [செய்யாத என்னும் வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சம் ஆசிரியர் காலத்து வழக்கமிலது என்பதனை இவ்வுரைகாரர் காட்டும் மேற்கோளடிகளிலும் காண்க.]

**இளம்பூரணம்**

**224. ஆகாரஈற்று நிலைமொழி உம்மைத்தொகை முடிபு**

உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக அகரம் மிகுமே.

இச்......எனின், அவ்ஈற்று அல்வழிக்கண் உம்மைத் தொகை முடிபு கூறு......ற்று.

*(இ-ள்.)* உம்மை தொக்க இருபெயர் ஆகிய தொகைச் சொல் மெய்யாக நிலைமொழி ஈற்று அகரம் மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* உவாஅப் பதினான்கு [1] - என வரும்.

'மெய்ம்மையாக' என்றதனான், வல்லெழுத்துக் கொடுக்க[2] 'உம்மை தொக்க' என்னாது 'உம்மை எஞ்சிய' என்ற வாய்பாட்டு வேற்றுமையான், இம்முடிபு இருபெயரொட்டுப் பண்புத்தொகைக்கும் கொள்க.

*(உ-ம்.)* அராஅப் பாம்பு - என வரும்.

இன்னும் அதனானே, எழுவாய் முடிபிற்கும் பெயரெச்சத்திற்கும் அகரப்பேறு கொள்க.

*(உ-ம்.)* இராஅக் கொடிது, இராஅக் காக்கை [3] - என வரும்.

நிலைமொழி எழுத்துப்பேறு வரையாது கூறினவழி நான்கு கணத்துக்கண்ணும் செல்லுமாகலின், இயல்பு கணத்துக்கண்ணும் அகரப்பேறு கொள்க.

*(உ-ம்.)* இறாஅ வழுதுணங்காய் [4] - என வரும்.

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**224.** 1) உவாஅப் பதினான்கு என்னும் தொடர் சூடாமணி உள்ளமுடையான் என்னும் சோதிட நூலில் வந்துள்ள தெனவும், அவ்வாட்சி பிறநூலில் தாம் காணவில்லை யாகலின் அந்நூலின் காலமாகிய 1178-க்குப் பிற்பட்ட காலத்தவராக இத்தொடரை யெடுத்தாண்ட இளம்பூரணர் இருத்தல் வேண்டுமெனவும் பதிப்பாசிரியர் **அடிகளாசிரியர்** குறிப்பிடுகிறார்.

2) இவ்வும்மைத்தொகை இடையில் வல்லெழுத்துப் பெறுகிறது. இவ்வல்லெழுத்துப்பேறு பிற உம்மைத் தொகையில் காண்டலரிது. சிவஞானமுனிவர் இன்பத் துன்பம் என்றெழுதுவர். புவிவிற்கெண்டை என உம்மைத் தொகையில் மெய்பிறிதாம் திரிபு நிகழ்கிறது. இராப்பகல் என்புழி ஒற்றுமிகுதல் காண்க. இன்பத் துன்பங்களே என்பது திருக்கோவையார் ஆட்சி (71). இவ்வும்மைத்தொகையது பெற்றி அறிதற்கரிதாயுள்ளது.

3) இரவானது கொடிது ; இல்லாத காக்கை.

4) இறாஅமீனும் வழுதுணங்காயும்.

**நச்சினார்க்கினியம்**

## 223. உம்மைத்தொகைக்கண் நிலைமொழி ஆகாரஈறு முடியுமாறு

**உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி**
**மெய்ம்மை யாக அகரம் மிகுமே.**

இஃது ஆகார ஈற்று அல்வழிக்கண் உம்மைத்தொகை முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) உம்மை......மொழி - உம்மை தொக்குநின்ற இருபெயராகிய தொகைச்சொற்கள்; மெய்ம்மை.....மிகும் - மெய்யாக நிலைமொழி ஈறு அகரம் மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உவாஅப் பதினான்கு இராஅப்பகல் என வரும். 'மெய்ம்மையாக' என்றதனான், வல்லெழுத்துக் கொடுக்க. இவை எழுவாயும் பயனிலையும் அன்றி உம்மைத்தொகை ஆதலின், மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறாதாயிற்று[1].

உம்மை தொக்க என்னாது 'எஞ்சிய' என்னும் வாய் பாட்டு வேற்றுமையான், அராஅப் பாம்பு எனப் பண்புத் தொகைக்கும்[2], இராஅக் கொடிது என எழுவாய் முடிபிற்கும், இராஅக் காக்கை எனப் பெயரெச்சமறைக்கும் அகரப்பேறு கொள்க.

வருமொழி வரையாது கூறினமையின், இயல்பு கணத்துக்கண்ணும் அகரப்பேறு கொள்க.

இறாஅ வழுதுணங்காய்[3] என வரும். இஃது உம்மைத் தொகை.

அராஅக்குட்டி என்பது பண்புத்தொகையும் வேற்றுமைத் தொகையும்[4] ஆம்.

உவாஅப் பட்டினி என்பது வேற்றுமைத்தொகை[5]. (21)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*1) மாட்டேற்றான் (221) வல்லெழுத்துப் பெறக் கூடாமையின், இலேசினான் பெறுவித்தார்.*

*2) இருபெயரொட்டுப் பண்புத்தொகை.*

*3) இறாவும் வழுதுணங்காயும்.*

*4) அரவாகிய குட்டி, அரவினது குட்டி*

*5) உவாத்திதிகளில் கிடக்கும் பட்டினி.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***224.*** **உம்மை எஞ்சிய...... .அகரம் மிகுமே.**

"'மெய்ம்மையாக' என்றதனான் வல்லெழுத்துக் கொடுக்க என்றனர் உரைகாரர். நச்சினார்க்கினியர், "இஃது எழுவாயும் பயனிலையுமின்றி உம்மைத்தொகையாதலின் மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறாதாயிற்று" என்றார். ஈண்டு ஆசிரியர் அல்வழிப் புணர்ச்சியைப் பற்றிக் கூறுகின்றமையானும், அல்வழிப் புணர்ச்சி எழுவாய்த் தொடரிற்றான் நிகழும் என்ற நியதி இல்லாமையானும், நச்சினார்க்கினியர் கூறும் காரணம் பொருந்தாது என்க. அன்றியும் இஃது அகரஈறாதலின் மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறமுடியாது என்பதும் அறிக.

*அராஅப் பாம்பு உவாஅக் காக்கை இவற்றை 'உயிரும் புள்ளியும்' (482) என்ற சூத்திரத்தாற் கொள்ளல் தரும்.*

**224.** [ஆசிரியர் விதந்து கூறாதவழியெல்லாம் அல்வழிப் புணரச்சி என்பது எழுவாய்த் தொடரையே குறிக்கும் என்பது அகத்தோத்துள் வெளிப்படையாகக் காணப்படும் செய்தி. 'ஆகார இறுதி அகர இயற்றே' (221) என்பவாதலின், மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறுதல் கூடும். ஆகலின் நச்சினார்க்கினியருரையுள் இவர் பொருந்தாமை கூறுதல் பொருந்தாது.

'அராஅப் பாம்பு' இருபெயரொட்டுப் பண்புத்தொகை; நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படும். உவவாக் காக்கை என்புழி, 'உவவா' என்னும் பெயரெச்சமறை இடையே வகர உயிர்மெய் கெட்டு உவாஅக் காக்கை எனப் பெயரெச்சத்தொடராக நின்றது. ★ இவை உம்மைத்தொகை அல்ல வேனும், நிலைமொழி ஆகாரவீறாய் அகர மிகுதல் ஒப்புமை கருதி, ஈண்டே இலேசான் முடித்தார் நச்சினார்க்கினியர், அதிகாரப்புறனடையான் முடித்தலினும் ஈண்டே இயைபு நோக்கி என்க.

ஆகார ஈற்றுச் சொல் வருமொழியொடு புணருமிடத்து அகரம் பெறுதலின், நிலைமொழி இயல்பான அகர ஈற்றுச் சொல்லன்று; அகர ஈறாயின், ஈண்டு ஆகாரவீற்றுள் இடம்பெறுமாறு எங்ஙன்? இவ்வுரைகாரர் இதனை நோக்கிற்றிலர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**223.** உம்மை எஞ்சிய ........அகரம் மிகுமே.

பண்புத்தொகையும் வினைத்தொகையுமே பிரித்துப் புணர்க்கப்படா என்பது விதியாகலின், ஏனைத்தொகை களைப் பிரித்துணருமாறு கூறுவாராய் ஈண்டு உம்மைத் தொகை புணர்ந்து நிற்கும் மரபு கூறினார் என அறிக.

உவாஅப்பதினான்கு இராஅப் பகல் - என வரும் எடுத்துக்காட்டுக்களில், அகரம் தோன்றாதாயின், பதினான்கு

★ இதனை இவரே அடிக்குறிப்பில் சுட்டியுள்ளார்.

உவாக்கள் என்றும், இரவானது பகல் - இல்லாத பகல் - என்றும் கவர்பொருள் படுமென்க. நிலைமொழிச் செய்தியாகத் தோன்றிய அகரம், விதியீறாக நிற்கப் பொது விதியான் வல்லெழுத்து மிக்கது என்றறிக.

***223.*** ['அல்வழி' என்று பொதுவாகக் கூறின் எழுவாய்த் தொடரே கூறும் ஆசிரியர், அதனை விலக்கி உம்மைத் தொகையைச் சுட்டிக்கூறும் நூற்பா இது. இதன்கண் வரும் மிகைச்சொற்கொண்டு, வேற்றுமைக்கண் அகரஎழுத்துப் பேறு ஏலாது என்று தனிவிதியால் (227) விலக்கிய, பொழுது குறித்து வரும் இரா என்ற சொல், 'இராஅக் கொடிது' என்னும் எழுவாய்த் தொடரின்கண் அகரம்பெறும் என்று இவ்வுரை காரர் கூறுவது ரெட்டியார் ஆய்வுரைக் குறிப்பினைத் தழுவிப் போலும்.

-தி.வே.கோ.

பண்புத்தொகையும் வினைத்தொகையுமே பிரித்துப் புணர்க்கப்படா என்னும் விதியை நினைவுறுத்தும் இவ்வுரைகாரர், 157ஆம் சூத்திரவுரையுள், 'ஆடூஉவறிசொல்' 'பல்லோர் அறிசொல்' என்பவை ஒரு சொல்நீர்மையுற்றுத் தொகைச் சொல்லாய்ப் பாலறிய நிற்பவையாதலின், அவற்றை நிலைமொழி வருமொழி செய்து பிரித்தல் மரபன்று என்று குறிப்பிடுகிறார். இரண்டாம் வேற்றுமைத் தொகையைப் பிரித்துப் புணர்க்கப்படாது என்பது மேற்கோள் மலைவன்றோ?]

## இளம்பூரணம்

***225. ஆகார ஈற்றுள் இயல்பாய் முடியும் சொற்கள்***

**ஆவும் மாவும் விளிப்பெயர்க் கிளவியும்**
**யா என் வினாவும் பலவற்று இறுதியும்**
**ஏவல் குறித்த உரையசை மியாவும்**
**தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியொடு**
**அன்றி அனைத்தும் இயல்புஎன மொழிப.**

இச்...... எனின், அவ்ஈற்றுச் சிலவற்றிற்கு இயல்புகூறி எய்தியது விலக்கலும், எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ-ள்.) ஆ என்னும் பெயர்ச்சொல்லும், மா என்னும் பெயர்ச்சொல்லும், விளித்தலையுடைய பெயராகிய உயர்திணைச் சொல்லும், யா என்னும் வினாப்பெயரும், அஃறிணைப் பன்மைப் பொருளை உணர்த்தும் ஆகார ஈற்று முற்றுவினைச் சொல்லும், முன்னிலையில் ஏவல்வினைச் சொல்லைக் குறித்துவரும் உரையசையாகிய மியா என்னும் ஆகார ஈற்று இடைச்சொல்லும், தனது தொழிலினைச் சொல்லும் ஆகாரவினாவினையுடைய வினைச்சொல்லும் ஆகிய அவ்வனைத்தும் இயல்பாய் முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) ஆ குறிது சிறிது தீது பெரிது - எனவும்,

மா குறிது சிறிது தீது பெரிது - எனவும், ஊரா கொள் செல் தா போ - எனவும்,

யா குறிய சிறிய தீய பெரிய - எனவும்,

உண்ணா குதிரை செந்நாய் நகர் பன்றி - எனவும்,

கேண்மியா கொற்றா சாத்தா தேவா பூதா - எனவும்,

உண்கா[1] கொற்றா சாத்தா தேவா பூதா - எனவும் வரும்.

விளிப்பெயர்க்கிளவியும், பலவற்றுஇறுதியும், ஏவல் குறித்த உரையசை மியாவும், தன் தொழில் உரைக்கும் வினாவின் கிளவியும் எய்தாதது எய்துவிக்கப்பட்டன.

'ஊராகொள்' என்பது 'உயிரீறு ஆகிய உயர்திணைப் பெயரும்' (தொகை.11) என்பதனுள் அடங்காதோ எனின், முன்(8) கூறிற்றே கூறுக[2]. (22)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**225.** 1) உண்கா - உண்பேனோ என்னும் பொருட்டு.

2) 'அன்னென் இறுதி ஆ ஆகும்மே' (விளி, 13) என்னும் விதியான் ஊரன் ஊரா என விளிக்கப்பட்டது. 'அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும்' (ஷை 14) என்றதனான் ஊர என விளிக்கப்பட்டது முன்னர் (211) இடம்பெற்றது.

### நச்சினார்க்கினியம்

**224. ஆகார ஈற்றுள் இயல்பாய் முடிவன**

> **ஆவும் மாவும் விளிப்பெயர்க் கிளவியும்**
> **யாஎன் வினாவும் பலவற்று இறுதியும்**
> **ஏவல் குறித்த உரையசை மியாவும்**
> **தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியோடு**
> **அன்றி அனைத்தும் இயல்பென மொழிப.**

இஃது எய்தியது விலக்கலும் எய்தாதது எய்துவித்தலும் உணர்த்துகின்றது.

(இ-ள்.) ஆவும்... ...கிளவியும் - ஆ என்னும் பெயரும், மா என்னும் பெயரும், விளித்தலையுடைய பெயராகிய உயர்திணைச் சொல்லும்; யாஎன்...இறுதியும் - யா என்னும் வினாப்பெயரும், பன்மைப்பொருளை உணர்த்தும் ஆகார ஈற்று மறையாகிய முற்று வினைச்சொல்லும்; ஏவல்....... மியாவும் - முன்னிலை ஏவல் வினையைக் கருதிவரும் எதிர்முகமாக்கும் சொல்லினைச் சேர்ந்த மியா [1] என்னும் ஆகாரஈற்று இடைச்சொல்லும்; தன்......கிளவியொடு- தனது தொழிலினைச் சொல்லும் ஆகார ஈற்றுத் தன்மையாகிய வினாச்சொல்லொடு கூட; அன்றி அனைத்தும் - அவ்வெழு வகையாகிய சொல்லும்; இயல்பென மொழிப-இயல்பாய் முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) ஆ குறிது மாகுறிது சிறிது தீது பெரிது - குறிய சிறிய தீய பெரிய - என ஒட்டுக. இவை ஆகார ஈற்றுப் பெயராகலின் மிக்கு முடிவன[2] மிகா என எய்தியது விலக்கிற்று.

ஊரா கேள் செல் தா போ என, இஃது இயல்பாம் என்ற உயர்திணைப் படர்க்கைப்பெயர் (153) திரிந்து முன்னிலை யாய விளியேற்றலின்[3], எய்தாதது எய்துவித்தது.

யா குறிய சிறிய தீய பெரிய என, இதுவும் பெயராகலின் எய்திய இயைபு வல்லெழுத்து விலக்கியதாம்.

உண்ணா குதிரைகள் செந்நாய்கள் தகர்கள் பன்றிகள் என, இஃது எய்தியது விலக்கிற்று, 'செய்யா' என்னும் (222) சூத்திரத்துப் பெற்ற வல்லெழுத்தை விலக்கலின்[4].

கேண்மியா கொற்றா சாத்தா தேவா பூதா எனவும், உண்கா கொற்றா சாத்தா தேவா பூதா எனவும், இவ்விடைச்சொற்கள்[5] மிக்குமுடியாமையின், எய்தாதது எய்துவித்தல் ஆம்.

உண்கா என்பது யானுண்பேனோ என்னும் பொருட்டு.

இயல்புகணத்துக்கண்ணாயின், இவை[6], 'ஞ ந ம ய வ' (144) என்பதனான் முடிபெய்தும். (22)

## நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**224.** 1) நச்சினார்க்கினியர், "உரையசைக்கிளவியாவது-தான் கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முக மாக்கும் சொல்" என்று முன்னும் (34) உரை வரைந்தார்; ஈண்டும் "ஏவல் வினையைக் கருதிவரும் எதிர்முக மாக்கும் சொல்" என்றுரைத்தார். அவ்வெதிர்முகமாக்கும் சொல்லினைச் சேர்ந்து வருவது மியா என்னும் இடைச்சொல் என்பது அவர் கருத்து.

ஏவல் வினையைக் குறித்து வரும் ... ாகிய மியா என்னும் இளம்பூரணருரை ... சிறப்புன ... ு என்பர். 'உரையசை ம ... ருபெயரொட ... இளம்பூரணருரைக் கேற்ப.

... டிதற்கு விதி 221ஆம் சூத்திரம்.

... அன்என் இறுதி ஆஆ கும்மே' (விளி. 13)

4) செய்யா என்னும் சூத்திரத்து உம்மையாற் பெற்றது, செய்யா என்னும் பெயரெஞ்சு கிளவி. அப்பெயரெஞ்சு கிளவிக்கு எய்திய வல்லெழுத்து இச்சூத்திரம் விலக்கிற்று என்று இத்தொடர் பொருள்படுவான் செல்லும். ஈண்டுப் 'பலவற்றிறுதி' என்றது பலவின்பால் எதிர்மறை முற்றினை. ஆகலின், செய்யா என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் போன்ற சொல்லமைப்பினையுடைய அவ்வாய்பாட்டு வினைமுற்றுப் பெற்ற வல்லெழுத்து என நலிந்து பொருள் கொள்ளல் வேண்டும். எதிர்மறைப் பெயரெச்சமும் எதிர்மறை வினைமுற்றும் சொல்முடிந்த நிலையான் எதிர்மறையிடைநிலை யுடையவாயினும், முடிக்கும் சொல் வேறுபாட்டான் வேறெனவே படும்.

இத்தொடர்ப் பொருளை நலிந்து கொள்ளவே வேண்டியுள்ளது.

6) 'இவை' என்ற சொல் விடுபட்டுள்ளமை நிரப்புக.

இச்சூத்திரத்தை 'ஒப்பக்கூறல்' என்னும் உத்திக்கு இனமாகக் கூறுவர் பேராசிரியர். சூ.210 உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***225.*** **ஆவும் மாவும்........இயல்பென மொழிப.**

நச்சினார்க்கினியர் 'பலவற்றிறுதி' என்பதற்கும் பன்மைப் பொருளை உணர்த்தும் ஆகார ஈற்று(ப் பெயரெச்ச மறையாகிய) முற்றுவினைச்சொல் எனப் பொருள் கூறினர்.

பன்மைப் பொருளைக் குறிக்கும் பெயரெச்சம் தொடக்கத்தில் ஆகார ஈற்று வினையாலணையும் பெயராய் இருத்தற்கு உரித்தாகலின் 'பெயரெச்சம்' என்ற சொல்லை அவர் ஈண்டுக் கூறாதிருப்பின் நலம்.

'செய்யா' என்னும் சூத்திரத்து உம்மையாற் பெற்ற வல்லெழுத்தினை விலக்கலின் - என்ற அவர்தம் கூற்றும் பொருத்தமின்று.

***225.*** ['பெயரெச்ச மறையாகிய முற்று வினைச்சொல்' என்று நச்சினார்க்கினியத்தில் காணப்படும் தொடர் இடைச் செருகலாக இருத்தல் கூடும். ஆகாரவீற்றுப் பெயரெச்ச மறையும் அவ்வீற்று முற்றும் செய்யா என்னும் வாய்பாடு போலத் தோற்றினும், பொருள் வேறுபாடுடைமையின், வேறெனவே படும். பெயரெச்சம் வருமொழி வன்கணம் மிகுதலும் முற்று மிகாமையும் உடையவாதல் காண்க.

'செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்' என்னும் உம்மையான், அவ்வாய்பாட்டு பெயரெச்சமும் வருமொழி வன்கணம் மிகும் என்று கொள்ளவைத்தார் ஆசிரியர்; ஈண்டு ஆகாரவீற்று அவ்வாய்பாட்டு வினைமுற்றுக்கு 'வலிமிகும்' என்று முன்னெய்தியதனை விலக்கினார் - என்றார் நச்சினார்க்கினியர். ஈற்றெழுத்து ஒத்தலாகிய வாய்பாட்டு ஒப்புமையான் இவ்வாறு நச்சினார்க்கினியர் உரைத்தமை பொருந்தாது, முடிக்கும் சொல் வகையான் பெயரெச்சமும் முற்றும் வேறுபாடுதலான் என்பது சாத்திரியார் கருத்து.]

## இளம்பூரணம்

### *226. ஆகாரஈற்றுப் பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இச்......எனின், அவ்ஈற்று வேற்றுமைமுடிபு கூறு...ற்று.

(இ-ள்.) ஆகார ஈற்றுப்பெயர், அல்வழிக்கண்ணே அன்றி வேற்றுமைக்கண்ணும், அகர ஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) தாராக்கால் சிறகு தலை புறம் - என வரும்.

**நச்சினார்க்கினியம்**

### *225. ஆகார ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது வேற்றுமைக்கண்ணும் - ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக் கண்ணேயன்றி வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும்; அதனோ ரற்று - அகர ஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.) தாரா ழுங்கா வங்கா என நிறுத்திக் கால் செவி தலை புறம் என வருவித்து வல்லெழுத்துக் கொடுத்து ஒட்டுக.* *(23)*

**இளம்பூரணம்**

### *227. நிலைமொழிக்கண் அகரஎழுத்துப்பேறு தோன்றும் இடம்*

**குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**அறியத் தோன்றும் அகரக் கிளவி.**

இச்.....எனின், அவ்ஈற்றுச் சிலவற்றிற்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு......ற்று.

(இ-ள்.) குற்றெழுத்தின் முன் நின்ற ஆகார ஈற்றிற்கும், ஓரெழுத்து மொழியாகிய ஆகாரஈற்றிற்கும், நிலைமொழிக் கண் அகரமாகிய எழுத்து அறியத் தோன்றும் எ-று.

(உ-ம்.) பலாஅக் கோடு செதிள் தோல் பூ - எனவும், காஅக் குறை செய்கை தலை புறம் - எனவும் வரும்.

ஓரெழுத்தொரு மொழி முற்கூறாத அதனான், அதன்கண் அகரப்பேறு சிறுபான்மை எனக்கொள்க.

'அறிய' என்றதனான், அவ்விருவழியும் [1] அகரம் பொருந்தியவழியே வருதலும், இவ்ஈற்றுவேற்றுமையுள் எடுத்தோதாதனவற்றின் முடிபும், இவ்ஈற்றுள் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்வும், இவ்வுயிரீற்றின் வரும் உருபீற்றுச் செய்கையும் [2] கொள்க.

(உ-ம்.) அண்ணாஅத்துக் குளம் [3], உவாஅத்துஞான்று கொண்டான், உவாஅத்தாற் கொண்டான், யாவற்றுக் கோடு- என இவை முடிபு. மூங்காவின் கால் - என்பது இயைபு வல்லெழுத்து வீழ்வு.

தடாவினுட் கொண்டான் - என்பது உருபீற்றுச் செய்கை. (24)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

227. 1) அவ்விருவழி - குற்றெழுத்தின் முன் நின்ற ஆகாரவீறும், ஓரெழுத்து மொழியாகிய ஆகாரவீறும்.

2) உயிரீற்றினையடுத்து இன்சாரியை வருதலும், அதனையடுத்து வேற்றுமையுருபு வருதலும், வருமொழி வன்கணத்திற்கு ஏற்ப உருபீறு திரிதலும் ஆகிய முடிபு: தடாவினுட் கொண்டான்.

3) உதாரணம் பற்றிய விளக்கத்தினை நச்சினார்க்கினிய ருரையுள் காண்க. அத்து, ஞான்று, இன் : சாரியை; உள்: ஏழனுருபு.

## நச்சினார்க்கினியம்

### *226. இவ்வீற்றுள் அகர எழுத்துப்பேறு எய்தி முடிவன*

**குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**அறியத் தோன்றும் அகரக் கிளவி.**

இஃது அவ்வீற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது, வல்லெழுத்தோடு அகரம் வகுத்தலின்.

(இ-ள்.) குறியதன்......மொழிக்கும் - குற்றெழுத்தின் முன் நின்ற ஆகார ஈற்றிற்கும், ஓரெழுத்தொருமொழியாகிய ஆகார-ஈற்றிற்கும்; அகரக் கிளவி அறியத் தோன்றும் - நிலைமொழிக்கண் அகரமாகிய எழுத்து விளங்கத் தோன்றும் எ-று.

(உ-ம்.) பலாஅக்கோடு செதிள் தோல் பூ எனவும், காஅக் குறை செய்கை தலை புறம் எனவும் வரும்.

ஓரெழுத்தொருமொழி அகரம் பெறுதல் சிறுபான்மை என்றற்கு அதனைப் பிற் கூறினார்.

இது நிலைமொழிச் செய்கை ஆதலின் [1], பலாஅவிலை பலாஅநார் என இயல்பு கணத்தும் கொள்க.

'அறிய' என்றதனான், அவ் அகரம் ஈரிடத்தும் பொருந்தினவழிக் கொள்க. இன்னும் இதனானே, அண்ணாஅத்தேரி திட்டாஅத்துக்குளம் என அத்துக் கொடுத்தும், உவா அத்தாற் கொண்டான் என அத்தும் ஆனும் கொடுத்தும் [2], இடாஅவினுட் கொண்டான் என இன்னும் ஏழனுருபும் கொடுத்தும் செய்கை செய்து முடிக்க.

இன்னும் இதனானே, மூங்காவின்கால் மூங்காவின் றலை என உருபிற்குச் சென்ற சாரியை (173) பொருட்கண் சென்றுழி, இயைபு-வல்லெழுத்துக் கேடும் கொள்க. *(24)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*226.* 1) இவ்வெழுத்துப் பேறு நிலைமொழிச் செய்கை யாதலின், வருமொழி இயல்புகணத்தான் இடர்ப்பாடு எதுவுமின்று. உயிர்வருமிடத்து உடம்படுமெய் தோன்று மென்க; மென்கணமும் இடைக்கணமும் இயல்பாக முடியும்.

நிலைமொழியின் எழுத்துப்பேறும் சாரியைப் பேறும் வருமொழி நாற்கணத்தோடும் முடிக்கப்படும். சிறுபான்மை இயல்புகணம் உதாரணமாகக் காட்டப்படாத முடிவுகளும் ஏற்றவாறு கொள்ளப்படும்.

2) அத்தின் அகரம் ஆகார ஈற்றின் முன்னரும் கெடுத லுடைத்து எனவும் அகர ஈறாக்கியும் முடிப்ப எனவும் நச்சினார்க்கினியர் 133ஆம் சூத்திரவுரையில் குறிப்பிட்டார்.

**வேங்கடராஜலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*226.* குறியதன் முன்னரும்....... அகரக் கிளவி.

ஆசிரியர் 'அகரக் கிளவி தோன்றும்' என்று கூறியிருப்ப, அண்ணாஅத்தேரி என அத்துச்சாரியையும், உவாஅத்து ஞான்று; கொண்டான் என அத்தும் ஞான்றும் வருதலைக் கொள்ளுமாறு உரையாசிரியர்கள் கூறுவது ஆசிரியர் கருத்திற்குப் பொருந்தும் எனத் தோன்றவில்லை. இவற்றை இவ்வதிகாரப் புறனடையால் அமைத்துக்கொள்ளுதல் தகும்.

*226.* [உயிர் மயங்கியற்கும் புள்ளி மயங்கியற்கும் இயற்புறனடையாக 'உணரக் கூறிய' (405) என்னும் சூத்திரம் உள்ளது. உயிர்மயங்கியற்குத் தனியே புறனடை சொல்லப் பட்டிலது. உயிரும் மெய்யுமென அவ்வவ் வீற்று முடிபுகளை அவ்வச்சூத்திரத்துள் பெறப்படாவழி, இலேசினான் முடித்துக் காட்டல் தொல்லுரையாளர்தம் கொள்கை. சூத்திரச் சொற்குப் பொருளொழிபிருப்பினும், அச்சொல்லின்றியும் (அவாய்

நிலை முதலியவற்றான்) பொருள்படுவான் செல்வனவற்றை அன்னோர் மிகையாகக் கொண்டனர்; முறையன்றிக் கூற்று, சூத்திரக்கிடக்கை போன்ற சிலவற்றையும் இலேசாகக் கொண்டனர். அவ்வாறு ஏற்றபெற்றி ஈறுதோறும் முடியாக்கால், இயற்புறனடையுள்ளும் அதிகாரப் புறனடையுள்ளும் எண்ணிறந்த முடிபுகள் கூறவேண்டியிருக்கும் எனக் கருதியமையே அன்னோர் இலேசினான் பலவற்றை முடித்துக் காட்டியமைக்கு ஏதுவாம் என்க. பின்னுரையாளர் பலரும் "புறனடையுள் இம்முடிபினைக் கூறியிருக்க வேண்டும்" என்று தொல்லுரைகாரரை மறுப்பதை மரபாகக் கொண்டனர். பிற்கால மொழியியலார் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு நூலாசிரியர் சூத்திரங்களிலும் சில அமைதியின்மையைச்சுட்டினர். எடுத்துக்காட்டாக, **240, 347, 430, 434, 437, 445**ஆம் நூற்பாக்களைக் கொள்ளலாம்.

அண்ணாஅத்தேரி என்பதற்குப் பாலசுந்தரம் குறிப்பிட்டது ஏற்புடைத்தாகத் தோன்றுகிறது.

தம் காலத்து வழக்கில் நிலவியவற்றை உரையாசிரியன்மார் இலேசினான் முடித்துக்காட்டினர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**226. குறியதன் முன்னரும்....... அகரக் கிளவி.**

'அறிய' என்றதனை மிகையாகக் கொண்டு, அண்ணா-அத்தேரி திட்டாஅத்துக்குளம் என அத்துக் கொடுக்க என்பார் நச்சினார்க்கினியர். அவை அண்ணாஅத்தன் - திட்டாஅத்தன்- என்னும் பெயர்களின் மரூஉவாக வழங்கும் மொழிகளாதலின், அத்துச் சாரியை எனல் பொருந்தாதென்க.

**இளம்பூரணம்**

***228. 'இரா' வேற்றுமை முடிபில் அகரம் பெறாமை***

**இரா என் கிளவிக்கு அகரம் இல்லை.**

இச்.... எனின், அவ் அகரப்பேற்றிற்கு ஒருவழி எய்தியது விலக்குதல் நுதலிற்று.

*(இ-ள்.)* இரா என்னும் ஆகார ஈற்றுச் சொல்லிற்கு முன் *(24)* கூறிய அகரப்பேறு இல்லை எ-று.

*(உ-ம்.)* இராக் கொண்டான்[1] - என வரும். *(25)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***228.*** *1)* இரவின்கண் கொண்டான் என வேற்றுமைப் பொருள்பட உரைக்க அகர எழுத்துப்பேறு கொண்ட முடிபு *(224)* அல்வழிக்கண்ணது என வேறுபாடு காண்க.

**நச்சினார்க்கினியம்**

***227. 'இரா' வேற்றுமைக்கண் அகரம் பெறாமை***

**இராஎன் கிளவிக்கு அகரம் இல்லை.**

இஃது ஆகாரஈற்றுப் பெயர்க்கு ஒருவழி எய்தியது விலக்குகின்றது.

*(இ-ள்.)* இரா......இல்லை - இரா என்னும் ஆகார ஈற்றுச் சொல்லிற்கு, முற்கூறிய அகரம் பெறுதல் இன்று; அது வல்லெழுத்துப் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* இராக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

இராஅக் காக்கை இராஅக்கூத்து எனப் பெயரெச்ச மறைப்பொருள் தாராது[1], இராவிடத்துக் காக்கை - இராவிடத்துக் கூத்து - என வேற்றுமை கருதியவழி, இராக்காக்கை இராக்கூத்து என அகரம் பெறாதென்று உணர்க. *(25)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***227.*** *1)* இராஅ-இராத. இப்பெயரெச்சமறைக்கு அகர எழுத்துப்பேறு வருதலை 223, 224ஆம் சூத்திரவுரையில் இலேசினாற் கொண்டனர் உரையாசிரியன்மார்.

**வேங்கடராகுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***227.*** **இராவென் கிளவிக்கு அகரம் இல்லை.**

மேல், 'குறியதன் முன்னரும்' என்ற விதியினால் இரா என்னும் சொற்கு அகரம் வருமாகலின், இச்சூத்திரத்தால் அதனை விலக்கினார். ஆயின், இராஅப் பகல் என்பதில் அகரம் வருதல் என்னையோ எனின், இராப்பகல் என்பது தாய்தந்தை என்பது போல உம்மை தொக்க இருபெயர்த் தொகை மொழியாதலின், 'உம்மை யெஞ்சிய இருபெயர்த் தொகைமொழி, மெய்ம்மையாக அகரம் மிகுமே' என்னும் சூத்திரத்தால் அகரம் தோன்றப் பெற்றது. ஈண்டு, இராக் கொண்டான் என்பது போல வினைகொண்டு முடியும்வழி வரும் முடிபு கூறப்பட்டது என வேறுபாடறிக.

***227.*** [இரவுப்போதினைக் குறிக்கும் 'இரா' என்னும் சொல், அல்வழியாக வேற்றுமையாக, வன்கணம் வருமிடத்து அகரம் பெறாது என்று இவ்வுரைகாரர் கருதுகிறார் போலும். இராக்கழிந்தது: அல்வழிமுடிபு; இராக்கொண்டான்: வேற்றுமை முடிபு.

வேற்றுமைப்பொருள் கருதியவழியே இவ் 'இரா' என்னும் சொல் அகரம் பெறாது என்பது உரையாளர்தம் கருத்து. இராஅக் காக்கை - இல்லாத காக்கை எனப் பொருள்படின், அல்வழியாதலின், அகரம் பெறும்; இராவிடத்துக் காக்கையெனின், வேற்றுமையாதலின், அகரம் பெறாது இராக்காக்கை எனவே முடியும்.

ரெட்டியார் அவர்களுரை விளக்கமாக இல்லை.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**227. இராவென் கிளவிக்கு அகரம் இல்லை.**

இராஅக் காக்கை என அகரம் தோன்றின், அஃது எதிர்மறைப் பெயரெச்சப் பொருள் தருமாதலின், பொழுது குறித்த சொல்லுக்கு அகரம் இல்லை என்றார்.

**இளம்பூரணம்**

***229. 'நிலா' அத்துச்சாரியை பெறுதல்***

**நிலாஅஎன் கிளவி அத்தொடு சிவணும்.**

இச்.....எனின், அவ்வீற்றுள் ஒருமொழிவழி அகரம் விலக்கி அத்து வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) நிலா என்னும் சொல் அத்துச்சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

(உ-ம்.) நிலாஅத்துக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

நிலைமொழித் தொழில் நிலைமொழித் தொழிலை விலக்கும் ஆகலின், அத்து வகுப்ப அகரம் வீழ்ந்தது. (26)

**நச்சினார்க்கினியம்**

***228. 'நிலா' அத்துப் பெற்று முடிதல்***

**நிலாஅ என் கிளவி அத்தொடு சிவணும்.**

இஃது அகரம் விலக்கி அதிகாரவல்லெழுத்தினோடு (225) அத்து வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

*(இ-ள்.)* நிலாஅ....சிவணும் - நிலா என்னும் சொல், அத்துச் சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

*(உ-ம்.)* நிலா அத்துக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

நிலைமொழித் தொழில் நிலைமொழித் தொழிலை விலக்குமாதலின், அத்து வகுப்ப அகரம் வீழ்ந்தது [1]. இதற்கு ஏழனுருபு விரிக்க. நிலாஅக்கதிர் என்பது 'வேற்றுமைக் கண்ணும்' (225) என்பதனான், இயைபு வல்லெழுத்துப் பெற்றது. நிலாஅமுற்றம் என்பது ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு (132) அன்மையின் [2] அத்துப் பெறாதாயிற்று.

ஈண்டு வருமொழி வரையாது கூறினமையின், நிலாஅத்து ஞான்றான் [3] என இயல்புகணத்துக்கண்ணும் ஏற்பன கொள்க. (26)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**228.** 1) மகப்பெயர்க் கிளவிக்குரிய இன்சாரியை (218), அத்து அதற்கு வகுப்பவே வீழ்ந்தது. (219) [மகவின் கை, மகத்துக்கை]

ஈமும் கம்மும் தொழிற்பெயர் அனையவாய்ப் பெற்று நின்ற உகரம், வேற்றுமைப் புணர்ச்சிக்கண் 'அக்கு' ச் சாரியை பெறவே வீழ்ந்தது (328, 329), [ஈமுக்கடிது - கம்முக்கடிது; ஈமக்குடம் கம்மக்குடம்]

ஈண்டும், அத்துவகுப்பவே அகரம் வீழ்ந்தது என்க.

சிறுபான்மை நிலைமொழித்தொழில் நிலைமொழித் தொழிலை விலக்காமையும் உண்டு (269, 270) [ஊன் +அக்கு+ குறை=ஊனக்குறை]

2) அத்துச்சாரியை முற்றம் என்னும் வருமொழியோடு இயைதற்கு ஏலாமையான், நிலாஅ முற்றம் எனவே

மேன்மாடிக்கு ஒரு சொல் நீர்மைத்தாய்ப் பெயர்வழங்குவ தாயிற்று. அன்றியும், அத்துச்சாரியை இயைபு ஏழன் பொருள்பட நிகழ்தலின், நிலாவைக்கண்டு அதன் தண்கதிரை நுகரும் மேனிலை மாடத்திற்கு அச்சாரியைப் பேறு நிகழலாகாமையும் அறிக.

*3) நிலவொளியிடத்தே தூக்கிலிட்டுக்கொண்டான்.*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**228. நிலாவென் கிளவி அத்தொடு சிவணும்.**

இச்சூத்திரத்துப் பாடம் 'அத்தொடும் சிவணும்' என்றிருத்தல் வேண்டும். அவ்வழி, மிகையாற் கொள்ளப் பெற்றவை சூத்திரத்தானே அடங்கும் என்க.

## இளம்பூரணம்

**230. மெல்லெழுத்து மிகும் இவ்வீற்று மரப்பெயர்கள்**

**யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்**
**ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே.**

இச்......எனின், அவ்வீற்றுள் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தல் நுதலிற்று.

(இ-ள்.) யா என்னும் மரத்தை உணரநின்ற சொல்லும், பிடா என்னும் சொல்லும்[1], தளா என்னும் சொல்லும் ஆகிய அம்மூன்று பெயரும் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) யாஅங்கோடு, பிடாஅங்கோடு, தளாஅங்கோடு செதிள் தோல் பூ - என வரும்.

மெல்லெழுத்துப் பேறு வருமொழித் தொழில் ஆகலின், வருமொழி வல்லெழுத்தை விலக்கிற்று. (27)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*230.* 1) பிடா: முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும் (கலி. 10)

2) 226 ஆம் சூத்திரத்தாற் பெறும் அதிகாரவல்லெழுத்தை என்க.

**நச்சினார்க்கினியம்**

### *229. யா, பிடா, தளா - இவை மூன்றும் முடியுமாறு*

**யாஅமரக் கிளவியும் பிடாவும் தளாவும்**
**ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே.**

இது வருமொழி வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

(இ-ள்.) யாமரக்.......தளாவும் - யா என்னும் மரத்தை யுணரநின்ற சொல்லும் பிடா என்னும் சொல்லும், தளா என்னும் சொல்லும்; ஆமுப் பெயரும்.....மிகும் - ஆகிய மூன்று பெயரும் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) யாஅங்கோடு பிடாஅங்கோடு தளாஅங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

வருமொழித் தொழிலாகிய மெல்லெழுத்து வகுப்பவே[1], வல்லெழுத்து விலக்கிற்றாம். இதற்கும் விலக்காமையின் அகரம் பெற்றது[2]. (29)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*229.* 1) வல்லொற்று அல்லது மெல்லொற்று மிகுதல் வருமொழித் தொழிலாம். வருமொழித் தொழில் வருமொழித்தொழிலை விலக்குமாதலின், இச்சூத்திரத்தான், மெல்லெழுத்து மிகுதலை விதிப்பவே, அதிகார வல்லெழுத்து மிகுதி (225) விலக்குண்டது.

2) நிலாஅஎன் கிளவிக்கு அத்து வகுத்து அகரத்தை விலக்கினாற் போல, ஈண்டு வேறு சாரியை விதியாமையின் அகரம் நிலைபெற்றது.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*229.* **யாமரக் கிளவியும்..........மெல்லெழுத்து மிகுமே.**

யா என்னும் வினாப்பெயரை நீக்குதற்காக 'யாமரக் கிளவியும்' என்றார். யாமரக் கிளவியும் என்ற உம்மையுடன், ஏனையவும் மரப்பெயர் என்பதைப் பெறவைத்தார்.

*229.* [வினாப்பெயர்களை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பார். அச்சொல் 'யாவென் வினாவும்' (224) என முன்னரே ஓதப்பட்டுவிட்டது. ஆதலின், யாவென்ற வினாப்பெயரை நீக்கவேண்டி 'யாமரக் கிளவியும்' என்றார் என இவ்வுரைகாரர் குறிப்பிட்டுள்ளமை பொருந்தாது.

'யாமரக் கிளவியும்' என்ற உம்மையான் ஏனையவும் மரப்பெயர்கள் என்பதனைப் பெறவைத்தார் என்றார். அடுத்துவரும் சூத்திரத்தே 'மாமரக்கிளவியும் ஆவும் மாவும்' என்று அவ்வும்மை பிற பெயர்களையும் தழுவி வருதலின் இக்கூற்றுப் புனரபடும்.] -தி.வே.கோ.

**இளம்பூரணம்**

*231.* ***அவை வல்லெழுத்து மிகுதலு முடைமை***

**வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

இச்......எனின், மேலனவற்றிற்கு வல்லெழுத்தும் சிறுபான்மை மிக்கு முடியும் என்று இறந்தது காத்தல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்கூறிய மூன்று பெயரும், மெல்லெழுத்தே அன்றி வல்லெழுத்து மிக்கு முடிபினும் குற்றம் இல்லை எ-று.

(உ-ம்.) யாஅக்கோடு, பிடாஅக் கோடு, தளாஅக் கோடு செதிள் தோல் பூ - என வரும்.

'மானமில்லை' என்றதனான், யா முதலிய மூன்றற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி, இயைபுவல்லெழுத்து வீழ்க்க.

(உ-ம்.) யாவின் கோடு, பிடாவின் கோடு, தளாவின் கோடு - எனவரும்.

இன்னும் அதனானே, 'யாஅத்துக் கோடு'[1] எனச் சிறுபான்மை அத்துப்பேறு உண்டெனும் கொள்க.

அவ் அகரப்பேற்றொடு மெல்லெழுத்துப்பெறுதலின், யாமரக் கிளவி (27) என்பதனைக் குறியதன் முன்னரும் (24) என்பதன்பின் வையாத இதனான், இராவிற் கொண்டான் - நிலாவிற் கொண்டான் - என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க. நிலாவிற் கொண்டான் - என்பதற்கு நிலாஅத்துக் கொண்டான் (26) என்பது ஈற்றுப் பொதுமுடிபு ஆயினவாறு அறிக[2]. (28)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**231.** 1) யாஅத்துக் கோடு : 134 ஆம் சூத்திர விதியான் முடிக்க.

2) நிலாவிற் கொண்டான் என்பது, நிலாஅத்துக் கொண்டான் (26) என்பதற்கு ஈற்றுப் பொதுமுடிபு ஆயினவாறு அறிக - என்று வாக்கியம் அமைந்திருக்க வேண்டும். 'அ ஆ உ ஊ' (174) என்னும் உருபியற் சூத்திரம் அவ்ஆறு ஈற்று நிலைமொழிப் பெயர்க்கும் வேற்றுமை யுருபொடு புணருமிடத்து இன்சாரியை விதிக்கிறது. ஆகலின் அது பொது முடிபு பற்றியதென்க. இச்சூத்திரம் நிலாவிற்கு வகுத்த சிறப்பு முடிபு பற்றியது.

**நச்சினார்க்கினியம்**

## *230.* இவை வல்லெழுத்துப் பேறும் எய்துதல்

**வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

இஃது எய்தியது இகந்துபடாமல் காத்தது, அகரத்தொடு மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்துப் பெறும் என்றலின்.

*(இ-ள்.)* வல்லெழுத்து.....இல்லை - முற்கூறிய மூன்று பெயர்க்கும் மெல்லெழுத்தேயன்றி, வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றமில்லை எ-று.

*(உ-ம்.)* யாஅக்கோடு பிடாஅக் கோடு தளாஅக்கோடு செதிள் தோல் பூ என வரும்.

'மானமில்லை' என்றனான், அம்மூன்றற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

யாவின் கோடு பிடாவின் கோடு தளாவின் கோடு என வரும். சாரியை பெறவே அகரம் வீழ்ந்தது[1].

இன்னும் இதனானே, யாஅத்துக்கோடு பிடாஅத்துக் கோடு தளாஅத்துக்கோடு என அத்துப் பெறுதலும் கொள்க[2].

அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின், 'யாமரக்கிளவி' *(229)* என்பதனைச் 'குறியதன் முன்னரும்' *(226)* என்பதன்பின் வையாத அதனான்[3], இராவிற் கொண்டான் நிலாவிற் கொண்டான் என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. *(28)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***230.*** 1) இன்சாரியை பெறவே, முன் சூத்திரவிதியான் *(226)* எய்தி நின்ற அகர எழுத்துப்பேறு வீழ்ந்ததென்க.

2) அத்து வகுப்பவே, அகரஎழுத்துப்பேறு விலக்குண்டு, யாஅத்துக்கோடு என நின்றது. அத்தின் அகரம் ஆகாரமுனைக் கெடுதல் இல்லை. (கெடும் என்பதொரு கொள்கையும் உண்டு என்பது இவருரையான் அறியலாம்.)

3) சூத்திர வைப்புமுறை பொருந்தும் என்பர் ரெட்டியார்.

உருபிற்குச் சென்ற இன்சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்கப்படும் என்னும் இவ்வுரையாசிரியன்மார் கொள்கை முன்னர் (218) உரைக் குறிப்பில் விளக்கப்பட்டுள்ளது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**231. வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

முற்சூத்திரத்து 'மெல்லெழுத்து மிகுமே' என்னுமிடத்து மெல்லெழுத்தும் எனப் பிரித்துப் பொருள் கொள்ளின், வல்லெழுத்து மிகுதலே பெரும்பான்மை என்பது உம்மையாற் பெறப்படுதலின், அதனை விலக்கி மெல்லெழுத்து மிகுதலே பெரும்பான்மை என்பதனை உணர்த்த வேண்டி இச்சூத்திரம் எழுந்தது.

"'மானமில்லை' என்றதனான், யா முதலிய மூன்றற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. யாவின் கோடு....என வரும்" என்றனர் உரைகாரர். 'யாவினது கோடு' என்றவிடத்து, அது என்ற ஆறனுருபு கெடினும் அதனால் வந்த சாரியை கெடாது நிற்குமெனக் கொள்ளுதல் நேரிதாகலான், சாரியை பெறுதலை ஈண்டும் ஒருமுறை ஆசிரியர் கூறாது விடுத்தார் எனலாம். ஆதலின் 'மானமில்லை' என்றதனால் அதனைப் பெறுதல் வேண்டா.

"இன்னும் அதனானே யாஅத்துக் கோடு எனச் சிறுபான்மை அத்துப்பேறு உண்டேனும் கொள்க" என்றனர் உரைகாரர். யாமரத்தின்கண் உள்ள கோடு என அதற்குப் பொருள்கொள்ளில், யாஅத்துக்கண் கோடு என்ற விடத்துள்ள கண் தொக்கு யாஅத்துக்கோடு என ஆயிற்று என்னலாம். ஆங்கு அத்துச்சாரியை அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு (182) என்ற சூத்திரத்தாற்கொளல் தகும்.

'இராவிஃகண் கொண்டான்' என்றது இராவிற் கொண்டான் என்று ஆகியிருக்கிறது. ஆங்கு இன்சாரியை 'அ ஆ உ ஊ' (174) என்னும் சூத்திரத்தான் வருமாகலான், உரைகாரர் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்தலை விதப்பினாற் கொள்ள வேண்டா.

*231.* [உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லலெழுத்து வீழ்க்கப்படும் என்பதே உரையாசிரியன்மார் கொள்கை. முன்னர் 219ஆம் சூத்திரத்துக் குறிப்புரை காண்க.

சாரியை யீற்று னகரம் முதலியவற்றோடு வருமொழி வல்லினம் ஈரொற்றாக மயங்காது என்பது மொழிமரபிற் கூறப்பட்டது (48). ஆயினும் உரையாசிரியன்மார் சாரியைப் பேறு இயைபு வல்லெழுத்தை விலக்காது என்று கொண்டமைக்குக் காரணம், உயிர்மயங்கியல் 51, 61, 92 ஆம் சூத்திரங்களில் ஆசிரியர் கிளந்தோதியமையே ஏனைய வற்றுக்கும் பொருந்தும் எனத் தாம் கருதியமையே என்க.

**வேங்கடராஜுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***230.*** **வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

'மானமில்லை' என்றதனால், யாஅத்துக்கோடு என அத்துச்சாரியை பெறும் என்றனர் உரையாளர் இருவரும். ஆசிரியர், நிலா என்னும் சொல் ஒன்றற்கு மட்டும் அத்துச் சாரியை விதித்தாரேயன்றி, இவ்வீற்று எல்லாச்

சொற்களுக்கும் பொதுவிதியாக விதித்திலர். அதனால் அஃது ஆசிரியர் கருத்தாகாது.

'யாஅமரக் கிளவியும்' என்னும் சூத்திரத்தை 'குறியதன் முன்னரும்' என்னும் சூத்திரத்தை அடுத்து வைக்காததனால், இராவிற்கொண்டான் என......உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க - என்றனர் உரைகாரரிருவரும். ஆசிரியர், 'குறியதன் முன்னரும்' என்னும் சூத்திரத்தால் இருவகை ஆகாரவீற்றுப் பெயர்கள் முன்னும் அகரம் தோன்றும் என்றாராகலின், அதனையடுத்து, அகரம் வரப்பெறாத சொல்லைக் கூறுதல் முறையாகும் ஆதலின், 'இராவென் கிளவிக்கு அகர மில்லை' என்று கூறினார். ஆகலின் உரையாளர் கூறிய நியாயம் அமைவதன்று.

***230.*** [சூத்திரவைப்புமுறை பற்றிய ரெட்டியார் கூற்று மிகவும் பொருந்தும். சூத்திரவைப்புமுறை பிறழ்ந்ததாக உரையாசிரியன்மார் கருதியது பொருந்தாமையின், பிறிதோர் இலேசினான் அன்னோர் இயைபு வல்லெழுத்தினை வீழ்க்க விதித்திருக்க வேண்டும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***230.*** **வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

யாஅத்துக் கோடு பிடாஅத்துக்கோடு தளாஅத்துக் கோடு- என அத்துப்பெறுதலும் கொள்க என்றார் நச்சினார்க்கினியர். உருபிற்கோதிய சாரியைகள் ஒல்லும் வழியெல்லாம் பொருட்கும் வருமென்பது ஆசிரியர் கருத்தாகலின், 'அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு' (181) என்பதனான் அத்துச்சாரியை வருதல் அமையும் ஆகலின், ஈண்டு மிகைப்படுத்து அடக்கவேண்டாமை அறிக.

***230.*** [உருபின் முடிபவை யாவும் பொருட்புணர்ச்சிக் கண்ணும் ஒக்கும் என்பது ஆசிரியர் கருத்தாயின், அதனை

நன்னூலார் போல, ஒரு சூத்திரத்தே வெளிப்படையாகச் சுட்டியிருப்பார். அவ்வாறு சுட்டாது சிலவற்றையே உருபியலொடு மாட்டெறிந்து (சூ. 253, 263, 281, 294, 320, 322. 324, 378, 419, 422) கூறுதலின், உருபின் முடிபவை எல்லாம் பொருளினும் ஒக்கும் என்றல் ஆசிரியர்க்கு உடன்பாடன்மை புலனாகும்.]
- தி. வே. கோ.

## இளம்பூரணம்

### 232. *'மா' மரப்பெயரும், 'ஆ'வும் 'மா'வும் (வன்கணம் வருவழி) முடியுமாறு*

**மாமரக் கிளவியும் ஆவும் மாவும்**
**ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன**
**அகரம் வல்லெழுத்து அவைஅவண் நிலையா**
**னகரம் ஒற்றும் ஆவும் மாவும்.**

*இச்..... எனின், அவ்வீற்றுச் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு.....ற்று.*

(இ-ள்.) மாமரம் ஆகிய சொல்லும் ஆ என்னும் சொல்லும் மா என்னும் சொல்லும் ஆகிய அம்மூன்று பெயர்ச்சொல்லும், மேற்கூறிய யா முதலிய மூன்றனோடும் ஒரு தன்மையவாய் வல்லெழுத்துப் பெறாது மெல் லெழுத்துப் பெற்று முடிதலையுடைய. அவற்றுள் ஆவும் மாவும், முன்பெற்று நின்ற அகரமும் வல்லெழுத்தும் ஆகிய அவை அவ்விடத்து நிலைபெறாவாய், னகரம் ஒற்றாகப் பெற்றுமுடியும்[1] எ-று.

(உ-ம்.) மாஅங்கோடு செதிள் தோல் பூ - எனவும், ஆன்கோடு மான்கோடு செவி தலை புறம் - எனவும் வரும்.

'அறிய' (24) என்றதனான், சிறுபான்மை மாங்கோடு - என அகரம் இன்றியும் வரும்.

இனி 'அவண்' என்றதனான், காயாங்கோடு - ஆணாங் கோடு- நுணாங்கோடு - என்றாற்போலப் பிறவும் மெல் லெழுத்துப் பெறுதலும், அங்காக் கொண்டான் - இங்காக் கொண்டான் - உங்காக் கொண்டான் - எங்காக் கொண்டான்- என இவ்வீற்று ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர நின்ற இடைச்சொற்கள் வல்லெழுத்துப் பெறுதலும்,

ஆவின்கோடு - மாவின்கோடு - எனச்சிறுபான்மை இன் பெறுதலும், பெற்றவழி வல்லெழுத்து வீழ்வும் கொள்க.

'அவற்றோரன்ன' என்ற மாட்டேற்றான் பெற்று நின்றது மெல்லெழுத்து ஆகலின் [2], 'அகரம் வல்லெழுத்து அவை அவண்நிலையா' என்று ஓதற்பாற்றன்று எனின், மேல் 'ஊ என் ஒருபெயர் ஆவொடு சிவணும்' (67) என்றவழி, அம்மாட் டேற்றானே அதன் வல்லெழுத்து வீழ்வும் கொளல் வேண்டித் 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தானே மெல்லெழுத்தை வல்லெழுத்தாக ஓதினான் எனக்கொள்க. [3] *(29)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***232.*** *1) 121ஆம் சூத்திரவிதியான் 'இன்'சாரியையது இகரம் கெட நின்ற னகரம் வேறு; ஈண்டு 'னகரம்' ஒற்றும் என்ற னகரம் வேறு. ஆவினை மாவினை என வருவன, சாரியை இன்னின் இகரம் கெடவே, ஆனை மானை என வரும் என்று அச்சூத்திரம் விதித்தது. ஈண்டு 'னகரம் ஒற்றும்' என்றது னகர எழுத்துப்பேற்றினை. 'ஊ என் ஒருபெயர் ஆவொடு சிவணும்' (270) என்புழி, னகரஒற்றாகிய எழுத்துப்பேறே யன்றி 'இன்' சாரியையது இகரம் கெட்ட னகரவீறு அன்று. 'ஆனொற்று அகரமொடு' (233) என, 'ஆ' என்பதனோடு ஒற்றுமைப்பட்ட தற்கிழமைப் பொருட்டாக ஆன் வழங்கப் படுதல் காண்க. 'இன்' சாரியையது னகரத்திற்கு அத்தகு ஒற்றுமைப்பாடு இன்று.*

*2) 'வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே' (226) என்றதனாற் பெற்ற இயைபுவல்லெழுத்தை வீழ்க்க வேண்டா என்னும் கருத்திலேயே 'வல்லெழுத்து மிகினும்' (231) என்று இறந்தது காத்தல் நுதலினார் ஆசிரியர். ஆகலின் ' அவற்றோ*

ரன்ன' என்ற மாட்டேறு சிறப்புடைய மெல்லெழுத்திற்கே கொள்ளப்பட்டது.

3) சிறப்பில்லாத வல்லெழுத்து 'அவண் நிலையாது' என்பதனை 'அவற்றோ ரன்ன' என்பதன் கண்ணேயே அடக்காது, வேறாக எடுத்தோதியதன் பயன் அவ்வல் லெழுத்து வீழ்த்தல் வேண்டும் என்பதே. 'ஊ' ஆவொடு சிவணும் என்றவழி (270), னகரம் பெறுதலொடு, மெல் லெழுத்துப் பெறாது இயைபு வல்லெழுத்துப் பெறுத லொன்றே 267ஆம் சூத்திரத்தாற் பெறப்படுதலின், அவ் வல்லெழுத்து வீழ்வு விதிக்கப்பெற வேண்டும். அவ்வீழ்வே 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான்கொள்ளப்பட வேண்டியதாயிற்று. திரிந்தது : ஊ; திரிந்ததன் திரிபு: ஊன்; திரிந்ததன் திரிபு அது: ஊ எனக்கொள்க. 'அவற்றோரன்ன' என்ற மாட்டேற்றான் எய்துவன அகரமும் மெல்லெழுத்துமே யாதலின், 'அகரம் மெல்லெழுத்து அவையவண் நிலையா' என்று சூத்திரக்க வேண்டுமலர், ஊ என் பெயர்க்குப் பொது விதியான் எய்திய வல்லெழுத்தினை வீழ்க்க வேண்டியே 'அகரம் வல்லெழுத்து அவையண் நிலையா' என்றார்.

இளம்பூரணர் குறிப்பிட்ட இச்செய்தியை வேண்டா கூறலாக ரெட்டியார் முதலான பின்னுரையாளர் கருதுவர்.

### நச்சினார்க்கினியம்

### *231. மாமரக் கிளவியும் ஆவும் மாவும் முடியுமாறு*

**மாமரக் கிளவியும் ஆவும் மாவும்**
**ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன**
**அகரம் வல்லெழுத்து அவைஅவண் நிலையா**
**னகரம் ஒற்றும் ஆவும் மாவும்.**

இஃது எய்தியது விலக்கி எய்தாதது எய்துவித்தது. இம் மூன்றும் வல்லெழுத்துப்பெறா என்றலின் எய்தியது (225) விலக்கிற்று. மாமரத்துக்கு அகரமும் ங ஞ ந ம ஒற்றும், ஏனையவற்றிற்கு னகர ஒற்றும் எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) மாமரக்கிளவியும்......அன்ன - மாமரமாகிய சொல்லும் ஆ என்னும் சொல்லும் மா என்னும் சொல்லும் ஆகிய மூன்று பெயரும் யா மரம் முதலிய மூன்றோடும் ஒரு தன்மையவாய் மெல்லெழுத்துப் பெற்று முடியும்; ஆவும் மாவும் அகரம் அவண் நிலையா னகரம் ஒற்றும் - அவற்றுள், ஆவும் மாவும் புணர்ச்சியிடத்து அகரம் நிலைபெறாவாய் னகரஒற்றுப் பெற்று முடியும்; எனவே, அருத்தாபத்தியான்[1], மாமரத்திற்கு அகரம் நிலைபெற்று ஙஞநம ஒற்றும் பெறுமாயிற்று; அவை வல்லெழுத்து அவண் நிலையா - அம்மூன்று பெயரும் முற்கூறிய வல்லெழுத்துப் புணர்ச்சி யிடத்து நிலைபெறாவாய் வரும் எ-று.

'அவண் நிலையா' என்றதனை இரண்டிடத்தும் கூட்டுக.

(உ-ம்.) மாஅங்கோடு செதிள் தோல் பூ, ஆன்கோடு மான்கோடு செவி தலைபுறம் எனவரும்.

'மாமரக் கிளவியும் ஆவும் மாவும்.....அவற்றோரன்ன' என்று ஞாபகமாகக் கூறியவதனான்[2], மாங்கோடு என அகரமின்றியும் வரும்.

இனி, 'அவண்' என்றதனான், காயாங்கோடு நுணாங் கோடு ஆணாங்கோடு என்றாற்போலப் பிறவும் மெல் லெழுத்துப் பெறுதலும், அங்காக்கொண்டான் இங்காக் கொண்டான் உங்காக் கொண்டான் எங்காக் கொண்டான் என இவ்வீற்றுள் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கள்[3] வல்லெழுத்துப் பெறுதலும், ஆவின் கோடு மாவின் கோடு எனச் சிறுபான்மை உருபிற்குச் சென்ற சாரியை ஆகிய இன் பெறுதலும், பெற்றுழி வல்லெழுத்து வீழ்வும் கொள்க.

மாட்டேற்றான் மூன்று பெயரும் வல்லெழுத்துப் பெறாது மெல்லெழுத்துப் பெற்றவாறும், மாமரம் அகரம் பெற்றவாறும்[4] இச்சூத்திரத்தின் கண்ணழிவான்[5] உணர்க.(29)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*231. 1, 2)* சூ. 215 இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

*3)* இந்நான்கு இடைச்சொற்களும், அவ்விடத்து இவ்விடத்து உவ்விடத்து எவ்விடத்து என ஏழன் இடப் பொருள்பட நின்று வினைமுற்றினை விசேடித்தன.

*4)* 'அழிதக, மாஅந் தளிர்கொண்ட போழ்தினான்' (கலி. 143 : 27)

*5)* கண்ணழிவு - பதப்பொருள்.

***சாத்திரியார் உரைக்குறிப்பு***

***232.*** **மாமரக் கிளவியும்........ஆவும் மாவும்.**

'ஆவும் மாவும் அகரம் அவண் நிலையா னகரம் ஒற்றும்; அவை வல்லெழுத்து அவண் நிலையா' என அந்நுவயித்து உரை கூறினார் நச்சினார்க்கினியர். இது சூத்திரப்போக்கிற்கு நேரிதன்று என்பது வெளிப்படை.

'அவண்' என்றதனான் உரைகாரர் கொண்ட பொருள் ஏலாது. காயாங்கோடு - அங்காக்கொண்டான் - முதலிய வற்றைக் 'கிளந்த அல்ல' (483) என்னும் புறனடைச் சூத்திரத் தானும், இன்சாரியையை 'அ ஆ உ ஊ' (174) என்ற சூத்திரத்தானும், அவ்விடத்து வல்லெழுத்து வீழ்வை 'யரழ என்னும்' (48) என்ற சூத்திரத்தானும் கொள்ளல் தகும்.

நச்சினார்க்கினியத்தில் "எனவே அருத்தாபத்தியான் மாமரத்திற்கு அகரம் நிலைபெற்று ங ஞ ந ம ஒற்றும் பெறுமாயிற்று" என்று உளது. முதல் இரண்டடிகளானும் இவற்றைப் பெற்று ஆ, மா என்ற சொற்களுக்கு இவற்றை விலக்குதலும் காண்கின்றதனால், ஈண்டு அருத்தாபத்தியான் என்றது பொருந்தாது.

*232.* [உயிர்மயங்கியற்குத் தனியே புறனடையில்லை. 'உணரக் கூறிய' என்ற புள்ளி மயங்கியல் புறனடை புள்ளியீற்றுக்கே ஓதப்பட்டதாகக் கொண்டு, அதிகாரப் புறனடையான் முடித்தல் என்பது பெரிதும் சேய்மைத்தாம் எனக்கொண்ட உரைகாரர் இருவரும் அவ்வவ் ஈற்றின் கண்ணேயே இலேசான் பலவற்றை முடித்துக்காட்டுதலை மரபாகக்கொண்டனர். ஆசிரியர் காலத்து வழங்காத முடிபுகளையும் அன்னோர் அவ்வாறு காட்டியமை இக்கால உரையாளரால் ஏற்கப்படாமை வெளிப்படை.

நச்சினார்க்கினியர், தாம் சூத்திரத்தைக் கண்ணழிவு செய்தமைக்கு ஏற்ப, அருத்தாபத்தியான் கொண்ட பொருள் ஏற்புடைத்தே. உரையாசிரியர் இருவரும் அருத்தாபத்தியைப் பயன்படுத்துமாறு முன்னரே (215) குறிப்புரையில் விளக்கப்பட்டது.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*231.* **மாமரக் கிளவியும்.............ஆவும் மாவும்.**

'ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன' என்ற மாட்டேற்றால், யா பிடா தளா என்னும் பெயர்கள் அகரம் பெற்று மெல்லெழுத்து மிக்கும் வல்லெழுத்து மிக்கும் முடிந்தாற் போல, மரப்பெயராகிய மா என்பதும் ஆ - மா- என்பனவும் அகரம் பெற்று மெல்லெழுத்து மிக்கும் வல்லெழுத்து மிக்கும் முடிவான் செல்லுமாகலின், 'அகரம் வல்லெழுத்து அவையவண் நிலையா' என்று விளக்கினார். அதனால், மா (மரம்) முதலிய மூன்று பெயர்களும் அகரம் பெறாமல், மெல்லெழுத்து மிக்கு முடியப்பெறும்; ஆயின் ஈற்றடியினால், ஆ மா என்னும் இரண்டு பெயர்களும் னகர வொற்றோடு நிற்கும் என்றதனால், மா என்னும் பெயரொன்றே மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறாயிற்று.

'னகரம் தோன்றும்' என்னாது 'னகரம் ஒற்றும்' என்றதனால், னகரமெய் அவ்விரண்டு மொழியிலும்

உறுப்புப் போல் நிற்கும் என்றதாயிற்று. அதனால் ஆசிரியர் 'ஆன்ஒற்று அகரமொடு' (232) என்றும், 'ஆன்முன் வரூஉம்' (233) என்றும் ஆண்டுள்ளார்.

'அகரம் வல்லெழுத்து அவை யவண் நிலையா' என்றது ஆவும் மாவும் ஆகிய இரண்டற்கே என்று கொள்ளின், மாமரக் கிளவி அகரம் பெற்று வல்லெழுத்து மிக்கும் முடிதல் வேண்டும். அது வல்லெழுத்துப் பெறுதல் இன்மையின், 'அகரம் வல்லெழுத்து அவை யவண் நிலையா' என்றது மூன்று பெயர்கட்கும் பொதுவாகக் கொண்டு உரைகூறுதல் அமைவுடைத்தாம்.

இனி, உரையாசிரியர் 'அவற்றோரன்ன' என்ற மாட்டேற்றால் பெற்று நின்றது மெல்லெழுத்தாகலின், 'அகரம் வல்லெழுத்தவையவண் நிலையா' என்று ஓதற்பாலதன்று எனச் சங்கித்து, அதற்குச் சமாதானம் கூறினார். அவர் சங்கித்தவாறு மாட்டேற்றால் பெறுவது மெல்லெழுத்து மாத்திரம் அன்று; யாமரக்கிளவி முதலியவற்றிற்கு 'வல்லெழுத்து மிகினும் மானமில்லை' என்று விதித்ததனால், வல்லெழுத்துப் பேறும் எய்தும். அது கருதியே ஆசிரியர் 'வல்லெழுத்தவையவண் நிலையா' என்று விலக்குவா ராயினார்.

உரையாளர்கள் 'அவண்' என்றதனான், காயாங்கோடு முதலிய பலவற்றை ஈண்டமைந்தனர். அவை அச்சொல்லாற் றலால் போதராமையின் ஈண்டுக்கோடல் அமையாது.

**231.** [இவ்வுரைகாரர், உரையாசிரியர் கூற்றை யெடுத்து விளக்குமிடத்தே, சாத்திரியார் கருத்தினை மேற்கொள்கிறார்.

உரையாசிரின்மார் மிகையாகக் கொண்ட 'அவண்' என்ற சொற்கு, காயாங்கோடு முதலியவற்றை அமைக்கும் ஆற்றலின்று என்று ரெட்டியார் குறிப்பிட்டார். மிகைச்சொல் இயல்புபற்றி முன்னரே (226) குறிப்பிட்டுள்ளமை காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*231.* **மாமரக் கிளவியும்............ஆவும் மாவும்.**

'மாமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே, ஆவும் மாவும் னகரம் ஒற்றும்' எனச் சுருங்கக் ஓதாது, இங்ஙனம் கூறியது ஞாபகம் கூறல் என்னும் உத்தியாம். அதனான், மாமரக்கிளவி சிறுபான்மை மாஅங்கோடு - மாஅம்பழம் - என அகரம் - பெறுதலும், காயாங்கோடு - நுணாங்கோடு - என ஈரெழுத் தொருமொழிகளுள் சில மெல்லெழுத்துப் பெறுதலும், 'ஆபெயர்த்துத் தருதலும்' (புறத். 5) என னகரம் ஒற்றாது வருதலும், பிறவும் வேறுபட வருவனவும் அமைத்துக் கொள்க.

## இளம்பூரணம்

## *233. 'ஆ' எனும் பெயர்க்கு னகர ஒற்றோடு அகரச் சாரியையும் இயைதல்*

**ஆன்ஒற்று அகரமொடும் நிலைஇடன் உடைத்தே.**

இச்......எனின், அவற்றுள் ஆன் என்றதற்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு.....ற்று.

(இ-ள்.) முன்பு பெற்று நின்ற ஆ என்னும் சொல்லினது னகர ஒற்று அகரத்தோடும் கூடிநிற்கும் இடனுடைத்து எ-று.

'இடனுடைத்து' என்றதனான், வன்கணம் ஒழிந்த கணத்து இம்முடிபு எனக்கொள்க.

(உ-ம்.) 'ஆனநெய் தெளித்து நானம் நீவி' என வரும்.

'அகரமொடும்' என்ற உம்மையான் அகரமின்றி வருதலே பெரும்பான்மை எனக்கொள்க. *(30)*

### நச்சினார்க்கினியம்

## *232. மேலைவிதியான் முடிந்த ஆன் அகரமும் பெறுதல்*

**ஆன்ஒற்று அகரமொடும் நிலையிடன் உடைத்தே.**

இஃது ஆன் என்பதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

*(இ-ள்.)* ஆன்ஒற்று - ஆ என்னும் சொல் முன்னர்ப் பெற்றுநின்ற னகரஒற்று; அகரமொடு நிலையிடனும் உடைத்து- அகரத்தோடு கூடி நிற்கும் இடனும் உடைத்து எ-று.

'இடனுடைத்து' என்றவதனான், வன்கணம் ஒழிந்த கணத்தது இம்முடிபு எனக்கொள்க.

*(உ-ம்.)* 'ஆனநெய் தெளிந்து நானம் நீவி' 'ஆனமணி கறங்கும் கானத் தாங்கண்' என வரும்.

'அகரமொடும்' என்று உம்மையான் அகரமின்றி வருதலே பெரும்பான்மை. ஆனெய் தெளித்து, ஆன்மணி, ஆன்வால் என வரும். *(30)*

### பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***232.*** **ஆன் ஒற்று அகரமுடன் நிலையிடன் உடைத்தே.**

'அகரமொடு' என்பது பிழைபட அச்சிடப்பட்டுளது போலும்.

### இளம்பூரணம்

## *234. அப்பெயர் முன்னர் ஈகாரபகரம் புணருமாறு*

**ஆன்முன் வருஉம் ஈகார பகரம்**
**தான்மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே.**

இச்....எனின், ஆன் என்பதற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) ஆன் என்னும் சொல்முன்னர் வருமொழியாய் வருகின்ற ஈகாரத்தொடு கூடிய பகரமாகிய மொழி, அப்பகர மாகிய தான் மிகத் தோன்றி, அவ்ஈகாரம் இகரமாகக் குறுகி முடிதலையும் உடைத்து எ-று.

'தோன்றி' என்றதனான், நிலைமொழிப்பேறாகிய னகரஒற்றின் கேடு கொள்க.

(வருமாறு:) ஆப்பி என வரும்.

உம்மையான்[1], 'ஆப்பீ' என்பதே பெரும்பான்மை எனக்கொள்க. (31)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***234.*** 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான் 'ஆ' ஆன் என நின்றது என்று உரையாசிரியன்மார் இருவரும் கொண்டிலாமை வியப்பாகவுள்ளது.

குறுகலும் : உம்மை எதிர்மறை.

**நச்சினார்க்கினியம்**

***233. 'ஆன்'முன் பகரஈகாரம் முடியுமாறு***

**ஆன்முன்[1] வரூஉம் ஈகாரம் பகாரம்**
**தான்மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே.**

இஃது ஆன் என்பதற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி கூறுகின்றது.

(இ-ள்.) ஆன்முன்.....பகரம் - ஆன் என்னும் சொல் முன்னர் வருகின்ற ஈகாரத்தோடு கூடிய பகரமாகிய மொழி; தான் மிக - அப்பகரமாகிய தான் மிக்கு நிற்ப; தோன்றி - நிலைமொழி னகரத்திற்குக் கேடு தோன்றி; குறுகலும் உரித்து- ஈகாரம் இகரமாகக் குறுகி நிற்றலும் உரித்து எ-று.

(வருமாறு:) ஆப்பி[2] என வரும்.

உம்மை எதிர்மறை யாகலான் ஆப்பீ என்றுமாம். (31)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**233.** 1) 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான், 'ஆன்' 'ஆ' வினைக் குறித்து நின்றது. திரிந்தது: ஆ; அதன் திரிபு: ஆன்; அதன் திரிபு அது : ஆ.

2) ஆப்பி - கோமயம்

'மெழுகும் ஆப்பிகண் கலுழ்நீ ரானே' (புறநா. 249)

'ஆப்பிநீர் எங்கும் தெளித்து' (ஆகாரக். 46)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**234.** ஆன்முன் வரூஉம்.........குறுகலும் உரித்தே.

'ஆன்முன்' என்றதற்கு உரைகாரர்கள் ஆன் என்னும் சொல் முன்னர் எனப்பொருள் கூறினர். ஆ+முன் (ஆவினது முன்) என்றது 'ஆன்முன்' என்று ஆகுமாதலின், அவர்தம் கூற்றுப் பொருந்தாது.

'ஆனநெய் தெளித்து' 'ஆன்மேல்' (புறநா. 259) என்ற இவ்விலக்கியங்களில் மெல்லொற்றின் முன்னரும் னகரம் வந்தமையான், மெல்லெழுத்தின் முன்னரும் னகரம் வரும் என்றதற்கு 'ஆன்முன்' என்றதே ஞாபகமாகும் எனக் கொள்ளல் தகும். அன்றியும், ஆன் என்பதே நிலைமொழி யாயின் அதனைப் புள்ளிமயங்கியலில் ஆசிரியர் ஓதியிருப்பார்.

**234.** [னகர ஒற்று, ஆ என்னும் சொற்கண் உறுப்புப் போலப் பிரிவின்றி நிற்றலின், ஆசிரியர் 'ஆனொற்று அகரமொடு' (233) எனவும், 'ஆன்முன் வரூஉம்' எனவும்

ஓதுவாராயினார். னகரச் சாரியையோடு ஆ வழங்கப்படினும், 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான் ஆன் என்பது ஆ என்பதனையே குறிக்கும். இந்நயத்தைப் பிற சூத்திரத்துள் *(232இள. 458 நச்.)* பயன்கொண்ட உரையாசிரியன்மார் இருவரும், ஈண்டு அதனைக் குறித்திலர்; னகரக்கேட்டைப் பிறவாற்றான் கொண்டனர்.

ஆன் நிலைமொழி யன்மைக்கு இவர் குறிப்பிட்ட காரணத்தைப் பாலசுந்தரமும் வழிமொழிந்தார்.]

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***233.*** **ஆன்முன் வரூஉம்.....குறுகலும் உரித்தே.**

'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தால், ஆ என்பதனையே ஆன் என்றதனாற் குறித்தார். [இந்நயத்தால் 'மூன்றன் முதனிலை' *(457)* என்னும் சூத்திரத்தும் குறித்தார்.] இவ்வாறன்றித் 'தோன்றி' என்றதனால் னகரக்கேடு கொண்டனர் உரையாளர்.

***233.*** [இவர் குறித்தவாறு 'திரிந்ததன் திரிபு அது' என்ற நயத்தான் 'ஆன்' என்பதனை 'ஆ' எனக்கொண்டு உரை கூறியிருத்தல் வேண்டும். உரையாளர் இவ்விடத்தே சோர்வு பட்டனர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***233.*** **ஆன்முன் வரூஉம்......குறுகலும் உரித்தே.**

'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான், ஆ என்னாது 'ஆன்' என்றார். அதிகாரமரபை ஓராமல் உரையாளர் 'தோன்றி' என்பதனான் நிலைமொழி னகரக்கேடு கொள்க என்பர். னகர ஈறாயின் புள்ளிமயங்கியலுள் ஓதுதலின்றி ஈண்டைக்கு ஏலாது என்க. மேலும் அவர், உம்மையான் ஆன்பீ எனவும் வரும் என்பர். ஆண்டுத் 'தான் மிகத் தோன்றி' என்றதனான் மிக்க ஒற்று நின்று வற்றுதல் காண்க.

*233.* [உம்மை எதிர்மறை யாகலின் ஆப்பீ என்றுமாம் என்பதே நச்சினார்க்கினியர் உரை. ஆன்பீ என்றது அச்சுப் பிழையே. னகரக் கேட்டைத் 'தோன்றி' என்றதனாற் கொண்டார் இளம்பூரணர். அவருரையுள்ளும் ஆன்பீ எனக் குறிக்கப்பட்டது அச்சுப்பிழையே.]

**இளம்பூரணம்**

## *235. ஆகார ஈற்றுச் சிலசொற்கள் செய்யுட்கண் முடியுமாறு*

**குறியதன் இறுதிச் சினைகெட உகரம்**
**அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.**

இச்....எனின், ஆ ஈற்றுள் சிலவற்றிற்குச் செய்யுள் முடிவு கூறு....ற்று.

*(இ-ள்.)* குறியதன் இறுதிக்கண் நின்ற ஆகாரத்தினது சினையாகிய அகர மாத்திரை கெட [1], ஆண்டு உகரம் அறிய வருதல் செய்யுளிடத்து உரித்து எ-று.

*(உ-ம்.)* 'இறவுப்புறத் தன்ன [2] 'பிணர்படு தடவுமுதல்' *(நற்.19)* என வரும்.

'பிணவுநாய் [3] முடுக்கிய' *(மலைபடு. 176)* என்றாற் போல வரும் அல்வழிமுடிபு 'கிளந்த அல்ல' *(குற். 77)* என்னும் புறனடையது எனக்கொள்க. *(32)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*235. 1)* மாத்திரை வகையால் இரண்டு குற்றுயிர் ஒரு நெட்டுயிராம் ஆதலின், ஆகாரத்தினது சினை ஓர் அகரமே யாயிற்று.

*2)* இறாமீனது புறத்தைத் தீண்டினாற் போன்ற

*3)* பெண்விலங்கு ஆகிய நாய் என இருபெயரொட்டு.

**நச்சினார்க்கினியம்**

## 234. இவ்வீற்றுள் சில செய்யுட்கண் முடியுமாறு

**குறியதன் இறுதிச் சினை[1]கெட உகரம்**
**அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.**

இஃது ஆகார ஈற்றுள் சிலவற்றிற்குச் செய்யுள் முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) குறியதன்.....கெட - குற்றெழுத்தின் இறுதிக் கண் நின்ற ஆகாரத்தினது இரண்டு மாத்திரையின் ஒரு மாத்திரை கெட்டு அஃது அகரமாய் நிற்க; உகரம்....உரித்து - ஆண்டு உகரம் புலப்பட வருதல் செய்யுளிடத்து உரித்து எ-று.

(உ-ம்.)

'இறவுப்புறத் தன்ன பிணர்ப்படு தடவுமுதற்
சுறவுக் கோட் டன்ன முள்ளிலைத் தாழை' (நற்.19)

'புறவுப் புறத் தன்ன புன்கால் உகாஅய்' (குறுந். 274) என வரும்.

உகரம் வகுப்பவே, நிலைமொழி அகரம் (226) கெட்டது. அதிகார வல்லெழுத்து (225) விலக்காமையின் நின்று முடிந்தது. இனி நிலைமொழித் தொழில் வரையாது கூறினமையின் இயல்புகணத்திற்கும் இவ்விதி எய்திற் றாகலின், ஆண்டு வரும் உகரம் [2] புலப்பட வாராமையும் உணர்க.

சுறவுயர் கொடி அரவுயர்கொடி முழவுறழ்தோள் என இவை குறியதன் இறுதிச் சினை கெட்டு, வருமொழி உயிர் முதல் மொழியாய் வருதலின் வகர உடம்படுமெய் பெற்று உகரம் பெறாது முடிந்தன [3]. இவற்றிற்கு இரண்டாம் உருபு விரிக்க; மூன்றாவதும் ஆம் [4]. (32)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*234.* 1) சொல்லிறுதி நெட்டெழுத்தினது ஒரு மாத்திரை யாகிய அகரச்சினை நெட்டெழுத்தினது சினை உயிர்க்குறிலாமாறு போல, குற்றெழுத்தாகிய சினை நீண்டு நெட்டுயிராதலைச் 'சுட்டுச் சினை நீடிய' (159:3) என்னும் தொடரால் குறித்தார்.

2) இவ்வுகரம் முற்றியலுகரம் என்க. உயிர்க்கணம் வருவழி முற்றுகரம் கெடும். (குற்றுகரமாயின் கெடாது வருமுயிர் ஏற இடங்கொடுக்கும் என்பர்.)

சுறா > சுற > சுறவு; சுறவு + உயர்கொடி > சுறவ் + உயர்கொடி = சுறவுயர் கொடி. (சூ. 138) இம்முடிபினைக் கொள்ளாது, நச்சினார்க்கினியர் உயிர் வருவழி உகரம் புலப்பட வாராது என்றார்; நிலைமொழி ஆகாரம் ஒரு மாத்திரை கெட்டு அகரவீறாய் நிற்ப, உயிர் வருவழி வகர உடம்படுமெய் தோன்றி (140) முடியும் என்றவாறு.

சுறா > சுற ; சுற + உயர்கொடி > சுற+வ்+உயர்கொடி= சுறவுயர்கொடி. சூ. 483 உரைக்குறிப்புக்[4] காண்க.

3) சுறவினை(சுறாவுருவினை எழுதி) உயர்ந்த கொடி;
கறாவுருவத்தோடு உயர்ந்த கொடி.

**வேங்கடராஜுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*234.* **குறியதன் இறுதிச்.......செய்யுளுள் உரித்தே.**

இச்சூத்திரத்தில் 'இறுதிச்சினை' என்றது ஈற்றெழுத் தாகிய நெட்டெழுத்தின் ஒருகூற்றை. இரண்டு குற்றெழுத்து ஒரு நெட்டெழுத்து ஆதலின், நெட்டெழுத்திற்குக் குற்றெழுத்துச் சினையாயிற்று.

நெட்டெழுத்துக் குற்றெழுத்தாதலைச் 'சினைகெட என்றாற்போல, குற்றெழுத்து நெட்டெழுத்தாதலைச் சினை நீண்டது என்பர். 'சுட்டுச்சினை நீடிய மென்தொடர்மொழி' (427) என்றமை காண்க.

***234.*** ['சினை'யெழுத்துப் பற்றிய இவராராய்ச்சி விழுமியது.]

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***234.*** **குறியதன் இறுதிச்..... செய்யுளுள் உரித்தே.**

ஒன்றற்குச் சினையாவதே பிறிதொன்றற்கு முதலாக வருமாதலின், மொழிக்கு உறுப்பாகி நிற்கும் எழுத்து அச்சொல்லுக்குச் சினையாதலும், அவ்வெழுத்தின் மாத்திரையளவும் ஒலிக்கூறுகளும் எழுத்திற்குச் சினை யாதலும் பெறப்படும்.

மியா என்னும் சொல்லின் உறுப்பாக நிற்கும் யகர ஆகாரமாகிய உயிர்மெய் எழுத்துச் சினையெனப்பட்டது (மொழி. 1) ; தொகை. 17, குற்றிய. 22 என்னும் சூத்திரங்களில் சுட்டெழுத்தின் மாத்திரையளவு சினையெனப்பட்டது; றகர மெய்யினை ஊர்ந்து நின்ற குற்றியலுகரம் சினையெனப் பட்டது (குற்றிய. 68). இவ்வாறே மொழியிடையிலும் இறுதியிலும் ஐகாரவெழுத்தின் போலியாக வரும் 'அய்' என்பதும் மொழியினது உறுப்பாக வருதலின் 'ஐயென் நெடுஞ்சினை' எனப்பட்டது. அம்மரபானே, ஈண்டும் குற்றெழுத்தின் இறுதி நின்ற ஆகாரத்தின் மாத்திரையுள் ஒரு கூற்றினைச் 'சினை' என்று உணர்த்தினார் என அறிக.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***234.*** **குறியதன் இறுதிச்......செய்யுளுள் உரித்தே.**

ஒன்றற்குச் சினையாவதே பிறிதொன்றற்கு முதலாக வருமாதலின், மொழிக்கு உறுப்பாகி நிற்கும் எழுத்து அச்சொல்லுக்குச் சினையாதலும், அவ்வெழுத்தின் மாத்திரையளவும் ஒலிக் கூறுகளும் எழுத்திற்குச் சினையாதலும் பெறப்படும்.

'மியா' என்னும் சொல்லின் உறுப்பாக நிற்கும் யகர ஆகாரமாகிய உயிர்மெய்யெழுத்துச் சினையெனப்பட்டது. (மொழி. 1) தொகை. 17, குற்றிய. 22 என்னும் சூத்திரங்களில் சுட்டெழுத்தின் மாத்திரையளவு சினையெனப்பட்டது. றகர மெய்யினை ஊர்ந்து நின்ற குற்றியலுகரம் சினையெனப் பட்டது (குற்றிய. 68). இவ்வாறே மொழியிடையிலும் இறுதியிலும் ஐகாரவெழுத்தின் போலியாக வரும் 'அய்' என்பதும் மொழியினது உறுப்பாக வருதலின், 'ஐயென் நெடுஞ்சினை' எனப்பட்டது. அம்மரபானே, ஈண்டும் குற்றெழுத்தின் இறுதி நின்ற ஆகாரத்தின் மாத்திரையுள் ஒரு கூற்றினைச் சினையென்று உணர்த்தினார் என அறிக.

## இளம்பூரணம்

### *236. இகரஈற்றுப் பெயர்க்கு வேற்றுமை முடிபு*

**இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.**

இச்....எனின், இகரஈற்றுப் பெயர்க்கு அல்வழிமுடிபு தொகைமரபினுள்[1] கூறி நின்றமையின், அதன் வேற்றுமை முடிபு கூறு......ற்று.

(இ-ள்.) இகரஈற்றுப் பெயர்ச்சொல் முன்னர், அதிகாரத் தான் க ச த ப முதல்மொழி வந்தவழி, வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின், தமக்குப் பொருந்தின வல்லெழுத்துக்கள் மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) கிளிக்கால் சிறகு தலை புறம் - என வரும். (33)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***236.*** 1) இகரவீற்றோடு ஐகாரத்திற்கு அல்வழி முடிபு 159, 160ஆம் சூத்திரத்தில் இடம்பெற்றுள.

## நச்சினார்க்கினியம்

### *235. இகரஈற்றுப் பெயர் வேற்றுமைக்கண் வலிமிகல்*

**இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.**

இஃது இகர ஈற்றுப் பெயர்க்கு அல்வழி முடிபு தொகைமரபிற் கூறி *(158)*, ஈண்டு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* இகர.....முன்னர் - இகர ஈற்றுப் பெயர்ச்சொல் முன்னர் அதிகாரத்தால் க ச த ப முதல்மொழி வந்துழி; வேற்றுமை.......மிகும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சி யாயின் தமக்குப் பொருந்தின வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* கிளிக்கால் சிறகு தலை புறம் என வரும். புலி நரி என்றாற் போல்வனவும் அவை.

இனிக் கிளி குறுமை, கிளிக்குறுமை எனக் குணம் பற்றி வந்த உறழ்ச்சி முடிபு மேல் 'வல்லெழுத்து மிகினும்' *(246)* என்னும் சூத்திரத்து 'ஒல்வழி அறிதல்' என்பதனாற் கொள்க. *(33)*

## இளம்பூரணம்

### *237. இவ்வீற்று இடைச்சொற்கள் சிலவும் வினை யெச்சமும் முடியுமாறு*

**இனிஅணி என்னும் காலையும் இடனும்**
**வினையெஞ்சு கிளவியும் சுட்டும் அன்ன.**

இச்.....எனின், இவ்வீற்றுள் சில இடைச்சொல்லும் வினைச்சொல்லும் முடியுமாறு கூறு....ற்று.

(இ-ள்.) இனி என்றும் அணி என்றும் காலத்தையும் இடத்தையும் உணரநின்ற இடைச்சொல்லும், இவ் இகரஈற்று வினையெச்சமாகிய சொல்லும், இவ்வீற்றுச் சுட்டாகிய இடைச்சொல்லும், மேற்கூறியவாறே வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) இனிக் கொண்டான், அணிக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவும்,[1]

ஓடிக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவும், இக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் - எனவும் வரும். *(34)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*237.* 1) வேற்றுமைப்பொருள்பட வரினும், இனிக் கொண்டான் முதலியவை இடைச்சொற்றொடராதலின் அல்வழி முடிபே என்க.

அங்கட் கொண்டான் ஆங்கட் கொண்டான் அவட் கொண்டான் முதலாக இடைச்சொல் திரிந்து முடியும் முடிபுகளும் *(308 உரை)* அல்வழியாம்.

**நச்சினார்க்கினியம்**

## *236. இவ்வீற்று இடைச்சொற்களும் வினையெச்சமும் அன்னவாதல்*

**இனிஅணி என்னும் காலையும் இடனும்**
**வினையெஞ்சு கிளவியும் சுட்டும் அன்ன.**

இஃது எய்தாதது எய்துவித்தது, இவ்வீற்று இடைச் சொற்கும் வினைச்சொற்கும் முடிபு கூறுதலின்.

(இ-ள்.) இனிஅணி.....இடனும் - இனி என்றும் அணி என்றும் சொல்லப்படுகின்ற காலத்தையும் இடத்தையும் உணரநின்ற இடைச்சொல்லும்; வினையெஞ்சு கிளவியும் -

இவ்வீற்று வினையெச்சமாகிய சொல்லும்; சுட்டும் இவ்வீற்றுச் சுட்டாகிய இடைச்சொல்லும்; அன்ன முற்கூறியவாறே வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* இனிக்கொண்டான் அணிக்கொண்டான் எனவும், தேடிக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், இக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும் வரும்.

இவ்விடைச்சொல் மூன்றும், இப்பொழுது கொண்டான்- அணிய இடத்தே கொண்டான் - இவ்விடத்துக் கொற்றன் - என உருபின் பொருள்பட வந்த வேற்றுமை யாதலின்[1] வேறோதி முடித்தார். *(34)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***236.*** *1)* ஏழன் உருபின் பொருள்பட வந்த இடைச் சொற்களை முன்னரும் *231 (3)* உரைக்குறிப்பிற் காண்க. நிலைமொழியிறுதிக்கண் உருபு தொக அவ்வேற்றுமைப் பொருள்பட நிகழும் பொருட் புணர்ச்சியதிகாரத்தே, இவ்வாறு காலமும் இடமும் ஆகிய ஏழனுருபின் பொருள்பட வரும் இடைச்சொற்கள் நிறுத்த சொல்லாக நிகழுமிடங்கள் *(159, 334, 398-உரை)* ஆசிரியர் குறிப்பிடுதல் பின்னரும் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***236.*** **இனி, அணி என்னும் ..........சுட்டும் அன்ன.**

இச்சூத்திரத்துள் வினையொழிந்த இடைச்சொல் மூன்றும் உருபின் பொருள்பட வந்த வேற்றுமையாதலின், வேறோதி முடித்தார் என்பார் நச்சினார்க்கினியர். அல்வழியும் வேற்றுமையும் ஒரு சூத்திரத்துள் ஒருங்கு விதித்தல் இலக்கண மரபு அன்று என்க.

***236.*** [நச்சினார்க்கினியர் உரையுள் 'வேற்றுமை' என்பது வேறுபாடு என்னும் பொருட்டு வினையொழிந்த

இடைச்சொல் மூன்றும் காலமும் இடமுமாகிய ஏழனுருபின் பொருள்பட வந்த வேறுபாடுடையன - என்பதே அவ்வுரைப் பொருள். அதனை 'வேற்றுமைப் புணர்நிலை' யெனத் திரிபுபட இவ்வுரைகாரர் உணர்ந்தார் போலும். இம்மூன்றும் வருமொழியொடு கூடியவழி இடைச்சொற்றொடராம்.]

## இளம்பூரணம்

### 238. 'இன்றி' செய்யுட்கண் முடியுமாறு

**இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி**
**நின்ற இகரம் உகரம் ஆதல்**
**தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே.**

இச்......எனின், இவ்வீற்றுள் வினையெச்சக் குறிப்பினுள் ஒன்றற்குச் செய்யுள் முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* இன்றி என்று சொல்லப்படும் வினையெச்சத்து இறுதிக்கண் நின்ற இகரம், உகரமாய்த் திரிந்து முடிதல், பழக நடந்த கூற்றையுடைய செய்யுளிடத்து உரித்து எ-று.

*(உ-ம்.)* 'உப்பின்று புற்கை உண்கமா கொற்கை யோனே' என வரும்.

*'நின்ற'* என்றதனான், முன் பெற்று நின்ற[1] வல்லெழுத்து வீழ்க்க.

'தொன்றியல் மருங்கு' என்றதனான், *'அன்றி'* என்பதும் செய்யுளிடத்து உகரமாய்த் திரிந்துமுடியும் எனக்கொள்க.

*(உ-ம்.)* 'நாளன்று போகிப் புள்ளிடைத் தட்ப' *(புறநா.124)* என வரும். *(35)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**238.** 1) மேலைச்சூத்திரத்து 'வினையெஞ்சு கிளவி' பெற்று நின்றது.

**நச்சினார்க்கினியம்**

## *237. 'இன்றி'யது இறுதி இகரம் உகரமாய்த் திரியும் செய்யுள்முடிபு*

**இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி**
**நின்ற இகரம் உகரம் ஆதல்**
**தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே.**

இஃது இவ்வீற்று வினையெச்சத்துள் ஒன்றதற்குச் செய்யுள் முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* இன்றி....ஆதல் - இன்றி என்று சொல்லப்படும் வினையெச்சக்குறிப்பின் இறுதிக்கண் நின்ற இகரம் உகரமாகத் திரிந்து முடிதல்; தொன்றியல்.....உரித்து - பழக நடந்த கூற்றையுடைய செய்யுளுள் உரித்து எ-று.

*(உ-ம்.)* 'உப்பின்று புற்கை உண்கமா கொற்கை யோனே'.

'நின்ற' என்றதனான், வினையெச்சத்திற்கு முன் எய்திய வல்லெழுத்து (236) வீழ்க்க.

'தொன்றியல் மருங்கின்' என்றதனான், அன்றி என்பதூஉம் செய்யுளில் இம்முடிபு எய்துதல் கொள்க.

*(உ-ம்)* 'இடனன்று துறத்தல் வல்லி யோரே'
'வாளன்று பிடியா வன்கண் ஆடவர்'
'நாளன்று போகி' *(புறநா. 124)*

முற்றியலிகரம் திரிந்து குற்றியலுகரமாய் நின்றது. *(35)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**237.** வினையெச்சமே வினைமுற்றாய்த் திரியும் என்னும் நச்சினார்க்கினியர் கொள்கையைப் பின்பற்றுபவர்

இலக்கணக்கொத்து நூலார். 'அன்றி இன்றி' என்னும் நூற்பாவில் (173) அவ்வினையெச்சங்கள் அன்று இன்று என முற்றாய்த் திரிதலை ஏற்றுக்கொண்ட நன்னூலார், வினையியலின் இறுதியில் வினையெச்சம் வினைமுற்றாகும் என்று முன்பு கருதியதற்கு மாறாக 'வினைமுற்றே வினையெச்சமாகலும்' என்றார். இ.கொ.சூ. 87 (351)

இன்றி 'இன்று' எனவும், அன்றி 'அன்று' எனவும் முற்றியலிகரம் குற்றியலுகரமாகத் திரிந்து வந்த சொற்கள் வினையெச்சப் பொருளவாய் நிகழ்தல் காண்க. நன்னூலார் முற்றாகத் திரியும் என்றமை தொல்காப்பியனார் விதித்த நெறிக்கு ஏலாது காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**238. இன்றி என்னும் ........ செய்யுளுள் உரித்தே.**

'முற்றியலிகரம் திரிந்து குற்றியலுகரமாய் நின்றது' எனக்கூறினர் நச்சினார்க்கினியர். ஆசிரியர் குற்றியலுகரம் எனக் கூறாது உகரம் என்றே கூறினமையான் அது முற்றியலுகர மாகவே அவர்காலத்து ஒலிக்கப்பட்டது என்றே கொள்ளல் தகும்.

**238.** [நச்சினார்க்கினியர் கொள்கை 'இன்று' என்பதன் கண் ஈறு குற்றியலுகரமே என்பது. 'கண்இன்று பெயர்ப்பினும்' (கற்.9.), 'காய்வின் றவன்வயின் பொருத்தற் கண்ணும்' (ஷை 10) என ஆசிரியரால் இச்சொல் எடுத்தாளப் பட்டுள்ளது. குற்றியலுகரத்தை உகரம் என்றே ஆசிரியர் குறிப்பிடுதல் 'ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்' (குற். 1) என்புழிக் காண்க. அவ்வியல் 3, 27 ஆம் சூத்திரங்களிலும் உகரம் எனக் குற்றியலுகரம் குறிக்கப்பட்டமையும் காண்க. புணர்மொழிக்கண் வரும் குற்றுகரம் அரைமாத்திரை பெறும் என்ற நச்சினார்க்கினியர் கொள்கையை (409) இவரும் உடன்பட்டார்.

எனவே, சாத்திரியார் கூற்று ஏலாமை யறிக].

## இளம்பூரணம்

### *239. இகரச்சுட்டு இயல்புகணத்தொடு முடியுமாறு*

**சுட்டின் இயற்கை முன்கிளந் தற்றே.**

இச்.....எனின், இவ்வீற்றுச் சுட்டுப்பெயர் இயல்பு கணத்தொடு முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* இகர ஈற்றுச் சுட்டினது இயல்பு, வன்கணம் வரும்வழி, முன் அகரஈற்றுச் சுட்டிற்குச் சொல்லப்பட்ட தன்மைத்தாய், இக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் - எனவும்*(34)*,

மென்கணம் வருவழி அம்மெல்லெழுத்து மிக்கும், இடைக்கணம் வருவழியும் உயிர்க்கணம் வருவழியும் வகரம் பெற்றும், செய்யுட் கண் வகரம் கெட்டுச் சுட்டு நீண்டும் முடியும் எ-று.

*(உ-ம்.)* இஞ்ஞானம் இந்நூல் இம்மணி எனவும்,இவ் யாழ் இவ்வட்டு எனவும், இவ்வடை இவ்வாடை இவ் வெளவியம் எனவும், ஈவயினான எனவும் வரும். *(36)*

## நச்சினார்க்கினியம்

### *238. இகரச்சுட்டின் இயல்பு அகரச்சுட்டுப் போறல்*

**சுட்டின் இயற்கை முன்கிளந் தற்றே.**

இஃது இகரஈற்றுச் சுட்டிடைச்சொல் இயல்புகணத் தொடு முடியுமாறு கூறுதலின் எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* சுட்டின்.....*அற்று* - இகரஈற்றுச் சுட்டின் இயல்பு முன் அகர ஈற்றுச் சுட்டிற்குக் கூறிய [1] தன்மைத்தாம் எ-று.

என்றது, 'சுட்டின் முன்னர் ஞாமத் தோன்றின்' *(205)* என்பது முதலிய நான்கு சூத்திரத்தானும் கூறிய இலக்கணங் களை. அவை மென்கணத்து மெல்லெழுத்து மிகுதலும், இடைக்கணத்தும் உயிர்க்கணத்தும் வகரம் பெறுதலும், செய்யுட்கண் வகரம் கெட்டுச் சுட்டு நீடலுமாம்.

இஞ்ஞாண் நூல் மணி எனவும், இவ்யாழ் இவ்வட்டு எனவும், இவ்வடை இவ்வாடை இவ்விலை இவ்வீயம் இவ்வுரல் இவ்வூர்தி, இவ்வெழு, இவ்வேணி, இவ்வையம், இவ்வொடு, இவ்வோக்கம் இவ்வௌவியம் எனவும், ஈவயினான எனவும் வரும்.

'ஈதுகாண்[1] தோன்றுமெம் சிறுநல் லூரே' என்றதும்,

'கள்வனோ அல்லன் கணவனென் காற்சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டாற் கொன்றாரே ஈதொன்று'
(சிலப். ஊர்சூழ்.7)

என்றதும், இது என்னும் சுட்டுமுதல் உகர ஈறாதலின், செய்யுளகத்தானே. அது புறனடையான் (483) முடியுமென உணர்க.

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*238.* 1) சூ. 205 - 208.

2) 'ஈகாண்' என்பது ஏடெழுதுவோரான் நேர்ந்த பிழை என்க. உகர ஈறு தோன்றவே வருதல் வேண்டும் என்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*238.* **சுட்டின் இயற்கை முற்கிளந் தற்றே.**

மேலே 'இனியணி' என்னும் சூத்திரத்து, வல்லெழுத் தொடு புணருமாறு கூறினமையின், ஈண்டு 'முற்கிளந்தற்று' என்றது, 'சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்' என்பது முதலாக அகரச்சுட்டிற்கு ஓதியவற்றை (சூ. 205 - 208) என உணர்க.

'ஈகாண் தோன்றும்' என்பது ஈன் என்றும் சுட்டுப் பெயரின் ஈற்றழிவாகும். அதனைப் புறனடையாற் கொள்க. ஈன் - இவ்விடம்.

**இளம்பூரணம்**

*240.* **'தூணி' பதக்கொடு புணர்தல்**

**பதக்குமுன் வரினே தூணிக் கிளவி**
**முதல்கிளந்து எடுத்த வேற்றுமை இயற்றே.**

இச்......எனின், இவ்வீற்று அல்வழிகளில் அளவுப் பெயருள் ஒன்றற்கு மேல் தொகைமரபினுள் (22) எய்திய ஏ - என் சாரியை விலக்கி வேறு முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) பதக்கு என்னும் சொல் தன்முன் வரின், தூணி என்னும் சொல், முன்பு விதந்தெடுத்த வேற்றுமை முடிபின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(வருமாறு:) தூணிப் பதக்கு[1] - என வரும்.

வருமொழி முற்கூறிய அதனான், இரு தூணிப்பதக்கு என அடையடுத்து வந்தவழியும் இவ்விதி கொள்க.[2]

'கிளந்தெடுத்த' என்றதனான், தூணி முன்னர்ப் பிற பொருட்பெயர் வந்தவழியும், ஆண்டு நிலைமொழி அடையடுத்து வந்தவழியும், தன் முன்னர்த் தான் வந்த வழியும் இம்முடிபு கொள்க.

இன்னும் அதனானே, தன் முன்னர்த் தான் வந்தவழி இக்குச்சாரியைப் பேறும் கொள்க.

(உ-ம்.) தூணிக்கொள் தூணிச்சாமை - எனவும், இருதூணிக் கொள் எனவும், தூணித்தூணி எனவும், தூணிக்குத் தூணி[3] எனவும் வரும். (37)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***240.*** 1) 'கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப் பதக்கென்று' (நாலடி. 387) சூத்திரப்பொருளில் 'தூணி என்னும் சொல் முன்பு விதந்தெடுத்த.....'என்றிருத்தல் வேண்டும்.

2) இரண்டு + தூணி = இரு தூணி (447, 439)

3) ஒவ்வொரு தூணியும், தூணிதோறும் - என்பது பொருள்.

## நச்சினார்க்கினியம்

### *239. 'தூணி' பதக்கொடு முடிதல்*

**பதக்குமுன் வரினே தூணிக் கிளவி**
**முதல்கிளந் தெடுத்த வேற்றுமை இயற்றே.**

*இஃது இவ்வீற்று அல்வழிகளுள் அளவுப் பெயருள் ஒன்றற்குத் தொகைமரபினுள் (164) வரும் ஏயென் சாரியை விலக்கி வேறுமுடிபு கூறுகின்றது.*

*(இ-ள்.) தூணிக்கிளவி முன் பதக்கு வரினே - தூணியாகிய அளவுப்பெயரின் முன்னர்ப் பதக்கு என்னும் அளவுப்பெயர் வருமாயின்; முதற்.....இயற்று - முன்பு விதந்தெடுத்த வேற்றுமை முடிபின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.*

*(வருமாறு:) தூணிப்பதக்கு என வரும். இஃது உம்மைத்தொகை.*

*வருமொழி முற்கூறியவதனான், அடையொடு வந்துழியும் இவ்விதி கொள்க.*

*இருதூணிப் பதக்கு, முத்தூணிப் பதக்கு[1] என ஒட்டுக.*

*'கிளந்தெடுத்த' என்றதனான், தூணிக்கொள் சாமை தோரை பாளிதம் எனப் பொருட்பெயர்முன் வந்துழியும், இரு தூணிக்கொள் என அதுதான் அடையடுத்துழியும், தூணித் தூணி தொடித்தொடி காணிக்காணி பூணிப்பூணி[2] எனத் தன் முன்னர்த் தான் வந்துழியும் இவ்விதி கொள்க.*

*இன்னும் இதனானே, தன் முன்னர்த் தான் வந்துழியும், அதுதான் அடையடுத்து வந்துழியும், இக்குச் சாரியை பெறுதலும் கொள்க.*

*தூணிக்குத்தூணி இருதூணிக்குத்தூணி[3] என வரும். இவற்றுள் பண்புத்தொகையும் உள. (37)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*239. 1)* பதக்கு - இரண்டு மரக்கால் அளவு; தூணி - நான்கு மரக்கால் அளவு. இரண்டு மூன்று என்பன தூணிக்கே அடைமொழியாம்.

2) ஒவ்வொரு தூணியும் முதலாகப் பொருள் கூறுக. பூணி - நுகத்தில் பூட்டப்படும் எருது.

3) ஒவ்வொரு தூணிக்கண்ணும், ஒவ்வோர் இருதூணிக் கண்ணும் என்று பொருள் செய்க.

4) தூணிக்கொள் முதலிய நான்கும் இருதூணிக்கொள் என்பதொன்றும் அளவுப்பெயரை நிலைமொழியாகக் கொண்ட பண்புத்தொகையாம்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***240.*** **பதக்குமுன் வரினே.....வேற்றுமை இயற்றே.**

"வருமொழி முற்கூறியதனால் இருதூணிப்பதக்கு என அடையடுத்து வந்தவழியும் இவ்விதி கொள்க என்றனர் உரைகாரர். 'நிறுத்த சொல்லும்' (111) என்ற சூத்திரத்தானே அது கொள்ளல் தகும்.

***240, 241.*** [அளவைப் பெயர்களை ஆசிரியர் எடுத்தோதியே புணர்ப்பாராதலின், அவற்றைப் பொது விதியான் முடித்தல் அவர் கருத்தன்மை உணரப்படும். ஆகலின் உரைகாரர் இலேசான் முடித்தவை ஆசிரியர் கருத்தொடு முரணாமை பற்றிக் கொள்ளப்பட வேண்டும் என்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***239.*** **பதக்குமுன் வரினே.....வேற்றுமை யியற்றே.**

தூணிப்பதக்கு என வரும். வருமொழி 'தம்மகப்பட்ட' அளவையாகாமையின் விதி வேறோதப்பட்டது என்க.

உரையாளர், அடையடுத்து வரினும் பிறபொருட் பெயர் வரினும் இவ்விதி கொள்க என்பர். அடையடுப் பினும்

புணர்வது இகர ஈறேயாதலின் அது வேண்டா கூறலாம். ஏனைய பொருட்பெயர் வரின் அது பொதுவிதியுள் அடங்குமாதலின் மிகையின்கண் படுத்தல் வேண்டா. மேலும் அவர் தூணிக்குத் தூணி என இக்குச் சாரியை பெறுதலும் கொள்க என்பர். அது நாளுக்கு நாள் என்பது போலத் தொறு என்னும் பொருள்பட நின்ற இடைச்சொல் ஆதலின் சாரியை எனற் கேலாமை அறிக.

***239.*** [தூணி நான்கு மரக்காலளவும், பதக்கு இரண்டு மரக்காலளவும் குறித்தலின், தூணிப்பதற்கு என்புழி, வருமொழி 'அகப்பட்ட' அளவையே யாதல் துணியப்படும்.
-தி. வே. கோ.

அளவைப் பெயரை ஆசிரியர் எடுத்தோதியே புணர்ப்பார் ஆதலின், விதந்து கூறும் இச்சூத்திரத்துள், அடையடுத்து வருதல் முதலியவற்றை மிகையாற் கொண்டனர் உரையாசிரியன்மார். இது வேண்டா கூறல் என்றல் பொருந்தாது.

இக்குச்சாரியை தூணிக்குத் தூணி என்னுமிடத்துத் தொறுப் பொருட்டாய் நின்றது எனக்கொள்ளின் இழுக்கு என்னை?]

## இளம்பூரணம்

### *241. 'நாழி' உரியொடு புணர்தல்*

**உரிவரு காலை நாழிக் கிளவி**
**இறுதி இகரம் மெய்யொடும் கெடுமே**
**டகரம் ஒற்றும் ஆவயி னான.**

இதுவும் அது.

(இ-ள்.) உரி என்னும் சொல் வருமொழியாய் வந்த காலத்து, நாழி என்னும் சொல் தன் ஈற்றில் நின்ற இகரம் தான் ஊர்ந்து வந்த மெய்யொடும் கெடும்; அவ்விடத்து டகாரம் ஒற்றாய் வரும் எ-று.

*(வருமாறு:)* நாடுரி - என வரும்.

வருமொழி முற்கூறிய அதனான், நிலைமொழி அடையடுத்து 'இருநாடுரி' என்றவழியும் இம்முடிபு கொள்க.[1]

இகரம் என்னாது 'இறுதி இகரம்' என்றதனான், ஈண்டை நிலைமொழியும் வருமொழியும் நிலைமொழிகளாய் நின்று, பிற பொருட்பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க.

*(உ-ம்.)* நாழிக்காயம், உரிக்காயம்[2] - என வரும். *(38)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***241.*** *1)* இரண்டு +நாடுரி = இருநாடுரி என முடிக்கலாகாது என்றார்.

*2)* நச்சினார்க்கினியர் உரைக்குறிப்புக் காண்க.

**நச்சினார்க்கினியம்**

***240. நாழிமுன் உரிவந்து முடியுமாறு***

**உரிவரு காலை நாழிக் கிளவி**
**இறுதி இகரம் மெய்யொடும் கெடுமே**
**டகரம் ஒற்றும் ஆவயி னான.**

**இதுவும் அது.**

*(இ-ள்.)* உரி வருகாலை - நாழி முன்னர் உரி வருமொழியாய் வருங்காலத்து; நாழிக்கிளவி - அந்நாழி என்னும் சொல்; இறுதி...கெடும் - தன் இறுதியில் நின்ற இகரம் தான் ஏறிய மெய்யொடும் கெடும்; ஆவயின் ஆன டகரம் ஒற்றும் - அவ்விடத்து டகரம் ஒற்றாய் வரும் எ-று.

(வருமாறு:) நாடுரி என வரும். இதனான் ஏகாரமும் (164) விலக்குண்டது[1].

வருமொழி முற்கூறியவதனான், இருநாடுரி முந்நாடுரி எனவும் ஒட்டுக[2].

இறுதி இகரம் என முன்னுமோர் இகரம் உள்ளது போலக் கூறியவதனான், ஈண்டை நிலைமொழியும் வருமொழியும் நிலைமொழிகளாய் நின்று பிறபொருட் பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க.

நாழிக்காயம்[3], உரிக்காயம் - சுக்கு தோரை பாளிதம் என வரும். (38)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***240.*** *1)* நிலைமொழி பெறும் ஏகாரச் சாரியை இப்புணர்ச்சி விதியால் விலக்குண்டது. இவ்விதி கூறாக்கால், நாழியே யுரி என வரும்.

*2)* இரண்டு மூன்று என்னும் எண்ணுப்பெயரடை நாழிக்கே பொருந்தும். இரண்டு நாழியும் (ஓர்) உரியும் என்க.

*3)* நாழியளவினதாகிய காயம் என்று விரித்துரைக்கக் காயம் அவ்வாறு முகந்தளக்கப்படுவதன்றாதலின், நாழி (யரிசி)க்கு வேண்டுவதாகிய காயம் என்க.

நாழி (யரிசி) யால் ஆக்கிய பாளிதம் என்க. பாளிதம் என்பதற்குத் தயிர்ச்சோறு பாற்சோறு முதலாகப் பொருள் கூறுப. இவையிரண்டும் வேற்றுமை முடிபு.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***241.*** **உரிவரு காலை ........ ஆவயி னான.**

“இகரம் என்னாது ‘இறுதி இகரம்’ என்றதனால், ஈண்டை நிலைமொழியும் வருமொழியும் நிலைமொழிகளாய் நின்று

பிறபொருட் பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க. நாழிக்காயம், உரிக்காயம் என வரும்" என்றனர் உரைகாரர். இவற்றை 'வேற்றுமை அல்வழி' (159) என்ற சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***240.*** **உரிவரு காலை.........ஆவயி னான.**

உயிரீற்றின் முன் உயிர்முதன்மொழி வருமிடத்து உடம்படுமெய் வரும்; அல்லது, நிலைமொழி யீற்றுயிர் கெடும். இவையே புணர்ச்சியியல்பு, ஈண்டு நாழி என்ற சொல்லின் ழகரமெய் கெடுதலும், டகரமெய் புதிதாகத் தோன்றுதலும் அமையுமாறில்லை. இச்சொல்லிலுள்ள ழகரமெய் டகரமெய்யாகத் திரிந்தது என்றலே அமைதி. அவ்வாறாகுமிடத்து, நாடி+உரி=நாடுரி என நிலைமொழியின் ஈற்றுயிர் கெட்டு வரும். கட்டி + அகல் = கட்டகல் என்று நச்சினார்க்கினியர் உதாரணம் காட்டியிருத்தல் (246 உரை) ஈண்டைக்கு நோக்கத்தகும், ழகரம் டகரமாகத் திரிதலை, ஏழு-ஓடு, கூழு-கூடு, பாழு-பாடு, நீழல்-நீட, ஊழியம்-ஊடியம் எனத் தமிழில் ழகரமாயிருப்பவை தெலுங்கில் டகரமாய்த் திரிந்து வழங்குதலானும் அறியலாகும்.

***240.*** [ஆசிரியர் சொல்லமைந்துவிட்ட நிலை பற்றியே சூத்திரம் செய்தார். ரெட்டியார் இக்காலத்து மொழியியலார் கொள்கையைச் சுட்டுகிறார். உச்சரிப்பருமை கருதி ழகரம் 'வாழ்நாள்' வாணாள் என மருவி வருதல் காண்க. 'திகழ்+தச+கரம்' திகடசக்கரம் ஆயினமையும் அதற்கு விதி வீரசோழியத்தில் உள்ளமையும் நினைவு கூரத்தகும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***240.*** **உரிவரு காலை...........ஆவயி னான.**

'இறுதி இகரம்' என்றதனான், நாழியுரி எனக்கெடாது பொதுவிதியாற் புணர்தலுமாகும். இங்ஙனம் இயல்பாயும்

*புணர்தலான் இதனை மரூஉவினுள் அடக்காமல் விதிகூறினார் என்க.*

*இச்சூத்திரத்து உரையாசிரியன்மார் மிகையான் அமைக்கும் முடிபுகள் பொதுவிதியான் அமையுமாகலின், அவை வேண்டா கூறலாம் என அறிக.*

***240.*** *[அளவைப் பெயரை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பாராதலின், இச்சூத்திரத்து மிகையான் உரையாளர் அமைப்பன பொதுவிதியான் முடிக்கப்படா.]*

## இளம்பூரணம்

### *242. 'பனி' என்னும் காலப்பெயரது வேற்றுமை முடிபு*

**பனிஎன வருஉம் கால வேற்றுமைக்கு**
**அத்தும் இன்னும் சாரியை ஆகும்.**

*இச்....எனின், இவ்வீற்று வேற்றுமையுள் ஒன்றற்கு வல்லெழுத்தினொடு (33) சாரியை பெறும் என, எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு....ற்று.*

*(இ-ள்.) பனி என்று சொல்ல வருகின்ற பனிக்காலத்தை உணர நின்ற வேற்றுமை முடிபுடைய பெயர்க்கு [1] வரும் சாரியை அத்தும் இன்னும் ஆகும் எ-று.*

*(உ-ம்.) பனியத்துக் கொண்டான். பனியிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.*

*'வேற்றுமை' என்றதனான், இன் பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க [2].* *(39)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*1) அல்வழியதிகாரத்தை மாற்ற இவ்வாறு உரை கூறினார்.*

*2) இயைபு வல்லெழுத்து என்றது, 236ஆம் சூத்திரத்தாற் பெற்றதனை. சாரியைப் பேறு இயைபு வல்லெழுத்துப் பேற்றினை விலக்காது என்னும் கொள்கையர் பண்டையுரைகாரர் இருவரும்.*

**நச்சினார்க்கினியம்**

## *241. 'பனி' அத்தும் இன்னும் பெற்று முடிதல்*

**பனிஎன வருஉம் கால வேற்றுமைக்கு**
**அத்தும் இன்னும் சாரியை ஆகும்.**

*இஃது இகர ஈற்று வேற்றுமையுள் ஒன்றற்கு வல்லெழுத்தினொடு சாரியை பெறுமென, எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.*

*(இ-ள்.) பனி.......வேற்றுமைக்கு - பனியென்று சொல்ல வருகின்ற நோயன்றிக் காலத்தை யுணரநின்ற வேற்றுமைமுடிபுடைய பெயர்க்கு; [1] அத்தும்......ஆகும் - அத்தும் இன்னும் சாரியையாக வரும் எ-று.*

*(உ-ம்.) பனியத்துக் கொண்டான் பனியிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.*

*'வேற்றுமை' என்றதனான், இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (39)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*242.* **பனியென வருஉம்........சாரியை ஆகும்.**

*"'கால வேற்றுமைக்கு' என்றதற்குக் காலத்தை உணர நின்ற வேற்றுமை முடிபுடைய பெயர்க்கு" என்று பொருள் கூறினர் உரைகாரர். காலவேறுபாட்டினை உணர்த்தும் சொற்கு*

எனப்பொருள் கூறலாமெனத் தோன்றுகிறது. 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' (சொல். 115) என்றவிடத்து வேறுபாடு என்ற பொருளில் வேற்றுமை என்றதை ஆசிரியர் வழங்கியிருத்தல் காண்க.

*242.* [மேலைச்சூத்திரங்கள் அல்வழி முடிபு குறித்தன ஆதலின் அல்வழியதிகாரத்தை மாற்ற இவ்வாறு பொருள் கூறினர் உரைகாரர். பின்வரும் சூத்திரங்களும் வேற்றுமைப் புணர்ச்சி சுட்டியே தொடர்தல் காண்க. 'காலவேற்றுமை' காலவிசேடம் என்னும் பொருட்டாதலை அன்னோர் அறிவர்மன்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*241, 242.* **பனியென வரூஉம் காலவேற் றுமைக்கு**
**அத்தும் இன்னும் சாரியை யாகும்.**
**வளியென வரூஉம்....செவ்வி தென்ப.**

பனியும் வளியும் நோயை யுணர்த்தும் சொல்லாயின் பனிக்காய்ச்சல் - பனிக்கொண்டான் - வளிப்பிடிப்பு - எனச் சாரியை பெறாது பொதுவிதியான் முடியும் என்க.

**இளம்பூரணம்**

### *243. வளி என்னும் பூதப்பெயரும் அற்று ஆதல்*

**வளிஎன வரூஉம் பூதக் கிளவியும்**
**அவ்வியல் நிலையல் செவ்விது என்ப.**

இதுவும் அது.

(இ-ள்.) வளி என்று சொல்ல வருகின்ற பூதங்களில் ஒன்றனை உணர நின்ற சொல்லும் முன்னர்க் கூறிய அத்தும் இன்னும் பெறும் அவ்வியல்பின்கண் நிற்றல் செவ்விது என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* வளியத்துக்கொண்டான், வளியிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

'செவ்விது' என்றதனான், இன் பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. *(40)*

## நச்சினார்க்கினியம்

### *242. 'வளி' எனும் பெயரும் அற்றாதல்*

**வளிஎன வரூஉம் பூதக் கிளவியும்**
**அவ்வியல் நிலையல் செவ்விது என்ப.**

இதுவும் அது.

*(இ-ள்.)* வளி.....கிளவியும் - வளியென்று சொல்ல வருகின்ற இடக்கர் அல்லாத ஐம்பெரும்பூதங்களில் ஒன்றை யுணரநின்ற சொல்லும்; அவ்வியல்.......என்ப - முன்னைக் கூறிய அத்தும் இன்னும் பெறும் அவ்வியல்பின்கண் நிற்றல் செவ்விதென்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* வளியத்துக் கொண்டான் வளியிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'செவ்விது' என்றதனான், இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. *(40)*

## இளம்பூரணம்

### *244. 'உதி' மெல்லெழுத்து மிகுதல்*

**உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.**

இச்...எனின், இவ்வீற்று மரப்பெயர் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தல் நுதலிற்று.

(இ-ள்.) உதி என்னும் மரத்தினை உணர நின்ற சொல் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உதிங்கோடு செதிள் தோல் பூ - என வரும். (41)

**நச்சினார்க்கினியம்**

## 243. 'உதி' மரப்பெயர் மெலி மிகல்

**உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.**

இது மரப்பெயரின் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி[1] மெல்லெழுத்து விதிக்கின்றது.

(இ-ள்.) உதி மரக்கிளவி - உதித்தல் என்னும் தொழிலன்றி, உதி என்னும் மரத்தினை உணரநின்ற சொல்; மெல்லெழுத்து மிகும் - வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உதிங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

அம்முச்சாரியை விதிக்கின்ற புளிமரத்தினை இதன்பின் வைத்தமையான், உதியங்கோடு என இதற்கும் அம்முப் பெறுதல் கொள்க.

இஃது இக்காலத்து ஒதியென மருவிற்று. (41)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**243.** 1) பொதுவிதியான் (சூ. 235) வந்த வல்லெழுத்தினை என்க.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**243.** உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

"அம்முச்சாரியை விதிக்கின்ற புளி மரத்தினை இதன்பின் வைத்தமையான், உதியங்கோடு என இதற்கும் அம்முப் பெறுதல் கொள்க என்றார் நச்சினார்க்கினியர். அம்முப்பெறுதல் ஆசிரியர் கருத்தாயின், அவர் அதனைக்

கூறுவர். 'ஆரும் வெதிரும் சாரும் பீரும், மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்' (363) என்றவர், அதனை யடுத்து, 'பீரென் கிளவி அம்மொடும் சிவணும்' (365) என்று கூறியிருப்பது காண்க.

உதிமரக் கிளவிக்கு அம்முச்சாரியை ஏற்றி, அதனொடு மாட்டெறிந்த ஒடு மரக்கிளவிக்கும் அவ் அம்முச் சாரியை வரும் என்ற நச்சினார்க்கினியர், அதன் மாட்டேறு பெற்ற சேமரக்கிளவிக்கு அம்முச்சாரியை வரும் எனல் வேண்டுமே!

உதிமரக் கிளவி அம்முச்சாரியை பெறுதல் பிற்கால வழக்கு. இளம்பூரணர் இது கூறாது விடுத்து நோக்கத்தகும்.

**243.** ['உதியங்கோடு' என உதிமரக்கிளவி அம்முச்சாரியை பெறுதலைத் தம்கால வழக்கில் நிகழ்கின்றமை கண்டு நச்சினார்க்கினியர் இலேசான் அமைத்தார். சீவகசிந்தாமணியுள் குணமாலையார் இலம்பகத்திற் சீவகன் தம்மை விளித்துக் கூறியவற்றை வண்டினங்கள் கேட்டுச் செயற்பட்டவாற்றை விளக்கு மிடத்தே, நச்சினார்க்கினியர் ஐயறிவினவாகிய மாவும் மாக்களும் பெறும் செவியறிவை நான்கறிவினவாகிய நண்டும் தும்பியும் (ஓரோவழிப்) பெறுதலுடையன - என்று குறிப்பிட்டாற்போலவே (சீவக. 893) புளிமரக்கிளவி பெறக் கடவ அம்முச்சாரியை உதிமரத்திற்கும் ஏறும் என்று அமைதி கூறினார்.

இகர உகர ஈறு அம்முச்சாரியை ஏற்றாற்போல ஏகாரவீறு ஏலாமை பற்றி, மாட்டேறு சேமரக்கிளவிக்கு இலதாய், ஒரு புடைச் சேறலாய் உகர ஈற்றிற்கே ஏற்றதாயிற்று.

பிற்காலத்தவராதலின், இளம்பூரணர் கூறாது விடுத்த அம்முச்சாரியைப் பேற்றினை, வளர்ந்துவரும் மொழியாக்க மாக நச்சினார்க்கினியர் குறிப்பிட்டார் என அமைதி காணத்தகும்.]

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**243.** உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

உதி என்பதைப் பல பொருள் ஒரு சொல்லாகக் கருதி நச்சினார்க்கினியர், "உதித்தல் என்னும் தொழிலன்றி மரத்தினை உணர்த்தி நின்ற சொல் என உரைகூறுதலை பொருந்துமாறில்லை. ஆசிரியர்க்கு அது கருத்தாயின் 'உதியென வரூஉம் மரப்பெயர்க் கிளவி' என விளங்க ஓதியிருப்பார். அன்றியும் உதித்தல் என்பது ஆரியச் சொல்லாதலையும் அறிக. அன்றியும் தொழிற்சொல் வேற்றுமைப் பொருள்படப் புணராது என்பதனையும் அறிக.

**243.** [ஒடு என்னும் நோயை நீக்குதற்கு 'ஒடுமரக் கிளவி' என்றும், நீ என்னும் முதனிலைத் தொழிலை நீக்க 'நீ என் ஒருபெயர்' என்றும், குமிழ்த்தல் என்னும் தொழிலை நீக்கக் 'குமிழென் கிளவி மரப்பெய ராயின்' என்றும், தொழிற் பெயர் -வினைமுற்று-பிற பெயர்ப்பொருள் - என்பனவற்றை விலக்கி உரிய பொருளைத் தெளிவுபடுத்த ஆசிரியர் வழங்கிய தொடர்கட்கு நச்சினார்க்கினியர் உரைகண்ட நயத்தை உடன்பட்டுச் செல்லும் இவ்வுரைகாரர் இச்சூத்திரத்தில் உடன்பட்டிலர். உதித்தல் வடசொல்லாயினும், தம் காலத்தே பயில வழங்கும் இலக்கிய வழக்குக் கண்டு இவ்வாறு உரை கூறினார் என்று கோடல் சாலும். பிறவற்றிற் போல நயங்காண வேண்டும் அவாவில் வகுக்கப்பட்ட இவ்வுரைக்கண் இவ்வமைதியே கொள்ளல் வேண்டும்.

தொழிற்சொல் வேற்றுமைப் பொருள்படப் புணராது என்றார் இவ்வுரைகாரர். முதனிலையளவாய் நின்று தொழிலையுணர்த்தும் முதனிலைத் தொழிற்பெயர் வேற்றுமைப் பொருட்டாய் நின்று புணருமாறு 'அறிகொன்று' (குறள்-638) 'இடிபுரிந்து' (ஷை-607) பெருஞ்செய் ஆடவர் (நெடுநல்.171) முதலாக வரும் இலக்கிய வழக்கினுள் கண்டு தெளியலாம்.]

## இளம்பூரணம்

### 245. 'புளி' மரப்பெயர் அம்முப் பெறுதல்

**உதிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.**

இச்.....எனின், இவ்வீற்று மரப்பெயர் ஒன்றற்கு மேல் எய்திய வல்லெழுத்து விலக்கிச் சாரியை விதி.....ற்று.

(இ-ள்.) புளி என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லிற்கு வரும் சாரியை அம்முச்சாரியை எ-று.

(உ-ம்.) புளியங்கோடு செதிள் தோல்பூ - என வரும்.

சாரியைப் பேற்றிடை எழுத்துப்பேறு கூறிய அதனான்[1], அம்முப்பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (42)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

245. மேலைச்சூத்திரம் எழுத்துப் பேறு; அதன் முன்னைய இரண்டு சூத்திரங்களும் இச்சூத்திரமும் சாரியைப் பேறு.

## நச்சினார்க்கினியம்

### 244. 'புளி' மரப்பெயர் அம்முச்சாரியை பெறுதல்

**புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.**

இது வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) புளி.....சாரியை-சுவையன்றிப் புளியென்னும் மரத்தினை உணர நின்ற சொல்லிற்கு அம் என்னும் சாரியை வரும் எ-று.

(உ-ம்.) புளியங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

*சாரியைப் பேற்றிடை முன்னர்ச் சூத்திரத்து எழுத்துப் பேறு கூறியவதனான், அம்முப் பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க[1]. (42)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***244.*** *நிலைமொழிச் சாரியைப் பேறு அதிகார வல்லெழுத்தை வீழ்த்தாமையின், அதன் வீழ்வினை இலேசினான் முடித்தனர் உரையாசிரியன்மார் இருவரும்.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***244.*** **புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.**

*"சாரியைப் பேற்றிடை.......எழுத்துப்பேறு கூறிய வதனான், அம்முப்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க"* என்றனர் உரையாளர். இச்சிறப்பு விதியால் பொதுவிதி செல்லாதொழிந்தது என்று கூறாது, முன்னர்ச் சூத்திரத்துக் கூறும் எழுத்துப்பேற்றால் மேற்பொதுவிதியான் வந்த வல்லெழுத்துக் கெடும் என்றது தகுவதன்று.

***244.*** *[சாரியைப் பேறு இயைபு வல்லெழுத்துப் பேற்றினை விலக்காது என்னும் ஆசிரியர் கொள்கையை உரைகாரர் இருவரும் மேற்கொண்டனர். ''நீயென் ஒருபெயர்' (253), 'சுட்டுமுதல் இறுதி' (263), 'உருபியல் நிலையும்' (294) என்னும் சூத்திரங்களான், இயைபு வல்லெழுத்து மிகாது என ஆசிரியர் வற்புறுத்தலின், அவ்வாறு வலியுறுத்தாத விடத்தெல்லாம் உரைகாரர் அக்கொள்கையை விடாது எழுதிப்போயினர். வல்லெழுத்துப் பேறு பொதுவிதி யெனவும், சாரியைப் பேற்றினைக் கூறுதல் சிறப்புவிதி யெனவும், சிறப்புவிதியால் பொதுவிதிச் செய்தி விலக்குண்ணும் எனவும் பின்னுரையாளர் பலரும் தொல்லுரையாளர்தம் கூற்றை மறுத்தலை மரபாகக் கொண்டனர்.]*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***244.*** **புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.**

புளி என்பது ஆகுபெயராய் மரத்தை உணர்த்து தலன்றிப் பலபொருளொரு சொல் அன்மையான், சுவையன்றிப் புளியென்னும் மரத்தை யுணர்த்தும் சொல் என நச்சினார்க்கினியர் கூறுதல் ஏலாதென்க.

***244, 245.*** [புளிச்சுவையினை நீக்கப் 'புளிமரக் கிளவி' என்றும், புளியமரத்தினை நீக்கச் சுவைப்புளி என்றும் ஆசிரியர் சுட்டியமைமையைக் குறிக்கும் நச்சினார்க்கினியர் உரையுள், இயற்பெயர் ஆகுபெயர் என்னும் பாகுபாட்டிற்கு இடனின்று. பிறிதினியைபு நீக்கிய விசேடணம் என்பதை உரைநயம் விளக்கிற்று என்ற அளவே கோடல் சாலும்.]

-தி.வே.கோ.

**இளம்பூரணம்**

***246. சுவைப் 'புளி' மெல்லெழுத்து மிகுதல்***

**ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.**

இச்......எனின், அம்மரப்பெயர் அல்லாத புளிப் பெயர்க்கு வேறு முடிபு கூறு......ற்று.

(இ-ள்.) அம்மரப்பெயரன்றி ஒழிந்த சுவைப்புளி உணர நின்ற பெயர் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) புளிங்கூழ் [1] சோறு தயிர் பாளிதம் - என வரும்.

*(43)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***246.*** 'கிணைமகள் அட்ட பாவற் புளிங்கூழ்' *(புறநா.399)*

### நச்சினார்க்கினியம்

## 245. சுவைப்புளி மெல்லெழுத்து மிக்கு முடிதல்

**ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.**

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) ஏனைப்.....மிகும் - அம்மரப்பெயரன்றிச் சுவைப்புளி[1] உணரநின்ற பெயர் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) புளிங்கூழ் சாறு தயிர் பாளிதம் என வரும். பாளிதம் - பாற்சோறு. இவற்றிற்கு இரண்டாமுருபு விரிக்க. (43)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**245.** புறநானூற்றுப் பதிப்பில் ஆராய்ச்சி முன்னுரைப் பகுதிக்கண் உ.வே.சா. ஐயரவர்கள், புளிவகையாக ஆறு சுவைப்புளிகளைக் குறிக்கிறார். களாப்பழப்புளி, துடரிப்பழப் புளி, நாவற்பழப்புளி, நெல்லிப்பழப்புளி, புளியம்பழப்புளி, மாங்கனிப்புளி என்பன அவை.

### இளம்பூரணம்

## 247. அப்பெயர் வல்லெழுத்தும் மிகப்பெறுதல்

**வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை**
**ஒல்வழி அறிதல் வழக்கத் தான.**

இச்.......எனின், மேலதற்கு வல்லெழுத்து மிகும் என எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு.....ற்று.

(இ-ள்.) ஏனைப் புளிப்பெயர், முன் எய்தி நின்ற மெல்லெழுத்தே யன்றி, வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றமில்லை; பொருந்துமிடம் அறிக வழக்கிடத்து எ-று.

*(உ-ம்.)* புளிக்கூழ் சோறு தயிர் பாளிதம்....என வரும்.

'ஒல்வழி அறிதல்' என்றதனான், புளிச்சோறு என்றது போல மற்றையவை வழக்குப்பயிற்சி இல எனக் கொள்க.

'வழக்கத்தான' என்றதனான், இவ்வீற்றுள் எடுத்தோத்தும் இலேசும் இல்லாதவற்றின் முடிபு வேற்றுமையெல்லாம் கொள்க.

*(உ-ம்.)* கூதாளங்கோடு எனவும், கணவிரங்கோடு எனவும், துணியத்துக் கொண்டான் - துணியிற் கொண்டான் எனவும், பருத்திக்குச் சென்றான் [1] எனவும், கப்பிதந்தை 'கப்பிந்தை' எனவும், கட்டிஇடி 'கட்டிடி'-[2] கட்டி அகல் 'கட்டகல்'[3] எனவும், குளிகுறுமை - குளிக்குறுமை[4] எனவும், இன்னினிக் கொண்டான்[5] - அண்ணணிக் கொண்டான்[6] எனவும், புளிங்காய எனவும் வரும்.

இன்னும் அதனானே, இவ்வீற்றுள் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்டுச் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்தலும் கொள்க.

*(உ-ம்.)* கிளியின் கால் - என வரும். *(44)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***247.*** *1)* இக்கு : சாரியை. பருத்தி பறித்தற்பொருட்டுச் சென்றான் - பருத்தி விளை வயலிடம் சென்றான்-எனப் பொருள் கொள்க.

*2)* கப்பி : இயற்பெயர்; அவனுடைய தந்தை கப்பிந்தை கட்டிடி - கட்டியாயின மாவு.

*3)* கட்டகல் - கட்டிடியை குழித்து விளக்கேற்றிய அகல்

*4)* குளிக்குறுமை : கிளி என்றிருத்தல் வேண்டும். பண்பு பற்றி வரும் வேற்றுமைப்புணர்ச்சி.

*5) இப்பொழுதே இப்பொழுதே கொண்டான். (விரைவுப்பொருட்டு)*

*6) மிக அணிய இடத்தே கொண்டான் (அருகேயே என்றவாறு)*

**நச்சினார்க்கினியம்**

## *246. அப்பெயர் வலிமிக்கும் முடிதல்*

**வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை**
**ஒல்வழி அறிதல் வழக்கத் தான.**

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) வல்லெழுத்து..........இல்லை - சுவைப்புளி, மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றம் இல்லை; ஒல்வழி....வழக்கத்தான் - பொருந்துமிடம் அறிக வழக்கிடத்து எ-று.

(உ-ம்.) புளிக்கூழ் சாறு தயிர் பாளிதம் என வரும்.

'ஒல்வழி' என்றதனான், புளிச்சாறு போல ஏனைய வழக்குப் பயிற்சிஇல் என்று கொள்க.

'வழக்கத்தான' என்றதனான், இவ்வீற்றுக்கண் எடுத் தோத்தும் இலேசுமின்றி வருவன எல்லாவற்றிற்கும் ஏற்குமாறு செய்கையறிந்து முடித்துக்கொள்க.

அவை இன்னினிக் கொண்டான் - அண்ணணிக் கொண்டான் - என்பன அடையடுத்தலின் 'இனியணி' (236) என்றவழி முடியாவாய் வல்லெழுத்துப்பெற்றன[1].

கம்பிதந்தை சென்னிதந்தை என்பன 'அஃறிணை விரவுப்பெயர்' (155) என்பதனான் இயல்பு எய்தாது, ஈண்டு வருமொழித் தகர அகரக் கெட்டுக் கப்பிந்தை சென்னிந்தை என முடிந்தன[2].

கூதாளி கணவிரி என்பனவற்றிற்கு அம்முக்கொடுத்து அம்முக்கொடுத்து இகரம் கெடுத்துக் கூதாளங்கோடு கணவிரங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க *(129)*. கூதாள நறும்பூ எனக்குறைந்தும் வரும். இனி, இவை மகராஈறாயும் வழங்கும். அது 'வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்' *(பட்டினப். 85)* என அத்துப் பெற்று மகரம் கெட்டும் *(133)* 'கணவிர மாலை யிடுஉக் கழிந் தன்ன' என மெல்லெழுத்துப் பெற்றும் நிற்கும்.

கட்டி என நிறுத்தி, இடி அகல் எனத் தந்து, டகரத்தில் இகரம் கெடுத்துக் கட்டிடி கட்டகல்[3] என முடிக்க.

பருத்திக்குச் சென்றான்[4] என இயைபு வல்லெழுத்தும் இக்கும் கொடுத்து முடிக்க.

துளியத்துக் கொண்டான் துளியிற் கொண்டான் 5 என அத்தும் இன்னும் கொடுத்து முடிக்க.

'புளிங்காய் வேட்கைத் தன்று' *(ஐங். 51)* எனவும், புளிம்பழம் எனவும், அம்முப் பெறாது மெல்லெழுத்துப் பெற்று முடிதலும் கொள்க.

இன்னும் இதனானே, உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கள் சென்றுழி[6] இயைபு வல்லெழுத்துக் கெடுத்துக் கிளியின்கால்-புளியின்கோடு-உதியின்கோடு-என முடிக்க. *(44)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***246.*** *1)* இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

*2)* கப்பிக்குத் தந்தை, சென்னிக்குத் தந்தை-என்க. கப்பி, சென்னி - என்பன இயற்பெயர்.

*3, 4)* இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

*5)* இரண்டும் ஏழன் தொகை.

6) சூ. 202 உரையில் கிளியின் கால் என, உருபு புணர்ச்சிக்கட் சென்ற சாரியை ஈற்றுப் பொது முடிபுள் வழிப் பொருட் புணர்ச்சிக்கும் கொள்ளப்பட்டமை காண்க.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**246. வல்லெழுத்து மிகினும்.......வழக்கத் தான.**

உரையாளர், 'வழக்கத்தான' என்றதனான் இவ்வீற்றுள் எடுத்தோத்தும் இலேசும் இல்லாதவற்றின் முடிபு வேற்றுமை யெல்லாம் கொள்க - என்றனர். அவற்றையெல்லாம் அதிகாரப் புறனடையாற் கொள்ளுதலே அமைதி.

**246.** [உயிர்மயங்கியற்கு ஒத்துப் புறனடை இன்மையான், உரைகாரர், 'வழக்கத்தான' என்னு மிகைச்சொல்லான் இகர வீற்றுள், எடுத்தோத்தும் இலேசும் இல்லாதவற்றின் முடிபு வேற்றுமை யெல்லாம் கொள்க என்றனர், அதிகாரப் புறனடையாற் கோடல் இயைபின்மையொடு சேய்த்தும் ஆகலின்.

சாத்திரியார் கருத்தினையே ரெட்டியாரும் வழிமொழிந்தார்.]

## இளம்பூரணம்

**248. இவ்வீற்று நாட்பெயர் (வன்கணம் வருவழி) ஆன்சாரியை பெறுதல்**

> **நாள்முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு**
> **ஆன்இடை வருதல் ஐயம் இன்றே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்குச் சாரியை விதி....ற்று.

(இ-ள்.) இகர ஈற்று நாட்பெயர்களின் முன்னர்த் தோன்றும் வினைச்சொல்லிற்கு ஆன்சாரியை இடைவந்து முடிதல் ஐயம் இல்லை எ-று.

*(உ-ம்.) பரணியாற*[1] கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'ஐயமின்று' என்றதனான், இயைபு வல்லெழுத்து வீழ்க்க. *(45)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***248.*** *1)* பரணிக்கண் என ஏழனுருபு விரிக்கவேண்டும்.

அசுவதி முதலாகத் தமிழில் வழங்கும் இருபத்தேழ் நாட்பெயர்களும் இகர ஐகார மகார ஈற்றான் முடிவனவாக உள. இவை சாரியை பெற்று முடியுமாற்றை ஆசிரியர் இவ்வதிகாரத்தே ***248, 287, 332*** ஆம் சூத்திரங்களால் விதிக்கிறார்.

**நச்சினார்க்கினியம்**

***247. இவ்வீற்று நாட்பெயர் ஆன்சாரியை பெறுதல்***

**நாள்முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு**
**ஆன்இடை வருதல் ஐயம் இன்றே.**

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியை விதிக்கின்றது.

(இ-ள்.) நாள்.....கிளவிக்கு - இகர ஈற்று நாட் பெயர்களின் முன்னர்த் தோன்றும் தொழிற்சொற்கு; ஆன்.... இன்று - ஆன் சாரியை இடைவந்து முடிதல் ஐயமின்று எ-று.

(உ-ம்.) பரணியாற் கொண்டான்[1] சோதியாற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'ஐயமின்று' என்றதனான் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. இதற்குக் கண் என் உருபு விரிக்க.

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***247.*** 1) ஆனின் னகரம் திரிதல் சூ. *124* விதியாற் கொள்ளப்படும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**247.** **நாள்முன் தோன்றும்.........ஐய மின்றே.**

*'ஐயமின்று' என்றதனான் இயைபு வல்லெழுத்து வீழ்க்க என்றனர் உரையாளர். அது வேண்டாக் கூற்று. இச்சிறப்பு விதியால் பொதுவிதி ஈண்டுச் செல்லா தொழியும்.*

**247.** [244-க்கு வரைந்த குறிப்பே ஈண்டும் பொருந்தும். சிறப்புவிதியால் பொதுவிதி விலக்குண்ணும் என்று இவர் குறிக்குமிடமெல்லாம் அக்குறிப்பே கொள்க.]

## இளம்பூரணம்

### 249. இவ்வீற்றுத் திங்கட்பெயர் (வன்கணம் வருவழி) இக்குப் பெறுதல்

**திங்கள் முன்வரின் இக்கே சாரியை.**

இதுவும் அது.

(இ-ள்.) திங்களை உணரநின்ற இகர ஈற்றுப் பெயர் முன்னர்த் தொழில்நிலைக் கிளவி வரின், வரும் சாரியை இக்குச்சாரியை எ-று.

(உ-ம்.) ஆடிக்குக்[1] கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். (46)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**249.** 1)ஆடிக்கண் என ஏழனுருபு விரிக்க.

## நச்சினார்க்கினியம்

### 248. திங்கட்பெயர் இக்குச்சாரியை பெறுதல்.

**திங்கள் முன்வரின் இக்கே சாரியை**

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்கு வகுத்தலின் எய்தியதன் மேல் சிறப்புவிதி வகுத்தது.

*(இ-ள்.)* திங்கள்.....சாரியை - திங்களை உணரநின்ற இகர ஈற்றுப் பெயர்களின் முன்னர்த் தொழில்நிலைக் கிளவி வரின் வரும் சாரியை இக்குச்சாரியையாம் எ-று.

*(உ-ம்.)* ஆடிக்குக் கொண்டான்[1] சென்றான் தந்தான் போயினான் என இயைபு வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க. இதற்கும் கண் என் உருபு விரிக்க. *(46)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***248.*** *1) இக்கின் இகரம் கெடுதற்கு விதி சூ. 126.*

## இளம்பூரணம்

## *250. ஈகார ஈற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**ஈகார இறுதி ஆகார இயற்றே.**

இச்.....எனின், ஈகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறு.....ற்று.

*(இ-ள்.)* ஈகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* தீக்கடிது சிறிது தீது பெரிது - என வரும். *(47)*

## நச்சினார்க்கினியம்

## *249. ஈகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு*

**ஈகார இறுதி ஆகார இயற்றே.**

இஃது ஈகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.) ஈகார.....இயற்று - ஈகார ஈற்றுப்பெயர், அல்வழிக்கண் ஆகாரஈற்று அல்வழியின் இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.*

*(உ-ம்.) ஈக்கடிது தீக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (47)*

**இளம்பூரணம்**

*251. இயல்பாய் முடியும் இவ்வீற்றுப் பெயர்கள் சில*

**நீஎன் பெயரும் இடக்கர்ப் பெயரும்**
**மீஎன மரீஇய இடம்வரை கிளவியும்**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

*இச்.....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு முடிபு வேற்றுமை கூறு....ற்று.*

*(இ-ள்.)* நீ என்னும் பெயரும், இடக்கர்ப் பெயராகிய ஈகார ஈற்றுப் பெயரும், மீ என்று சொல்ல மருவாய்[1] வழங்கின ஓரிடத்தினை வரைந்துணர்த்தும் சொல்லும், மேல் இவ்வீற்றுள் கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* நீ குறியை சிறியை தீயை பெரியை - எனவும், பீ குறிது சிறிது தீது பெரிது - எனவும், மீகண் செவி தலை புறம் - எனவும் வரும்.

நீ குறியை என்பதுமேல் 'அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே' (தொகை. 13) என்றவழி அடங்காதோ எனின், மேல் வேற்றுமைக்கண் நின்கை எனத் திரிந்து முடிதலின் (51) அடங்காயிற்று என்க[2].

மீகண் என்பது அல்வழி முடிபு அன்றெனினும்[3] இயல்பாதல் நோக்கி உடன் கூறப்பட்டது. (48)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**251.** 1) இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ 112, 251, 252, 356 ஆம் சூத்திரங்களான் விதிக்கப்பட்டுள. அதிகாரப் புறநடைச் சூத்திரம் இலக்கணத்தொடு பொருந்தாத மரூஉ வினை விதிக்கிறது. 'இல்முன்' என்பதனை 'முன்றில்' எனத் தலைதடுமாறச் சொல்லுதல் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்காம். (சொல். 17 இள.)

2) ஆண்டுக்கூறிய அஃறிணை விரவுப்பெயர், சாத்தன் குறியன் எனவும் சாத்தன் கை எனவும் இருவழியும் இயல்பாய் முடிந்தது.

3) ரெட்டியார் உரைக்குறிப்பினுள் விளக்கம் காண்க.

### நச்சினார்க்கினியம்

**250. இவ்வீற்றுப் பெயருள் இயல்பாய் முடிவன**

**நீஎன் பெயரும் இடக்கர்ப் பெயரும்**
**மீஎன மரீஇய இடம்வரை கிளவியும்**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இஃது எய்தியது விலக்கலும் எய்தாதது எய்துவித்தலும் கூறுகின்றது.

(இ-ள்.) நீ....பெயரும் நீ என்னும் பெயரும், இடக்கர்ப் பெயராகிய ஈகாரஈற்றுப் பெயரும்; மீஎன....கிளவியும் -மீ என்று சொல்ல மருவாய் வழங்கின ஓரிடத்தை வரைந்துணர்த்தும் சொல்லும்; ஆவயின்.......ஆகும்- புணருமிடத்து, முற்கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) நீ குறியை சிறியை தீயை பெரியை எனவும், பீ குறிது சிறிது தீது பெரிது எனவும், இவையிற்றுக்குப் பொதுவான் எய்திய (249) வல்லெழுத்து விலக்குண்டன.

மீகண் செவி தலை புறம்: இஃது இலக்கணத்தொடு பொருந்திய மரூ[1] ஆதலின் எய்தாதது எய்துவித்தது.

நீ என்பது அஃறிணை விரவுப்பெயருள் அடங்காதோ வெனின், மேல் (253) நின்கை எனத் திரிந்து முடிதலின் அடங்கலாயிற்று[2].

மீகண் என்பது மேலிடத்துக்கண் என வேற்றுமை யெனினும், இயல்பு[3] பற்றி உடன் கூறினார். (48)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**250.** 'மீயென மரீஇய இடம்வரை கிளவி' என்றது 'பிறனுடம்பட்டது தானுடம் படுதல்' என்னும் உத்திக்கு இனமாம் என்பர் பேராசிரியர் (பொ. 665)

1. மேற்கு என்பது புணர்நிலையில் மீ எனத் திரிந்தது (432நச். உரை)

2. இளம்பூரணர் உரைக்குறிப்பு நோக்குக. இவ்வாறே ஆணும் பெண்ணும் (303) என்னும் சூத்திரவுரைக் கண்ணும் வினா எழுப்பி விடை கூறுவார்.

3. கண்மீ தலை தடுமாறினமையின் அல்வழியாகக் கோடனுமாம்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**251.** **நீயென் பெயரும்......இயற்கை ஆகும்.**

"மீகண் என்பது அல்வழி முடிபு அன்றெனினும் இயல்பாதல் நோக்கி உடன் கூறப்பட்டது" எனக் கூறினர் உரைகாரர். மீகண் என்றதற்கு மேலிடத்துக்கண் எனப்பொருள் கூறினர் நச்சினார்க்கினியர். கண் என்றதும் இடப்பெயர் உணர்த்தும் பெயராகவும் வழங்குதலின், மீகண் என்பதற்கு மேலிடம் எனப்பொருள் கொண்டு, அதற்குச் சாரைப் பாம்பு என்பதற்குப் போன்று மீயாகிய கண் எனத் தொகைவிரி கூறின் வரும் குற்றம் யாது? அல்வழியில் வேற்றுமையும் கூறினார் என்றல் எவ்வாறு பொருந்தும் ?

**251.** ['மேல்' என்பது 'மீ' என மரீஇயது என்ப. ஆசிரியரும் 'இடம்வரை பெயர்' என்னாது 'இடம்வரை

கிளவி' என்றார். இம்மரீஇய சொல் பெயர்த்தன்மைப்பட நின்றது ('அவ்வயின்' போல) என்னலாமன்றிப் பெயரெனல் கூடாமையின், 'மீகண்' இருபெயரொட்டாமாறு இல்லை. பின்முன் தொக்க ஆறன் தொகைநிலைத் தொடர்களை அல்வழி முடிபாகவே கொள்ளல் வேண்டும். நச்சினார்க்கினியர் பின்முன் தொக்கதாகக் கொள்ளாது வேற்றுமைப் பொருள்பட விரித்தார்.

அல்வழி முடிபுகளோடு ஒரு சூத்திரத்தில் வேற்றுமை முடிபையும் ஆசிரியர் கூறார் என்ற சாத்திரியார் கருத்தை ரெட்டியார் அவர்களும் பாலசுந்தரம் அவர்களும் தழுவினர். உரையாசிரியன்மார் கூற்றின் அமைதியைப் பின்னர்க் காண்க.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***250.*** **நீஎன் பெயரும்.....இயற்கை யாகும்.**

'மீயென மரீஇய இடம்வரை கிளவி' என்றதனான், இஃது இயல்பாய சொல்லன்று என்பது அறியப்படும். மேற்கு என்னும் சொல் மீ என மருவீற்று என்றார் நச்சினார்க்கினியர் (432). மேல் என்பது மீ என மருவி யிருக்கலாம், ஈற்றுமெய் கெடுதலும் எகர ஏகாரங்கள் இகர ஈகாரங்களாய்த் திரிதலும் இயல்பாகலின்.

இடம் வரைந்துணர்த்தல் என்பது இவ்வாறு எனத் தெளிவாக விளங்கவில்லை.

மீ என்பதற்கு அல்வழி முடிபே ஈண்டுக்கொள்ளுதல் வேண்டும், அல்வழிக்கு உரியவற்றோடு வேற்றுமைக் குரியவற்றை விரவிக் கூறார் இவ்வாசிரியர் ஆதலின்.

***250.*** [அல்வழி முடிபொடு வேற்றுமை முடிபினை விரவிக்கூறார் என்ற சாத்திரியாரது கருத்தினை இவரும் வலியுறுத்தினார்; பாலசுந்தரமும் பின்பற்றினார். நச்சினார்க் கினியர், மீ என்பதனை நிலைமொழியாகக் கொண்டு மீகண் என்பதனை வேற்றுமைப் பொருள்பட விரித்தார்; பின்முன் தொக்க ஆறன்தொகையாகக் கொண்டிலர்.

ரகார இறுதி யகார இயற்றே (362) என, வேற்றுமைக் கண் திரிந்தும் அல்வழிக்கண் இயல்பாயும் முடியும் ரகர இறுதியினை அவ்வாறே முடியும் யகர இறுதியொடு மாட்டெறிந்தார். அவ்வாறே, வேற்றுமைக்கண் திரிந்தும் அல்வழிக்கண் பெரும்பான்மை திரிந்தும் சிறுபான்மை இயல்பாயும் முடியும் ழகர இறுதியினை 'ழகார இறுதி ரகார இயற்றே' (383) என ரகர இறுதியொடு மாட்டெரிந்தார். இவ்வாறே வேற்றுமை அல்வழி என இரண்டனையும் மாட்டேற்றினான் உடன்கூறல் ஆசிரியர் இயல்பா யிருத்தலின், இயல்பாய் முடிதல் காரணம் பற்றி, வேற்றுமை முடிபாகிய மீகண் என்பதனை அல்வழி முடிபோடு ஆசிரியர் உடனோதியதாக நச்சினார்க்கினியர் குறிப்பிட்டார். 'மீகண் அல்வழி முடிபன்று எனினும்.....' என்னும் இளம்பூரணர் உரைவிளக்கமே நச்சினார்க்கினியம் வேற்றுமை அல்வழி என்னும் இருமுடிபினையும் ஒரு சூத்திரத்தின்கண்ணேயே கொள்ளுமாறு, ஆசிரியர், மென்கணம் வருவுழி லகரம் னகரமாயும் ளகரம் ணகரமாயு திரியும் என்று விதிப்பதனை 367, 397ஆம் சூத்திரங்களுட் காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**250. நீயென் பெயரும்.......இயற்கை யாகும்.**

மீ என்பது மேலாய பண்பையும், ஒன்றனது மேற்பகுதியையும் குறிக்கும் சொல்லின் மரூஉவாதலின் 'மீயென மரீஇய' என்றார்.

கண்மீ என்பது மீகண் என மாறி நின்று கண்ணின் ஒரு பகுதிக்கும் பெயராக நிற்றலின் அல்வழியாயிற்று. கண்ணினது மேலிடம் என விரித்தற்கு ஏலாமை அறிக.

இனி, மேலிடத்துக்கண் என விரித்து, வேற்றுமை முடிபு என்று கூறுவர் உரையாசிரியன்மார். ஆசிரியர் அல்வழியும் வேற்றுமையும் ஒருங்கு கூறாராகலின் அவர் கருத்துப் பொருந்தாதென்க.

**250.** [மீ என்பது எச்சொல்லினது மரூஉ என்பதனை இவ்வுரைகாரர் குறிப்பிடாமல் அதன் பொருள்களை மாத்திரம் சுட்டினார். அது (மேற்கு அல்லது) மேல் என்பது சூ. 432-இல் நச்சினார்க்கினியர் உரையுள் புலப்படும்.

இவர் மீக்கொடி மீப்பல் இவற்றின் பொருளை வேற்றுமைப் பொருள்படவே விளக்கி இவை அல்வழி முடிபினை என்கிறார். முன்பின் தொக்க வேற்றுமைத் தொகையாதலின் அல்வழி எனக்கோடலே சாலும். பிற்காலத்திலக்கண நூலார் இலக்கணப் போலியாகக் குறிப்பிடும் இப்பின்முன் தொக்க வேற்றுமைத் தொகையை வடநூலார் எழுவாய் வேற்றுமையாகக் கொண்டமை பிரயோக விவேகத்துள் (கா.21) கண்டது. இக்கருத்துத் தொல்காப்பியனார்க்கும் உடன்படுதல் கூடும். -தி.வே.கோ.

ஆசிரியர் அல்வழியும் வேற்றுமையும் ஒருங்கு கூறார் என்னும் இவ்வுரைகாரர் கூற்று, 288, 316ஆம் சூத்திரங்களில் முறையே வேட்கை+அவா, இலம்+படு என்பனவற்றை இவரே இருவழியானும் முடித்துப் பொருள்கூறுதலின் ஆய்தற்பாலது.

கண்மீ என்பதனைக் கண்ணினது மேலிடம் என்று விரித்தற்கு ஏலாமை கூறும் இவர், அடுத்த சூத்திரவுரையுள், மீக்கொடி - மீப்பல் - என்பனவற்றிற்கு கொடியினது மேற்பகுதி-பல்லினது மேற்பகுதி - எனப் பொருள் கூறுவது என்னை?]

## இளம்பூரணம்

**252. அவற்றுள் 'மீ 'வல்லெழுத்து மிக்கு முடிதலும் உண்மை**

> இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
> உடன்நிலை மொழியும் உளஎன மொழிப.

இச்.....எனின், மேற்கூறியவற்றுள் மீ என்பதற்கு வேறொரு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* இடத்தினை வரைந்துணர்த்தும் மீ என்னும் சொல்முன், இயல்பாய் முடிதலேயன்றி, வல்லெழுத்து மிக்கு முடியும் தம்மில் இயைந்து நிற்றலையுடைய மொழிகளும் உள என்று சொல்லுவர் எ-று.

*(உ-ம்.)* மீக்கோள்[1] (ஆசாரக். 31), மீப்பாய்[2] (புறநா.30) **என வரும்.**

'உடனிலை' என்றதனான், மீங்குழி[3] - மீந்தோல்[4] - என மெல்லெழுத்துப் பெற்று முடிவடையும் கொள்க. *(49)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***252.*** *1)* யாக்கையின்மேற் கொள்ளுதலையுடைய போர்வை - சங். உரை

**2)** பாய்மரத்தின் மேலாக விரியும்படி எடுத்த பாய் ஷை

*3)* மேற்குழி

*4)* மேற்றோல் சங். உரை

**நச்சினார்க்கினியம்**

***251. அவற்றுள், 'மீ' வல்லெழுத்து மிகவும் பெறுதல்***

**இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்**
**உடன்நிலை மொழியும் உளஎன மொழிப.**

இது வல்லெழுத்து மிகுக என்றலின் எய்தியது இகந்துபடாமற் காத்தது.

*(இ-ள்.)* இடம் வரை கிளவிமுன் - இடத்தை வரைந்துணர்த்தும் மீ என்னும் சொல்லின்முன்னர்; வல்லெழுத்து.....மொழிப - இயல்பாய் முடிதலேயன்றி

வல்லெழுத்து மிக்கும் முடியும், தம்மில் ஓசை இயைந்து நிற்றலையுடைய மொழிகளும் உள என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

*(உ-ம்.) மீக்கோள்*[1] *(ஆசாரக். 31) மீப்பல்*[2] *எனவரும்.*

உடனிலை என்றனான், மீங்குழி[3] மீந்தோல்[4] என மெல்லெழுத்துப் பெற்று முடிவனவும் கொள்க. *(49)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***251.*** *1, 3, 4.* இளம்பூரணர் உரைக்குறிப்பு நோக்குக.

2. (பல்லுக்கு) மேலிடத்தில் முளைத்த பல்.
மேலாகிய பல் - என அல்வழி முடிபு.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***251.*** **இடம்வரை கிளவிமுன்.......உளவென மொழிப.**

மீக்கொடி மீப்பல் என வரும். இவை இருபெய ரொட்டுப் பண்புத்தொகை போல, கொடியினது மேற் பகுதியையும் பல்லினது மேற்பகுதியையும் உணர்த்தி ஒருசொல் நீர்மையவாய் நிற்குமாறு கண்டுகொள்க.

## இளம்பூரணம்

### *253. ஈகாரஈற்றுப் பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமைக் கண்ணும் அதன்ஓ ரற்றே.**

இச்....எனின், அவ்வீற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* ஈகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும், ஆகாரஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்துப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்) ஈக்கால் சிறகு தலை புறம் - என வரும். *(50)*

## நச்சினார்க்கினியம்

### 252. இவ்வீற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது ஈகார ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்.....ஓரற்று - ஈகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், ஆகார ஈற்று அல்வழி போல, வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஈக்கால் சிறகு தலை புறம், தீக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். *(50)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**253. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

'அதனோ ரற்றே' என்றதற்கு ஆகார ஈற்றுப் பெயரோடு ஒருதன்மைத்து எனப் பொருள்கூறாது, உரைகாரர் ஆகார ஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்து என்று கூறுதற்குக் காரணம் தெரியவில்லை. அல்வழியிலும் வேற்றுமைப் புணர்ச்சி யிலும் செய்கை ஒன்றாகவிருப்பினும், வேற்றுமைப் புணர்ச்சியில் ஈகார ஈறு ஆகார இறுதியை ஒத்தது எனக் கூறுவதே நேரிதாகும் எனத் தோன்றுகிறது.

***253.*** [இவ்வியல் முதற்சூத்திரம் அல்வழிமுடிபு பற்றிக் கூறி, வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே (217) என வேற்றுமை முடிபினை அல்வழியொடு மாட்டெறிதலின், அல்வழி முடிபினையே மாட்டேற்றுப் பொருளாக உரையாசிரியன்மார் கொண்டனர் போலும். சாத்திரியார் குறிப்புச் சால ஏற்கும்.]

## இளம்பூரணம்

### 254. 'நீ' நின் ஆதல்

**நீஎன் ஒருபெயர் உருபுஇயல் நிலையும்**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இச்.....எனின், அவ்வீற்று வேற்றுமை முடிபினுள் ஒன்றற்கு வேறுமுடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) நீயென நின்ற ஒருபெயர், உருபு புணர்ச்சிக்கண் நெடுமுதல் குறுகி னகரவொற்றுப் பெற்று முடிந்த இயல்பின் கண்ணே (உரு.7) நின்று முடியும்; அவ்வாறு முடிந்தவிடத்து இயைபுவல்லெழுத்து மிகாது எ-று.

(உ-ம்.) நின்கை செவி தலை புறம் - என வரும். (51)

## நச்சினார்க்கினியம்

### 253. 'நீ' நின் ஆதல்

**நீஎன் ஒருபெயர் உருபியல் நிலையும்[1]**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, வல்லெழுத்து விலக்கி னகர ஒற்றே பெறுக என்றலின்.

(இ-ள்.) நீ. . . நிலையும் - நீ என்னும் ஓரெழுத்தொரு மொழி, உருபுபுணர்ச்சிக்கண் நெடுமுதல் குறுகி னகரம் ஒற்றி நின்றாற்போல் (179), ஈண்டுப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் முடியும்; ஆவயின்.....ஆகும். அவ்வாறு முடிபுழி இயைபு வல்லெழுத்து மிகா எ-று.

(உ-ம்.) நின்கை செவி தலை புறம் என வரும்.

இஃது ஈகார ஈறு இகர ஈறாய், இகர ஈறு னகர ஈறாய் நின்றுழியும் 'நீ என் ஒரு பெயர்' என்றலின், திரிந்ததன் திரிபு

அதுவே ஆயிற்று[2]. 'இயற்கை யாகும்' எனவே, நிலை மொழித் தொழில் அதிகார வல்லெழுத்தை விலக்கா தாயிற்று[3]. *(51)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*253.* *1)* இவ்வாறு இத்தொடராட்சி 220, 263, 294ஆம் சூத்திரங்களிலும் நிகழும். ஈண்டு இம்மாட்டேறு 179ஆம் சூத்திர விதியை நோக்கிற்று.

*3)* இவ்வாறே 263, 294ஆம் சூத்திரங்களில் ஓதியமையும் காண்க.

*2)* நீ 'நின்' எனத் திரியினும் அது 'நீ' என ஈகார வீறாகவே கொள்ளப்பட்டுப் எய்திய பொதுவிதியான் வல்லெழுத்து விலக்குண்ணும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*253.* **நீ என் ஒருபெயர்.....இயற்கை யாகும்.**

'உருபியல் நிலையும்' என்ற மாட்டேறு, மேல் உருபியலில்,

'நீ யென் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்றா குமமே' *(179)*

என்ற சூத்திரத்தைக் குறித்தது. நான்கனுருபாகிய 'கு' வரும் போது நினக்கு என வல்லெழுத்து மிகுதலின், மாட்டேற்றான் ஈண்டும் வல்லெழுத்து மிகுதல் வருமாதலின் அதனை நீக்க வல்லெழுத்து இயற்கை யாகும் என்றார்.

இவ்வாறே, முன்னர் உருபியலோடு மாட்டெறியும் இடங்களில் வல்லெழுத்து மிகாமைக்கு விதி கூறுவார் *(263,294)*.

**253.** [நான்கனுருபு வரும்போது 'நினக்கு' என வல்லெழுத்து மிகுதலின், மாட்டேற்றான் வரும் வல்லெழுத்தை நீக்க, 'வல்லெழுத்து இயற்கை யாகும்' என்றார் ஆசிரியர் என இவ்வுரையாளர் கூறும் அமைதியையே பாலசுந்தரம் அவர்களும் குறிப்பிட்டார்.

உருபுபுணர்ச்சிக்கண் 'நீ' நின் என்றாகி நான்கனுருபு புணர்கையில் இடையே அகரச்சாரியை பெற்று வல்லெழுத்து மிக்கு முடியும். நின்+அ+கு=நினக்கு. ஈண்டுப் பொருட்புணர்ச்சிக்கண், அகரப்பேறு இல்லை. நின்+கை= நின்கை என இயல்பாக முடிந்தது. நான்கனுருபிற்கோதிய வல்லெழுத்து மிகுதல் எவ்வாறு இயலும் ?

'வேற்றுமைக்கண்ணும் அதனோ ரற்றே' (252) என்ற அதிகார வல்லெழுத்தை விலக்கவே, 'ஆவயின் வல்லெழுத் தியற்கையாகும்' என்றார் ஆசிரியர் என்பது தொல்லுரை யாளர் கருத்து. சாரியைப்பேறு அதிகார வல்லெழுத்தை விலக்காமையை 263, 294 ஆம் சூத்திரங்களிலும் இரண்டா மடியால் அன்னோர் கொண்டனர். 244ஆம் சூத்திரத்துக் குறிப்புரை காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**253.** நீயென் ஒருபெயர்......இயற்கை யாகும்.

அஃதாவது நெடுமுதல் குறுகி னகரம் பெறுதலும், ஆண்டு 'வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு' ஓதிய வல்லெழுத்து ஈண்டு மிகாமையும் பொருட்புணர்ச்சிக்குரிய தன்மையாகும் என்றவாறு.

உரையாசிரியன்மார் 'வல்லெழுத் தியற்கை' என்பதற்கு இயைபு வல்லெழுத்து எனக்கூறுவது பொருந்தாமை அறிக.

**253.** ['வேங்கடராசுலு ரெட்டியார்' அவர்களது கருத்தினை யொட்டி இவர் 'வல்லெழுத்து மிகாமையை' விளக்குகிறார்.

உரையாசிரியர் இருவரும், சாரியைப் பேறு இயைபு வல்லெழுத்துப் பேற்றினை விலக்காது என்னும் கொள்கையர். சூ. 263, 294 என்பன காண்க. இவற்றுள் இரண்டாமடி இக்கருத்தினை விளக்குதல் உணரப்படும். சாரியை ஈற்றெழுத்து, ஈரொற்றாக வல்லினமெய்யொடு மயங்குதலின்று எனினும், ஆசிரியர் இச்சூத்திரங்களுள் இவ்வாறு வலியுறுத்துதலின், அதனை வேண்டா கூறலாக உரையாசிரியன்மார் கருதாது, ஆசிரியர் இவ்வாறு கூறாத பிறவிடத்தும் இலேசினாற் கொண்டுரைப்பாராயினர். பிற்கால உரையாளர் இக்கூற்றினை மறுத்தலை மரபாகக் கொண்டனர். தம் கருத்தே ஏற்புடைத்தெனின், இச்சூத்திரங்களில் இரண்டாமடி பொருள்வற்றுதலை இன்னோர் கருதாதது என்னோ?]

## இளம்பூரணம்

### *255. உகர ஈற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**உகர இறுதி அகர இயற்றே.**

இச்....எனின், உகரஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறு.....ற்று.

*(இ-ள்.)* உகர ஈற்றுப் பெயர், அல்வழிக்கண், அகர ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* கடுக்குறிது சிறிது தீது பெரிது - என வரும். *(52)*

## நச்சினார்க்கினியம்

### *254. உகரஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு*

**உகர இறுதி அகர இயற்றே.**

இஃது உகர ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) உகர......இயற்று - உகர ஈற்றுப் பெயர், அல்வழிக்கண் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) கடுக்குறிது சிறிது தீது பெரிது என வரும். (52)

**இளம்பூரணம்**

## *256. உகரச்சுட்டு (வன்கணம் வருவழி) வல்லெழுத்து மிக்கு முடிதல்*

**சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும்.**

இச்......எனின், உவ்வீற்றுள் சுட்டு வன்கணத்தொடு கூடி முடியுமாறு கூறு.....ற்று.

(இ-ள்.) உகர ஈற்றுச் சுட்டின் முன்னரும் வல்லெழுத்து வரும்வழி அவ் அகரஈற்று அல்வழியின் தொழிலிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உக்கொற்றான் சாத்தன் தேவன் பூதன் - என வரும். (53)

**நச்சினார்க்கினியம்**

## *255. உகரச்சுட்டும் வன்கணம் வருவழி வலி மிகுதல்*

**சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும்.**

இஃது உகர ஈற்றுச் சுட்டு வன்கணத்தொடு முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டின்......ஆகும் - உகர ஈற்றுச் சுட்டின் முன்னும் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) உக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் என வரும். (53)

## இளம்பூரணம்

### 257. அது பிறகணம் வருவழி அகரச்சுட்டுப் போல முடியுமாறு

**ஏனவை வரினே மேல்நிலை இயல.**

இச்....எனின், அவ்வீற்றுள் சுட்டு, ஒழிந்த கணத்தொடு முடியுமாறு கூறு....ற்று.

(இ-ள்.) உகர ஈற்றுள் சுட்டின்முன் ஒழிந்தகணம் வருமொழியாக வரின், மேல் அகரஈற்றுச் சுட்டு முடிந்து நின்ற நிலைமையின் இயல்பையுடையவாய் முடியும் எ-று.

(உ-ம்.) உஞ்ஞாண் உந்நூல் உம்மணி - எனவும், உவ் யாழ் உவ்வட்டு - எனவும், உவ்வடை உவ்வாடை உவ்வௌவியம் - எனவும், ஊவயினான எனவும் வரும். (54)

## நச்சினார்க்கினியம்

### 256. பிறகணம் வரின், அகரச்சுட்டின் இயல்பெற்றாதல்

**ஏனவை வரினே மேல்நிலை இயல.**

இஃது உகரஈற்றுச் சுட்டு, ஒழிந்த கணங்களொடு முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஏனவை.....இயல - உகரஈற்றுச் சுட்டின்முன் வல்லெழுத்து அல்லாத [illegible]ன்கணம் முதலிய மூன்றும் வரின், அகரச்சுட்டு முடிந்தாற்போல[1], ஞநமத் தோன்றின் ஒற்றுமிக்கும், யவ் வரினும் உயிர் வரினும் வகரம் ஒற்றியும், செய்யுளில் நீண்டும் முடியும் எ-று.

(உ-ம்.) உஞ்ஞாண் உந்நூல் உம்மணி எனவும், உவ்யாழ் உவ்வட்டு எனவும், உவ்வடை உவ்வாடை எனவும், ஊவயினான எனவும் வரும். (54)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*256.* 1) சூ. 205 -208.

### இளம்பூரணம்

## *258. சுட்டுமுதல் உகரம் இயல்பாதல்*

**சுட்டுமுதல் இறுதி இயல்ஆ கும்மே.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கி இயல்பு கூறு....ற்று.

(இ-ள்.) சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுப்பெயர்[1], மேற்கூறிய வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) அது குறிது, இது குறிது, உது குறிது - சிறிது தீது பெரிது என வரும். (55)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*258.* 1) 'அது இது உதுவென வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்'
(பெய. 13)

என்னும் சூத்திரத்து முதலடியில் முற்றுகரவீற்றுச் சுட்டுப் பெயர்களையும் இரண்டாமடியில் குற்றியலுகரவீற்றுச் சுட்டுப்பெயர்களையும் குறித்தார். அவ்விருதிறத்துச் சுட்டுப் பெயர்முடிவுகளையும் முறையே இவ்வதிகாரத்து 177, 250, 259, 264ஆம் சூத்திரங்களானும், 201, 423, 424, 425ஆம் சூத்திரங்களானும் விதிப்பார்.

### நச்சினார்க்கினியம்

## *257. சுட்டுமுதல் உகரம் இயல்பாக முடிதல்*

**சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே.**

இஃது இவ்வீற்றுள் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கி இயல்பு கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டு.....ஆகும் - சுட்டெழுத்தினை முதலாக உடைய உகர ஈற்றுப்பெயர், முற்கூறிய வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) அது குறிது-இது குறிது - உது குறிது - சிறிது நீது பெரிது[1] என வரும்.

முற்கூறியவை சுட்டு மாத்திரை; இவை சுட்டுப் பெயராக உணர்க. (55)

## இளம்பூரணம்

### 259. 'அன்று' வருவழியும் 'ஐ' வருவழியும் அது முடியுமாறு

**அன்றுவரு காலை ஆஆ குதலும்**
**ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்**
**செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப.**

இச்....எனின், இவ்வீற்றுள் சுட்டுமுதல் பெயர்க்கு ஒரு செய்யுள் முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அதிகாரத்தான் நின்ற சுட்டுமுதல் உகரஈற்றுப் பெயர் அன்று என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து உகரம் ஆகாரம் ஆகி முடிதலும், ஐ என்னும் சாரியை இடைவந்து முடியுங்காலத்து அவ்வுகரம் தான் ஊர்ந்த மெய்யை ஒழித்துக் கெட்டு முடிதலும்[1], இவ்விருமுடிவும் செய்யுட்கண் உரித்தென்று[2] சொல்லுவர் எ-று.

வருமாறு: அதாஅன்றம்ம இதாஅன்றம்ம உதா அன்றம்ம - எனவும், அதைமற்றம்ம உதைமற்றம்ம - எனவும் வரும். *(56)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***259.*** *1)* முற்றியலுகரம் கெட்டுமுடிதல் *177, 259, 264, 300, 375, 392*ஆம் சூத்திரங்களான் அறியப்படும்.

*2)* ஆகுதலும் உரித்து, கெடுதலும் உரித்து எனத் தனித் தனியே கூட்டியுரைக்க.

*3)* அதை மற்றம்ம - அது.

*4)* எருவங்குழி எருவஞ்செறு எருவந்தாது எரும்பூமி என்பனவற்றை 'அம்மின் இறுதி' *(130)* என்பதனான் முடிக்க.

## நச்சினார்க்கினியம்

### *258.* *அதன்முன்னர் 'அன்று' வருவழியும் 'ஐ' வருவழியும் செய்யுள் முடிபு*

**அன்றுவரு காலை ஆஆ குதலும்**
**ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்**
**செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப.**

இஃது இவ்வீற்றுச் சுட்டு முதற்பெயர்க்கு ஒரு செய்யுள் முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* அன்று.....ஆகுதலும் - அதிகாரத்தான் நின்ற சுட்டுமுதல் உகர ஈற்றின் முன்னர், அன்று என்றும் வினைக் குறிப்புச்சொல் (சொல்.222 நச்.) வருங்காலத்து, அத்தகர ஒற்றின்மேல் ஏறிநின்ற உகரம் ஆகாரமாய்த் திரிந்து முடிதலும்; ஐ.....கெடுதலும் - அதன் முன்னர் ஐ என்னும் சாரியை வருங்காலத்து, அத்தகர ஒற்று நிற்க அதன்மேலேறிய உகரம் கெடுதலும்; செய்யுள்.....மொழிப - செய்யுட்கண் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) அதாஅன்றம்ம இதாஅன்றம்ம உதாஅன்றம்ம 'அதாஅன் றென்ப வெண்பா யாப்பே' (செய்.82) எனவும், அதைமற்றம்ம இதைமற்றம்ம உதைமற்றம்ம[1] எனவும் வரும்.

'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் முடியாததனை முட்டின்றி முடித்தல்'[2] என்பதனான், அதன்று இதன்று உதன்று என உகரம் கெட்டுத் தகரஒற்று நிற்றல் கொள்க. (56)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***258.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. இவ்வுத்தியை எடுத்தாளுதலை 32, 101ஆம் சூத்திர வுரையுள்ளும் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***259.*** **அன்றுவரு காலை........உரித்தென மொழிப.**

பல்லவை போன்ற இடங்களில் ஐகாரத்தை ஆசிரியர் வழங்கினமையின், அது என்றதன் பின்னரும் ஐகாரம் வருதல் கூடும்.

***259.*** ['பல்லவை' என்புழி, வை சாரியை யன்று. 'பல்ல' என்பது போலவே 'பல்லவை' என்பதும் பலவறிசொல். ஆண்டு 'வை' பின்னுளோர் கருத்திற்கேற்ப விகுதியாம் இடைச்சொல். 'அதைமற்றம்ம' என்புழி 'அது' என்னும் சுட்டுப்பெயரையடுத்து வந்த ஐகாரம் சாரியை. 'பல்லவை' என்புழி இறுதி ஐ அன்று, வையே ஆம் என்க.]

**வேங்கடராசுலு ரெட்டியரர் உரைக்குறிப்பு**

***258.*** **அன்றுவரு காலை........உரித்தென மொழிப**

அது என்னும் சொல்லின்முன் அன்று என்பது வருமாயின், அதுவன்று என்றாவது, அஃதன்று என்றாவது முடிதலே முறை. அவ்வாறன்றி, அது என்பதிலுள்ள உகரம் ஆகாரமாதற்கு நியாயம் இன்று. இதனை நோக்கின் உண்மைத் தன்மை வேறாதல் வேண்டும் என்பது புலனாகும்.

அது இது என்பன, வடமலையாளத்திற் போலவே தமிழ்நாட்டிலும் அத இத உத என்று வழங்கியிருத்தல் கூடும். அகரவீற்றின்முன் அகரம்வரின், ஒருசொல் நீர்மையில் அவ்விரண்டு அகரமும் ஓர் ஆகாரமாகி வழங்கும். ஆதலின், அத+அன்று=அதான்று என வந்தது, மர+அடி=மராடி என்றாவது போல. அதான்று என்னும் சொல்லின் நிலையைக் கண்டு ஆசிரியர் இவ்வாறு விதி கூறினாராவார். வருமொழி இது எனத் தெளிவாகாமையின் அதனை அறிவித்தற்காக அகரம் அறிகுறியளவில் எழுதப்பட்டதாகும்.

**258.** ['அதாஅன்று' என்புழி 'அ' அளபெடையெழுத் தன்மையின், மூன்று மாத்திரையாக 'தா' நீட்டியொலிக்கப் படாது. 261, 284, 311ஆம் சூத்திரங்களான் முடியும் எழூஉக்கதவு-பனாஅட்டு-மராஅடி - என்னும் புணர்மொழி களுள்ளும் ஊகாரத்தையும் ஆகாரத்தையும் மூன்று மாத்திரையாக நீட்டியொலித்தல் கூடாது. இவற்றுள் முறையே உகரமும் அகரமும் எழுத்துப் பேறாம்; அகரம் வருமொழி முதலைக் காட்ட வந்த அறிகுறியெழுத்தாம்; உகரம் நிலைமொழியீறு இஃதெனக் காட்ட வந்த அறிகுறி யெழுத்தாம்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**258.** **அன்றுவரு காலை.........உரித்தென மொழிப.**

செய்யுள் முடிபாதலான் ஐகாரச்சாரியை புணருங்கால் குற்றொற்று இரட்டாதென்க.

நச்சினார்க்கினியர் 'மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல்' என்னும் உத்தியான், அதன்று இதன்று உதன்று என வருதலும் கொள்க என்பார். அவை அஃது இஃது உஃது என்னும் சுட்டுப்பெயர்களை இலக்கணமுணராதார் ஆய்தமின்றி வழங்கும் இழிவழக்கு ஆதலின், அவற்றை உத்தியான் அமைத்தல் தகவாகாது என்.

இப்புணர்மொழிகளை நோக்கின், இவை அஃதன்று என முற்றாயும், அதுவே அன்றியும் என எச்சமாயும், சங்கவிலக்கியங்களுள் பயின்று வருதலைக் காணலாம். ஆகவே, இச்சொற்கள் வினாவிடை முறையில் அதுவா? அன்று (அது+ஆ+அன்று) என நின்று, அதா - அன்று எனப் புணர்ந்துள்ளமை அறியலாம். அன்றி என்னும் எச்சம் அன்று எனத் திரியும் என்பது விதியாகலின், எச்சமாக நின்று புணர்ந்த செய்யுள்முடிபு எனக்கோடலே தக்கதாம்.

*258.* [அதுவா ? அன்று என்னுமிடத்து, சுட்டுப்பெயரை இலக்கணமுணராதார் ஆய்தமின்றி வழங்கும் இழிவழக்கு வந்துள்ளதே. அது-ஆ-அன்று > அதாஅன்று என முடிபு காட்டும் இவர், அதன்று முதலியவற்றை இழிவழக்காகக் கோடல் என்னேயொரு முரண்பாடு!]

**இளம்பூரணம்**

### *260. உகரஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**வேற்றுமைக் கண்ணும் அதன்ஓ ரற்றே.**

இச்.....எனின், இவ்வீற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறு.....ற்று.

(இ-ள்.) உகரஈற்றுப்பெயர், வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண் அவ் அகரஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) கடுக்காய் செதிள் தோல் பூ - எனவரும். (57)

**நச்சினார்க்கினியம்**

### *259. உகரஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது இவ்வீற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்......ஓரற்று - உகர ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், அகரஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* கடுக்காய் செதிள் தோல் பூ எனவும், கடுக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். *(57)*

**இளம்பூரணம்**

***261. எரு, செரு - என்னும் பெயர்கள் வேற்றுமைக்கண் முடியுமாறு***

**எருவும் செருவும் அம்மொடு சிவணித்**
**திரிபிடன் உடைய தெரியுங் காலை**
**அம்மின் மகரம் செருவயின் கெடுமே**
**தம்ஒற்று மிகூஉம் வல்லெழுத்து இயற்கை.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை விதியும், ஒன்றற்கு வல்லெழுத்தினொடு சாரியை விதியும் கூறு.....ற்று.

*(இ-ள்.)* எரு என்னும் சொல்லும் செரு என்னும் சொல்லும், அம்முச் சாரியையொடு பொருந்தி முன் *(57)* சொன்ன வேற்றுமைப் பொதுவிதியின் வேறுபட்டு முடியும் இடனுடைய, ஆராயுங் காலத்து; அவ் அம்முச் சாரியையது ஈற்றின் மகரம் செரு என்னும் சொல்லிடத்துக் கெட்டு முடியும்; அவ்வாறு கெட்டவிடத்துச் செரு என்பது வல் லெழுத்தாகிய இயல்புடைய தம் ஒற்று மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* எருவங்குழி செறு தாது பூழி[1] - எனவும், செருவக்களம் சேனை தானை பறை - எனவும் வரும்.

'தெரியுங்காலை' என்றதனான், எரு என்பதற்குச் சிறுபான்மை மெல்லெழுத்துப் பேறும் வல்லெழுத்துப் பேறும், செரு என்பதற்குச் சிறுபான்மை வல்லெழுத்துப் பேறும் கொள்க.

*(உ-ம்.)* எருங்குழி, எருக்குழி; செருக்களம் - எனவரும்.

'வல்லெழுத்தியற்கை' என்றதனான், உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி, அவ்விரு மொழிக்கும் வல்லெழுத்து வீழ்வும் கொள்க.

*(உ-ம்.)* எருவின் கடுமை, செருவின் கடுமை - என வரும்.

இன்னும் அதனானே, 'அம்மொடு சிவணித் திரிபிடன் உடைய' என வல்லெழுத்தின்கண்ணதாக வரைந்து கூறினமையின்[2], அம்முச்சாரியை இயல்புகணத்துக்கண் பெறுவன கொள்க.

*(உ-ம்.)* எருவஞாற்சி, செருவஞாற்சி - என வரும். *(58)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***261.*** 1.எருவங்குழி எருவஞ்செறு எருவந்தாது எருவம்பூழி என்பனவற்றை அம்மின் இறுதி *(130)* என்பதனான் முடிக்க.

2. வேற்றுமை மாட்டேறு வன்கணத்திற் சென்றது இச்சூத்திரத்தும் தொடர்வதாகக் கொள்க.

**நச்சினார்க்கினியம்**

## *260. எரு, செரு - என்பவற்றின் முடிபு*

**எருவும் செருவும் அம்மொடு சிவணித்**
**திரிபிடன் உடைய தெரியுங் காலை**
**அம்மின் மகரம் செருவயின் கெடுமே**
**தம்ஒற்று மிகூஉம் வல்லெழுத்து இயற்கை.**

இஃது அவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை விதியும், ஒன்றற்கு வல்லெழுத்தினொடு சாரியை விதியும், சாரியை பெறாதவழி வல்லெழுத்து மெல் லெழுத்துப் பேறும் கூறுகின்றது.

*(இ-ள்.)* எருவும் செருவும் - எரு என்னும் சொல்லும், செரு என்னும் சொல்லும்; *அம்மொடு....காலை*-அம்முச் சாரியையொடு பொருந்தி, அதிகார வல்லெழுத்துப் பெறாமல் *(259)* திரியும் இடனுடைய, ஆராயுங்காலத்து; *அம்மின்....கெடும்* - ஆண்டு அம்முச்சாரியையினது ஈற்றின் மகரம், செரு என்னும் சொல்லிடத்துக் கெட்டு முடியும்; வல்லெழுத்து மிகூஉம் - ஆண்டுச் செருவின்கண் வல் லெழுத்து மிக்கு முடியும்; இயற்கைத்[1] தம் ஒற்று மிகூஉம்- அம்முப் பெறாதவழி, இரண்டற்கும் தமக்கு இயற்கையாகிய வல்லொற்றும் மெல்லொற்றும் மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* எரு என நிறுத்திக் குழி சேறு தாது பூழி எனத் தந்து அம்முக் கொடுத்து, *'அம்மின் இறுதி' (129)* என்றதனான் எருவங்குழி சேறு தாது பூழி என முடிக்க.

செரு என நிறுத்திக் களம் சேனை தானை பறை எனத் தந்து இடை அம்முக் கொடுத்து, மகரம் கெடுத்து வல்லெழுத்துக் கொடுத்து, செருவக்களம் சேனை தானை பறை என முடிக்க.

இனி அம்முப்பெறாதவழி, எருக்குழி எருங்குழி என வல்லெழுத்தும் மெல்லெழுத்தும் கொடுத்து முடிக்க.

இனி, செருவிற்கு **ஏற்புழிக்கோடல்** என்பதனான், செருக் களம் என வல்லெழுத்தே கொடுத்து முடிக்க.

தெரியுங்காலை என்றதனான், எருவின் குறுமை செருவின் கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி, வல்லெழுத்து வீழ்தலும், எருவஞாற்சி செருவஞாற்சி - என இயல்புகணத்துக்கண் அம்முப் பெறுதலும் கொள்க. மகரம் *'மென்மையும் இடைமையும்' (130)* என்பதனாற் கெடுக்க.

தம்மொற்று மிகூஉம் என உடம்பொடு புணர்த்துச் ? சூத்திரம் செய்தலின் உகரம் நீட வருதலும் கொள்க.

வரூஉம் தரூஉம் படூஉம் என வரும். *(58)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***260.*** *1.* வல்லொற்று வேற்றுமையதிகாரத்தான் மிகும்; மெல்லொற்று 143ஆம் சூத்திரவிதியான் மிகும்.

2. ஆசிரியர் ஒருவிதியை வெளிப்படக் கிளந்தோதாது, தாம் ஓதும் ஒரு சூத்திரத்துள் அவ்விதி யமையும் சொல்லையோ சொற்றொடரையோ எடுத்தாளுதல் உடம்பொடு புணர்த்துக் கூறலாம்.

தொழிற்பெயரல்லாத பிறபொருட்பெயரும் ஓரோவழி உகரச்சாரியை பெறும் என்பதனை 'அத்தொடு....ஒத்த எண்ணு முன்வரு காலை' (317) என்று உடம்பொடு புணர்த்தார். இவ்வாறு ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறுமிடங்கள் ஏறத்தாழ இருபதாம். (நூல் முழுதும் என்க.)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***260.*** எருவும் செருவும்........வல்லெழுத் தியற்கை.

'மிகூஉம்' என உடம்பொடு புணர்த்துக் கூறினமையான், தரூஉம்-படூஉம்-என உகர நீட்சியும் கொள்க என்பார் நச்சினார்க்கினியர். அவை உகரஈற்றுச் சொற்கள் அன்மையின் ஈண்டைக்கு ஏலாமை யறிக. மற்று இவ்வாறு வருவன சீர் நிறைக்க வந்த செய்யுளிசையளபெடை எனக் கோடலே முறை யென்க.

***260.*** [மிகும் என்ற சொல்லினை ஆசிரியர் மிகூஉம் என அளபெடையாய்ப் புணர்த்தமை நோக்கி, பிற சொற்களிடை வரும் உகரமும் வரூஉம் தரூஉம் படூஉம் முதலாக அளபெடுக்கும் என்றார் நச்சினார்க்கினியர்; உகரஈறு பற்றிய நூற்பாவில் 'உடம்படு புணர்த்த'தையுட்கொண்டு மிகும் - மிகூஉம் என்றாயினமை போலத் தரும் முதலியனவும் அளபெடுத்து வரும் என, இயைபு பற்றிக் கூறினார்.

அச்சொற்களை ஈண்டுக் குறிப்பிடாவிடின் யாண்டுக் குறிப்பிடுதல் கூடும்? குறில் நின்றவிடத்தும் அளபெடை வரும் என்னும் அடுத்த சூத்திரத்தின் இயைபு நிகழ்தல் போல, பிறிதோரியைபு நூலுள் யாண்டும் இன்று.

இவ்வளபெடையைப் புணர்ச்சிவிகாரமாக இச்சூத்திர வுரையுள் நச்சினார்க்கினியர் கருதிலர். கருதியதாக இவ்வுரைகாரர் கொள்வது பொருந்தாது.] -தி. வே. கோ.

## இளம்பூரணம்

### *262. செய்யுட்கண் ழகரஉகர ஈற்றுப்பெயர் முடியுமாறு*

**ழகர உகரம் நீடுஇடன் உடைத்தே**
**உகரம் வருதல் ஆவயி னான.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்குச் செய்யுளுள் எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) இவ்வீற்று மொழிகளுள் ழகரத்தொடு கூடிய உகரஈற்றுமொழி, அவ்வுகரம் ஊகாரமாய் நீண்டு முடியும் இடனுடைத்து; அவ்விடத்து உகரம் வந்து முடிக எ-று.

'இடனுடைத்து' என்றதனான், இது செய்யுளிடத்தது எனக்கொள்க.

(உ-ம்.) 'பழூஉப்பல்[1] அன்ன பருஉகிர்ப் பாவடி' (குறுந்.180) எனவரும். (59)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*262.* 1) பழு - பேய்.

பொருட்பெயர்க்கன்றித் தொழிற்பெயர்க்கும் சூத்திரம் பொதுப்பட நிற்றலின், தழு+உ - எழு+உ - என முதனிலைத் தொழிற்பெயர் உகரச் சாரியையொடு புணருமிடத்து இரண்டு உகரம் ஒரு நெட்டுகரமாகி தழூ எழூ என முடிந்தன; நிலைமொழியீறு உகரம் என்பது தோன்ற அறிகுறி யெழுத்தாக ஓர் உகரம் ஊகாரத்தையடுத்து வந்தது. ஊகாரத்தை அளபெடையாக நீட்டி யொலிக்கலாகாது என்பர் ரெட்டியார்.

## நச்சினார்க்கினியம்

### *261. ழகரஉகர ஈற்றுச்சொல் முடியுமாறு*

**ழகர உகரம் நீடுஇடன் உடைத்தே**
**உகரம் வருதல் ஆவயி னான.**

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது, வல்லெழுத்திேனாடு உகரம் பெறுதலின்.

(இ-ள்.) ழகர.....உடைத்து - உகரஈற்றுச் சொற்களுள், ழகரத்தொடு கூடிய உகர ஈற்றுச்சொல் நீண்டுமுடியும் இடனுடைத்து; ஆவயினான உகரம் வருதல் - அவ்விடத்து உகரம் வந்து முடிக எ-று.

(உ-ம்.) எழூஉக் கதவு சிறை தானை படை எனவரும்.

'நீடிடனுடைத்து' என்றதனான், நீளாதும் உகரம் பெறாதும் வருமாயிற்று, குழுத்தோற்றம் என வரும்.

இன்னும் இதனான், பழுக்காய்[1] என அல்வழிக் கண்ணும் இவ்விதியன்றி வருதல் கொள்க.

'ஆவயினான' என்றதனான், பெரும்பான்மை செய்யுட் கண் நீண்டு உகரம் பெற்று

'எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' (புறநா. 97)

எனவும்,

'பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி' (குறுந். 180)
எனவும் வருதல் கொள்க. (59)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*261.* 1. பழுத்த பாக்கு; பழுத்ததாகிய காய் என இருபெயரொட்டாம். 'பழுக்காய்க் கமுகு' என்பது பெருங்கதை.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**260.** **ழகர உகரம் ...... ஆவயி னான.**

'நீடிடனுடைத்து' என்றதனான், பழுக்காய் என அல்வழிக்கண்ணும் இவ்விதியின்றி வருதல் கொள்க என நச்சினார்க்கினியத்துள் உள்ளது. இஃது 'உகர இறுதி அகர இயற்றே' (255) என்ற சூத்திரத்தாற் கொள்ளப்படும்.

**260.** [ழகர உகரம் சிலவிடத்தே நீடாது என்பதனைப் 'பழுக்காய்' என்ற உதாரணத்தாற் சுட்டினார் நச்சினார்க்கினியர். 'உகர இறுதி அகர இயற்றே' என்புழி இத்தொடரை எடுத்துக்காட்டுதல் நிரம்பாது. ஈண்டுக் காணும் இயைபுடைமை ஆண்டு இல்லாமை உணரப்படும்.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**261.** **ழகர உகரம்...........ஆவயி னான.**

எழு தழு போன்ற உகர ஈற்றுச் சொற்கள் விகுதி உகரத்தோடு சேர்ந்து எழூ தழூ என நீண்டவிடத்து, அவற்றை ஊகார ஈற்றன எனவும் கருதுதல் கூடுமாகலின், அவை உகர வீற்றனவே என்பது அறிவித்தற்கு ஆண்டு உகரமிட்டு எழுதுவாராயினர். இஃது இச்சூத்திரத்தான் உய்த்துணரப்படும்.

**261.** [நிலைமொழியீற்று உகரம் நீண்டவிடத்து, உகரமே இயல்பான ஈறு என்பதனை உணர்த்த, எழூஉ என ஆண்டு ஓர் உகரமிட்டு எழுதுப என்றார் இவ்வுரையாளர். மூன்று மாத்திரையாக நீட்டி யொலிக்காமல் நெடிலாகவே ஒலிக்க வேண்டும் என்பதற்காக இவ்வமைதி கூறினார்.]

## இளம்பூரணம்

### 263. *'ஒடு' மரப்பெயர் (வன்கணம் வருவழி) முடியுமாறு*

**ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே.**

இச்....எனின், இவ்வீற்று மரப்பெயர் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்.....ற்று.

*(இ-ள்.)* ஒடு என்னும் மரத்தினை உணரநின்ற சொல், உதி என்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்துப் பெற்றுமுடியும் எ-று.

*(உ-ம்.)* ஒடுங்கோடு செதிள் தோல் பூ - எனவரும். *(60)*

**நச்சினார்க்கினியம்**

## *262. 'ஒடு' மரப்பெயர் மெல்லெழுத்து மிகுதல்*

**ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே.**

இஃது அவ்வீற்று மரப்பெயருள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

*(இ-ள்.)* ஒடு.....இயற்று - ஒடு என்னும் மரத்தினை உணரநின்ற சொல், உதி என்னும் மரத்தின் இயல்பிற்றாய் *(243)* மெல்லெழுத்துப் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* ஒடுங்கோடு[1] செதிள் தோல் பூ என வரும். மரம் என்றார், ஒடு என்னும் நோயை நீக்குதற்கு.

முன்னர் உதிமரத்தின் பின்னர் அம்முப் பெறுகின்ற புளிமரம் *(244)* வைத்த இயைபான் இதற்கு அம்முப்பேறு கொள்க.

ஒடுவங்காடு[2] என வரும். *(60)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***262.*** *1. மெல்லெழுத்து மிகுமாறு 143ஆம் சூத்திர விதியாற் கொள்க.*

*2. அம்மின் மகரம் திரிதல் 129ஆம் சூத்திர விதியாற் கொள்க.*

**இளம்பூரணம்**

## *264. சுட்டுமுதல் உகரம் அன்சாரியை பெறுதல்*

**சுட்டுமுதல் இறுதி உருபுஇயல் நிலையும்**
**ஒற்றுஇடை மிகாஅ வல்லெழுத்து இயற்கை.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச் சொற்கள் உருபுபுணர்ச்சியிற் சொன்ன (உரு.4) இயல்பிலே நின்று அன்சாரியை பெற்று உகரம் கெட்டு முடியும்; அவ்விடத்து வல்லெழுத்து இயற்கையாகிய ஒற்று இடைக்கண் மிகா எ-று.

(உ-ம்.) அதன்கோடு இதன்கோடு உதன்கோடு செதிள் தோல் பூ - என வரும்.

'ஒற்றிடை மிகா' என்று ஓதிய அதனான், சாரியை வகுப்ப வல்லெழுத்து வீழாது என்பது பெற்றாம்[1].

'வல்லெழுத்தியற்கை' என்றதனான், இவ்வீற்றுள் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

(உ-ம்.) கடுவின் குறை ஒடுவின் குறை - என வரும்.(61)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**264.** 1) நச்சினார்க்கினியரும் இக்கொள்கையரே. 253, 263, 294(நச்.) ஆம் சூத்திரத்து அவருரை காண்க.

## நச்சினார்க்கினியம்

### *263. சுட்டுமுதல் உகரம் (வேற்றுமைக்கண்) முடியுமாறு*

**சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்**
**ஒற்றுஇடை மிகாஅ வல்லெழுத்து இயற்கை.**

இது சுட்டுப் பெயர்க்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தது.

*(இ-ள்.)* சுட்டு....நிலையும் - சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச் சொற்கள், பொருட்புணர்ச்சிக் கண்ணும், உருபு புணர்ச்சியிற் கூறிய இயல்பிலே நின்று (176) அன்சாரியை பெற்று உகரம் கெட்டு முடியும்; வல்லெழுத்து இயற்கை ஒற்று இடைமிகா - வல்லெழுத்து இயற்கையாகிய ஒற்று இடைக்கண் மிகா எ-று.

*(உ-ம்.)* அதன்கோடு இதன்கோடு உதன்கோடு செதிள் தோல் பூ என வரும்.

'ஒற்றிடைமிகா' எனவே, சாரியை வகுப்ப வல்லெழுத்து வீழா என்பது பெற்றாம்[1].

'வல்லெழுத்தியற்கை' என்றதனான், உகர ஈற்றுள், எருவும் செருவும் ஒழித்து ஏனையவற்றிற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

கடுவின்குறை ஒடுவின்குறை எழுவின்புறம் கொழுவின்கூர்மை என வரும்.

இன்னும் இதனானே, 'உதுக்காண்'(குறுந். 191, அகநா.9) என்றவழி வல்லெழுத்து மிகுதலும் கொள்க. (61)

#### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***263.*** 1. 253, 296ஆம் சூத்திரவுரையுள்ளும் இச்செய்தி வலியுறுத்தப்படுதல் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*263.* சுட்டுமுதல் இறுதி......வல்லெழுத் தியற்கை.

'உதுக்காண்' என்பது இரண்டாம் வேற்றுமைத் திரிபாகலின், சாரியை பெறாது வல்லெழுத்து மிக்குப் புணர்ந்தது.

*263.* *[உதுக்காண்: உங்கே காண்பாயாக என ஏழன் பொருட்டாவதன்றி உதனைக் காண்பாயாக என இரண்டன் பொருட்டாக வருமாறில்லை. 'உவக்காண்' (குறள் 1185) என்னும் வழக்கும் இப்பொருட்டே. ஒட்டிநின்ற இடைச் சொல்லாக உவக்காண்-இவக்காண்-வழங்கின (பரி.உரை). ஏழன்பொருட்டாக நிகழினும், ஒட்டி ஒரு சொன்னீர்மைத் தாய் நிற்றலின் நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப் படாது. ஏழன்பொருட்டாகவே நிற்கும் இத்தொடரைப் 'புணரியல் நிலையிடை யுணரத் தோன்றா' தெனக் கொள்ளலே சாலும்.]*

**இளம்பூரணம்**

### *265. ஊகார ஈற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**ஊகார இறுதி ஆகார இயற்றே.**

இச்...எனின், ஊகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறு.....ற்று.

*(இ-ள்.)* ஊகார ஈற்றுப்பெயர், அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* கொண்மூக் கடிது சிறிது தீது பெரிது - என வரும். *(62)*

## நச்சினார்க்கினியம்

### *264. ஊகார ஈற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**ஊகார இறுதி ஆகார இயற்றே.**

இது நிறுத்தமுறையானே, ஊகார ஈறு அல்வழிக்கண் புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஊகார.....இயற்று - ஊகார ஈற்றுப்பெயர், அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் (221) வல்லெழுத்து வந்துழி, அவ்வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* எழூஉக்கடிது கொண்மூக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (62)

## இளம்பூரணம்

### *266. இவ்வீற்று வினைச்சொல் முடியுமாறு*

**வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்**
**நினையுங் காலை அவ்வகை வரையார்.**

இச்.....எனின், இவ்வீற்று வினைச்சொற்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* ஊகார ஈற்று வினையெச்சமாகிய சொல்லிற்கும், முன்னிலை மொழியாகிய வினைச் சொல்லிற்கும், ஆராயுங்காலத்து அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் கூற்றினை நீக்கார் எ-று.

*(உ-ம்.)* உண்ணூக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவும், கைதூஉக் கொற்றா சாத்தா தேவா பூதா- எனவும் வரும்.

'நினையுங்காலை' என்றதனான், இவ்வீற்று உயர் திணைப்பெயர் அல்வழிக்கண் வல்லெழுத்து மிக்கு முடிவனை கொள்க.[1]

(உ-ம்.) ஆடூஉக் குறியன், மகடூஉக் குறியள் - என வரும்[1]. *(63)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***266.*** *1.* 154ஆம் சூத்திரத்தான் உயர்திணைப்பெயர் இருவழியும் இயல்பாய் முடிதல் கூறியமையின், ஈண்டு இவ்வீற்றுயர்திணைப்பெயர் அல்வழிக்கண் வல்லெழுத்து மிகுதலை இலேசினான் முடித்தார்; 268ஆம் சூத்திரத்து இலேசினான் வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுதலை முடித்தார்.

**நச்சினார்க்கினியம்**

***265. இவ்வீற்று வினையெச்சமும் ஏவலொருமையும் அன்னவாதல்***

**வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்**
**நினையுங் காலை அவ்வகை வரையார்.**

இஃது இவ்வீற்று வினையெச்சத்திற்கு, மிக்கு முடியும் என்றலின், எய்தாதது எய்துவித்ததூஉம், முன்னிலை வினைக்கு இயல்பும் உறழ்வும் (151) மாற்றுதலின் எய்தியது விலக்கியதூஉம் நுதலிற்று.

(இ-ள்.) வினையெஞ்சு...மொழிக்கும் - ஊகார ஈற்று வினையெச்சமாகிய சொற்கும் முன்னிலை வினைச் சொற்கும்; நினையுங்காலை - ஆராயும் காலத்து; அவ்வகை வரையார் - அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் கூற்றினை நீக்கார் எ-று.

(உ-ம்.) உண்ணூக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், கைதூக்[1]கொற்றா சாத்தா தேவா பூதா எனவும் வரும்.

'நினையுங்காலை' என்றதனான், இவ்வீற்று உயர் திணைப் பெயர்க்கும் அல்வழிக்கண் வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க.

ஆடூஉக்குறியன் மகடூஉக் குறியள் என வரும்.

உயர்திணைப் பெயர் எடுத்தோதியே முடிப்பார் ஆதலின், அம்முடிபு பெறாமை[2] ஈற்றுப் பொதுவிதியான் (264) முடியாது இலேசான் முடித்தாம். (63)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***265.*** 1. கைதூ - கைவிடு (குறள் 1021).

2. அம்முடிபு சூத்திரத்தாற் பெறப்படாக் காரணம் பற்றி என்று பொருள் கொள்க. இலேசான் முடித்தல் ஆசிரியர் கிளந்தோதற்கு ஒப்பாகக் கொள்ளப்படும். என்பது உரையாசிரியன்மார் கருத்து.

## இளம்பூரணம்

## *267. இவ்வீறு வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமைக் கண்ணும் அதன்ஓ ரற்றே.**

இச்....எனின், ஊகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறு....ற்று.

(இ-ள்.) ஊகாரஈறு, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் அவ் ஆகார ஈற்று அல்வழியோடு ஒத்த இயல் பிற்றாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) கொண்மூக் குழாம் செலவு தோற்றம் பறைவு - எனவரும். (64)

**நச்சினார்க்கினியம்**

## *266. இவ்வீற்று வேற்றுமை முடிபு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது ஊகாரஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்......ஓரற்று - ஊகார ஈறு, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், ஆகார ஈற்று அல்வழி போல, வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* கழூஉக் கடுமை சிறுமை தீமை பெருமை, கொண்மூக் குழாம் செலவு தோற்றம் பறைவு[1] என வரும்.*(64)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***266.*** 1. பறைவு - நீங்குதல். 'மறைவு' என்ற பாடம் திருத்தப்பட்டுளமை காண்க. 335ஆம் சூத்திரவுரையுள்ளும் இச்சொல் உதாரணத்துட் பயிறல் காண்க.

**இளம்பூரணம்**

## *268. நிலைமொழிக்கண் உகரஎழுத்துப்பேறு தோன்றுமிடம்*

**குற்றெழுத்து இம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**நிற்றல் வேண்டும் உகரக் கிளவி.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு...ற்று.

*(இ-ள்.)* குற்றெழுத்தின் பின் நின்ற ஊகாரஈற்று மொழிக்கும், ஓரெழுத்தொரு மொழியாகிய ஊகார ஈற்று மொழிக்கும், உகரமாகிய எழுத்து நிற்றல் வேண்டும்.

(உ-ம்.) உடூஉக்குறை தூஉக்குறை[1] செய்கை தலை புறம்-என வரும்.

'நிற்றல்' என்றதனான், இவ்வீற்று உயர்திணைப்பெயர் வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிக்கு முடிவனவும் கொள்க.

(உ-ம்.) ஆடூஉக்கை மகடூஉக்கை செவி தலை புறம் என வரும். (65)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***268.*** *1.* உடூ என்னும் ஊகாரவீற்றுச்சொல்லைப் பிற்காலத்தார் உகர ஈற்றதாக உடு என வழங்குதல் காண்க.

தூ-இறைச்சி. 'நெய்கொள் நிணந்தூ நிறைய'
*(பு.வெ.மா.முல்லைப்பொதுவியல்)*

தூக்கணை கிழித்த மாக்கண் தண்ணுமை *(பதிற்.51:33)*

**நச்சினார்க்கினியம்**

***267. உகர எழுத்துப்பேறு தோன்றுமிடன்***

**குற்றெழுத்து இம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**நிற்றல் வேண்டும் உகரக் கிளவி.**

இஃது இயைபு வல்லெழுத்தினோடு உகரம் வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) குற்றெழுத்து.....மொழிக்கும் - குற்றெழுத்தின் பின் வந்த ஊகார ஈற்று மொழிக்கும், ஓரெழுத்தொரு மொழியாகிய ஊகார ஈற்று மொழிக்கும்; உகரக் கிளவி நிற்றல் வேண்டும் - உகரமாகிய எழுத்து நிற்றலை விரும்பும் ஆசிரியன் எ-று.

(உ-ம்.) உடூஉக்குறை செய்கை தலை புறம் எனவும், தூஉக்குறை - செய்கை தலை புறம் எனவும் வரும்.

'நிற்றல்' என்றதனான், உயர்திணைப் பெயர்க்கும் வல்லெழுத்தும் உகரமும் கொடுக்க.

ஆடூஉக்கை மகடூஉக்கை செவி தலை புறம் எனவரும்.

இவை தொகைமரபினுள் *(153)* இயல்பாதல் எய்தியவற்றை, ஈண்டு *(265, 267)* இருவழிக்கண்ணும் முடித்தார், ஈற்றுப் பொது ஒப்புமை கண்டு. *(65)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**267. குற்றெழுத்து இம்பரும்.........உகரக் கிளவி**

விண்மீனின் பெயராகிய உடூ என்பது உடு என உகர வீறாய் வழங்குகின்றது. ஆடூ மகடூ என்பவை, குற்றெழுத்தின் பின் வந்த ஊகாரவீறு அல்லவாயினும், ஒப்புமையாக்கத்தான் உகரம் பெற்று ஆடூஉ மகடூஉ என வழங்குகின்றன. வழங்கினும், அவற்றை உகரவீறாகக் கொள்ளாமல் ஊகார வீறாகவே கொள்க.

**இளம்பூரணம்**

***269. 'பூ' (வன்கணம் வருவழி) முடியுமாறு***

**பூ என் ஒருபெயர் ஆயியல்பு இன்றே**
**ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

இச்....எனின், அவற்றுள் ஒன்றற்கு உகரமும் வல்லெழுத்தும் விலக்கி, பெரும்பான்மை மெல்லெழுத்தும் சிறுபான்மை வல்லெழுத்தும் பெறும் என, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்......ற்று.

(இ-ள்.) பூ என்னும் ஊகார ஈற்றையுடைய ஒருபெயர், மேற்சொன்ன உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் அந்த இயல்பில்லாமையை உடைத்து; எனவே, வேறோர்

இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்கு முடியும்; அவ்விடத்து அம்மெல்லெழுத்தேயன்றி, வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து எ-று.

மெல்லெழுத்துப் பெறும் என்றது **உரையிற்கோடலான்** கொள்ளப்பட்டது.

(உ-ம்.) பூங்கொடி, பூக்கொடி செய்கை தலை புறம் என வரும். (66)

**நச்சினார்க்கினியம்**

## *268. 'பூ' மேலைவிதி பெறாமை*

**பூஎன் ஒருபெயர் ஆயியல்பு இன்றே**
**ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

இஃது ஊகார ஈற்றுள் ஒன்றற்கு உகரமும் இயைபு வல்லெழுத்தும் விலக்கிப் பெரும்பான்மை மெல்லெழுத்தும் சிறுபான்மை வல்லெழுத்தும் பெறுமென எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ-ள்.) பூவென்.....இன்று - பூ என்னும் ஊகார ஈற்றை யுடைய ஒருபெயர் மேற்கூறிய உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் அவ்வியல்பின்மையை உடைத்து; ஆவயின்....உரித்து - அவ்விடத்து மெல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி, வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) பூங்கொடி சோலை நாமம் பந்து எனவும், பூக்கொடி செய்கை தாமம் பந்து எனவும் வரும்.

பூ என்பது பொலிவு என்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு 'ஒருபெயர்' என்றார். (66)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*269.* **பூவென் ஒருபெயர்.......மிகுதலும் உரித்தே.**

ஊகார விறுதி ஓரெழுத்தொரு மொழியுள் பூ என்றதே உகரக்கிளவி பெறாது என்றதை உணர்த்த 'ஒருபெயர்' என்றதைச் சூத்திரத்தில் ஆசிரியர் கூறினும், "பூ என்பது பொலிவு என்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு 'ஒரு பெயர்' என்றார் " என நச்சினார்க்கினியர் கூறுதல் பொருத்தமின்று. அவ்வாறாயின் 'பெயர்' என்றே கூறி யிருப்பர் ஆசிரியர்.

***269.*** ['நீயென் ஒருபெயர்' *(254)* 'ஊ என் ஒருபெயர் ' *(270)* என்பன போல ஈண்டும் 'பூவென் ஒருபெயர்' என 'ஒருபெயர்' என்னும் வாய்பாட்டினைச் சொல்லின்பம் தோன்ற ஆசிரியர் எடுத்தாண்டார். பிறாண்டு தாம் வரைந்தாற் போல, இவ்விடத்தும் நச்சினார்க்கினியர் பிறிதின் இயைபு நீக்கிய விசேடணமாய் உரைத்தார். இந்நயத்தை யுணர மாட்டாது சாத்திரியார் மறுத்தமை பொருந்தாமை காண்க. எஞ்சி நிற்பது இவ்வொருபெயர்தான் என்னும் பொருள்பட 'ஒருபெயர்' என்ற சொல்லாட்சி வாராமையும் உணரப்படும்.]

## இளம்பூரணம்

## *270. ஊ என்னும் பெயர் னகரஒற்றுப் பெற்று முடிதல்*

**ஊ என் ஒருபெயர் ஆவொடு சிவணும்.**

இச்....எனின், இன்னும் அவ்வீற்றுள் ஒன்றற்கு உகரமும் வல்லெழுத்தும் விலக்கி நிலைமொழி னகரம் பெறும் என, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்...ற்று.

*(இ-ள்.)* ஊ என்று சொல்லப்படும் ஊகார ஈற்றை யுடைய ஒருபெயர், ஆகார ஈற்றின் ஆ என்னும் சொல்லொடு பொருந்தி, உகரமும் வல்லெழுத்தும் பெறாது நிலைமொழி னகரவொற்றுப் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* ஊன் குறை செய்கை தலை புறம் - என வரும். *(67)*

**நச்சினார்க்கினியம்**

## 269. 'ஊ' எனும் பெயர் னகரஒற்றுப் பெற்று முடிதல்

**ஊஎன் ஒருபெயர் ஆவொடு சிவணும்.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது, உகரமும் வல்லெழுத்தும் விலக்கி னகரம் விதித்தலின்.

(இ-ள்.) ஊவென் ஒரு பெயர் - ஊ எனத் தசையை உணர்த்தி நின்ற ஓரெழுத்தொருமொழி; ஆவொடு சிவணும்- ஆகார ஈற்றில், ஆ என்னும் சொல் வல்லெழுத்துப் பெறாது னகரஒற்றுப் பெற்று முடிந்தாற் போல னகரஒற்றுப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) ஊ என நிறுத்தி னகர ஒற்றுக்கொடுத்து ஊன்குறை செய்கை தலை புறம் என முடிக்க.

ஊ என்பது தசையை உணர்த்தி நின்ற வழக்கு ஆசிரியர் நூல் செய்த காலத்து வழக்கு. அன்றித் தேயவழக்கேனும் உணர்க. (67)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**269.** **ஊவென் ஒருபெயர் ஆவொடு சிவணும்.**

ஊ என்னும் சுட்டெழுத்து நீட்சியாகிய இடைச் சொல்லை நீக்குதற்கு ஊ என்னும் ஒருபெயர் என்றார்.

**269.** [தம் காலத்தேயே ஊன் என்னும் சொல் வழங்கத் தலைப்பட்டமையான், "ஊ என்பதே இயல்பான சொல்; னகரம் அப்பெயரையடுத்து வரும் எழுத்துப்பேறு" என்பதனை விளக்கிட 'ஊவென் ஒரு பெயர்' என்றார் ஆசிரியர். உகரச் சுட்டின் நீட்சியாகிய ஊகாரத் திரிபிடைச் சொல்லை நீக்குதற்கு 'ஊஎன் ஒரு பெயர்' என்றார் என்ற இவ்வுரைகாரர் விளக்கம் பொருந்துமாறில்லை.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### *271. அப்பெயர் அக்குச் சாரியையும் பெறுதல்*

**அக்கு என் சாரியை பெறுதலும் உரித்தே**
**தக்கவழி அறிதல் வழக்கத் தான.**

இச்....எனின், இன்னும் அதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) அதிகாரத்தான் நின்ற ஊ என்னும் பெயர், மேற்கூறிய னகரத்தோடு அக்கு என்னும் சாரியை பெற்று முடிதலும் உரித்து ; வழக்கிடத்து அம்முடிபு தக்க இடம் அறிக எ-று.

'தக்கவழி அறிதல்' என்றதனான், சாரியை பெற்றவழி நிலைமொழி னகரம் விலக்குண்ணாது நிற்றலும், முன் (67) மாட்டேற்றான் விலக்குண்ட வல்லெழுத்துக் கெடாது நிற்றலும் கொள்க.

(உ-ம்.) ஊனக்குறை செய்கை தலை புறம் - என வரும்.

'வழக்கத்தான' என்றதனான், இவ்வீற்று உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

(உ-ம்.) கொண்மூவின் குழாம் - என வரும். (68)

## நச்சினார்க்கினியம்

### *270. அப்பெயர் னகர ஒற்றோடு அக்கும் பெறுதல்*

**அக்குஎன் சாரியை பெறுதலும் உரித்தே**
**தக்கவழி அறிதல் வழக்கத் தான.**

இஃது எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) அக்கென்....உரித்து - அதிகாரத்தான் நின்ற ஊ என்னும் பெயர், முற்கூறிய னகரத்தோடு அக்கு என்னும் சாரியை பெற்று முடிதலும் உரித்து; வழக்கத்தான தக்கவழி அறிதல் -அம்முடிபு வழக்கத்திடத்துத் தக்க இடம் அறிக எ-று.

'தக்கவழி யறிதல்' என்றதனான், சாரியை பெற்றுழி னகரம்[1] விலக்குண்ணாது நிற்றலும், முன் மாட்டேற்றான் (269) விலக்குண்ட வல்லெழுத்துக் கெடாது நிற்றலும்[2] கொள்க.

(உ-ம்.) ஊனக்குறை செய்கை தலை புறம் என வரும்.

'வழக்கத்தான' என்றதனான், ஊகார ஈற்றுச் சொல்லிற்கு உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுக்க.

கொண்மூவின்குழாம் உடூவின்தலை ஊவின்குறை எனவரும். (68)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**270.** 'ஆனொற்று', 'ஆன்முன் வரூஉம்' (232, 233) என்னும் சூத்திரங்களில் னகரவொற்றை 'ஆ' வொடு தொடர்புறுத்தியே அதன் தற்கிழமையாக ஆசிரியர் ஓதுதலின், அக்குச்சாரியைப் பேறு னகர எழுத்துப்பேற்றை விலக்காது என்பது அவர்கருத்தாயிற்று. சாரியைப்பேறு முன்பெற்று நின்ற எழுத்துப்பேற்றை விலக்காதொழியுமிடம் ஆடூஉ மகடூஉ (271) என்பனவும் ஆம்.

2. சூ.231 நச்சினார்க்கினியர் உரை காண்க. 'மூன்று பெயரும் முற்கூறிய வல்லெழுத்துப் புணர்ச்சியிடத்து நிலைபெறாவாய் வரும்' என்பது உரை. எனவே, மாட்டேற்றான் வல்லெழுத்து விலக்குண்டமை அறியலாம். இச்சூத்திரத்து இலேசினான், விலக்குண்ட அவ்வல் லெழுத்துக்கொள்ளப்பட்டது.

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***270.* அக்கென் சாரியை......வழக்கத் தான.**

'வழக்கத்தான' என்றதனான், இவ்வீற்று உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க என்றனர் உரையாளர். ஆசிரியர்,மேல் 'னகரம் ஒற்றும் ஆவும் மாவும்' (231) என்றும், மேலைச் சூத்திரத்தில் 'ஊஎன் ஒருபெயர் ஆவொடு சிவணும்' (269) என்றும், இச்சூத்திரத்தில் 'அக்கென் சாரியை பெறுதலும் உரித்து' என்றும், பிறாண்டும் புணர்ச்சிக்கண் சாரியை பெறும் சொற்களைவிதந்து கூறி விதித்தலின், பொருட்புணர்ச்சிக்கண் சாரியைப்பேறு விதியாதவற்றிற்கு உருபு புணர்ச்சியிற் கூறிய சாரியை வாராது.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***270.* அக்கென் சாரியை.......வழக்கத் தான.**

அக்குச் சாரியையும் ஆறாவதன் உருபையும் வேறு படுத்துணர்க என்பார் 'தக்கவழி அறிதல்' என்றார்.

**இளம்பூரணம்**

***272. ஆடூ, மகடூ - இவ்விருபெயரும் இன்சாரியையும் பெற்று முடிதல்***

**ஆடூ மகடூ ஆயிரு பெயர்க்கும்**
**இன்இடை வரினும் மானம் இல்லை.**

இச்....எனின், அவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கு முன் (266, 268) எய்திய வல்லெழுத்தேயன்றி இன்சாரியை இடையே வரினும் குற்றம் இல்லை என, எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) ஆடூ மகடூ ஆகிய அவ்விரண்டு பெயர்க்கும் மேல் 'குற்றெழுத்திம்பரும்'(65) என்னும் சூத்திரத்தில் 'நிற்றல்' என்பதனான் வந்த வல்லெழுத்தேயன்றி இன் சாரியை இடைவரினும் குற்றம் இல்லை எ-று.

*(உ-ம்.) ஆடூவின் கை, மகடூவின் கை செவி தலை புறம்-* *என வரும்.*

*'மானமில்லை' என்றதனான், இன் பெற்றவழி, மேல்(65) இலேசினான் எய்திய வல்லெழுத்து வீழ்க்க. (69)*

**நச்சினார்க்கினியம்**

### *271. ஆடூ மகடூப் பெயர்கள் இன்சாரியை பெறலுமாம் எனல்*

**ஆடூ மகடூ ஆயிரு பெயர்க்கும்**
**இன்இடை வரினும் மானம் இல்லை.**

இது 'குற்றெழுத் திம்பரும்' (267) என்பதனுள் 'நிற்றல்' என்ற இலேசான் எய்திய வல்லெழுத்தேயன்றிச் சாரியையும் வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்தியது.

(இ-ள்.) ஆடூ.....பெயர்க்கும் - ஆடூ மகடூ ஆகிய உயர்திணைப்பெயர் இரண்டற்கும்; இன்....இல்லை - முன் எய்திய வல்லெழுத்தேயன்றி இன்சாரியை இடையே வரினும் குற்றமில்லை எ-று.

(உ-ம்.) ஆடூஉவின் கை மகடூஉவின்கை[1] செவி தலை புறம் என வரும்.

'மானமில்லை' என்றதனான், இன்பெற்றுழி, மேல் எய்திய வல்லெழுத்து வீழ்க்க.[2] (69)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***271.*** 1. தொடராகவன்றித் தனிமொழியாகக் கூறும்வழி ஆடூ மகடூ என ஊகார ஈற்றவாம்; வருமொழியோடிணைத்துக் கூறும் வழியே அவை உகர ஈற்றவாம் என்க.

(உ-ம்.) 'ஆடூ மகடூ ஆயிருபெயர்'; ஆடூஉவின் கை, மகடூஉவின் கை என வரும்.

அத்துச்சாரியை அகரஎழுத்துப்பேற்றை விலக்கினாற் போல (228), இன்சாரியை இவ்வுயர்திணைப் பெயர்களின் ஈற்று அகர எழுத்துப்பேற்றை விலக்காதாயிற்று, இவ்விரண்டு உயர்திணைப் பெயரும் யாண்டும் புணர்மொழிக்கண் எழுத்துப்பேற்றொடு பிரிவின்றி நிகழ்தலின். ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலை எனக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**272. ஆடூ மகடூ.....மானம் இல்லை.**

'உயிரீறு ஆகிய உயர்திணைப் பெயரும்' (154) என்ற சூத்திரத்தாற் கூறப்பட்டஇயல்பிற்கு இச்சூத்திரம் புறனடை யாகக் கொள்ளலாம். வரினும் என்னும் உம்மையாற் கொள்ளப்படுவது வல்லெழுத்து மிகுதியாகாது, இயல்பே ஆகும். வல்லெழுத்து மிகுதி 'கிளந்த அல்ல' (483) என்ற அதிகாரப்புறனடையாற் கொள்ளப்படும்.

**272.** ['வரினும்' என்ற உம்மையை இவர் எதிர் மறையாகக் கொண்டார்; இயல்பே பெரும்பான்மை என்பது கருத்து. எச்சவும்மையாகக் கொண்டனர் உரைகாரர். 'இன்இடை வரினும் மானமில்லை; வல்லெழுத்து இடைவரினும் மானமில்லை' என்பது அன்னோர் கருத்து. உம்மையது ஆற்றலை இவ்வாறு இருதிறமாகவும் பொருள் காண்டற்கண் பயன்கொள்ளக்கூடும். இயல்பாதல் பொதுச்சூத்திரத்தால் (154) பெறப்பட்டது. வல்லெழுத்து மிகுதலையும் ஈண்டு அடக்கினர் உரைகாரர், அதிகாரப் புறனடையால் தழுவுதல் நெடுஞ்சேய்மைத்தாகலின் என்க.]

**வேங்கடராகஜு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**271. ஆடூ மகடூ.......மானம் இல்லை.**

உயர்திணைப் பெயர்க்கு இன்சாரியை விதித்திலர் ஆகலின், ஆடூ மகடூ என்னும் பெயர்கட்கு இன்சாரியை வருதல் அமையாதாயினும், அவை சொல்லான் அஃறிணை போறலின் இன்சாரியை வருதல் குற்றமில்லை என்றார். சாரியை பெறும் சொற்களை எடுத்துக்கூறுதல் இச்சூத்திரத் தானும் அறியப்படும்.

*271.* [ஆடு மகடு என்னும் சொற்கள் அஃறிணை போறலின் அஃறிணைப் பெயர்க்கு விதிக்கும் இன்சாரியை இவற்றுக்கும் விதித்தார். இவ்வுரையாளரது இவ் வமைதியைப் பாலசுந்தரமும் வழிமொழிந்தார்.]

## இளம்பூரணம்

### *273. எகரமும் ஒகரமும் முன்னிலை ஏவலொருமைக் கண் ஈறாதல்*

**எகர ஒகரம் பெயர்க்குஈறு ஆகா**
**முன்னிலை மொழிய என்மனார் புலவர்**
**தேற்றமும் சிறப்பும் அல்வழி யான.**

இச்....எனின், எகர ஈற்றிற்கும் ஒகரஈற்றிற்கும் ஈறாகாத நிலையில்[1] வேறுபாடு உணர்த்.....ற்று.

*(இ-ள்.)* எகரமும் ஒகரமும் பெயர்ச்சொற்கு ஈறாகா; வினைச்சொல்லுள் முன்னிலைவினை இடத்த என்று சொல்லுவர் புலவர், தேற்றப்பொருண்மையில் வரும் இடைச்சொல் எகரஈறும், சிறப்புப் பொருண்மையில் வரும் இடைச்சொல் ஒகரஈறும் அல்லாவிடத்து எ-று.

*(உ-ம்.)* ஏஎ எனவும், ஓஒ[2] எனவும் வரும். இவை முன்னிலைவினை. ஏஎ கொண்டான்[3], ஓஒ கொண்டான்[4] என இவை இடைச்சொல்.

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*273.* *1)* எஎன வருமுயிர் மெய்யீ றாகாது. *(71)*

ஒவ்வும் அற்றே நவ்அலங் கடையே. *(73)*

*2)* ஏ - எனக்கு ஒருகருமம் பணி. *(நச்.)*

ஓ - இவ்வாறு செய்கின்றதனை ஒழி. ஷ

*3)* அவன் கொண்டான் என்பதன்கண் ஐயுறவு சிறிதுமில்லை *(தெளிவு)*

4) கொள்ளற்குத் தகுதியுடையனாதலின் கொண்டான் (சிறப்பு). இவ்வாறு ஏஎ ஓஒ என்னும் இவ்வீரிடைச் சொற்களும் பொருள் விரியும்.

## நச்சினார்க்கினியம்

**272. எகரமும் ஒகரமும் ஈறாக வருமிடன்**

**எகர ஒகரம் பெயர்க்குஈறு ஆகா**
**முன்னிலை மொழிய என்மனார் புலவர்**
**தேற்றமும் சிறப்பும் அல்வழி ஆன.**

இஃது எகர ஒகரம் ஈறாம் இடம் உணர்த்துகின்றது.

(இ-ள்.) தேற்றமும்.....ஆன-தெளிவுப் பொருளும் சிறப்புப் பொருளும் அல்லாத வேற்றுமைப் பொருண்மை யிடத்து, அளபெடுத்துக் கூறுதலின் உளவாகிய; எகர....ஆகா- எகர ஒகரங்கள் பெயர்க்கு ஈறாய் வாரா, வினைக்கு ஈறாய் வரும்; முன்னிலை....புலவர் - அவைதாம் தன்மையினும் படர்க்கையினும் வாரா, முன்னிலைச் சொல்லிடத்தனவாம் என்று கூறுவர் புலவர் எ-று.

எனவே, தெளிவுப் பொருளினும் சிறப்புப் பொருளினும் முறையே வந்து பெயர்க்கு ஈறாம் இடைச் சொல் ஆகிய எகர ஒகரம் மூன்றிடத்திற்கும் உரியவாம் என்று பொருளாயிற்று. என இங்ஙனம் **அருத்தாபத்தியான்**[1] கொண்டதற்கு இலக்கணம் மேலைச் சூத்திரத்தாற் கூறுப.

(உ-ம்.)ஏஎக்கொற்றா ஓஒக் கொற்றா சாத்தா தேவா பூதா எனவரும்.

இவை 'எனக்கு ஒரு கருமம் பணி' எனவும், 'இங்ஙனம் செய்கின்றதனை ஒழி' எனவும் முன்னிலை ஏவற் பொருளவாய் வந்தன. இதற்கு வல்லெழுத்துப் பெறுமாறு மேலே கூறுப. (70)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**272.** 1. அருத்தாபத்தி நயத்தான் இவ்வாறு மறுதலைப் பொருள்பயக்குமாறு 231ஆம் சூத்திரவுரையுள்ளும் காண்க.

பதவுரையுள், தெளிவுப் பொருளும்....வேற்றுமைப் பொருண்மையிடத்து என்புழி, வேற்றுமைப் பொருண்மை யாவது வேறுபட்ட பிற பொருண்மை என்றவாறு, தெளிவுப் பொருளில் வரும் ஏகார இடைச்சொல்லும் சிறப்புப் பொருளில் வரும் ஓகார இடைச்சொல்லும் பெயர்க்கு ஈறாய் நிற்ப, அவற்றின் அளபெடையெழுத்தாக முறையே எகரமும் ஒகரமும் வரும். ஈண்டு, அவற்றின் வேறுபட்ட பிற பொருண்மையாவது ஏவலொருமை. இவ்வேவல் ஒருமை வினை அளபெடுப்புழி (ஏஎ, ஓஒ) அவற்றின் அளபெடை யெழுத்தாக எகர ஒகரம் நிகழும் என்றார்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**272. எகர ஒகரம்......அல்வழி யான.**

விதி ஒத்தலின், ஒன்றெனமுடித்தல் என்பதனான் ஒகரமும் உடன் ஓதப்பட்டதென அறிக.

மொழி. 38, 39, இடையியல் 13ஆம் சூத்திரங்களால் இவ் எகர ஒகரங்கள் ஏகார ஓகாரங்களின் அளபெடையாய்ப் பெயர்க்கு ஈறாவனவன்றித் தாமே ஈறாக வாரா என்பதும், தொகை. 9ஆம் சூத்திரத்தானும் ஈண்டு 'முன்னிலை மொழிய' என்றதனானும், அவை முன்னிலை யேவலாக வரும் ஏகார ஓகாரங்களின் அளபெடை ஈறாக நின்று, வல்லெழுத்தொடு புணருமிடத்து உறழ்ந்து புணரும் என்பதும்,

'தேற்ற எகரமும்' என அடுத்து வரும் சூத்திரத்தான், அவை உறழ்தலாகிய பொதுவிதியின் நீங்கி இயல்பாகப் புணரும் என்பதும் முன்னிலை வினையாயின் மிகும் என்பதும் பெறப்பட்டன.

ஆதலின் இச்சூத்திரம் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்னும் உத்திக்கும், 'ஞாபகங் கூறல்' என்னும் உத்திக்கும் இனமாம்.

இவற்றை இடைச்சொற்புணர்ச்சி கூறுவதாக உரை யாசிரியன்மார் கூறுவது ஆசிரியர் கருத்திற்கு முரணாம்.

இன்னச்சொற்கள் பெயர்வினைகளைச் சார்ந்து பெயராயும் தொழிலாயும் நின்று புணரும் என்பது இச்சூத்திரத்தானும் தெளிவாம். மற்றும், இச்சூத்திரம் எகரஒகரங்களின் இயல்புணர்த்துவதாக உரையாளர் கூறுவர். அது கருத்தாயின் இது மொழிமரபின்கண் இருத்தல் வேண்டும்.

**272.** [ஏஎ கொண்டான், ஓஒ கொண்டான் - என்னு மிவற்றையே இடைச்சொல் எனக்குறித்தார் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் உரையுள் இக்குறிப்பும் இன்று. இவ்விரண்டு தொடரும் இடைச்சொற்றொடராகிய அல்வழிப்புணர்ச்சி. ஆசிரியர் கருத்துக்கு முரணுமாறு ஒன்றும் இங்குக் காணப்படிலது.]

## இளம்பூரணம்

### *274. மேலை எகரஒகரம் போலாது, தேற்ற எகரமும் சிறப்பின் ஒகரமும் (வன்கணம் வருவழி) இயல்பாதல்*

**தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும் [1]**
**மேற்கூறு இயற்கை வல்லெழுத்து மிகாஅ.**

*இச்....எனின், முன் ஈறாம் எனப்பட்ட எகர ஒகர இடைச்சொற்கும், அவ்வீற்று முன்னிலைவினைச்சொற்கும் முடிபு கூறு......ற்று.*

*(இ-ள்.)* தேற்றப்பொருண்மையில் வரும் எகர ஈற்று இடைச்சொல்லும், சிறப்புப் பொருண்மையில் வரும் ஒகர ஈற்று இடைச்சொல்லும், மேல் முன்னிலை வினைச் சொற்குக் கூறப்படும் இயல்பையுடைய வல்லெழுத்து மிகாவாய் இயல்பாய் முடியும் எ-று.

'மேற்கூறியற்கைவல்லெழுத்து மிகாஅ' என்றதனான், **வந்தது கொண்டு வாராதது உணர்தல்** என்னும் தந்திரவுத்தி வகையான், முன்னிலைவினைக்கு வல்லெழுத்து மிகும் என்பது கூறப்பட்டதாயிற்று.

(உ-ம்.) யானேஎ கொண்டேன் - நீயோஒ கொண்டாய் - அவனேஎ கொண்டான் - எனவும், ஓஒ கொண்டேன் - ஓஒ கொண்டாய் - ஓஒ கொண்டான் - எனவும் வரும். இவை இடைச்சொல். ஏஎக் கொற்றா, ஓஒக் கொற்றா சாத்தா தேவா பூதா - என வரும். இவை முன்னிலைவினை.

'இயற்கை' என்றதனான், அம்முன்னிலை வினைகளை அளபெடையாக நிறீஇக் கொள்க[2]. (71)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**274.** 1) 'தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.' (இடை.13)

2) ஏவலொருமையை உணர்த்த அளபெடுத்து மூன்று மாத்திரையான் இவ்விரண்டும் இசைக்கும்; அளபெடாக்கால் அவ்ஏவற்பொருண்மை தோன்றாமல் போம் என்பது கருத்து.

**நச்சினார்க்கினியம்**

***273. தேற்ற எகரமும் சிறப்பின் ஒகரமும் வலிமிகப் பெறாமை***

**தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூறு இயற்கை வல்லெழுத்து மிகாஅ.**

இஃது எய்தியது இகந்துபடாமல் காத்து எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) தேற்ற....இயற்கை - முன்னர் அருத்தாபத்தியான் பெயர்க்கண் வரும் என்ற, தேற்றப் பொருண்மையின் எகரமும் சிறப்புப் பொருண்மையின் ஒகரமும், மூன்றிடத்தும் வரும் என்ற இலக்கணத்தனவாம்; வல்லெழுத்து மிகாஅ- வல்லெழுத்து மிக்கு முடியா; எனவே முன்னிலைக்கண் வரும் என்ற எகர ஒகரங்கள் வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

(உ-ம்.) யானேஎ கொண்டேன் நீயேஎ கொண்டாய் அவனேஎ கொண்டான் எனவும், யானோஒ கொடியேன் நீயோஒ கொடியை அவனோஒ கொடியன் எனவும் பெயர்க்கண் ஈறாய் இயல்பாய் வந்தவாறு காண்க.

இது முன்னர் எய்திய இலக்கணம்[1] இகவாமல் காத்தார்; முன்நின்ற சூத்திரத்தின் முன்னிலைக்கும் வல்லெழுத்து மிகுத்து[2], எய்தாதது எய்துவித்தார்.

இச்சூத்திரத்திற்கு அளபெடுத்தல் 'தெளிவினேயும்' (சொல். 263) என்னும் சூத்திரத்தான் கொள்க.

எனவே, முடிபு பெற்றுழி இங்ஙனம் இடைச் சொல்லும் எடுத்தோதிப் புணர்ப்பர் என்பதூஉம் பெற்றாம்[3]. (71)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

273. 1. அருத்தாபத்தியாற் கொண்ட இலக்கணம் என்க.

2. 'மேற்கூ றியற்கை வல்லெழுத்து' என்றமையான், முன்னிலையேவற் பொருண்மைக்கண் வரும் ஏஎ ஓஒ என்னும் இவற்றின்முன்னர் வல்லொற்று மிகுதலைக் குறிப்பாற் புலப்படுத்தினாராயிற்று.

3. வேற்றுமைப் பொருள்பட வந்த இடைச்சொல்லே யன்றி, அப்பொருள்படாத இடைச்சொல் சூ. 275, 290, 291 என இவற்றின்கண்ணும் முடிபு கூறப்பட்டவாறு காண்க.

## இளம்பூரணம்

### 275. ஏகார ஈற்றுப் பெயரது அல்வழிமுடிபு

**ஏகார இறுதி ஊகார இயற்றே.**

இச்....எனின், ஏகாரஈற்று அல்வழிமுடிபு கூறு....ற்று

(இ-ள்.) ஏகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் ஊகாரஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) சேக்கடிது சிறிது தீது பெரிது - எனவரும். (72)

**நச்சினார்க்கினியம்**

## 274. ஏகார ஈற்றுப் பெயரது அல்வழி முடிபு

**ஏகார இறுதி ஊகார இயற்றே.**

இது நிறுத்தமுறையானே ஏகாரஈறு அல்வழிக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஏகார....இயற்று - ஏகார ஈற்றுப்பெயர், அல்வழிக்கண், ஊகாரஈற்று அல்வழியின் இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்துழி, அவவல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

(உ-ம்.) ஏக்கடிது சேக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (72)

**இளம்பூரணம்**

## 276. இவ்வீற்று இடைச்சொல் முடியுமாறு

**மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்**
**கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இச்....எனின், அவ்வீற்று இடைச்சொற்கு முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) மாறுகோடலையுடைய எச்சப்பொருண்மைக் கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும், வினாப் பொருண்மைக்கண் வரும் ஏகாரஈற்று இடைச்சொல்லும், எண்ணுப்பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், மேற்கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) யானே கொண்டேன் சென்றேன் தந்தேன் போயினேன்? எனவும், நீயே கொண்டாய் சென்றாய் தந்தாய் போயினாய் ? எனவும், கொற்றனே சாத்தனே தேவனே பூதனே எனவும் வரும்.

'கூறிய' என்றதனான், பிரிநிலைப் பொருண்மைக் கண்ணும் ஈற்றசைப் பொருட் கண்ணும் வரும் ஏகாரங்களின் இயல்பு முடிபு கொள்க.

(உ-ம்.) அவனே கொண்டான் - என்பது பிரிநிலை. 'கடலே பாடெழுந்து இசைக்கும்' (அகநா. 350) - என்பது ஈற்றசை. (73)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**276.** ஏகார இடைச்சொல் பொருள் ஐந்து என்றே ஆசிரியர் ஓதினார் (இடை. 9). ஈண்டுக் கூறிய மாறுகோள் எச்சப்பொருண்மையையும் ஏகாரத்திற்குத் தழுவிக் கொள்ளல் வேண்டும். இச்சூத்திரம் வாராததனான் வந்தது முடித்தல் என்னும் உத்திக்கு எடுத்துக்காட்டாம். (பொ.665 பேரா.)

**நச்சினார்க்கினியம்**

**275. இவ்வீற்று இடைச்சொற்கள் இயல்பாய் முடிதல்**

**மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்**
**கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இஃது இடைச்சொற்கள் இயல்பாய்ப் புணர்க என, எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) மாறுகோள்......எண்ணும் - மாறுகோடலை யுடைய எச்சப்பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும் (சொல். 435), வினாப் பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும், எண்ணுப் பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும்; கூறிய....ஆகும் - முற்கூறிய வல்லெழுத்துப்பெறாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) யானே கொண்டேன் சென்றேன் தந்தேன் போயினேன் என்புழி, 'யான் கொண்டிலேன்' என மாறுகொண்ட ஒழிபுபட நின்றது. நீயே கொண்டாய் சென்றாய் தந்தாய் போயினாய்? எனவும், நிலனே நீரே தீயே வளியே - கொற்றனே சாத்தனே எனவும் வரும்.

கூறிய என்றதனான், பிரிநிலை ஏகாரமும் ஈற்றசை ஏகாரமும் இயல்பாய் முடிதல் கொள்க.

அவருள் இவனே[1] கொண்டான் எனவும், 'கழியே[2], சிறுகுரல் நெய்தலொடு பாடோ வாதே, கடலே[3] பாடெழுந் தொலிக்கும்' (அகநா. 350) எனவும் வரும். (73)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**275.** சொல். 435ஆம் சூத்திரத்தே ஆசிரியர், தேற்றம் வினா பிரிநிலை எண் ஈற்றசை என்னும் ஐந்துபொருளே ஏகார விடைச்சொற்கு ஓதினார். ஈண்டுக் கூறிய மாறுகோள் எச்சப் பொருண்மையும் ஏகார விடைச்சொற்கு உரித்தாகக் கொள்ளப்படும். இதனை 'வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்திக்கு எடுத்துக்காட்டினார் பேராசிரியர். (பொ.665)

1) கொள்ளாதார் பலரிடையே இவனைப் பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை; 2, 3. வேறுபொருள் பயவாது சொல்லொடு சார்த்தி (அசைத்து)ச் சொல்லப்படுதலின் அசைநிலை.

## இளம்பூரணம்

## 277. இவ்வீற்று வேற்றுமை முடிபு

**வேற்றுமைக் கண்ணும் அதன்ஓ ரற்றே.**

இச்....எனின், இவ்வீற்று வேற்றுமை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* ஏகாரஈறு, வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக் கண்ணும் அவ்ஊகார ஈற்று அல்வழியோடு ஒருதன்மைத்தாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்)* வேக்குடம்[1] சாடி தூதை பானை - என வரும். *(74)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***277.*** *1)* வேதலையுடைய குடம் *(நச்.)*

**நச்சினார்க்கினியம்**

### *276.* இவ்வீற்றுப் பெயரது வேற்றுமை முடிபு

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

இஃது இவ்வீற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்....ஓரற்று - ஏகார ஈறு, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், ஊகார ஈற்று அல்வழி போல *(264)*, வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஏக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், வேக்குடம் சாடி தூதை பானை எனவும் வரும்.

வேக்குடம் - வேதலையுடை குடம் என விரியும். *(74)*

**இளம்பூரணம்**

### *278.* ஏஎனும் பெயர்இறுதி எகர எழுத்துப்பேறு கோடல்

**ஏ என் இறுதிக்கு எகரம் வருமே.**

இச்...எனின், அவ்வீற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்பு விதி கூறு....ற்று.

(இ-ள்.) அவ்வேற்றுமைக்கண் ஏவென்னும் இறுதிக்கு எகரம் வரும் எ-று.

(உ-ம்.) ஏஎக்கொட்டில் சாலை துளை புழை[1] - என வரும்.

**உரையிற்கோடல்** என்பதனான், அவ் எகரப்பேறு பொருந்தின வழிக் கொள்க. (75)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**278.** 1) அம்பினை வைத்த கொட்டில், சாலை, அம்பினால் விளைந்த துளை, அம்பினை எய்து வீரர் தாம் மறையுமிடம் என முறையே பொருள் செய்க.

## நச்சினார்க்கினியம்

## 277. ஏ என்னும் இறுதி எகரம் பெறுமாறு

**ஏஎன் இறுதிக்கு எகரம் வருமே.**

இது வல்லெழுத்தினோடு எகரம் விதித்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) ஏயென்.....வரும் - அவ்வேற்றுமைக்கண் ஏ என்னும் இறுதிக்கு எகரம் வரும் எ-று.

(உ-ம்.) ஏஎக் கொட்டில் சாலை துளை புழை[1] என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின், இயல்பு கணத்துக்கண்ணும் வருமெனக் கொள்க.

ஏஎ நெகிழ்ச்சி நேர்மை என வரும்.

**உரையிற்கோடலான்** எகரம் ஏற்புழிக் கொள்க. (75)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***277.*** இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

### இளம்பூரணம்

## *279. சே என்னும் மரப்பெயரது முடிபு*

**சே என் மரப்பெயர் ஒடுமர இயற்றே.**

இச்....எனின், அவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்துவிதி கூறு...ற்று.

*(இ-ள்.)* சே என்னும் மரத்தினை உணரநின்ற பெயர், ஒடு மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* சேங்கோடு செதிள் தோல் பூ - என வரும். *(76)*

### நச்சினார்க்கினியம்

## *278. சே எனும் மரப்பெயர் மெலி மிகுதல்*

**சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே.**

இஃது அவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

*(இ-ள்.)* சேவென்....இயற்று - பெற்றமன்றிச் சே என்னும் மரத்தினை உணர நின்ற பெயர், ஒடுமரம் போல மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* சேங்கொடு செதிள் தோல் பூ என வரும். *(76)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***278.*** மாட்டேற்றினை 262, 243ஆம் சூத்திரவிதியாற் கொள்க.

## இளம்பூரணம்

### 280. 'சே' பெற்றமாயின் இன்சாரியை பெறுதல்

**பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்.**

இச்...எனின், அம்மரப்பெயர் அல்லாத சே என்பதற்கு வேறு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* மேற்கூறிய சே என்பது பெற்றத்தினை உணர நின்ற பொழுதாயின், முடிய இன்சாரியை பெற்று முடிய வேண்டும் எ-று.

*(உ-ம்.)* சேவின் கோடு செவி தலை புறம் - என வரும்.

'முற்ற' என்றதனான், இச்சே என்பது எடுத்தோத்தான் இன்பெற்றவழியும், அதுவே மரப்பெயராய் உருபிற்கு எய்திய சாரியை பெற்றவழியும், பிறசொல் அவ்வாறு இன் பெற்றவழியும் இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

*(உ-ம்.)* சேவின்கோடு செவி தலை புறம் - எனவும், சேவின் கோடு செதிள் தோல் பூ எனவும், ஏவின் கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். *(77)*

## நச்சினார்க்கினியம்

### 279. அப்பெயர் பெற்றமாயின் இன்சாரியை பெறுதல்

**பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்.**

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி இன் வகுத்தது.

*(இ-ள்.)* பெற்றம்.... வேண்டும் - முற்கூறிய சே என்பது பெற்றத்தினை உணர்த்திய பொழுதாயின், முடிய இன் சாரியை பெற்று முடிய வேண்டும். எ-று.

(உ-ம்.) சேவின்கோடு[1] செவி தலை புறம் என வரும்.

'முற்ற' என்றதனானே, முற்கூறிய சே என்னும் மரப்பெயர்க்கும் ஏ என்பதற்கும், உருபிற்கு எய்திய சாரியை பொருட்கண் சென்றுழி, இயைபு வல்லெழுத்து வீழ்தல் கொள்க.

சேவின்கோடு செதிள் தோல் பூ எனவும், ஏவின் கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும்.

சாரியைப் பேறு வருமொழி வரையாது கூறினமையின், இயல்புகணத்தும் இன்பெறுதல் கொள்க.

சேவினலம் மணி வால், சேவினிமில் சேவினாட்டம் என வரும்.

இன்னும் இதனானே, இயல்புகணத்துக்கண் இன் பெறாது வருதலும் கொள்க. செய்யுட்கண், 'தென்றற்கு வீணைக்கு சேமணிக்குக் கோகிலத்திற்(கு), அன்றிற்கு' என வரும். (77)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***279.*** 1. 'சேவின்கோடு' : 'இன்' 'புணரியல் நிலையிடைப் பொருணிலைக்கு உதவ' வந்த இடைச்சொல், தான் இயைந்த சொல் மரப்பெயர் என உணர்த்த உபகாரப்படுதலின்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***279.*** பெற்ற மாயின் முற்றஇன் வேண்டும்.

சே என்னும் சொல் மரப்பெயரை உணர்த்தும்போது சாரியை பெறாமையின், 'பெற்ற மாயின் முற்றஇன் வேண்டும்' என்றார். இதனானும் பொருட்புணர்ச்சியின் சாரியை பெறுவனவற்றை ஆசிரியர் எடுத்துக் கூறுவாராதல் பெறப்படும். ஆகலின், உரையாசிரியன்மார் ஏ என்னும் சொல்லும் இன்சாரியை பெறும் என்று காட்டியது பொருந்தாது. நச்சினார்க்கினியர் செய்யுட்கண் சாரியை

பெறாது வருமென்று கூறி, 'தென்றற்கு வீணைக்குச் சேமணிக்குக்.....' என்று 'சேமணி' எனக்காட்டியது ஆசிரியர் கருத்திற்கு அமையாது. பிற்காலத்துப் பாடல் அது.

*279.* [சே மரப்பெயரும், ஏ என்னும் பெயரும், இன்சாரியை பெறுதல் தொல்காப்பிய நூல்நெறிக்கு ஒவ்வாதேனும், பிற்கால வழக்கில் புதியன புகுதலாகப் போந்துவிட்ட அவற்றுக்கும் இலேசினான் விதி கூறினர் தொல்லுரையாளர்; வழக்கில் வந்து விட்ட வளர்தமிழ் ஆக்கச் சொற்களை வழூவெனக்களையாது, மிகைச்சொல்லான் தம்முரையில் முடித்துக்காட்டினர்.]

## இளம்பூரணம்

### *281. ஐகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.**

இச்....எனின், ஐகார ஈற்று அல்வழிமுடிபு தொகை மரபினுள் (16) கூறி நின்றமையின், அதன் வேற்றுமைமுடிபு கூறு......ற்று.

*(இ-ள்.)* ஐகார ஈற்றுப் பெயர்ச்சொல் முன்னர், அதிகாரத்தான் கசதப முதல்மொழி வந்த வேற்றுமைப் பொருட்புணர்ச்சியின், தமக்குப் பொருந்தின வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* யானைக் கோடு செவி தலை புறம் - என வரும். *(78)*

## நச்சினார்க்கினியம்

### *280. ஐகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.**

இஃது ஐகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது. தொகைமரபினுள் 'வேற்றுமை அல்வழி இஐ என்னும்' (158) என்பதன் கண் அல்வழி முடித்தார்.

*(இ-ள்.)* ஐகார.....முன்னர் - ஐகார ஈற்றுப் பெயர்ச் சொல் முன்னர் (அதிகாரத்தான் கசதப முதல்மொழி வந்துழி,); வேற்றுமை......மிகும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சி யாயின், தமக்குப் பொருந்தின வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* யானைக்கோடு செவி தலை புறம் என வரும்.

'வேற்றுமையாயின்' என்றதனான் உருபு புணர்ச்சிக் கண்ணும் யானையைக் கொணர்ந்தான் என வல்லெழுத்து மிகுதல் கொள்க.[1] *(78)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***280.*** **ஐகார இறுதிப்........வல்லெழுத்து மிகுமே.**

ஐகாரவுருபொடு புணர்ந்து நிலைமொழியாக நிற்கும் சொற்களுக்கும் இவ்விதி பொருந்தும்; என்னை? உருபியலின்கண், ஐம் முதலிய ஆறுருபுகளும் நிலைமொழி யொடு வந்து புணருமாறு கூறியதன்றித் தாம் நிலைமொழி யாக நின்று வருமொழியொடு புணருமாறு கூறினாரில்லை. காரணம், உருபுகள் தனித்து நிலைமொழியாதற்கு ஏலாமையான் என்க. ஆசிரியர் ஏகாரம் ஓகாரம் முதலிய இடைச்சொற்களுக்கு ஈண்டு விதி கூறியதும் இக்கருத்தானே எனவுணர்க.

ஆகலின், உருபுகளும் உருபின் பொருளவாய் வரும் சொற்களும் பெயர்களொடு கூடி நிலைமொழியாக நிற்குமிடத்து, இரண்டாமுருபு ஐகார ஈற்றினுள்ளும், ஒடுவும் குவ்வும் அதுவும் குற்றியலுகரமாக மாறிவிடுதலின், குற்றியலுகரப் புணரியலுள்ளும், இன் - ஆன் - கண் - என்பன புள்ளிமயங்கியலுள்ளும் அடங்கும்.

இவற்றை உரையாசிரியன்மார், மிகையின்கண்ணும் புறனடையுள்ளும் அடக்கி ஆசிரியர்க்குக் குறை கற்பிப்பர். உருபுகள் அவ்வவ்வீறுகளுள் அடங்கிப் புணரும் என்பதனை ஆசிரியர் தாமே சூத்திரங்களுள் உடம்பொடு புணர்த்துக் கூறுமாற்றானே தெளியலாம்.

ஒடு உருபு : *மொழி. 13, 35; நூன். 10, 17*

குவ் வுருபு : *மொழி. 1,42; உயிர்மயங். 70; புள்ளி மயங்.20,21*

அது உருபு : *வேற். 18 ; அகத். 42*

**280.** [வேற்றுமையுருபு தொக நிலைமொழி வருமொழியொடு புணரும் பொருட்புணர்ச்சியே வேற்றுமைப் புணர்ச்சியாக இம்மூன்று அகத்தோத்துள்ளும் விதிக்கப்படுவதாக உரையாசிரியன்மார் கருதினர். 'வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே' என வருமிடத்தெல்லாம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சி யென்றே பிற்கால உரையாளரும் உரைகூறினர். சூ. 302, 332 இவற்றில் 'வேற்றுமைப் பொருட்கே' என்னும் தொடராட்சி, உருபு தொக வேற்றுமைப் பொருள் நிற்கும் வேற்றுமைத் தொகைப் புணர்ச்சியையே சுட்டுதல் காண்க. அப்பொருளே வேற்றுமைப் புணர்ச்சி யாண்டும் கொள்ளப்படும்.

'ஐகார இறுதிப் பெயர்நிலை' பெயரீற்றின் இயல்பாய் நின்ற ஐகாரத்தைக் குறிக்குமன்றி, 'யானையை' என உருபாக வந்தியைந்த நிலைமொழியீற்றினைக் குறியாது. இவ்வாறே பிற உருபுகளும் இயல்பாக நின்ற பெயரிறுதியாகா. இந்நிலையினை உட்கொண்டே உரையாசிரியன்மார் உருபீறு வருமொழியொடு புணருமாற்றை இலேசினாற் கொண்டனர்.]

## இளம்பூரணம்

### *282. சுட்டுமுதல் ஐகார ஈற்றுப்பெயர் முடியுமாறு*

**சுட்டுமுதல் இறுதி உருபுஇயல் நிலையும்.**

இச்.....எனின், இவ்வீற்றுச் சுட்டுமுதற் பெயர்க்கு வல்லெழுத்தொடு வற்று வகுத்....ற்று.

(இ-ள்.) சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுப்பெயர், உருபுபுணர்ச்சியிற் கூறிய (உரு.5) இயல்பின் கண்ணே நின்று, வற்றுப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) அவையற்றுக் கோடு, இவையற்றுக் கோடு, உவை யற்றுக் கோடு செவி தலை புறம் -[1] எனவும், அவற்றுக் கோடு, இவற்றுக் கோடு, உவற்றுக் கோடு செவி தலை புறம் - எனவும் வரும். (79)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***282.*** 1) எனவும், அவற்றுக்கோடு......எனவும் வரும் - இப்பகுதி இடைச்செருகல் எனத் தவிர்க்கப்பட்டுள்ளது.

**நச்சினார்க்கினியம்**

***281. சுட்டுமுதல் 'ஐ' ஈறு வற்றுப் பெற்று முடிதல்***

**சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்.**

இது வல்லெழுத்தினொடு வற்று வகுத்தலின் எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டு.....நிலையும் - சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுப்பெயர், உருபு புணர்ச்சியிற் கூறிய இயல்பு போல (177), பொருட்புணர்ச்சிக்கண் வற்றுப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) அவையற்றுக்கோடு இவையற்றுக்கோடு உவையற்றுக்கோடு செவி தலை புறம் என வரும். இதனை 'வஃகான் மெய்கெட' (122) என்பதனான் முடிக்க. (79)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***282.*** **சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்.**

அவற்றுக்கோடு முதலியவற்றை வகரவீற்றுச் சொற்களைப் பற்றிக் கூறும் 'சுட்டு முத லாகிய வகர இறுதி' *(379)* என்ற சூத்திரத்தில் ஆசிரியர் உணர்த்தினமையின் ஈண்டு அவற்றை உரைகாரர் கொள்ளுதல் வேண்டா.

***282.*** [நச்சினார்க்கினியர் உரையுள் இம்முடிபு ஏற்ப இடம்பெற்றுளது. இளம்பூரணர் உரையுள் எவ்வாறோ இப்பிழை பிற்காலத்தில் நேர்ந்துவிட்டது என்றே துணிக.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***281.*** **சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்.**

"அவற்றுக்கோடு இவற்றுக்கோடு உவற்றுக்கோடு எனவும் வரும்" என்றார் இளம்பூரணர். இவ்வாறு வருவன அவ் இவ் உவ் என்னும் வகரமெய்யீற்றுப் பெயர்களே. அவை 'சுட்டுமுதலாகிய வகர இறுதி' *(378)* என்பதனான் அமையும்.

***281.*** [சாத்திரியார் இளம்பூரணருரையுட் புகுந்த இப்பிழையைச் சுட்டினார். இவரும் அதனையே வழி மொழிந்தார். ஏடெழுதுவோரால் நேரிட்ட பிழை இஃதெனத் தள்ளல் வேண்டும்.]

## இளம்பூரணம்

## *283. விசை, ஞெமை, நமை-இம்மரப்பெயர்கள் முடியுமாறு*

**விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்**
**அவைமுப் பெயரும் சேமர இயல.**

இச்....எனின், இவ்வீற்றுள் மரப்பெயருட் சிலவற்றிற்கு வேறு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* விசை என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், ஞெமை என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், நமை என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும் ஆகிய அவை மூன்று பெயரும், மேற்கூறிய வல்லெழுத்து மிகாது, சே என்னும் மரத்தினது இயல்பினவாய், மெல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* விசைங்கோடு, ஞெமைங்கோடு [1], நமைங் கோடு செதிள் தோல் பூ என வரும். *(80)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***283.*** *1)* 'இமைக்கண் ஏதா கின்றோ ஞெமைத்தலை' (குறுந். *285)* என்புழித் 'தலை' ஏழனுருபாகலின் பொது விதியான் *(115)* வலிமிக்கது.

**நச்சினார்க்கினியம்**

## *282. விசை, ஞெமை, நமை - இம்மரப்பெயர்கள் மெலி மிகுதல்*

**விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்**
**ஆமுப் பெயரும் சேமர இயல.**

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* விசைமரக் கிளவியும்.....ஆமுப்பெயரும் - விசைத்தல் தொழிலன்றி விசை என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், ஞெமை என்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், நமை என்ற மரத்தினை உணரநின்ற சொல்லும் ஆகிய அம்மூன்று பெயரும்; சேமர இயல - வல்லெழுத்து மிகாது சேமரம் போல *(278)* மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* விசைங்கோடு ஞெமைங்கோடு நமைங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

இவை 'கசதப முதலிய மொழிமேல் தோன்றும்' (143) மெல்லெழுத்து என்று உணர்க. (80)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*282.* 278, 262, 243ஆம் சூத்திரங்களை நோக்கிற்று இம்மாட்டேறு.

**இளம்பூரணம்**

***284. பனை, அரை, ஆவிரை - இப்பெயர்கள் முடியுமாறு***

**பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்**
**நினையுங் காலை அம்மொடு சிவணும்**
**ஐஎன் இறுதி அரைவரைந்து கெடுமே**
**மெய்அவண் ஒழிய என்மனார் புலவர்.**

இதுவும் அது.

(இ-ள். பனை என்னும் சொல்லும் அரை என்னும் சொல்லும் ஆவிரை என்னும் சொல்லும், மேற்கூறிய வல்லெழுத்து மிகாது, ஆராயுங்காலத்து அம் என்னும் சாரியையொடு பொருந்தி முடியும்; அவ்விடத்து, ஐ என்னும் ஈறு அரையென்னும் சொல்லை நீக்கிக் கெடும், தன்னால் ஊரப்பட்ட மெய் அச்சொல்லிடத்தே ஒழிய[1] என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) பனங்காய் செதிள் தோல் பூ எனவும், அரையங்கோடு செதிள் தோல் பூ எனவும், ஆவிரங்கோடு செதிள் தோல் பூ - எனவும் வரும்.

'நினையுங்காலை' என்றதனான், பிறவும் தூதுணை வழுதுணை தில்லை ஓலை - என வருவனவற்றிற்கும் அம்முக் கொடுத்து ஐகாரம் கெடுத்துத் தூதுணங்காய் - வழுதுணங்காய்- தில்லங்காய் - ஓலம்போழ் - என்று முடிக்க. (81)

**இளம்பூரணம் உரைவிளக்கம்**

***284.*** 1) ஒழிய - கெடாதொழிய. ஒழிய என்பது 'கெடாது நிற்ப' என்ற பொருளில் வருமாறு 316, 470, 473ஆம் சூத்திரங்களிற் கண்டுகொள்க. 'பெருமண மெல்லாம் தனித்தே யொழிய' (கலி.114:14) என்னு மடிக்கு நச்சினார்க்கினியர், "பெண்பிள்ளைக் கல்லியாண மெல்லாம் அவனையின்றி வேறு சிலரிடத்தே தங்குகையினாலே" என்று உரை கூறினார். எனவே, ஒழிதல் என்பது நீங்காது தங்குதல் என்னும் பொருட்டாதல் காண்க.

**நச்சினார்க்கினியம்**

***283. பனை, அரை, ஆவிரை - இப்பெயர்கள் முடியுமாறு***

**பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்**
**நினையுங் காலை அம்மொடு சிவணும்**
**ஐஎன் இறுதி அரைவரைந்து கெடுமே**
**மெய்அவண் ஒழிய என்மனார் புலவர்.**

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தது.

(இ-ள்.) பனையும்....கிளவியும் -பனை என்னும் பெயரும், அரை என்னும் பெயரும், ஆவிரை என்னும் பெயரும்; நினையுங்......சிவணும் - ஆராயுங்காலத்து, வல்லெழுத்து மிகாது அம்முச்சாரியையொடு பொருந்தி முடியும்; ஐயென்.....கெடும் - அவ்விடத்து ஐ என்னும் ஈறு அரை என்னும் சொல்லை நீக்கி ஏனை இரண்டற்கும் கெடும்; மெய்.....புலவர் - தன்னான் ஊரப்பட்ட மெய் கெடாது அச்சொல்லிடத்தே நிற்க என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* பனை ஆவிரை என நிறுத்தி, அம்மு வருவித்து, ஐகாரம் கெடுத்து, ஒற்றின்மேல் அம்முச்சாரியை ஏற்றி, பனங்காய் ஆவிரங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க.

அரையென நிறுத்தி அம்முக்கொடுத்து ஐகாரம் கெடாது, அரையங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க.

வல்லெழுத்துக்கேடு மேலே 'கடிநிலை யின்று' (285) என்றதனான் கூறுதும்.

'நினையுங்காலை' என்றதனான், தூதுணை வழுதுணை தில்லை ஓலை தாழை என நிறுத்தி, அம்முக்கொடுத்து ஐகாரம் கெடுத்துத் தூதுணங்காய் வழுதுணங்காய் தில்லங்காய் ஓலம்போழ்[1] தாழங்காய் என முடிக்க. (81)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***284.*** **பனையும் அரையும்.......என்மனார் புலவர்.**

கொடிமுன் வரினே (286) என்ற சூத்திரத்திலுள்ள 'அவண்' என்றதனால், இளம்பூரணர் பனைத்திரள் என்ற வல்லெழுத் துப்பேற்றினைக் கொண்டனர். அதனை ஈண்டு 'நினையுங் காலை' என்றதனாற் கொள்ளலாகும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***283.*** **பனையும் அரையும்......என்மனார் புலவர்.**

'நினையுங்காலை' என்றதனான், தூதுணை - வழுதுணை- தில்லை-ஓலை- தாழை-என்னும் இப்பெயர்களும் ஐகெட அம்முப்பெறும் என்று கூறினர் உரையாளர். ஆசிரியர் பனை முதலிய மூன்று மரப்பெயர்கள் மட்டும் விதந்து கூறி யிருத்தலின், பிறவற்றைக் கோடல் அவர்கருத்தன்று.

முன்னர்க் 'கொடிமுன் வரினே' (285) என்னும் சூத்திரத்தில் 'கடிநிலை யின்று' என்றதனான், ஐகாரவீற்றுப் பெயர்கள் அம்முச் சாரியையும் பிறசாரியையும் பெற்றுழி அதிகார வல்லெழுத்துக் கெடுத்துக் கொள்க - என்றார் நச்சினார்க்கினியர். சிறப்புவிதி கூறுமிடத்துப் பொதுவிதி செல்லாதாகலின், இவ்வாறு கூறுதல் வேண்டுவதன்று.

***283.*** [தூதுணை முதலிய ஐகாரவீற்றுச் சொற்களும் 'பனை' போல முடியும் இயைபு நோக்கி, 'நினையுங்காலை' என்னும் மிகையான் அவற்றை முடித்தனர் உரைகாரர்.

சாரியைப் பேறு அதிகார வல்லெழுத்தை வீழ்த்தாது ஆதலின், அதனைக் 'கடிநிலை யின்று' என்ற மிகையான் கெடுக்க என்ற நச்சினார்க்கினியர் கூற்றை இவ்வுரைகாரர் 'சிறப்புவிதியால் பொதுவிதி விலக்கப்படும்' என மறுத்தார். **244**ஆம் சூத்திரத்துக் குறிப்புரை காண்க. ஏற்புழியெல்லாம் அதனையே கொள்க.]

**இளம்பூரணம்**

***285. பனையின் முன்னர் 'அட்டு 'ப் புணருமாறு***

**பனையின் முன்னர் அட்டுவரு காலை**
**நிலையின்று ஆகும் ஐஎன் உயிரே**
**ஆகாரம் வருதல் ஆவயி னான.**

இதுவும் அது.

*(இ-ள்.)* மேற்கூறிய வழியே அன்றிப் பனையென்னும் சொல்லின் முன்னர் அட்டு என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து, நிற்றலின்றாம் ஐ என்னும் உயிர்; அவ்விடத்து ஆகாரம் வந்து அம்மெய்ம்மேல் ஏறிமுடிக எ-று.

வருமாறு : பனாஅட்டு[1] - எனவரும்.

'ஆவயின்' என்றதனான், விச்சாவாதி[2] என்றாற் போல் வனவற்றது வேற்றுமை முடிபு கொள்க. *(82)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***285.*** 1) பனையினது தீங்கட்டி *(சங். உரை)*

2) விச்சையை வல்ல வாதி, விச்சையால் வந்து வாது புரிவோன் என இரண்டாவதும் மூன்றாவதும் விரித்துப் பொருள்கொள்க. விச்சை + வாதி = விச்சாவாதி; நிலைமொழி ஐகாரம் கெட்டு ஆகாரம் நின்ற மெய்ம்மேல் ஏறிற்றாக முடிக்க. இம்முடிபினை நச்சினார்க்கினியரும் குறிப்பிடுவர். இவ்வியல் 86ஆம் சூத்திரவுரையுள் 'விச்சாவாதி'யை அல்வழி முடிபு என்பர் இளம்பூரணர்.

### நச்சினார்க்கினியம்

## 284. பனையின் முன்னர் 'அட்டு'ப் புணருமாறு

**பனையின் முன்னர் அட்டுவரு காலை**
**நிலையின்று ஆகும் ஐஎன் உயிரே [1]**
**ஆகாரம் வருதல் ஆவயி னான.**

இது நிலைமொழிச் செய்கை நோக்கி எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) பனையின்....காலை - முற்கூறியவாறன்றிப் பனை என்னும் சொல்முன்னர் அட்டு என்னும் சொல் வருமொழியாய் வரும் காலத்து; நிலையின்று.....உயிர்- நிற்றலில்லை ஆகும் ஐ என்னும் உயிர்; ஆவயினான் ஆகாரம் வருதல் - அவ்விடத்து ஆகாரம் வந்து அம்மெய்ம்மேல் ஏறி முடிக எ-று.

வருமாறு: பனாஅட்டு எனவரும். இதற்கு மூன்றாவதும் ஆறாவதும் விரியும் [2].

'ஆயினான' என்றதனான், ஓராநயம் [3] விச்சாவாதி [4] என்னும் வேற்றுமை முடிபும், கேட்டாமூலம் பாறாங்கல் என்னும் அல்வழிமுடிபும் [5] கொள்க. இவற்றுள் வடமொழி களை மறுத்தலும் ஒன்று [6]. (82)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**284.** 1. ஈற்று ஐகார நெட்டுயிர் ஆகாரமாகத் திரியும் என்னாது, ஐ கெடவே ஆகாரம் வந்து அம்மெய்ம்மேல் ஏறி முடியும் என்றவாறு காண்க. 258 ஆம் சூத்திரவிதி, அது+அன்று

என்னுமிடத்து, நிலைமொழியீற்று முற்றுகரம் ஆகாரமாகத் திரிய, அதாஅன்று என முடிதலைச் சுட்டுகிறது. ஓருயிர் மற்றோர் உயிராகத் திரிதலும், ஓருயிர்கெட அவ்விடத்தே மற்றோர் உயிர் தோன்றுதலும் என்னும் இந்நெறி ஆங்காங்கு இடம்பெறுதலைக் காண்கிறோம். இரண்டனுள் ஒன்று நூன் முற்றும் கடைப்பிடிக்கப்பட்டிலது. காரணம் எம்மனோர் அறிதற்கு அரிதென்க.

2. பனஞ்சாற்றினால் விளைந்த தீங்கட்டி, பனையினது தீங்கட்டி.

3. ஓரையினது நன்மை. ஓரை - இராசி

4. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

5. கேட்டையும் மூலமும்; பாறையாகிய கல்.

6. ஹோரா (ஓரா), வித்யா (விச்சா), ஜேஷ்டா (கேட்டை) இவ்வட சொற்களைத் தமிழ் வருமொழிச் சொற்களொடு புணர்த்தல் கூடாது என்பது. ஆகாரஈறு வடசொல்லில் ஐகார ஈறாம். கேட்டை+மூலம்=கேட்டாமூலம் எனத் தமிழில் முடிந்ததாக உரையாசிரியர் கருதுப. ஐகாரம் கெட்டு ஆகாரம் தோன்றி மெய்ம்மேலேறி முடிந்தது என்க. ஓராநயம் முதலியனவும் அன்ன.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***284.*** **பனையின் முன்னர்......ஆவயி னான.**

ஈற்று ஐகாரம், தனக்குமுன் உயிர்முதன்மொழி வந்து ஒரு சொற்றன்மைப்படப் புணருமிடத்துச் சொல்லின் இடைய தாகலின் ஒரு மாத்திரையளவில் ஒலிக்கும். அதனால் பனை அட்டு என்பது பன அட்டு என்றொலிக்குமாகலின், பன என்பதன்கண் உள்ள அகரமும் அட்டு என்பதன்கண் உள்ள அகரமும் சேர்ந்து ஓர் ஆகாரமாகிப் பனாட்டு என்று ஒலித்தல்

உய்த்துணரத்தகும். பனாட்டு என்பதில் வருமொழி முதலெழுத்து இன்னதென்று அறிவிக்க வேண்டி அகரம் வரி வடிவில் எழுதப்படுகின்றதேயன்றி, அஃது ஒலிக்கப் படுவதன்று.

**284.** [பனாஅட்டு என்புழி அகரம் ஒலிக்கப்படாது. அகரம் வருமொழி முதலைக் குறிக்க வந்த அறிகுறி எழுத்தே என்ற இவர்கருத்து முன்னும் (258) குறிப்புரையிற் காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**284.** **பனையின் முன்னர்......ஆவயினான.**

'ஆவயினான' என்றதனான், ஓராநயம் விச்சாவாதி கேட்டாமூலம் பாறாங்கல் என்னும் அல்வழிமுடிபும் கொள்க என்றார் நச்சினார்க்கினியர். இவற்றுள் ஓரா விச்சா என்பவை இயல்பீறாகவே கொள்ளப்படுதலானும், கேட்டாமூலம் என்பது சான்றோர் வழக்கன்று ஆதலானும், அவற்றை ஈண்டு அடக்குதல் வேண்டாவாம். பாறாங்கல் கூழாங்கல் என்பவை பண்புபற்றி ஒருசொற்புணர்ச்சியாய் நிற்பவை யாகலான், அவற்றை நிலைமொழி வருமொழி செய்து புணர்த்தல் வேண்டாவாம்.

**284.** [பாறை+கல்= பாறாங்கல்; கூழை+கல்= கூழாங்கல் என இவை முன்மொழி பண்பு பற்றி வரும் பண்புத்தொகை யாகாது, இருபெயரொட்டாய் நிற்பனவாக உரையாசிரியன் மார் துணிந்தமை கொள்க. கல் பொதுப்பெயராகவும், பாறையும் கூழையும் சிறப்புப்பெயராகவும் கொள்ளப்படும். (சூறாவளி என்பதும் அது.)

ஹோரா வித்யா என்பன வடசொல்லாயவழி ஆகார ஈறு ஐகாரமாய் ஓரை விச்சை என நிற்றல் காண்க. ஓரை+நயம்= ஓராநயம், விச்சை + வாதி = விச்சாவதி - என முடிதலை நச்சினார்க்கினியர் கருதினார். ஜேஷ்டா - கேட்டை என்று வடசொல்லாம். கேட்டை+மூலம் = கேட்டாமூலம் என்பது

உம்மைத்தொகையாய்க் கொள்ளப்படும். இத் தொடர்கள் தம்காலத்தே அறிஞர்களிடை வழங்கியமை கண்டு, வடசொல் முடிபாயினும் இலேசினான் அமைத்தார் எனக் கோடற்கண் இழுக்கின்மை காண்க. ஓரையாகிய நன்மை, விச்சை(யே)வாதி, கேட்டையும் மூலமும்-என இவை அல்வழிக்கண்ணவாதல் கொள்க.]

## இளம்பூரணம்

### *286. 'பனை'யின் முன்னர்க் 'கொடி' புணருமாறு*

**கொடிமுன் வரினே ஐஅவண் நிற்பக்**
**கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி.**

இதுவும் அது.

*(இ-ள்.)* கொடி என்னும் சொல் பனை என்னும் சொல் முன்னர் வரின், மேல் *(82)* கெடுக்க எனப்பட்ட ஐகாரம் ஆண்டுக் கெடாதே நிற்ப, வல்லெழுத்து மிகுதி நீக்கும் நிலைமையின்று எ-று.

வருமாறு: பனைக்கொடி - என வரும்.

'கடிநிலை யின்று' என்றதனான், இவ்வீற்றுள் எடுத் தோத்தானும் இலேசானும் அம்முச்சாரியையும் பிற சாரியையும் பெற்றவழி, இயைபு வல்லெழுத்து வீழ்க்க. இன்னும் இதனானே, உருபிற்குச் சென்ற சாரியை பொருட்குச் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

உ-ம். பனையின் காய் - அரையின் கோடு - ஆவிரையின் கோடு - எனவும், விசையின் கோடு - ஞெமையின் கோடு - நமையின் கோடு - எனவும், தூதுணையின் காய் - வழு துணையின் காய் - எனவும், வழையின் கோடு - வழையின்பூ- எனவும் வரும்.

'அவண்' என்றதனான், பனைத்திரள் என வல்லெ ழுத்துப் பேறும் கொள்க[1]. *(83)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*286. 1) பனை+திரள் = பனந்திரள் என முடிதலன்றி, பனைத்திரள் என முடிவது ஆசிரியர் கருத்தாகாது என்பர் ரெட்டியார்.*

**நச்சினார்க்கினியம்**

*285. 'கொடி' வந்து புணருமாறு*

**கொடிமுன் வரினே ஐ அவண் நிற்பக்**
**கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி.**

*இது மேல் (283) ஐகாரம் கொடுத்து அம்முப்பெறுக என்றார்; ஈண்டு அது கெடாது நிற்க வல்லெழுத்துப்பெறும் என்றலின் (280), எய்தியது இகந்துபடாமற் காத்தது. அம்மு விலக்கி வல்லெழுத்து விதித்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்ததுமாம்.*

*(இ-ள்.) முன் கொடி வரின் - பனை என்னும் சொல் முன்னர்க் கொடி என்னும் சொல் வரின்; ஐ அவண் நிற்ப - கேடு ஓதிய ஐகாரம் ஆண்டுக் கெடாது நிற்ப; வல்லெழுத்து மிகுதி கடிநிலை இன்று - வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கும் நிலைமையின்று எ-று.*

*வரலாறு: பனைக்கொடி என வரும். இதற்கு இரண்டாவதும் மூன்றாவதும் விரியும்[1].*

*'கடிநிலை யின்று' என்றதனான், ஐகார ஈற்றுப் பெயர்களெல்லாம், எடுத்தோத்தானும் இலேசானும் அம்முச்சாரியையும் பிறசாரியையும் பெற்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுத்துக் கொள்க.*

*இன்னும் இதனானே, உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.*

*பனையின் குறை[2] அரையின் கோடு ஆவிரையின் கோடு விசையின் கோடு ஞெமையின் கோடு நமையின் கோடு எனவும், தூதுணையின்காய் வழுதுணையின்காய் உழையின் கோடு வழையின் கோடு எனவும் வரும்.*

*பனைத்திரள் பனைந்திரள் என்னும் உறழ்ச்சி முடிபு தொகைமரபினுள் புறனடையாற் கொள்க, அல்வழியும் ஆதலின்[3] (171); அன்றி ஈண்டு 'அவண்' என்றதனான் கொள்வாருமுளர். (83)*

**நச்சினார்க்கினியர் உரைக்குறிப்பு**

***285.*** 1. பனையது வடிவத்தை எழுதிய கொடி, பனையது உருவத்தால் எழுதப்பட்ட கொடி. பனைக்கொடி பலதேவற்கு உரியது. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. பனையினது துண்டு. 169ஆம் சூத்திரத்தான் முடிந்த புணர்நிலை வேறாதல் அறிக.

3. பனையாகிய திரள் என இருபெயரொட்டாகப் பொருள் செயின் அல்வழியாம். மரங்கள் திரட்சியாக வளர்ந்த செறிவில், பனை(மர)த் திரட்சி 'பனைத்திரள்' எனப்படும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***286.*** **கொடிமுன் வரினே.......வல்லெழுத்து மிகுதி.**

"பனைத்திரள் பனைந்திரள் என்னும் உறழ்ச்சி முடிபு தொகை மரபினுள் புறனடையாற் கொள்க, அல்வழியும் ஆதலின்" என்றார் நச்சினார்க்கினியர். 'பனைத்திரள்' எவ்வாறு அல்வழியாகும் என்பது ஆராய்தற்குரியது.

***286.*** [பனையாகிய திரள் என இருபெயரொட்டாகப் பொருள் கொள்ளப்படும். மரங்களின் திரட்சி பற்றிய ஆராய்ச்சியுள்வழி, பனையது செறிவு பற்றிப் 'பனைத்திரள்' என்ற வழக்கு உண்டாமன்றே ?]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***285.*** **கொடிமுன் வரினே......வல்லெழுத்து மிகுதி.**

உரையாசிரியர்கள், பனையின்குறை அரையின்கோடு ஆவிரையின்கோடு என, உருபிற்கு வரலாம் என்ற இன் சாரியை குறை என்பது முதலிய பெயர்கட்கும் வரும் என்றனர். அஃது ஆசிரியர் கருத்தாயின், 'பலவற் றிறுதி உருபியல் நிலையும்' (220) 'நீயென் ஒருபெயர் உருபியல் நிலையும்' (253) என்று மாட்டெறிந்தாங்கு, இவற்றிற்கும் மாட்டேறு கூறுவர். அவ்வாறு கூறாமையின் அஃது ஆசிரியர் காலத்து வழக்கன்று என்பது போதரும்.

ஆசிரியர், 'ஐகார விறுதி' என்னும் சூத்திரத்தால் ஐகாரவீற்றுப் பெயர்கட்குக் கூறிய பொதுவிதி, பனை அரை ஆவிரை என்னும் ஐகாரவீற்றுப் பெயர்கட்குப் பொருந் தாததனான் அன்றே, 'பனையும் அரையும்' என்னும் சூத்திரத்தான் அம்மூன்று பெயர்க்கும் சிறப்பு விதி கூறினார்? (ஆதலின் அவற்றிற்குப் பொதுவிதி செல்லாது.) அதனால் பனை முதலிய மூன்று பெயர்களுக்குமுன் வல்லெழுத்து மிகுதல் இல்லை என்பது பெறப்படும். அம்மூன்றனுள்ளும், பனையென்னும் பெயர்க்குமுன் மட்டும் அட்டு என்னும் சொல் வருமிடத்து மேற்கூறிய விதி பொருந்தாமையின் அதற்குமட்டும் வேறுவிதி கூறினார். பனை என்பதன்முன் கொடி என்னும் சொல் வருமிடத்தும், அம்முப்பெறுதலும் ஐகெடுதலும் ஆகிய விதியேயன்றி, ஐகாரவீற்றுப் பொது விதியும் வருதலின் அதற்குத் தனியே கூறினார். ஐகார வீற்றுப் பொதுவிதி தானே வருமாயின் இது கூறுதல் வேண்டாவன்றோ? இவற்றால், பனையென்பதன்முன் அட்டு கொடி என்பவை தவிர ஏனைச்சொற்கள் வருமிடத்து, 'பனையும் அரையும்' என்னும் சூத்திரத்தாற் கூறிய விதியே வருமென்பது துணியப்படும். ஆகலின், திரள் என்னும் சொல் வருமிடத்து, பனந்திரள் என்றே வருதல் வேண்டும் என்பது நன்கு விளங்கும்.

***285.*** [*பனையின் குறை - பனையினது துண்டம். தொகை மரபு 27ஆம் சூத்திரத்துள், 'பனை' என்னும் அளவுப் பெயர் இன்சாரியை பெற்றுப் பனையின் குறை என முடியுமாறு கூறப்பட்டது. அம்முடிபு பனையும் குறையும் என அல்வழி. இவ்வேற்றுமை முடிபு ஆசிரியர் காலத்து வழக்கன்று, பிற்பட்ட காலத்தது என்கிறார் இவ்வுரைகாரர்.*

*பனை+கொடி 'பனைக்கொடி' என முடிதலேயன்றி, பனங்கொடி என்னும் முடிபும் பெறும் என்பதற்கு இவர் கூறும் காரணம் நுண்ணியதொன்று, பலதேவனது கொடி பனையினது உருவத்தை யெழுதிய கொடி. அது 'பனைக் கொடி' எனப் புறநானூற்றில் (58:14) ஆட்சி பெறுகிறது. 'பனங்கொடி' ஆட்சி பெற்றதாகத் தெரிந்திலது. 'பனையைச் சுற்றிய கொடி' முதலாக வேற்றுமைப் புணர்ச்சி தோன்ற விரிக்கவேண்டும்.*

*பனைத்திரள் பனைந்திரள் முதலாயின பிற்காலத்து வழக்கு என்பது இவ்வுரைகாரர் கருத்து.*]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***285.*** **கொடிமுன் வரினே.....வல்லெழுத்து மிகுதி.**

*பனையை எழுதிய கொடி என்பது பொருள். பனை மரத்திற்குக் கொடியின்மையின், இவ்விதி விதந்து கூறப்பட்டது.*

*மெலிமிகும் என ஆசிரியர் கூறாமையின், பனைந்திரள் எனக்காட்டுவது பொருந்தாதென்க.*

**இளம்பூரணம்**

***287. இவ்வீற்றுத் திங்கட்பெயரும் நாட்பெயரும் முடியுமாறு***

**திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன.**

இச்....எனின், இயைபு வல்லெழுத்தினோடு சாரியைப் பேறும், வல்லெழுத்து விலக்கிச் சாரியைப் பேறும் கூறுகின்றமையின், எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் வகுத்......ற்று.

*(இ-ள்.)* ஐகாரஈற்றுத் திங்களை உணரநின்ற பெயரும், அவ்வீற்று நாளை உணரநின்ற பெயரும், முன் இகரஈற்றுத் திங்களும் நாளும் கிளந்த தன்மையவாய்[1], இக்கும் ஆனும் பெற்றுமுடியும் எ-று.

*(உ-ம்.)* சித்திரைக்குக்கொண்டான், கேட்டையாற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

நாள் முற்கூறாது திங்கள் முற்கூறிய அதனான், கரியவற்றுக்கோடு[2] எனவும் - அவையத்துக் கொண்டான் எனவும் - வழைங்கோடு வழைக்கோடு எனவும் - கலைங் கோடு கலைக்கோடு எனவும் - இவ்வீற்று முடியாதன எல்லாம் கொள்க. *(84)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***287.*** *1)* பரணியாற் கொண்டான், ஆடிக்குக் கொண்டான் *(248, 249)*.

*2)* 'கரியவை' நிலைமொழி.

**நச்சினார்க்கினியம்**

## *286. இவ்வீற்றுத் திங்கட்பெயரும் நாட்பெயரும் முடியுமாறு*

**திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன.**

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்குச் சாரியையும், வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியையும் வகுத்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் கூறுகின்றது.

(இ-ள்.) திங்களும் நாளும் - ஐகார ஈற்றுத் திங்களை உணர நின்ற பெயரும், நாளை உணரநின்ற பெயரும்; முந்து கிளந்தன்ன-இகர ஈற்றுத் திங்களும் நாளும் போல (248, 247) இக்கும் ஆனும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) சித்திரைக்குக்கொண்டான்-கேட்டையாற் கொண்டான்[1] - சென்றான் தந்தான் போயினான் எனவரும். சித்திரை நாளாயின் ஆன்சாரியை கொடுக்க. வல்லெழுத்துக் கேடு முன்னர்க் 'கடிநிலை யின்று' (285) என்பதனாற் கொள்க.

திங்கள் முற்கூறிய முறையின்றிக் கூற்றினான்[2], உழைங் கோடு அமைங்கோடு உடைங்கோடு என மெல்லெழுத்துக் கொடுத்தும், கலைங்கோடு கலைக்கோடு என உறழ்ச்சி எய்துவித்தும், கரியவற்றுக்கோடு நெடியவற்றுக்கோடு என ஐகார ஈற்றுப் பண்புகொள் பெயர்க்கு (178 உரை) வற்றுக் கொடுத்து ஐகாரம் கெடுத்து வற்றுமிசை ஒற்று என்று ஒற்றுக் கெடுத்தும்[3], அவையத்துக் கொண்டான் அவையிற் கொண்டான் என அத்தும் இன்னும் கொடுத்தும், பனையின் மாண்பு கேட்டையினாட்டினான்[4] என இயல்புகணத்துக்கண் இன்சாரியை கொடுத்தும் முடிக்க.

ஐகார ஈறு இன்சாரியை பெறுதல் தொகைமரபினுள் கூறாமையின் ஈண்டுக் கொண்டாம். (84)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**286.** 1. சித்திரைத்திங்கட்கண், கேட்டைநாளின்கண் - என்று பொருள் கூறுக.

2. 247, 248ஆம் சூத்திரங்களிற் கூறிய முறை 'நாளும் திங்களும்' என்பது.

3. கரியவை+கோடு>கரியவை+வற்று+கோடு>
கரியவ்+வற்று+ கோடு> கரிய+வற்று+க்+கோடு= கரியவற்றுக் கோடு (சூ.133)

4. கேட்டையின்+நாட்டினான் : 149ஆம் சூத்திர விதியான் வருமொழி நகரம் னகரமாய்த் திரிய, நிலைமொழி 'இன்'சாரியையது னகரம் 160ஆம் சூத்திர இலேசினான் கெட்டது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**287. திங்களும் நாளும் முந்துகிளர் தன்ன.**

"ஐகாரஈறு இன்சாரியை பெறுதல் தொகைமரபினுட் கூறாமையின் ஈண்டுக்கொண்டார்" என நச்சினார்க்கினியத்தில் உள்ளது. வேற்றுமையல்வழியின்கண் ஐகார வீற்றுப் பெயர்களின் செய்கைகள் தொகைமரபினுட் கூறப்பட்டனவேயன்றி, வேற்றுமைப் புணர்ச்சியின் செய்கைகள் ஆங்குக் கூறப்படாமையின் இத்தொடர் இடைச்செருகலாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

**287.**["பனையென்னும் அளவுப்பெயர் (170) அல்வழிப் புணர்ச்சிக்கண் பனையின் குறை என இன்சாரியை பெறுதல் தொகைமரபிற் கூறினார் ஆசிரியர். ஆயின் ஐகார ஈற்றுப் பெயர் வேற்றுமைக்கண் இன்சாரியை பெறுதலை ஆண்டுக் கூறிற்றிலர்" என்பது நச்சினார்க்கினியருரையின் பொருள். நச்சினார்க்கினியத்தில் காணப்படும் இப்பகுதித் தொடரை இடைச்செருகல் எனக் கருதவேண்டும் இன்றியமையாமை இல்லை எனத் தோன்றுகிறது. ஐகாரவீற்று அளவுப்பெயரை ஆண்டு இன்சாரியை கொண்டு முடித்து அல்வழியில் கிளந்தோதினாற்போல, ஈண்டு ஐகார ஈற்றுப் பிறபெயர்களும் வேற்றுமைக்கண் இன்சாரியை பெற்று முடியுமாற்றை முறையன்றிக் கூற்றாகிய இலேசினாற் கொண்டார் நச்சினார்க்கினியர். இதன்கண் பொருந்தாமை சிறிதுமின்று.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**286.** **திங்களும் நாளும் முற்கிளந் தன்ன.**

திங்களை முற்கூறிய முறையன்றிக் கூற்றினான், உழைங் கோடு அமைங்கோடு உடைங்கோடு கலைங்கோடு கலைக் கோடு முதலிய பலவற்றையும் கொள்க என்று உரையாளர் அமைப்பது பொருந்துவதன்று, ஆசிரியர் திங்கட்பெயர்க்கும் நாட்பெயர்க்குமே இச்சூத்திரத்தில் விதி கூறுகின்றாராகலின்.

## இளம்பூரணம்

### *288. 'மழை' முடியுமாறு*

**மழைஎன் கிளவி வளிஇயல் நிலையும்.**

இச்....எனின், வல்லெழுத்தினோடு அத்துப்பேறும் வல்லெழுத்து விலக்கி இன்னும் வகுக்கின்றமையின், எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் கூறு....ற்று

*(இ-ள்.)* மழை என்னும் ஐகாரஈற்றுச்சொல், இகரஈற்று வளி என்னும் சொல் அத்தும் இன்னும் பெற்று முடிந்த இயல்பின்கண்ணே நின்று முடியும் எ-று.

*(உ-ம்.)* மழையத்துக் கொண்டான், மழையிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும். *(85)*

## நச்சினார்க்கினியம்

### *287. 'மழை' அத்தும் இன்னும் பெற்று முடிதல்*

**மழைஎன் கிளவி வளிஇயல் நிலையும்.**

இது வல்லெழுத்தினோடு அத்து வகுத்தலின் எய்தியதன் மேல் சிறப்புவிதியும், இயைபு வல்லெழுத்து விலக்கி இன் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் கூறுகின்றது.

*(இ-ள்.)* மழை.....நிலையும் - மழை என்னும் ஐகார ஈற்றுச் சொல், வளி என்னும் சொல் அத்தும் இன்னும் பெற்று முடிந்த இயல்பின்கண்ணே (241, 242) நின்று முடியும் எ-று.

*(உ-ம்.)* மழையத்துக் கொண்டான் மழையிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

ஈண்டு இன்பெற்றுழி வல்லெழுத்துக்கேடு 'கடிநிலை யின்று' (285) என்றதனாற் கொள்க.

சாரியைப்பேறு வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக்கண்ணும் கொள்க.

மழையத்துஞான்றான் மழையின்ஞான்றான் நிறுத்தி னான் மாட்டினான் வந்தான் அடைந்தான் என ஒட்டுக. (85)

## இளம்பூரணம்

### 289. 'வேட்கை' முன்னர் 'அவா' முடியுமாறு

**செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்**
**ஐ என் இறுதி அவாமுன் வரினே**
**மெய்யொடும் கெடுதல் என்மனார் புலவர்**
**டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு அல்வழிக்கண் செய்யுள் முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* செய்யுளிடத்து அல்வழிக்கண் வேட்கை என்னும் ஐகார ஈற்றுச்சொல், அவா என்னும் சொல் தனக்கு முன்னர்வரின், அவ் ஐகாரம் தான் ஊர்ந்த மெய்யொடும் கூடக் கெடுக என்று சொல்லுவர் புலவர்; அவ்விடத்து நின்ற டகார ஒற்று ணகாரஒற்றாய்த் திரிந்து முடிதல் வேண்டும் எ-று.

வருமாறு: 'வேணவா நலிய வெய்ய உயிரா' (நற். 61) எனவரும்.

இதனை உம்மைத்தொகையாகக் கொள்க[1]. அவா என்பது அவ்வேட்கையின் மிகுதி.

இவ்அல்வழியை வேற்றுமை முடிபிற்கு முன் கூறாத அதனான், விச்சாவாதி[2] என்றாற்போல வரும் உம்மைத் தொகை அல்வழிமுடியும், பாறங்கல்[3] என வரும் இரு பெயரொட்டு அல்வழி முடிபும் கொள்க. (86)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*289. 1) 'ஐவாய வேட்கை அவாவினை' (நாலடி. 59) - இத்தொடர்க்குப் பொருள்கண்ட உரையாசிரியர் பதுமனார் 'ஐந்து நெறிகளினுடைய வேட்கையினையும் மனத்தால் வரும் அவாவினையும்' என்று உம்மைத்தொகையாகவே உரைத்தார்.*

*2) 285ஆம் சூத்திரவுரையுள், 'விச்சாவாதி' வேற்றுமை முடிபாகக் கொண்ட இளம்பூரணர் ஈண்டு அல்வழி முடிபு என்கிறார். இத்தொடர் உம்மைத்தொகை அல்வழி முடிபாதல் கூடாது. அல்வழியாகக் கொள்ளவேண்டின் 'விச்சையே வாதி (யாவது)' என எழுவாய்த் தொடராகக் கொள்ளலாம். இவ்விரண்டினுள் ஒன்று இடைச்செருகல் ஆதல் வேண்டும்.*

*3) பாறையாகிய கல் என இருபெயரொட்டு. ஐகாரம் கெட இடையே வந்த அம்முச்சாரியை திரிந்தது போலும்.*

*வேட்கை+நீர்=வேணீர் என முடிந்தது என்பர் மயிலை நாதர். 'வேணவா என்பது வேட்கைப் பெருக்கம்' என்பது திவாகரம்.*

**நச்சினார்க்கினியம்**

***288. 'வேட்கை' முன்னர் 'அவா'ப் புணரும் செய்யுள் முடிபு***

**செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்**
**ஐஎன் இறுதி அவாமுன் வரினே**
**மெய்யொடும் கெடுதல் என்மனார் புலவர்**
**டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்.**

இது வேற்றுமைக்கண் செய்யுள் முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) செய்யுள்.....இறுதி - செய்யுளிடத்து வேட்கை என்னும் ஐகார ஈற்றுச்சொல்; அவா முன் வரின் - அவா என்னும் சொற்கு முன் வரின்; மெய்யொடும் ....புலவர் - அவ்ஐகாரம் தான் ஊர்ந்த மெய்யொடுங்கூடக் கெடும் என்று கூறுவர் புலவர்; டகாரம்....வேண்டும் - அவ்விடத்து நின்ற டகார ஒற்று ணகாரஒற்றாய்த் திரிதல் வேண்டும் எ-று.

வருமாறு: 'வேணவா நலிய வெய்ய வுயிரா' (நற்.61)

வேட்கையாவது பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது அப்பொருள்களைப் பெற வேண்டு மென்று மேல்மேல் நிகழும் ஆசை. எனவே, வேட்கையால் உண்டாகிய அவா என மூன்றனுருபு விரிந்தது. இதனை வேட்கையும் அவாவும் என அல்வழி என்பாருமுளர்[1]. இங்ஙனம் கூறுவார் பாறங்கல் என்பதனை அம்முக்கொடுத்து ஈண்டு முடிப்பர்[2]. (86)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*288.* 1. இளம்பூரணர் இவ்வாறு கொண்டார்.

2. பாறை+கல்: நிலைமொழி யீற்று ஐகாரம் கெடவே, இடையே வந்த அம்முச்சாரியை 129ஆம் சூத்திரவிதியால் மகரம் திரிந்தது. பாறங்கல் என இருபெயரொட்டாக முடிக்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*289.* செய்யுள் மருங்கின்.....ஆதல் வேண்டும்.

'வேணவா' என்றதை வேற்றுமைத் தொகையாக நச்சினார்க்கினியர் கொண்டமை, வேற்றுமைத் தொகை அதிகாரத்தில் இதனை ஆசிரியர்கூறினமையானும், அவ்வாறு கொள்ளுதல் பொருளுக்குப் பொருந்துதலானும் சிறப் புடையது.

"இவ் அல்வழியை வேற்றுமை முடிபிற்கு முன் கூறாததனால், விச்சாவாதி என்றாற் போல வரும் உம்மைத் தொகை அல்வழிமுடிபும் பாறங்கல் என இருபெயரொட்டு அல்வழி முடிபும் கொள்க" என்றார் இளம்பூரணர். விச்சாவாதி என்பது எவ்வாறு உம்மைத்தொகை ஆகும்? இவற்றைத் தொகைமரபின் இறுதியிற் கூறப்பட்ட புறனடைச் சூத்திரத்தாற் கொளல் தகும்.

***289.*** ['வேணவா' என்பது வேற்றுமை முடிபு என்பதனைப் பொருட் பொருத்த அமைதிகண்டு சாத்திரியார் ஏற்றுக்கொண்டார். இஃது அல்வழி முடிபே என்பர் ரெட்டியார்.

'விச்சாவாதி' உம்மைத்தொகையாகாது என்று இவர் கருதியது பொருந்தும். 'விச்சையே வாதியாவது' என்னும் எழுவாய்த்தொடராக இதனைக் கொள்ளல் தகும். பிறவாறாகப் பொருள்செய்ய இத்தொடர் இடந்தந்திலது.

ஈண்டு ஐகார ஈற்று இறுதிக்கண் இம்முடிபினை அடக்கிக்கொள்ளும் இயைபுடைமை, ஆண்டுத் தொகை மரபிற்கூறிய புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளுதற்கண், இல்லை என்பது தெளிவாம்.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***288.*** **செய்யுள் மருங்கின் .....ஆதல் வேண்டும்.**

வேணவா என்பது உம்மைத்தொகை என்றார் இளம்பூரணர். இத்தொடரை வேட்கையாலுண்டாகிய அவா என்று விரித்தார் நச்சினார்க்கினியர். அவர் இச்சூத்திரம் வேற்றுமைப்புணர்ச்சி விதி கூறும் அதிகாரத்துக் கூறப்பட்டது கருதி வேற்றுமைப் பொருள்பட விரித்தார் போலும். ஆசிரியர் மேல் தொகைமரபில் இகர ஐகார ஈறுகளுக்கு அல்வழிப் புணர்ச்சிப் பொதுவிதி கூறினாராகலின், இவ்வியலில் அவ்வீறுகளுக்கு முதற்கண் வேற்றுமைவிதி

கூறி, ஆண்டுத் தொகைமரபில் அடங்காதவற்றைப் பின்னர்க் கூறுகின்றாராதலின், இச்சூத்திரம் வேற்றுமைப் புணர்ச்சி கூறுவதாகவே கொள்ளுதல் வேண்டா. இவ்வியலில் இகர வீற்றிற்கு வேற்றுமைப் பொதுவிதி கூறிப் பின்னர் அல்வழிப் புணர்ச்சிக்கு விதி கூறியிருப்பது காண்க.

வேட்கை என்பதன் முதனிலையாகிய வேள் என்பதன் ளகரமெய் ணகரமெய்யாகத் திரிந்துநின்று அவா என்னும் சொல்லொடு புணர்ந்து வேணவா என வந்தது. ளகாரம் ணகாரமாதல், ஆள்-ஆண், எள்-எண் முதலிய சொற்களிற் காண்க.

**288.** [வேற்றுமையதிகாரம் 280ஆம் சூத்திரம் தொடங்கி நிகழ்தலின், நச்சினார்க்கினியர் இச்சூத்திரமுடிபையும் வேற்றுமையாகக்கொண்டு நயமாகப் பொருள் விரித்தார். இளம்பூரணர் அல்வழியாகக்கொண்டு உம்மைத்தொகை என்றார். இருவழியாக முடிப்பினும் அமையும் என்றே கொண்டார் பாலசுந்தரம் அவர்கள்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**288. செய்யுள் மருங்கின்.........ஆதல் வேண்டும்.**

வேட்கையவா எனப் பொதுவிதியாற் புணரின் அல்வழியாம்; வேட்கையாகிய அவா என்பது பொருள்.

வேட்கையான் எழுந்த அவா வேணவா என முடிபெய்திற்று. வேட்கை என்பது வேண் எனத் திரிதற்கு வருமொழி காரணமாகாமையின், செய்யுள் வழக்காயிற்று எனவுணர்க.

**288.** [பொதுவிதியான் முடிக்கலாகாமை கருதியே இவ்விதி கூறிய ஆசிரியர், 'வேணவா' என முடிந்தே இருவழியும் பொருள்படும் எனக் கொண்டிருப்பார்போலும். இலம்படு *(316)* என்னும் இயல்பு முடிவே இருவழியும் பொருள்படுமாற்றை இவ்வுரைகாரரே குறித்துள்ளமை காண்க.]

## இளம்பூரணம்

### *290. ஓகார இறுதிப் பெயரது அல்வழி முடிபு*

**ஓகார இறுதி ஏகார இயற்றே.**

இச்....எனின், ஓகாரஈற்று அல்வழி முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* ஓகாரஈற்றுப் பெயர்ச்சொல், ஏகாரஈற்று அல்வழி இயல்பிற்றாய். வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* ஓக்கடிது[1] சிறிது தீது பெரிது - என வரும். *(87)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***290.*** *1)* ஓ - மதகுநீர் தாங்கும் பலகை.

'கோச்சேரல்' : இத்தொடரை இச்சூத்திரத்தான் முடித்துக் காட்டுவர் அடியார்க்கு நல்லார். (சிலப். பாயி. 2)

## நச்சினார்க்கினியம்

### *289. ஓகாரஈற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**ஓகார இறுதி ஏகார இயற்றே.**

இஃது ஓகாரஈற்று அல்வழிமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஓகார....இயற்று - ஓகார ஈற்றுப் பெயர்ச்சொல், ஏகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்துழி, அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஓக்கடிது சோக்கடிது சிறிது தீது பெரிது என வரும். *(87)*

## இளம்பூரணம்

### 291, இவ்வீற்று இடைச்சொல் முடிபு

**மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்**
**கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இச்....எனின், இவ்ஈற்று இடைச்சொல் முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) மாறுபாட்டினைக் கொண்ட எச்சப் பொருண்மையினை யுடைய ஓகாரமும், வினாப் பொருண்மையினையுடைய ஓகாரமும், ஐயப்பொருண்மையினை யுடைய ஓகாரமும், முன் பெயர்க்குக் கூறிய வல்லெழுத்தின்றி இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) யானோ கொண்டேன்? எனவும், நீயோ கொண்டாய்? எனவும், பத்தோ பதினொன்றோ? எனவும் வரும்.

'கூறிய' என்றதனான், பிரிநிலையும் தெரிநிலையும் சிறப்பும் எண்ணும் ஈற்றசையும் இயல்பாய் முடிதல் கொள்க.

(உ-ம்.) அவனோ கொண்டான்[1] எனவும், நன்றோ தீதோ அன்று[2] எனவும், ஓஒ கொண்டான்[3] எனவும், 'குன்றுறழ்ந்த களிறென்கோ கொய்யுளைய மாவென்கோ'[4] (புறநா. 387) எனவும், யானோ தேறேன்[5] (குறுந். 21) எனவும் வரும். (88)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

*291.* 1) கொள்ளாதார் பலரிடையே அவனைப் பிரித்தலின் ஓகாரம் பிரிநிலையாயிற்று.

2) நன்றுமன்று தீதுமன்று, நொதுமல் தன்மைத்து இது எனத் தெரிதற்கண் ஓகாரம் வந்தது.

3) 'ஓஒ பெரியன்' என இடை. 8ஆம் சூத்திரவுரையுள் காட்டிய உதாரணம் பொருந்தும். 273ஆம் சூத்திரத்து (4) உரைக்குறிப்பினைக் காண்க.

*4) களிறும் மாவும் கருத்தளவான் எண்ணப்பட்டன.*

*5) இவர் ஈற்றசையாகக் குறித்த இதனைச் சேனாவரையர் பிரிநிலை என்றார். (இடை. 8)*

**நச்சினார்க்கினியம்**

## *290. இவ்வீற்று இடைச்சொல் இயல்பாய் முடிதல்*

**மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்**
**கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

*இஃது இடைச்சொல் முடிபு கூறலின், எய்தாதது எய்து வித்தது.*

*(இ-ள்.) மாறுகோள்.....ஐயமும் - மாறுகோடலை யுடைய எச்சப் பொருண்மையை ஒழிபாகவுடைய ஓகாரமும், (சொல். 435) வினாப்பொருண்மையையுடைய ஓகாரமும், ஐயப்பொருண்மையையுடைய ஓகாரமும்; கூறிய ....ஆகும்- முற்கூறிய வல்லெழுத்தின்றி இயல்பாய் முடியும் எ-று.*

*(உ-ம்.) யானோ கொண்டேன் எனவும், நீயோ கொண்டாய் எனவும், பத்தோ பதினொன்றோ - புற்றோ புதலோ - எனவும் வரும்.*

*'கூறிய' என்றதனான், 'யானோ தேறேன் அவர் பொய் வழங் கலரே' (குறுந். 21) எனப் பிரிநிலையும்[1], நன்றோ தீதோ கண்டது எனத்தெரிநிலையும்[2], ஓஒ கொண்டான் எனச் சிறப்பும்[3], 'குன்றுறழ்ந்த களிறென்கோ கொய்யுளைய மாவென்கோ' என எண்ணு நிலையும்[4], வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிதல் கொள்க. இதனானே ஈற்றசை வருமேனும் கொள்க.* *(88)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***290.**1. தேறுவார் பிறருள் பிரித்தலின் ஓகாரம் பிரிநிலை.*

2. இன்னதென ஆராய்தற்கண் வருதலின், தெரிநிலை.

3. 4. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க. 'ஓ ஓ பெரியன்' என்றிருப்பின் சிறக்கும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*291.* **மாறுகோள் எச்சமும்.......இயற்கை ஆகும்.**

" '*கூறிய*' என்றதனான், பிரிநிலை தெரிநிலை முதலிய பொருளில் வரும் ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயரின் கண்ணும் இயற்கைப் புணர்ச்சியாம்" எனக் கூறினர் உரைகாரர். அவை பிற்கால வழக்கு ஆகலின் அவற்றைக் கூறாது விடுத்தார் ஆசிரியர் எனலாம்.

## இளம்பூரணம்

### *292. ஒழியிசை ஓகார இடைச்சொல் முடிபு*

**ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற்று இயற்றே.**

இதுவும் அது.

(இ-ள்.) ஒழியிசை ஓகாரத்தினது நிலையும் மேற் சொல்லியொழிந்த ஓகாரங்களின் இயல்பிற்றாய் இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) கொளலோ கொண்டான்[1] - என வரும். (89)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*292.* 1) கொண்டுய்யப் போயினான் அல்லன் என ஓகாரம் ஒழியிசைப் பொருட்டாயிற்று. (கொண்டான் என்பதனைக் கொண்டு முடிந்தாலன்றி இப்பொருள் தாராது. நச்.)

## நச்சினார்க்கினியம்

**291. இதுவுமது.**

**ஒழிந்ததன் நிலையும் ஒழிந்தவற்று இயற்றே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஒழிந்ததன்....இயற்று - ஒழியிசை ஓகாரத்தினது நிலையும், முற்கூறிய ஓகாரங்களின் இயல்பிற்றாய் இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* கொளலோ கொண்டான்-செலலோ சென்றான்-தரலோ தந்தான் - போதலோ போயினான் - என ஓசை வேற்றுமையான் ஒருசொல் தோன்றப் பொருள் தந்து நிற்கும்[1]. *(89)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**291.** 1) கொள்ளுதலோ செய்தான்? செல்லுதலோ செய்தான்? தருதலோ செய்தான்? போதலோ செய்தான்? இவ்வாறு வருமொழியாக வந்தவற்றைக் காரிய வாசகமாகக் கொண்டுரைத்தார் நச்சினார்க்கினியர் (சொல். 113). "இவனது கொள்ளுதலால் பயனில்லை, வீண்மை இது" என்பது முதலாக ஓசை வேற்றுமையான் இந்நான்கு தொடரும் பொருள் பயந்தவாறு காண்க.

### பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**291. ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற் றியற்றே.**

'தன்னின முடித்தல்' என்னும் உத்தியான், பிரிநிலையாயும் தெரிநிலையாயும் சிறப்பாயும் எண்ணுநிலையாயும் வரும் ஓகாரமும் இயல்பாதல் கொள்க. ஈற்றசை ஓகாரமும் இயல்பாம்.

## இளம்பூரணம்

### *293. இவ்வீற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**வேற்றுமைக் கண்ணும் அதன்ஓ ரற்றே**
**ஒகரம் வருதல் ஆவயி னான.**

*இச்...எனின், அவ்வீற்று வேற்றுமை முடிபு கூறு...ற்று.*

*(இ-ள்.) ஓகாரஈற்று வேற்றுமைக்கண்ணும், அவ் ஏகார ஈற்று அல்வழியோடு ஒத்து வல்லெழுத்துப் பெற்றுப் புணரும்; அவ்விடத்து ஒகரம் வருக எ-று.*

*(உ-ம்.) ஓஒக்கடுமை சிறுமை தீமை பெருமை - எனவரும்.* *(90)*

## நச்சினார்க்கினியம்

### *292. ஓகார ஈற்று வேற்றுமை முடிபு*

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே**
**ஒகரம் வருதல் ஆவயி னான.**

இஃது ஓகார ஈற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) வேற்றுமைக்....ஒற்று - ஓகார ஈறு வேற்றுமைக் கண்ணும் அவ் ஏகார ஈற்று அல்வழியோடு ஒத்து வல்லெழுத்து மிக்கு முடியும்; ஆவயினான் ஒகரம் வருதல்- அவ்விடத்து ஒகரம் வருக எ-று.

(உ-ம்.) ஓஒக் கடுமை கோஒக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (90)

## இளம்பூரணம்

### *294. 'கோ' 'இல்' லொடு புணருமாறு*

**இல்லொடு கிளப்பின் இயற்கை ஆகும்.**

இச்...எனின், எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) ஓகாரஈற்றுக் கோ என்னும் மொழியினை இல் என்னும் வருமொழியொடு சொல்லின், ஒகரம் மிகாது இயல்பாய்[1] முடியும் எ-று.

வருமாறு : கோவில் - என வரும்.

நிலைமொழி எழுத்துப்பேறு வரையாது கூறினவழி நான்கு கணத்துக்கண்ணும் செல்லும் என்பது இதனாற் பெற்றாம்[2].

கோ என்றது உயர்திணைப் பெயரன்றோ எனின், கோ வந்தது என அஃறிணையாய் முடிதலின், அஃறிணைப் பாற்பட்டது போலும்[3]. (91)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***294.*** *1) சாரியை பெறாமல் முடிவதனை ஆசிரியர் 'இயற்கை' யாதலாக 164, 188, 322 ஆம் சூத்திரங்களிலும் குறிப்பிடுதல் காண்க. 'இயற்கை யாகும்' என ஆக்கச்சொல் கொடுப்பது இயற்கையைச் செயற்கைபோலக் கூறும் உபசார வழக்கு என்ப.*

*2) ஈண்டு உயிர்க்கணத்துள் 'இல்' வருவழி எழுத்துப் பேறு நிகழாது எனவே, கோ என்பதன் முன் ஏனைய இயல்புகணம் வருவழி ஒகர எழுத்துப்பேறு வருதலை ஆசிரியர் உடன்பட்டாராயிற்று.*

*3) வேந்து ஒற்று தூது அமைச்சு என்பவை போலக் கோ என்பதும் உயர்திணைப் பொருளில் வந்த அஃறிணைச் சொல். "ஒற்றனை ஒற்று என்றார், வேந்தனை வேந்து என்றாற் போல". (குறள் 581 பரிமே.)*

### நச்சினார்க்கினியம்

## *293. 'கோ' 'இல்' லொடு புணரும்வழி இயல்பாதல்*

**இல்லொடு கிளப்பின் இயற்கை ஆகும்.**

*இஃது எய்தியது விலக்கிற்று; என்னை? முன்னர் வன்கணம் வந்துழி ஒகரம் பெறுக என வரைந்து கூறாதும் நிலைமொழித் தொழில் வரையாதும் கூறலின், நான்கு கணத்துக்கண்ணும் சேறலின்.*

*(இ-ள்.) இல்லொடு....ஆகும் - ஓகார ஈற்றுக் கோ என்னும் மொழியினை இல் என்னும் வருமொழியொடு சொல்லின், ஒகரம் மிகாது இயல்பாய் முடியும் எ-று.*

வருமாறு : கோவில் என வரும்[1].

கோ என்றது உயர்திணைப் பெயரன்றோ எனின், கோ வந்தது என்று அஃறிணையாய் முடிதலின்[2] அஃறிணைப்பாற் பட்டது என்க. *(91)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***293.*** 1. வகரம் உடம்படுமெய் *(140)* என்க. ஒகாரம் வகர உடம்படுமெய் பெறுதல் உரையிற் காண்க.

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

### இளம்பூரணம்

## *295. ஒன்சாரியை பெற்றுமுடியும் இவ்வீற்றுச் சொற்கள்*

**உருபியல் நிலையும் மொழியுமார் உளவே**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

*இச்....எனின், அவ்வீற்றுள் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தமையின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....ற்று.*

*(இ-ள்.)* அவ்வீற்றுள் சில, உருபுபுணர்ச்சியது இயல்பிலே நின்று ஒன்சாரியை பெற்று முடியும் மொழிகளும் உள; அவ்விடத்து வல்லெழுத்து இன்றி இயல்பாம் எ-று.

*(உ-ம்.)* கோஒன் கை செவி தலை புறம் - என வரும்.

இதனாலும் பெற்றாம், சாரியைப் பேறு வல்லெழுத்தை விலக்காமை[1]. *(92)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***295.*** **1) 253, 263, 294** ஆம் சூத்திரவுரையுள் நச்சினார்க்கினியரும் இக்கொள்கையை வலியுறுத்துவார்.

**நச்சினார்க்கினியம்**

***294. இவ்வீற்றுப் பெயர் ஒன்சாரியை பெற்றும் முடிதல்***

**உருபியல் நிலையும் மொழியுமார் உளவே**
**ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்.**

இது வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* உருபியல்...உள - ஓகார ஈற்றுச் சில, பொருட்புணர்ச்சிக்கண் உருபு புணர்ச்சியது இயல்பிலே நின்று ஒன்சாரியை (180) பெற்று முடியும் மொழிகளும் உள; ஆவயின்.....ஆகும் - அவ்விடத்து வல்லெழுத்தின்றி இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* கோஒன்கை செவி தலை புறம் என வரும்.

சாரியைப்பேறு வருமொழி வல்லெழுத்து விலக்காமை இதனானும் பெற்றாம்[1]. *(92)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***294.*** 1. 253, 263 ஆம் சூத்திரங்களுள்ளும் இக்குறிப்புச் சுட்டப்பட்டுள்ளமை காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**295.** **உருபியல் நிலையும்......இயற்கை ஆகும்.**

இதனாற் கூறப்பட்டது 'ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை' (181) என்ற சூத்திரத்தாற் பெறப்படாதோ எனின், பெறப்படாது என்க. கோ என்றதன் பின்னர் வேற்றுமையுருபு வரும்போது, இடையில் ஒன்சாரியை வரும் என்றது அச்சூத்திரம். 'கோவினது கை' என்ற சொற்கள் தொகையாம் போது 'கோகை' என்றிருக்க, இடையில் இன்சாரியை வரும் என்கிறது இச்சூத்திரம். ஆகலின் இச்சூத்திரம் வேண்டும் என்க.

*295.* ['ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை' என்று ஆசிரியர் தேற்றவேகாரம் கொடுத்து ஓதியது, பிறசாரியை வாராது என்றற்கன்றே? இன்சாரியை பெறும் சொற்களின் ஈறுகள் அ ஆ உ ஊ ஏ ஔ என்பனவன்றி, ஓகாரம் இன்று (174). 'ஒன்றாது நின்ற கோவினை அடர்க்க' (சீவக.316) என்புழி, ஓகாரவீறு இன்சாரியை பெறுதல் வழுவமைதியே யாம். ஆகவே, ஓகார ஈறு இன்சாரியை பெறுவதாக இச்சூத்திரம் விதிக்கின்றது என்ற சாத்திரியார் கருத்துப் பொருந்தாது.]

**இளம்பூரணம்**

*296.* *ஔகார ஈற்றுப்பெயர் இருவழியும் முடியுமாறு*

**ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்**
**வல்லெழுத்து மிகுதல் வரைநிலை இன்றே**
**அவ்இரு வீற்றும் உகரம் வருதல்**
**செவ்விது என்ப சிறந்திசி னோரே.**

இச்.....எனின், ஔகார ஈறு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* ஒளகார ஈற்றுப் பெயர்ச்சொல் முன்னர் வல்லெழுத்து முதல்மொழி வரின், அவை அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும், வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்குநிலை இன்றாம். அவ்விரு கூற்று முடிபின் கண்ணும் உகரம் வந்து முடிதல் செவ்விது என்று சொல்லுவர் சிறந்தோர் எ-று.

*(உ-ம்.)* கௌவுக் கடிது சிறிது தீது பெரிது - எனவும், கௌவுக் கடுமை சிறுமை தீமை பெருமை[1] - எனவும் வரும்.

'செவ்விது' என்றதனான், மென்கணத்துக்கண்ணும் இடைக்கணத்துக்கண்ணும் இருவழியும் உகரப்பேறு கொள்க.

*(உ-ம்.)* கௌவு ஞான்றது - கௌவு ஞாற்சி - எனவும், கௌவு வலிது - கௌவு வலிமை - எனவும் வரும்.

'நிலை' என்றதனான், கௌவின் கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி, இயைபு வல்லெழுத்து வீழ்வு கொள்க. *(93)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***296.*** 1) கவவோடு இயையின் ஒளவு மாகும் *(70)* என்பவாதலின், வௌ என்பதற்கும் இம்முடிபு பொருந்து மெனக் கொள்க. ஒளகார ஈற்று முதனிலைத் தொழிற் பெயர்கள் உகரச்சாரியை பெற்று இருவழியும் முடிதலைக் கூறினார். புள்ளி மயங்கியற்கும் இது தோற்றுவாயாயிற்று.

**நச்சினார்க்கினியம்**

## *295. ஒளகார ஈறு இருவழியும் முடியுமாறு*

**ஒளகார இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்**
**வல்லெழுத்து மிகுதல் வரைநிலை இன்றே**
**அவ்விரு வீற்றும் உகரம் வருதல்**
**செவ்விது என்ப சிறந்திசி னோரே.**

இஃது ஒளகார ஈறு இருவழியும் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஔகார....முன்னர் - ஔகாரம் இறுதியாகிய பெயர்ச்சொல் முன்னர் (வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வரின்); அல்வழி....கண்ணும் - அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும்; வல்லெழுத்து.....இன்று - வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கும் நிலைமையின்று; அவ்விரு....சிறந்திசினோர் - அவ்விருகூற்று முடிபின் கண்ணும், நிலைமொழிக்கண் உகரம் வந்து முடிதல் செவ்வி தென்று சொல்லுவர் சிறந்தோர் எ-று.

(உ-ம்.) கௌவுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும்.

'செவ்விது' என்றதனான், மென்கணத்தும் இடைக் கணத்தும் உகரம் பெறுதல் கொள்க.

கௌவு ஞெமிர்ந்தது ஞெமிர்ச்சி எனவும், வெளவு வலிது வலிமை எனவும் வரும்.

'நிலை' என்றதனான், கௌவின் கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வும் கொள்க.

இன்னும் இதனானே, ஐகாரமும் இகரமும் வேற்றுமைக் கண் உருபு தொகையாயுழி இயல்பாதலும் கொள்க[1]. (93)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***295.*** 1. யானை கண்டான், கிளி கண்டான் என உதாரணம் கொள்க.

உயிர் மயங்கியற்கு ஓத்துப்புறனடை யின்மையான், இலேசினாற் சில முடிபுகளைக் கொள்ளவைக்கிறார்.

வேற்றுமைக்கண் உருபு தொகையாயுழி-வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்.

உயர்திணைப்பெயர், விரவுப்பெயர், நாட்பெயர், மரப்பெயர் முதலாகக் கிளந்தோதப்பெறாத பொருட் பெயர்கள் இகர ஐகார ஈற்றவாய் நிற்க, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், வருமொழி வல்லெழுத்து மிகாது

இயல்பாக வரும் புணர்ச்சி மிக அருகியல்லது நிகழாமையின், எடுத்துக்காட்டுத் தந்திலர். அருகியே செய்யுட்கண் வருவது ஓர்ந்து கொள்ளப்படும்.

'ஆத்தி சூடி அமர்ந்த தேவனை'
'கொன்றை சூடி நின்ற தேவை' III தேவாரம் - 40-2.

ஆத்தியும் கொன்றையும் ஆகுபெயராற் பூவைக்குறித்தலின், மரப்பெயர் ஆகா எனக்கோடலும் ஆம்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***295.*** **ஒளகார இறுதிப் ..... சிறந்திசி னோரே.**

**அவ்இரு ஈற்றும் - அவ்விரு கூற்றுச் சொற்கண்ணும்.**

*அல்வழிக்கண் கௌவுக்கடிது வெளவுக்கடிது - சிறிது தீது பெரிது எனவும், வேற்றுமைக்கண் கௌவுக்கடுமை வெளவுக்கடுமை - சிறுமை தீமை பெருமை எனவும் வரும். உடம்படுமெய் பெறாமல் கௌஉக்கடிது - வெளஉக்கடிது - என வருதலும் ஒக்கும்.*

***295.*** ['அவ்விரு வீற்றும்' என்பதே உரிய பாடம். அவ்விரு கூற்றும் என்னும் உரைக்கு, 'வீறு' என்பதே சொல்லாதலன்றி 'ஈறு' ஆகாமை, இரு+ஈறு='இருவீறு' என முடியாமல் 'ஈரீறு' என்றே முடிதல் வேண்டுதலின் பெற்றாம். 'ஒருவாறு' என வழக்கில் நிலவுவது இரு என்னும் நிலைமொழிக்கு ஏலாமையும் காண்க.

"உடம்படுமெய் பெறாமல் கௌஉக்கடிது முதலாக வரும்" என்னும் இவ்வுரைகாரர், சூ. 54இல் உடம்படுமெய் இன்றி வருதல் சான்றோர் வழக்கிற் காணப்படாமையின், ஐவனம் என்பது அயிவனம் என உடம்படுமெய் பெற்றே வருமென்க என்று எழுதியுள்ளமை மலைவாதல் காண்க. நச்சினார்க்கினியர் கருத்திற்கேற்ப, 'கௌஉக்கடிது' என்புழி உகரம் அளபெடை யெழுத்தாம் (தொல். 282) என்க.]

# ஒத்த நூற்பாக்கள்

## உயிர் மயங்கியல்

### சூத்திரம்-1

ஆவியின் பின்
ஆற்றும் திறல் வல்லினம் வந்திடின் அவற்றின் வருக்கம்
போற்றும் இவை என்ற வல்லொற்று மெல்லொற்று
புக்கிடுமே. **வீ.சோ.20**

வாய்ந்த உயிர்ப்பின் வரும் எழுத்தின் வர்க்கத்து ஒற்று
ஏய்ந்து புகுதும் இயல்புமாம். **நேமி. 16**

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும்; விதவாதன ம்ன்னே. **நன். 165**

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே. **இ. வி. 82**

### சூத்திரம் 2

அகரச் சுட்டும் ஆங்கவும் உவமையும்
எனவென் எச்சமும் இருவழியினும் ஆகும்.

வினையெஞ்சு கிளவியும் மிகும் என மொழிப.
**மூ.வீ.புணரியல் 75,76**

### சூத்திரம் 3

ஆவி குறில்பின் ஞந ம - த் தோன்றின் அவ்வொற்றிடையாம்.
**வீ. சோ. 24**

....முச்சுட்டின் முன்னர்
........................
பிறவரின் அவையும்................
.....................தோன்றுதல் நெறியே. **நன். 163**
.................முச்சுட்டின் முன்னர்
.........................

பிறவரின் அவையும்......................
..............................நிலவலும் நெறியே. இ.வி.80

## சூத்திரம் 4

ஆவி குறில் பின்.....வ- தோன்றின் அவ்வொற்றிடையாம்;
மேவிய பன்னொன்று தோன்றில் வ்வ்வாம். வீ. சோ. 24
..............முச்சுட்டின் முன்னர்
.................யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும்..................
.......................தோன்றுதல் நெறியே. நன். 163
.......................முச்சுட்டின் முன்னர்
.......................யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும்.......................
...........................நிலவலும் நெறியே. இ. வி. 80
வய-வரின் வகரம் வருமென மொழிப. மு.வீ. பு:78

## சூத்திரம் 5

ஆவி குறில் பின் ஞ ந ம வ-த் தோன்றின் அவ்வொற்றிடையாம்
வீ. கோ. 24
.......................முச்சுட்டின் முன்னர்
உயிரும்............எய்தின் வவ்வும்
..........................
..........................தோன்றுதல் நெறியே. நன். 163
ஆவி வரினும் அவ்வியல் நிலையும். மு. வீ. பு : 79

## சூத்திரம் 6

..........................தூக்கில் சுட்டு .
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே. நன். 163
.....................................சுட்டு
நீடலும் யகாரம் நிலவலும் நெறியே. .இ.வி.80
யாப்பினுள் அ ஆ-ஆகும் என்ப. மு.வீ.பு: 80

### சூத்திரம் 7

சாவஅகம் என்புழிச் சார்ந்த இறுதி
போவது உயிர்மெய் என்றே போற்று. **நேமி. 23**
சாவ என் மொழியீற்று உயிர்மெய் சாதலும் விதி. **நன்.169**
சாவ என்னும் செய என் எச்சத்து
இறுதி வகரம் கெடுதலும் உரித்தே. **இ.வி.85,மு.வீ.பு:81**

### சூத்திரம் 8

செய்யிய என்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரின் எச்சம் முற்று ஆறனுருபே
அஃறிணைப் பன்மை அம்ம-முன் இயல்பே.**நன்.167,இ.வி.86**
வியங்கோள் அண்மைவிளி உவமையும்
செய்த செய்யிய எனும் ஈர் எச்சமும்
அம்மவும் பலவும் மிகாது இயல்பாகும். **மு.வீ.பு:82**

### சூத்திரம் 9

வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
ஏகலும் உரித்து; அஃது ஏகினும் இயல்பே. **நன். 168 இ.வி.87**
வாழிய இறுதி கெடுதலும் உரித்தே **மு.வி.பு:84**

### சூத்திரம் 10

அம்ம இறுதி நீட்டமும் வரையார். **மு.வீ.பு:83**

### சூத்திரம் 11

அவைதாம் பாவினுள் நீட்டமும் வரையார். **மு.வீ. பு:86**

### சூத்திரம் 12

பலசில எனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும்............
............................பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற,.**நன்.170, இ.வி.88, மு.வீ.பு:85**

## சூத்திரம் 13

பலசில எனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும்................
..................................பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற. **நன்.170,இ.வி.88, மு.வீ. பு: 85**

## சூத்திரம் 15

மரப்பெயர் முன்னர் இனமெல் லெழுத்து
வரப் பெறுநவும் உள வேற்றுமை வழியே. **நன். 166**
மெல்லெழுத்து மிகுநவும் வல்லெழுத்து மிகுநவும்
..................................................
....................................மரப்பெயர் அன்னவை
வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும். **இ.வி.83**
வலிவரின் மரப்பெயர் மெலிமிகும் என்ப. **மு.வீ.பு:87**

## சூத்திரம் 18

பல்லவை நுதலிய அகர இறுபெயர்
அற்றொடு சிவணல் எச்சம் இன்றே. **இ. வி. 150**

## சூத்திரம் 21

எச்ச வும்மை இருபெயர்த் தொகைச்சொற்கு
அகரச் சாரியை உரித்தா கும்மே. **மு.வீ.பு:89**

## சூத்திரம் 22

அல்வழி ஆமா மியா முற்று - முன் மிகா. **நன். 177**
....................................மியாமுற்று இறுதி
யா - வினா இவற்றுமுன் வல்லெழுத்து இயல்பாம்.**இ.வி.89**
ஆவும் மாவும் அழைப்பும் வினாவும்
மியாவும் பலவும் மிகாது இயல்பு ஆகும். **மு.வீ.பு:90**

## சூத்திரம் 25

நிலாப்பெயர் இன்னொடு நிலவுதல் வரையார்.
இராப் பெயருக்கு இலவாம் என மொழிப. **மு.வீ.பு: 94**

## சூத்திரம் 27

யாவும் பிடாவும் தளாவும் மெலிமிகும். **மு.வீ.பு:95**

## சூத்திரம் 28 **மு. வீ. பு:96**

## சூத்திரம் 29

ஆமாகோ ன - அணையவும் பெறுமே. **நன். 248 இ.வி.151**
ஆமா னகரமெய் அடையப் பெறுமே. **மு.வீ.பு:96**

## சூத்திரம் 30

ஆன்ஒற்று அகரமொடு நிலையிடன் உடைய. **மு.வீ.பு:97**

## சூத்திரம் 31

ஆமுன் பகரஈ அனைத்தும் வரக் குறுகும். **நன். 177 மு.வீ.பு:99**

## சூத்திரம் 32

....................................ஆவும் அவ்வாய்த்
தாவிய ஐந்தாம் உயிர்பின் பெறுவன தாமுமுண்டே. **வீ.சோ.24**

உற்ற ஆகாரம் அகரமாய் ஓங்கு உகரம்
பெற்றிடும். **நேமி.23**

குறியதன்கீழ் ஆ - குறுகலும் அதனோடு
உகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின். **நன்.172, இ.வி.90.**
**மு.வீ.பு:92**

## சூத்திரம் 34

இனிஅணி இகரச்சுட்டும் ஒற்று இடைமிகும். **மு.வீ.பு: 100**

## சூத்திரம் 35

அன்றி இன்றி - என் வினையெஞ்சு இகரம்
தொடர்பினுள் உகரமாய் வரின் இயல்பே. **நன்**. 173, **இ.வி**.91
யாப்பினுள் இன்றியும் அன்றியும் உகர-
மாய் வரின் மிகாது இயல்பாம் என மொழிப. **மு.வீ.பு:92**

## சூத்திரம் 37

பதக்கு வரின் மிகும் தூணிக் கிளவி. **மு.வீ.பு:102**

## சூத்திரம் 38

........................ஆவிமுன் ஆவியோடும்
கூறா ழகாரம் அழிந்து டகாரம் குறுகிடுமே. **வீ.சோ.22**
உரிவரின் நாழியின் ஈற்றுயிர்மெய் ஐந்தாம். **நேமி.19**
உரிவரின் நாழியின் ஈற்று-உயிர்மெய் கெட
மருவும் டகரம். **நன்**. 174
உரிவரின் நாழியின் ஈற்றுயிர்மெய் கெட
மருவும் டகாரமாம் வல்லினப் புள்ளி. **மு.வீ.பு:103**

## சூத்திரம் 39

இன்னும் அத்தும் பனியொடு சிவணும். **மு.வீ.பு: 104**

## சூத்திரம் 40

வளிப்பெயர்க் கிளவியும் அவற்றோ ரற்றே. **மு.வீ.பு: 105**

## சூத்திரம் 41

உதிஎனும் மரம்மெலி மிகும்என மொழிப. **மு.வீ.பு: 106**

## சூத்திரம் 42

அம்முச் சாரியை அடையும் மரப்புளி. **மு.வீ.பு: 107**

## சூத்திரம் 43, 44

சுவைப்புளி முன் இன மென்மையும் தோன்றும். **நன்**. 175,
**இ.வீ**. 92, **மு. வீ. பு**: 108

## சூத்திரம் 45

தொழிற்பெயர் வரின் நாள் ஆனொடு சிவணும். இ.வீ.பு:109

## சூத்திரம் 48

பவ்வீ நீமீ முன்னர் அல்வழி, இயல்பாம். நன். 178
பவ்வீ அல்வழி இயல்பும் மீமுன்
ஈகார பகரமும் நீயும் இயல்பே. இ.வி.93
மீ இயல்பு ஆதலும்....... மு.வீ.பு:112

## சூத்திரம் 49

வலிமெலி மிகலுமாம் மீக்கே. நன். 178
..............................மீ முன்
...........வலிமெலி மிகலுமாம் வேற்றுமை. இ.வி.93
மீ-இயல்பு ஆதலும் மெலிவலி மிகுதலும்
ஆகும் என்மனார் அறிந்திசி னோரே. மு.வீ.பு:112

## சூத்திரம் 51

நீ எனும் ஒருபெயர் நின்னெனத் திரியும். மு.வீ.பு: 54

## சூத்திரம் 55

.........................சுட்டு ஈறு
ஆகும் உகரம் முன்னர் இயல்பாம். நன். 179

## சூத்திரம் 56

அதுமுன் வரும் அன்று ஆன்று ஆம் தூக்கின். நன். 180
அன்றுவரு காலை........உரித்தென மொழிப. இ.வி. 95
அன்று அதுமுன் வரின் ஆ-ஆகலும், ஐ
வரின் உகரம் கெடுதலும் ஆம் தூக்கின். மு.வீ. பு:113

## சூத்திரம் 58

செருவும் எருவும் அம்மொடு சிவணும்.
அம்இறு மகரம் செருவயின் அழியும். மு.வீ.பு:114,115

## சூத்திரம் 59

உகர ழகரம் நீடிடன் உடைத்தே. மு.வி.பு:117

## சூத்திரம் 60

ஒடுமரப் பெயர் உதிமர இயல் நிலையும். மு.வீ.பு: 116

## சூத்திரம் 63

ஊகார இறுதி முன்னிலை மொழியும்
வினையெஞ்சு கிளவியும் மிகும்என மொழிப. மு.வீ. பு : 118

## சூத்திரம் 66

பூப்பெயர்முன் இனமென்மையும் தோன்றும். நன். 200,
மு.வீ. பு: 119

பூப்பெயர்முன் இன மெல்லெழுத்து மிகுதலும்
போற்றல் வேண்டும் வேற்றுமைக் கண்ணே. இ.வி. 96

## சூத்திரம் 67

ஊ - னகரத்தொடும் ஒழுகும் என்ப. மு.வீ. பு: 120

## சூத்திரம் 68

அக்கொடு வருதலும் அதன்இயல்பு ஆகும். மு.வீ. பு: 121

## சூத்திரம் 69

ஆடூஉ மகடூஉ இன்னொடு நிலையும். மு.வீ. பு: 122

## சூத்திரம் 70

தேற்றமும் சிறப்பும் அல்வழி யான
ஏகர ஓகரம் பெயர்க்கு ஈறு ஆகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர். இ.வி. 97

## சூத்திரம் 71

தேற்ற எகரமும் ......வல்லெழுத்து மிகாஅ. இ. வி. 98

## சூத்திரம் 73

இடைச்சொல் ஏ(ஒ) முன்வரின் இயல்பே. **நன். 201, இ.வி.99**
ஏகாரத் தோற்றம் இயல்பா கும்மே. **மு.வீ.பு: 123**

## சூத்திரம் 75

எகாரச் சாரியை ஏ - ஏற்கும்மே. **மு.வீ.பு: 124**

## சூத்திரம் 76, 77

சேமரம் ஒடுமரச் செய்கையின் இயலும்.
ஆண்பெய ராயின் இன்-அடையப் பெறும். **மு.வீ.பு: 125,126**

## சூத்திரம் 80

விசை ஞெமை நமை, ஒடு-விருக்கத்து இயல்பே. **மு.வீ.பு:127**

## சூத்திரம் 81, 82, 83

பனைமுன் கொடிவரின் மிகலும், வலிவரின்
ஐபோய் அம்மும், திரள் வரின் உறழ்வும்,
அட்டு உறின் ஐகெட்டு அ-நீள்வும் ஆம் வேற்றுமை. **நன்.203**
பனைமுன்..........ஐகெட்டு ஆவும்ஆம் பிற. **இ.வி. 84**
ஆவிரை பனை அரை அம்மொடு சிவணும்.
**அவற்றுள்,**
ஆவிரை பனைஇறு ஐஉயிர் அழியும்.
பனைமுன் கொடிவரின் மிகும்என மொழிப.
அட்டு வரின் ஆ ஆகும் என்ப. **மு.வீ.பு:128-131**

## சூத்திரம் 85

இன்னொடு மழை எதிர்ந்து இயலும் என்ப. **மு.வீ.பு: 132**

## சூத்திரம் 86

அவாவரின் வேட்கைஈறு ஆவியும் மெய்யும்
அழிந்து டகரமெய் ணகரஒற்று ஆகும். **மு.வீ.பு: 134**

## சூத்திரம் 88

இடைச்சொல் (ஏ)ஓ முன் வரின் இயல்பே. **நன்.** 201,இ.வி.99
ஐய ஓவினா வலிமிகாது இயல்பாம்.
....................................மாறுகோள் எச்சமும்
மிகாதுஇயல் பாகும் என்மனார் புலவர். மு.வீ.பு:133,135

## சூத்திரம் 89

ஒழியிசை ஓவும்....................................
மிகாதுஇயல் பாகும் என்மனார் புலவர். மு.வீ.பு:135

## சூத்திரம் 91

இல்லொடு கிளப்பின் இயல்பா கும்மே. மு.வீ.பு:136

## சூத்திரம் 93

ஔகார இறுதி மிகுதலும், உகரச்
சாரியை பெறுதலும், தனக்குரித் தாகும். மு.வீ.பு:137



## எட்டாவது

# புள்ளி மயங்கியல்

## இளம்பூரணம்

### *297. ஞகரஈறு இருவழியும் வன்கணத்தொடு புணருமாறு*

> **ஞகாரை ஒற்றிய[1] தொழிற்பெயர் முன்னர்**
> **அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
> **வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே**
> **உகரம் வருதல் ஆவயி னான**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், புள்ளியீறு வன்கணத்தோடும் சிறுபான்மை பிறகணத்தோடும் மயங்கிப் புணரும் இயல்பு உணர்த்தினமையின், புள்ளி மயங்கியல் என்னும் பெயர்த்து.

இத்தலைச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், ஞகார ஈறு வன்கணத்தோடு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் புணருமாறு உணர்த்.......ற்று.

(இ-ள்.) ஞகாரம் ஈற்றின்கண் ஒற்றாக நின்ற தொழிற்பெயரின் முன்னர், அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமைக்கண்ணும், வல்லெழுத்து முதல் மொழி வருமொழியாய் இயைபின், வல்லெழுத்து வருமொழிக்கண் மிக்கு முடியும்; ஆண்டு நிலைமொழிக்கண் உகரம் வருக எ-று.

(உ-ம்.) உரிஞு[2]க் கடிது சிறிது தீது பெரிது - எனவும், உரிஞுக் கடுமை சிறுமை தீமை பெருமை - எனவும் வரும்.*(1)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***297.*** *1)* ஒற்று என்னும் பெயரடியாக ஒற்றிய என்னும் பெயரெச்சவினை பிறந்தது. பெயர் அழகு முதல் அமர் பைமை முதலான பெயர்ச்சொற்களடியாகவும் வினை பிறத்தல் காண்க. *(பிர. கா. 35 உரை)*

*2) உரிஞ் - முதனிலைத் தொழிற்பெயர். 'உகரமொடு புணரும் புள்ளி யிறுதி' எனத் தொகைமரபினுள் (21) தொகுத்துக் கூறியதனை இவ்வியலுள் ஆசிரியர் விரித்து, ஞ் ண் ந் ம் ன் ல் ள் - என ஈறுகள்தோறும் கிளந்தோதுவன காண்க.*

*உகரச்சாரியை பெறுதல் நிலைமொழித் தொழில் என்பர் நச்சினார்க்கினியர் (வினை. 31)*

## நச்சினார்க்கினியம்

## *296. ஞகார ஈறு இருவழியும் வன்கணத்தொடு புணர்தல்*

**ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்**
**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே**
**உகரம் வருதல் ஆவயி னான**

என்பது சூத்திரம்.

நிறுத்த முறையானே (107) உயிரீறு புணர்த்துப் புள்ளியீறு வன்கணத்தோடும் சிறுபான்மை ஏனைக்கணத் தோடும் புணருமாறு கூறலின், இவ்வோத்துப் புள்ளி மயங்கியல் என்னும் பெயர்த்தாயிற்று.

இச்சூத்திரம் ஞகார ஈறு வன்கணத்தோடு இருவழியும் புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஞகாரை....முன்னர் - ஞகரம் ஈற்றின்கண் ஒற்றாக நின்ற தொழிற்பெயரின் முன்னர்; அல்லது... கண்ணும் - அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்று மையைச் சொல்லுமிடத்தும்; வல்லெழுத்து....மிகும் - வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வரின், அவ்வல்லெழுத்து வருமொழிக்கண் மிக்கு முடியும்; ஆவயினான உகரம் வருதல் - அவ்விடத்து உகரம் வருக எ-று.

*(உ-ம்.)* உரிஞுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், உரிஞுக்[1] கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். (1)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***296.*** 1. உரிஞு - உரிஞுதல் : முதனிலைத் தொழிற்பெயர்.

**இளம்பூரணம்**

## *298. அவ்வீறு மென்கணத்தோடும் இடைக்கணத்தோடும் முடியுமாறு*

**ஞநமவ இயையினும் உகரம் நிலையும்.**

இச்....எனின், அவ்வீறு மென்கணத்தோடும் இடைக் கணத்து வகரத்தோடும் முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* அந்த ஞகாரஈறு, வன்கணமன்றி ஞ ந ம வ முதல்மொழி வருமொழியாய் இயையினும், நிலை மொழிக்கண் உகரம் நிலைபெற்று முடியும் எ-று.

(உ-ம்.)உரிஞு ஞான்றது நீண்டது மாண்டது - எனவும், உரிஞு ஞாற்சி நீட்சி மாட்சி - எனவும், உரிஞு வலிது எனவும், உரிஞு வலிமை எனவும் வரும்.

இடைக்கண யகரத்தோடும் உயிரோடும் புணருமாறு தொகைமரபினுள் 'உகரமொடு புணரும் புள்ளி இறுதி' (21) என்பதனுள் கூறப்பட்டது.[1] (2)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***298.*** 1) உயிர்க்கணத்தொடும் இடைக்கணத்துள் யகரத் தொடும் புள்ளியிறுதி நிலைமொழித் தொழிற்பெயர் புணர்வழி சாரியை பெறாது இயல்பாய் முடிதலின், இவ்வாறு உகரம் பெறுதல் (வன்கணமும்) மென்கணமும் இடைக் கணத்துள் வகரமும் வந்தியையுமிடத்து என்றவாறு.

## நச்சினார்க்கினியம்

### 297. ஞநமவ - வருவழியும் இவ்வீறு உகரம் பெறுதல்

**ஞநமவ இயையினும் உகரம் நிலையும்.**

இஃது அவ்வீறு மென்கணத்தோடும் இடைக்கணத்து வகரத்தோடும் முடியுமௌ எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* ஞநமவ.....நிலையும் - அஞ்ஞகரஈறு, வன்கணமன்றி, ஞநமவ முதல்மொழி வருமொழியாய் வரினும், நிலைமொழிக்கண் உகரம் நிலைபெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* உரிஞு ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

யகரத்தோடும் உயிரோடும் புணருமாறு தொகை மரபினுள், உகரமொடு புணரும், *(163)* என்பதனாற் கூறினார். *(2)*

## இளம்பூரணம்

### 299. நகரஇறுதியும் உகரச்சாரியை பெற்று முடிதல்

**நகர இறுதியும் அதனோ ரற்றே.**

இச்....எனின், நகரஈறு மேற்கூறிய கணங்களோடு ஒருவழி முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* நகர ஈற்றுப் பெயரும், மேற்கூறிய கணங்களொடு புணரும்வழி, அஞ்ஞகர ஈற்றோடு ஓரியல்பிற்றாய் முடியும்[1] எ-று.

*(உ-ம்.)* பொருநுக் கடிது சிறிது தீது பெரிது - எனவும், பொருநு ஞான்றது நீண்டது மாண்டது - எனவும், பொருநு வலிது - எனவும் ஒட்டுக. *(3)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**299.** 1) 'ஞநவென் புள்ளிக்கு இன்னே சாரியை' (183) என்புழியும் இவ்விரண்டு ஈற்றினையும் சேரக் கூறினார்.

**நச்சினார்க்கினியம்**

## 298. நகார ஈறும் உகரம் பெற்று முடிதல்

**நகர இறுதியும் அதனோ ரற்றே.**

இது நகரஈறு முற்கூறிய கணங்களோடு அல்வழிக்கண் முடியுமாறு கூறி, எய்தாதது எய்துவிக்கின்றது.

(இ-ள்.) நகர....ஓரற்று - நகரஈற்றுப் பெயரும் முற்கூறிய கணங்களொடு புணரும்வழி, அஞ்ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு உகரம் பெற்றும், ஞநமவ வந்துழி உகரம் பெற்றும் முடியும் எ-று.

(உ-ம்.) பொருநுக்கடிது வெரிநுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும் வரும்.

முடிபுஒப்புமை நோக்கி நகரஈறு ஈண்டுப் புணர்த்தார்[1]. ஈண்டு வேற்றுமை ஒழித்து மாட்டேறு சென்றதென்று உணர்க. (3)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**298.** 1) இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**299.** **நகர இறுதியும் அதனோ ரற்றே.**

(இ-ள்.) நகரஈற்றுப் பெயரும் வருமொழி முதலில் வல்லெழுத்தும் ஞநமவ இவையும் வருமிடத்து இருவழிக் கண்ணும் ஞகரஈற்றுப் பெயரின் தன்மைத்து.

"ஈண்டு வேற்றுமை யொழித்து மாட்டேறு சென்ற தென்று உணர்க" என்று நச்சினார்க்கினியத்தில் உள்ளது. அவ்வாறாயின் வரும் சூத்திரத்தில் 'உக்கெட' என வருதலின், அத்தொடர் தவறாக எழுதப்பட்டிருக்கவேண்டும்.

***299.*** ['உக்கெட' *(300)* என்றமையான், முன்னர் வேற்றுமைப் புணர்ச்சியான் உகரம் தோன்றியது எனவும் பின்னர் அது கெட அகரச்சாரியை வந்தது எனவும் பொருள் கொள்ளவேண்டியிருத்தலின், இச்சூத்திரம் அல்வழி வேற்றுமை என இருவழிக்கண்ணும் நகரவிறுதித் தொழிற் பெயர்க்கு உகரச்சாரியை மாட்டேற்றான் விதிப்பதாகச் சாத்திரியார் கருதுகிறார். ஆயின், நச்சினார்க்கினியர் மாட்டேறு அல்வழி யொன்றற்கே பொருந்தும் என்றார். அவர் கருத்திற்கேற்ப, 'உக்கெட' என்புழிக் கெடுதலாவது ஆண்டுத் தோன்றாமை. 'அதுவென் வேற்றுமை' (வேற். மயங். 11) என்னும் சூத்திரத்து 'உருபுகெடுதலாவது' உருபு ஆண்டுத் தோன்றாமை என்று சேனாவரையர் உரைசெய்தமை காண்க. அஃது 'அழிவுபாட்டு அபாவ' மன்றி 'முன் உள்ளதன் அபாவ' மாகக் கொள்ளப்படும் என்று பிரயோகவிவேக நூலார் குறிப்பிட்டமையும் (கா. 19) உணரப்படும்.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***299.*** **வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.**

மேலைச் சூத்திரத்தான் உகரம் வந்தவழி, வெரிநு பொருநு என்று முற்றியலுகரம் ஆயினமையின் அதுகெடும் என்றார். இயல்பானாதல் விதியானாதல் மொழியீற்றில் நிற்கும் முற்றுகரத்தின் முன் உயிர்முதன்மொழி வந்து புணருமிடத்து, அவ்வுகரம் கெடுதற்கு விதிகூறும் வழக்கமுடையராகலின், ஈண்டும் அவ்வாறே கூறினார். இது விதியான் வந்த முற்றுகரம்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

'மெய்யே உயிரென்று ஆயீ ரியல' எனப்பட்டவற்றுள், மெய்யீறு புணருங்கால் அஃது ஒலிப்புடையதாகிப் புணரும்

என்பதை 'மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்' என உணர்த்தினமையின், மெய்ம்மயங்கியல் என்னாது புள்ளி மயங்கியல் என்றார்.

**299. வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.**

(இ-ள்.) மேற்கூறிய நகரவீற்றுப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் உகரம் கெட அகரம் வந்து நிலைபெறும்.

**299.** ['உக்கெட' என்பதற்கு உகரம் கெட்டவழி என்னும் உரையாசிரியன்மார் உரையே செவ்விது. சூ. 374-இலும் 'உகரம் கெடுவழி அகரம் நிலையும்' செய்தி சுட்டப் பட்டுள்ளமை காண்க. உகரம் கெடாதவழி மேற்கூறிய விதியே நிலையும் என்றவாறு.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### 300. அவ்வீறுதி வேற்றுமைக்கண் உக்கெட அகரம் பெற்று முடிதல்

**வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.**

இச்...எனின், நகரஈறு மேற்கூறிய கணங்களொடு புணரும்வழி முடியுமாறு கூறு...ற்று.

(இ-ள்.) அந்நகர ஈறு, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண், மேல் எய்திய நிலைமொழி உகரம் கெட அகரம் நிலைபெற்று முடியும் எ-று.

(உ-ம்.) பொருநக் கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், பொருந ஞாற்சி நீட்சி மாட்சி - எனவும், பொருந வலிமை எனவும் வரும்.

'அகரம் நிலையும்' என்னாது 'உகரம் கெட' என்றதனான், இவ் ஈரீற்றின் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி, இயைபுவல்லெழுத்து வீழ்வும் சிறுபான்மை உகரப்பேறும் கொள்க.

*(உ-ம்.)* பொருநின் குறை உரிஞின் குறை எனவும், 'உயவல் யானை வெரிநுச்சென் றன்ன' (அகநா. 65) எனவும் வரும். *(4)*

**நச்சினார்க்கினியம்**

## *299. இவ்வீறு வேற்றுமைக்கண் அகரம் பெற்று முடிதல்*

**வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.**

இது நிலைமொழி உகரம் விலக்கி அகரம் வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

*(இ-ள்.)* வேற்றுமைக்கு.....நிலையும் - அந்நகரஈறு, வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கு,மேல் எய்திய உகரம் கெட, அகரத்தொடு நிலைபெற்றுப் புணரும் எ-று.

*(உ-ம்.)* பொருநக் கடுமை - வெரிநக் கடுமை - சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவரும்.

'அகரம் நிலையும்' என்னாது 'உகரம் கெட என்றதனான்,[1] உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வும், சிறுபான்மை உகரப்பேறும் கொள்க.

வெரிநின்குறை பொருநின்குறை (182) உரிஞின்குறை எனவும், 'உயவல் யானை வெரிநுச்சென் றன்ன' (அகநா.65) எனவும் வரும். யானையினது முதுகின்மேற் சென்றன்ன என விரிக்க.

பொருந் என்பது ஒருசாதிப்பெயரும், பொருநுதல்[2] என்னும் வினைப்பெயருமாம். *(4)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***299.*** 1. உகரம் கெடுதலாவது ஆண்டு அது தோன்றாமை. 'அதுவென் வேற்றுமை....அதுவென் உருபுகெடக் குகரம் வருமே' (வேற். மயங். 11) என்புழிப் போலக் கொள்க. (இது சேனாவரையர் கொண்ட பொருள்.)

2. பொருநர் என்னும் சாதிப்பெயரும், ஒருவரைப் போல வேடங்கொள்ளுதல் என்னும் தொழிற்பெயரும் ஆம்.

## இளம்பூரணம்

### *301. 'வெரிந்' நகரம் கெட மெல்லெழுத்து மிக்கு முடிதல்*

**வெரிந்என் இறுதி முழுதும் கெடுவழி**
**வரும்இடன் உடைத்தே மெல்லெழுத்து இயற்கை.**

இச்....எனின், அந்நகரஈற்று ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்......ற்று.

(இ-ள்.) வெரிந் என்று சொல்லப்பட்ட நகரஈற்று மொழி, தன் ஈற்று நகரம் முன்பெற்ற அகரத்தோடு எஞ்சாமல் கெட்டவிடத்து, மெல்லெழுத்துப்பெறும் இயல்பு வந்து முடியும் இடனுடைத்து எ-று.

(உ-ம்.) வெரிங்குறை செய்கை தலை புறம் எனவரும். (5)

## நச்சினார்க்கினியம்

### *300. 'வெரிந்' நகரம் கெட்டு மெலி மிக்கு முடிதல்*

**வெரிந்என் இறுதி முழுதும் கெடுவழி**
**வரும்இடன் உடைத்தே மெல்லெழுத்து இயற்கை.**

இஃது அந்நகரஈற்றுள் ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) வெரிந்.....கெடுவழி - வெரிந் என்று சொல்லப் படும் நகரஈற்று மொழி தன் ஈற்று நகரம் முன்பெற்ற அகரத்தோடு எஞ்சாமைக் கெட்டவிடத்து; மெல்லெழுத்து இயற்கை வருமிடன் உடைத்தே - மெல்லெழுத்துப்பெறும் இயல்பு வந்துமுடியும் இடனுடைத்து எ-று.

*(உ-ம்.)* வெரிங்குறை செய்கை தலை புறம் என வரும். மெல்லெழுத்து வருமொழி நோக்கி வந்தது[1].

'வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடை *(அகநா.37)* என்பதில் ரகர இகரமே இட்டு[2] எழுதுப. *(5)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***300.*** *1. 143ஆம் சூத்திரவிதி பற்றிக் கொள்க.*

*2. 'வெரினிறுத்த' என்றெழுதாது, வெரிநிறுத்த என ரகர இகரமே இட்டெழுதுப. வெரிந் + நிறுத்த; நிலைமொழி யீற்று நகரம் கெட்டது; ஆதலின் அதன் விதியீறு ரகர இகரமே என்றார்.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***300.*** **வெரிந்என் இறுதி.....மெல்லெழுத் தியற்கை.**

வெரிந் என்பதிலுள்ள நகரம் கெடுமென்றும், மெல்லெழுத்து வரும் என்றும், இலக்கண நூலார் கூறு முறையிற் கூறினார். உண்மைத் தன்மையை நோக்கின், நகாரம், முன்வரும் வல்லெழுத்திற்கு ஒத்த இனமெல் லெழுத்தாகத் திரிகின்றது என்பது புலனாகின்றது. மகரம் திரிதல் போலவே *(310)*, ஈண்டு நகரமும் திரிந்தது என்று கொள்ளுதல் அமைதி.

## இளம்பூரணம்

***302.*** ***ஆண்டு வல்லெழுத்தும் மிகப் பெறுதல்***

**ஆவலின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

இச்...எனின், இன்னும் அம்மொழிக்கு எய்துவதொரு முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) அவ்வெரிந் என்னும் சொல், அவ்வாறு ஈறுகெட்டு நின்றவிடத்து, மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்து மிக்குமுடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) வெரிக்குறை செய்கை தலை புறம் - எனவரும்.

ஞகார ஈற்றொடு நகர ஈறு ஒத்த முடிபிற்று ஆதலின் உடன் கூறப்பட்டது. (6)

## நச்சினார்க்கினியம்

### *301. அச்சொல் வலிமிக்கு முடிதலும் உடைமை*

**ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

இஃது அதற்கு எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) ஆவயின்.....உரித்து - அவ்வெரிந் என்னும் சொல் அவ்வாறு கெட்டு நின்றவிடத்து, மெல்லெழுத்தே யன்றி வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) வெரிக்குறை செய்கை தலை புறம் எனவரும். (6)

## வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

### *301.* ஆவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே.

மேற்சூத்திரத்திற் கூறிய மெல்லெழுத்து நகரத்தின் திரிபாதல் போன்று, இச்சூத்திரத்திற் கூறிய வல்லெழுத்தும் நகரத்தின் திரிபாகும்.

## இளம்பூரணம்

### *303. ணகார ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் புணருமாறு*

**ணகார இறுதி வல்லெழுத்து இயையின்**
**டகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே.**

இச்...எனின், ணகார ஈறு வேற்றுமைப் பொருட்கண் புணருமாறு உணர்த்....ற்று.

*(இ-ள்.)* ணகாரஈற்றுப்பெயர், வல்லெழுத்து முதல் மொழி இயையின், டகாரமாய் முடியும், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் எ-று.

*(உ-ம்.)* மட்குடம் சாடி தூதை பானை எனவரும். *(7)*

**நச்சினார்க்கினியம்**

### *302. ணகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ணகார இறுதி வல்லெழுத்து இயையின்**
**டகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே.**

இது நிறுத்தமுறையானே[1] ணகாரஈறு வேற்றுமைப் பொருட்கண் புணருமாறு கூறுகின்றது, அல்வழி முடிபு தொகைமரபினுள் மொழிமுதலாகும் *(147)* என்பதனான் முடிக்கப்பட்டமையின்.

*(இ-ள்.)* ணகார இறுதி - ணகார ஈற்றுப்பெயர்; வல்லெழுத்து இயையின் - வல்லெழுத்து முதல்மொழி வந்து இயையின்; டகாரம்.....பொருட்கு - டகாரமாகத் திரிந்து முடியும், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் எ-று.

*(உ-ம்.)* மட்குடம் சாடி தூதை பானை எனவரும். மண்கை புண்கை என்பன இரண்டாவதன் திரிபின் *(157)*[2] முடிந்தன.

கவண்கால் பரண்கால் என்பன மேல் முடித்தும்.[3] *(7)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***302.*** 1. 78ஆம் சூத்திரத்தே நிறுத்தமுறை என்க.

*2. 'மெய்பிறி தாகிடத்து இயற்கை யாதலும்' (157 : 10)* என்பது விதி.

*3. 307ஆம் சூத்திரவுரையுள் இலேசினான் இயல்பாய் முடிந்தன.*

**[illegible]ாத்திரியார் உரைக்குறிப்பு**

***303.*** **ணகார இறுதி.....வேற்றுமைப் பொருட்கே.**

அன்மொழித் தொகையாகிய 'ணகார இறுதி' டகார மாகும் என்றாரேனும், ஈற்றெழுத்தாகிய ணகரமே டகாரம் ஆகும் என்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***302.*** **ணகார இறுதி........வேற்றுமைப் பொருட்கே.**

புள்ளியீறுகளில் திரிபு, வேற்றுமைப் புணர்ச்சிக்கண் மிக்கு நிகழ்தலின், இவ்வியலுள் பெரும்பான்மையும் வேற்றுமைப் புணர்ச்சி முற்கூறி, பின்னர் அல்வழிப் புணர்ச்சி கூறுகிறார்.

## இளம்பூரணம்

### *304. ஆண், பெண்-என்னும் பெயர்கள் (வேற்றுமைக் கண்) இயல்பாய் முடிதல்*

**ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.**

இச்.....எனின், அவ்வீற்று விரவுப்பெயருள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்...ற்று.

(இ-ள்.) ஆண் என்னும் பெயரும் பெண் என்னும் பெயரும், மேல் தொகைமரபினுள் 'மொழி முதலாகும்' (5) என்பதன்கண் அஃறிணைப் பெயர் முடிந்த இயல்பு போல, தாம் வேற்றுமைக்கண் இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) ஆண்கை, பெண்கை செவி தலை புறம் - என வரும்.

மற்று இது தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப் பெயர்' (13) என்பதனுள் இயல்பாய் முடிந்ததன்றோ எனின், இவை ஆண்டு முடிந்தன போலத் தத்தம் மரபின் வினையாற் பால்அறியப்படுவன அன்றி[1] (சொல். பெய. 18), இருதிணைக் கண்ணும் அஃறிணையாய் முடிதலின், அவ்வஃறிணைப் பெயரது இயல்பொடு மாட்டெறிந்து முடித்தான் எனக்கொள்க. இவ்வாறு ஆதலின், ஆண்கடிது பெண்கடிது என்னும் அல்வழியும் 'மொழிமுதலாகும்' (தொகை-5) என்பதனுள் கொள்ளப்படும். (8)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***304.*** *1) தொகை மரபினுள், 'சாத்தன்' என்னும் விரவுப் பெயர் சாத்தன் குறியன் குறிது என அல்வழிக்கண்ணும், சாத்தன் கை என வேற்றுமைக்கண்ணும் இயல்பாக முடிந்தது. (அஃறிணையுள், சாத்தன் ஒரு குரங்கின் பெயராகக் கொள்க.)*

இச்சூத்திரத்துள் ஆண் பெண் எனக் குறிக்கப்பெற்றவை உயர்திணைப் பெயரே என்றும், அவை அஃறிணைப் பெயரே போல வேற்றுமைக்கண் இயல்பாக முடியும் என்றும் பொருள்கொள்வதே பொருந்துவதாகப் பிற உரையாசிரியர் கருதுவர்.

ஆண்கல்வி பெண்கல்வி சால்பு திட்பம் பண்பு என வருமொழி உயர்திணைக்கு ஏற்றவாகக் கொடுத்து முடிப்பர் பாலசுந்தரம். அவ்வவ்வுரையாளர் உரைக்குறிப்புக்களில் விளக்கம் காணலாம்.

### நச்சினார்க்கினியம்

### *303. 'ஆண்,' 'பெண்' - இயல்பாய் முடியுமாறு*

**ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.**

இஃது இவ்வீற்று விரவுப்பெயர் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

*(இ-ள்.)* ஆணும் பெண்ணும் - ஆண் என்னும் விரவுப் பெயரும் பெண் என்னும் விரவுப் பெயரும்[1]; அஃறிணை இயற்கை - தொகைமரபினுள் 'மொழிமுதலாகும்' *(147)* என்பதன்கண் அஃறிணைப் பெயர் முடிந்த இயல்பு போலத் தாமும் வேற்றுமைக்கண் இயல்பாக முடியும் எ-று.

*(உ-ம்.)* ஆண்கை பெண்கை செவி தலை புறம் எனவரும்.

இது தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' *(155)* என்பதனுள் முடிந்த இயல்பன்றோ எனின், இவை ஆண்டு முடிந்தன போலத் தத்தம் மரபின் வினையாற் பாலறியப் படுவன (சொல். 172) அன்றி இருதிணைக் கண்ணும் அஃறிணையாய் முடிதலின், அஃறிணைப் பெயரது இயல்பொடு மாட்டெறிந்து முடித்தார் என்க. ஆண்கடிது பெண்கடிது என்னும் அல்வழிமுடிபு 'மொழிமுதலாகும்' *(147)* என்பதன்கண் வருமொழி முற்கூறியதனான் முடிக்க. *(8)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***303.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***304.*** **ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.**

*(இ-ள்.)* ஆண் பெண் இவை அஃறிணையாய் இருப்பின், பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமை வழியே புணர்ச்சி இயல்பாம்.

'அஃறிணை யியற்கை' என்றதற்கு "அஃறிணைப்பெயர் முடிந்த இயல்பு போல் இயல்பாய் முடியும்" என்று பொருள் கூறினர் உரைகாரர். 'மொழி முதலாகும்' *(140)* என்ற

சூத்திரத்தில் அல்வழிக்கண் திரிபில்லை எனக் கூறப்பட்டதேயன்றி வேற்றுமைக்கண் கூறப்படாமை யானும், அங்கு அஃறிணை எனச் சிறப்பித்துக் கூறப்படாமை யானும், 'அஃறிணை விரவுப்பெயர்' (156) என்ற சூத்திரத்தில் இயல்பினை உறழ்ச்சியாகக் கூறப்பட்டமை யானும், ணகர இறுதிப் பெயர்களாகிய ஆண் பெண் என்பன அஃறிணையாயின் இயல்பே புணர்ச்சியாம் என ஆசிரியர் கருதினமையானும், அவர் கூறும் பொருள் பொருத்தமின்று. ஈண்டு 'அஃறிணை' எனக் கூறினமையின், உயர்திணையாய் இருக்குமிடத்து வேற்றுமை வழியே திரிபு உளது எனலாம். அதற்கு 'ஆண்டலைக் கொடியொடு' (திருமுரு. 227) என்பது உதாரணமாகும்.

***308.*** ['அஃறிணை இயற்கை' என்னும் தொடரமைப்பு, 'சாரியை இயற்கை' 'வேற்றுமை இயற்கை' 'வல்லெழுத் தியற்கை' 'மெல்லெழுத்தியற்கை' எனப் பிறாண்டு வந்த (சூ.166, 167, 264, 301இள.) தொடர்களைப் போன்றது. ஆறன் தொகையாக அவை பொருள்படுமாறு காண்க.

'அஃறிணை யியற்கை' எனவே, ஆணும் பெண்ணும் உயர்திணைப் பெயர்களே யாதல் போதரும். தனித்து ஆண் பெண் என வருமிடத்தே அப்பெயர்கள் உயர்திணையையே சுட்டுதல் மரபியல் 69ஆம் சூத்திரத்துப் பேராசிரியர் உரையால் தெளிவாம்.

உரையாசிரியன்மார் இருவரும், 'அஃறிணை விரவுப் பெயர்' என்புழி யாண்டும் 'உயர்திணை விரவுப்பெயர்' என்று ஒன்று குறித்திலர்.

'ஆண்டலைக் கொடியொடு' என்பதனை வேற்றுமை வழி வந்த திரிபிற்குச் சாத்திரியார் எடுத்துக்காட்டினார். ஆண்டுத்திரிபு வருமொழித் தகரத்திற்கன்றி நிலைமொழி யீற்று ணகரத்திற்கு இல்லை என்பது வெள்ளிடை.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**303.** **ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.**

ஈண்டுக் கூறிய பெயர்கள் உயர்திணையைக் குறிப்பன வாதலின் 'அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா றுளவே' (155) என்றதனான் இம்முடிபு அமையாது. ஈண்டு 'அஃறிணை யியற்கை' எனவே இவை அஃறிணை யல்லவாதல் பெறப்படும். இனி 'அஃறிணை யியற்கை' என்றதனான் இவற்றை விரவுப்பெயர்கள் என்னலாம் எனின், அன்று. 'பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே' (மர.69) என்னும் சூத்திரத்திற்குப் பேராசிரியர், "பெண்ணும் ஆணும் பிள்ளையும் என வாளாது சொல்லியவழி, உயர்திணைக்கு ஏற்றன மரீஇ வந்த மரபு" என்று பொருள் கூறி, "வாளாதே 'பெண் வந்தது' என்றவழி, அஃறிணைப் பொருள் என்பது உணரலாகாது; 'பெண்குரங்கு வந்தது' என விதந்தே கூறல் வேண்டும் என்பது. பெண் பிறந்தது, ஆண் பிறந்தது, பிள்ளை பிறந்தது என அடையடாது சொல்லியவழி உயர்திணைக்கே ஆம்; அஃறிணைக்காயின் அற்றன்று என்பதாம்" என்று விளக்கவுரை எழுதினாராகலானும்.

> 'ஆண்பால் எல்லாம் ஆண்எனற் குரிய
> பெண்பால் எல்லாம் பெண்எனற் குரிய' (ஷ 50)

என்னும் சூத்திரத்திற்கு, "ஆண்யானை பெண்யானை ஆண்குரங்கு பெண்குரங்கு ஆண்குருவி பெண்குருவி என்றாற்போல்வன" என்று ஆண்பெண் என்பவற்றை அஃறிணைப் பெயர்களோடு சேர்த்தே உதாரணம் காட்டினா ராகலானும்,

> 'பெண்ணும் பிணாவும் மக்கட் குரிய' (ஷ 61)

என்று ஆசிரியரே விதந்து கூறினாராகலானும்,

இச்சூத்திரத்தில் ஆண்பெண் என்ற பெயர்கள் வாளா கூறினவதனான் உயர்திணைப் பெயர்களே என்பது அறியப்படும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**303.** **ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.**

*(இ-ள்.)* ஆண் பெண் என்னும் விரவுப்பெயர்கள், அஃறிணை விரவுப்பெயர்க்குக் கூறிய இலக்கணத்தைப் பெறும் என்றது, 'அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா ருளவே' (தொகை. 13) என்னும் விதிப்படி இயல்பாகப் புணரும் என்றவாறு.

'அஃறிணை யியற்கை' என்றதனான் இவை உயர்திணைப் பொருளவாய் நிற்பவை என்பது புலப்படும்.

*(எ-டு.)* ஆண்கல்வி, பெண்கல்வி - சால்பு திட்பம் பண்பு எனவரும். ஆண்கை, பெண்கை - செவி தலை புறம் எனக்காட்டின், கை முதலியவை இருதிணைக்கும் பொதுவானவை ஆதலின், அவை அப்பொதுச்சூத்திரத்துள் அடங்குமென்க.

**303.** [ஆண் பெண் எனத் தனித்து வருமிடத்தே அச்சொற்கள் உயர்திணைப் பெயரே என்பது தொ. பொ. 624ஆம் சூத்திரத்தால் பெறப்படும். உயர்திணைப் பெயர்ப் புணர்ச்சியை ஆசிரியர் யாண்டும் விதந்தே கூறுவார். கவண்கால் பரண்கால் என அஃறிணைப்பெயர் இயல்பாகப் புணர்வது போல, ஆண் பெண் என்பனவும் இயல்பாகப் புணரும் என்பது இச்சூத்திரச் செய்தி. 'அஃறிணை விரவுப் பெயர்' முடிபினை ஒத்ததாக இவ்வுரைகாரர் காட்டுவது, உரையாசிரியன்மார் அஃறிணைவிரவுப்பெயர்க்குக் கொண்ட பொருளினைப் பிறழ உணர்ந்தமை பற்றியேயாம். சேனாவரையருரையைப் பின்பற்றி, உயர்திணையைப் பற்றாது அஃறிணையைக் குறித்துவரும் விரவுப் பெயரை இவர் கருதினார். தன்னோடு இயைபின்மை நீக்கிய விசேடணமாக விரவுப்பெயர்க்கு 'அஃறிணை' அடை யடுத்தது என்பது உரையாசிரியன்மார் துணிபு.]

## இளம்பூரணம்

### *305. ஆண் மரப்பெயர் அம்முச்சாரியை பெறுதல்*

**ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே.**

*இச்...எனின், திரிபுவிலக்கிச் சாரியை வகுத்தமையின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்....ற்று.*

*(இ-ள்.) ஆண் என்னும் மரத்தை உணரநின்ற பெயர்ச் சொல், அரைமரம் அம்முப் பெற்ற இயல்பிற்றாய்த் தானும் அம்முப் பெற்று முடியும் எ-று.*

*(உ-ம்.) ஆணங்கோடு செதிள் தோல் பூ - என வரும். (9)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*__305.__ "அகக்காழினவாகிய கருங்காலி முதலிய மரங்களை 'ஆண்மரம்' என்று வழங்குதலு முண்டு. 'எகினம் சேமரம் ஆண்மரம் என்ப' என்று திவாகரம் கூறுவதால் இவ்விரு மரத்திற்கும் ஆண்மரம் என்ற பெயருண்மை அறியலாம். 'ஆணாங்கோடு' என __232__ஆம் சூத்திரவுரையுள் சுட்டப்படும். ஆணாமரம் வேறெனவேபடும்." இக்குறிப்பு* **அடிகளாசிரிய** *ருடையது.*

## நச்சினார்க்கினியம்

### *304. 'ஆண்' மரப்பெயர் அம்முச்சாரியை பெறுதல்*

**ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே.**

*இது திரிபு விலக்கிச் சாரியை வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.*

*(இ-ள்.) ஆண்மரக்கிளவி - ஆண்பாலை உணர்த்தாது ஆண் என்னும் மரத்தினை உணரநின்ற சொல்[1]; அரைமர*

இயற்று-அரை என்னும் மரம் அம்முப் பெற்ற இயல் பிற்றாய்த் தானும் அம்முப்பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* ஆணங்கோடு செதிள் தோள் பூ என வரும்.

ஒன்றென முடித்தலான் இயல்புகணத்தும் கொள்க.

*(உ-ம்.)* ஆணநார் இலை எனவரும்.

விரவுப்பெயர் அன்று என்றற்கு 'மரம்' என்றார். *(9)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***304.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

## *306. செய்யுளுள் 'விண்' அத்துப் பெறுதல்*

**விண்என வருஉம் காயப் பெயர்வயின்**
**உண்மையும் உரித்தே அத்துஎன் சாரியை**
**செய்யுள் மருங்கின் தொழில்வருங் காலை.**

இச்....எனின், செய்யுளுள் திரிபு விலக்கிச் சாரியை வகுத்....ற்று.

*(இ-ள்.)* விண் என்று சொல்ல வருகின்ற ஆகாயத்தை உணரநின்ற பெயர்க்கண் அத்து என்னும் சாரியை உண்டாதலும் உரித்து, இல்லையாதலும் உரித்து, செய்யுளிடத்து வினை வரும்காலத்து எ-று.

*(உ-ம்.)* 'விண்ணத்துக் கொட்கும்' எனவும், 'விண்குத்து நீள்வரை வெற்ப' (நாலடி. 226) எனவும் வரும். *(10)*

## நச்சினார்க்கினியம்

## *305. 'விண்' எனும் பூதக்கிளவியது செய்யுள் முடிபு*

**விண்என வருஉம் காயப் பெயர்வயின்**
**உண்மையும் உரித்தே அத்துஎன் சாரியை**
**செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை.**

இது செய்யுளுள் திரிபு விலக்கிச் சாரியை வகுத்தது.

(இ-ள். விண்ணென.....வயின் - விண் என்று சொல்ல வருகின்ற ஆகாயத்தை உணரநின்ற பெயர்க்கண்; அத்துச் சாரியை உண்மையும் உரித்து - அத்து என்னும் சாரியை உண்டாதலும் உரித்து, இல்லையாதலும் உரித்து; செய்யுள்... காலை - செய்யுளிடத்துத் தொழிற்சொல் வருங்காலத்து எ-று.

(உ-ம்.) 'விண்ணத்துக் கொட்கும் வண்ணத் தமரர்'

'விண்ணத்துக் கொட்கும் விரைசெ லூர்தியோய்'
எனவும்,

'விண்குத்து நீள்வரை வெற்ப' (நாலடி. 226)
எனவும் வரும்.

விண் என்னும் குறிப்பினை நீக்குதற்குக் 'காயம்' என்றார்.

விண்வத்துக் கொட்கும் என உடம்படுமெய் புணர்ந்து நிற்றலும்[1] கொள்க. அதிகார வல்லெழுத்து இன்மையின் சாரியை வல்லெழுத்துக் கொடுக்க. (10)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*305.* 1. மெய்யீற்றுக்கும் உடம்படுமெய் கொள்வர் நச்சினார்க்கினியர்.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*305.* **விண்என வருஉம்........தொழில்வரு காலை.**

மேல், 'அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்' (133) என்ற விதிப்படி, அத்து வரும்வழி விண் என்பதன்கண்ணுள்ள ணகரமெய் கெடல்வேண்டுமே எனின், 'குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டலும்' (160)என்று பின்னர்க் கூறிய விதியினான் குறில்வழி ணகரம் கெடாது இரட்டியது.

'விண்வத்துக் கொட்கும்' என உடம்படுமெய் புணர்ந்து நிற்றலும் கொள்க என்றார் நச்சினார்க்கினியர். உடம்படுமெய் உயிரீற்றின்முன் உயிர் முதன்மொழி வரும்வழியே வருதல் இயல்பாதலன்றி மெய்யீற்றின்முன் வருதல் வேண்டா வாகலின், அது பொருந்துவதன்று.

சார்வு செல்வு என்னும் தொழிற்பெயர்களோடு உழி என்னும் இடைச்சொல் சேர்ந்து சார்வுழி செல்வுழி என வந்ததேயன்றி, ஆண்டு வகர வுடம்படுமெய் வந்தது இன்று என்பது ஆராய்ந்தறியத்தக்கது. 'விண்வத்துக் கொட்கும்' என்பதிலுள்ள வகரத்தின் தன்மை அறிதற்கு அரியதாயுள்ளது.

## இளம்பூரணம்

### *307. ணகாரஈற்றுத் தொழிற்பெயர் இருவழியும் உகரம் பெறுதல்*

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி உகரமும் வல்லெழுத்தும் வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* ணகாரஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம், அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், ஞகாரஈற்றுத் தொழிற்பெயரது இயல்பாய், வல்லினம் வந்தவழி வல்லெழுத்தும் உகரப்பேறும்[1], மென்கணமும் இடைக் கணத்து வகரமும் வந்தவழி உகரமும் பெற்றுமுடியும் எ-று.

*(உ-ம்.)* மண்ணுக்கடிது[2] கடுமை - எனவும், மண்ணு ஞான்றது ஞாற்சி - எனவும், மண்ணு வலிது வலிமை - எனவும் இருவழியும் ஒட்டுக.

'எல்லாம்' என்றதனான், தொழிற்பெயர் அல்லனவும் உகரமும் வல்லெழுத்தும் பெறுவன கொள்க.

*(உ-ம்.)* வெண்ணுக்கரை, எண்ணுப்பாறு, மண்ணுச் சோறு[3] - என வரும். *(11)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*307. 1)* 'உகரமும்' என்றிருப்பின் பொருந்தும், பின்னர்ப் 'பெற்று முடியும்' என வருதலின்.

*2)* மண்ணு - மண்ணுதல், கழுவுதல், குளித்தல்.

*3)* 'ஒத்த எண்ணு முன்வரு காலை' (318) என ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியமை காண்க.

வெண்ணு - வெண்ணாறு. தஞ்சை மாவட்டம் பாவநாசம் வட்டத்திலுள்ள முன்னியூர் அகத்தீசுவரர் கோவில் கல்வெட்டு ஒன்றில் வெண்ணாறு வெண்ணு என்று குறிக்கப் படுவதாக **அடிகளாசிரியர்** குறிப்பிடுகிறார்.

எண்ணுப்பாறு - எள்மூட்டைகள் ஏற்றப்பட்ட மரக்கலம்.

மண்ணுச்சோறு - மண்தரையில் இலையிடாது உண்ணும் சோறு.

**நச்சினார்க்கினியம்**

***306. இவ்வீற்றுத் தொழிற்பெயர் உகரம் பெற்று முடிதல்***

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இஃது இவ்வீற்றுள் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி உகரமும் வல்லெழுத்தும் விதிக்கின்றது.

(இ-ள்.) தொழிற்பெயர்....இயல - ணகார ஈற்று முதனிலைத் தொழிற்பெயர் எல்லாம், அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயரது இயல்பாய், வன்கணம் வந்துழி வல்லெழுத்தும் உகரமும் பெற்றும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரம் பெற்றும் முடியும் எ-று.

(உ-ம்.) மண்ணுக்கடிது - பண்ணுக்கடிது[1] - சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மண்ணுக் கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

'எல்லாம்' என்றதனான், தொழிற்பெயர் அல்லனவும் உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், இன்சாரியை பெற்றும் புணர்வனவும் கொள்க.

வெண்ணுக்கரை[2], 'தாழ்பெயல் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்[3] பெயர்த்து, எண்ணுப்பாறு[4], வெண்ணின் கரை எனவரும். *(11)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*1. மண்ணு-மண்ணுதல், நீராடல், கழுவுதல். 2, 4. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க. 3. பண்ணுப் பெயர்த்தலாவது இசையினை மாற்றுதல் (சிலப். 7: 47:4)* தொழிற்பெயரல்லாத பெயரும் உகரச்சாரியை பெறுதலை ஆசிரியர் உடம்பொடு புணர்த்தலான் (317) உணர்த்தினார்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***306.*** **தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரிய்ய.**

'ஒத்த எண்ணு முன்வரு காலை' *(317)* என ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளமையான், தொழிற் பெயரல்லாத பொருட்பெயரும் சிறுபான்மை உகரம் பெற்று வருதல் கொள்க.

(எ-டு) வெண்ணுக்கரை, பண்ணுப்பெயர்த்து, மண்ணுவீடு என வரும்.

**இளம்பூரணம்**

***308.*** ***இவ்வீற்றுக் கிளைப்பெயர் இயல்பாய் முடிதல்***

**கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரிபு இலவே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி இயல்பு கூறு.....ற்று.

(இ-ள்.) ணகரஈற்றுள் ஓரினத்தை உணர நின்ற பெயரெல்லாம். திரிபுடைய என்று கருதும்படி திரிதலுடையவன்றி, இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) உமண்குடி[1] சேரி தோட்டம் பாடி - என வரும்.

'எல்லாம்' என்றதனான், இவ்வீறு சாரியை பெற்று முடிவனவும், இயல்பாய் - முடிவனவும் கொள்க.

(உ-ம்.) மண்ணக்கடி[2] - எண்ண நோலை[3] - எனவும், பரண்கால் - கவண்கால் - எனவும் வரும்.

'கொள' என்றதனான், இவ்வீற்று ஏழாம் வேற்றுமைப் பொருண்மை உணரநின்ற இடைச்சொல்[4] திரிந்து முடிவன கொள்க.

(உ-ம்.) அங்கட் கொண்டான்[5] - இங்கட் கொண்டான் - உங்கட் கொண்டான். எனவும், ஆங்கட் கொண்டான் - ஈங்கட் கொண்டான்-ஊங்கட் கொண்டான் எனவும், அவட் கொண்டான் - இவட் கொண்டான் - உவட் கொண்டான்- எனவும் ஒட்டுக. (12)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

1) உமண் - உப்பு வாணிகர். 'உமண் பொலி சிறுகுடி' (நற். 374)

2) மண்ணினது வாசனை

3) எள்ளுருண்டை

4) இனி அணி என்பனவும் காலத்தையும் இடத்தையும் உணர நின்ற ஏழாம் வேற்றுமைப் பொருண்மையுடைய இடைச்சொற்கள். (237)

*5) "அங்கண் - அவ்விடம்; இது வேற்றுமைச் சொல்லன்று; வேற்றுமையிடப்பொருள். 'அவ்விடத்துக் கண்' என்பதன் அத்துச்சாரியையும் ஏழாமுருபும் தொக்கன" (தக்க.666உரை) 'அங்கண்' அவ்விடம் என்றும் பொருட்டாய வழி ஒருசொல்லாகக் கொள்க.*

**நச்சினார்க்கினியம்**

## *307. இவ்வீற்றுக் கிளைப்பெயர் இயல்பாய் முடிதல்*

**கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரிபு இலவே.**

இஃது இவ்வீற்றுள் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி இயல்பு கூறுதலின், எய்தியது விலக்கிற்று.

(இ-ள்.) கிளைப்...இல-ணகார ஈற்றுள் ஓரினத்தை உணர நின்ற பெயரெல்லாம்; திரிபுடைய என்று கருதும்படியாகத் திரிதல் இலவாய் இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) உமண் என நிறுத்தி, குடி சேரி தோட்டம் பாடி எனத் தந்து முடிக்க.

இனி 'எல்லாம்' என்றதனான், பிறசாரியை பெற்று முடிவனவும், இயல்பாய் முடிவனவும் கொள்க.

மண்ணைப்பத்தம்[1] எண்ணநோலை[2] எனவும், கவண்கால் பரண்கால் எனவும் கொள்க.

'கொள' என்றதனான், ஏழாம் வேற்றுமை இடப் பொருண்மை உணரநின்ற இடைச்சொற்கள் (159 பாயிரம்) திரிந்து முடிவனவும் கொள்க.

அங்கட் கொண்டான் - இங்கட் கொண்டான் - உங்கட் கொண்டான் - எங்கட் கொண்டான்-எனவும்[3], ஆங்கட் கொண்டான் - ஈங்கட் கொண்டான் - ஊங்கட் கொண்டான்- யாங்கட் கொண்டான் - எனவும், அவட் கொண்டான் - இவட் கொண்டான் - உவட் கொண்டான் - எவட் கொண்டான்- எனவும்[4] ஒட்டுக. (12)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

1. மண்பூச்சால் இடப்படும் கட்டு

2. எள்ளுருண்டை

3. ஆன்-அவ்விடம்; ஈன்-இவ்விடம்; ஊன்-உவ்விடம். இம்மூன்றும் கண்ணுருபொடு புணர்கையில் ஆங்கண் ஈங்கண் ஊங்கண் என்று ஆம். (யாங்கண் ஒரு சொல்லாய் எவ்விடம் எனப்பொருள்படும்) இஃது ஒருசாரார் கருத்து.

2. அங்கண் முதலிய நான்கும், சுட்டிடைச் சொல்லும் வினாவிடைச்சொல்லும் திரிந்து, ஆங்கண் முதலாக வரும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

4. அவண் முதலிய நான்கும் மேற்கூறியவாறே பொருள்படுவன.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**308. கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரிபு இலவே.**

"'கொள' என்றதனான், இவ்வீற்று ஏழாம் வேற்றுமைப் பொருண்மை உணரநின்ற இடைச்சொல் திரிந்து முடிவன கொள்க. அங்கட் கொண்டான்....எனவரும்" என்றனர் உரைகாரர். கண் என்ற சொல் இடத்தை உணர்த்தும் பெயராகவும் இருத்தலானும், அகரம் முதலிய சுட்டுப் பெயரொடு தான் புணரும் ஆகலானும், அங்கண் முதலியவற்றை அங்கண்கண் என்ற பொருளில் வந்த ஏழாம் வேற்றுமை உருபு தொக்க பெயர் எனக்கொள்ளின், அங்கட் கொண்டான் முதலியன 'ணகார இறுதி' (303) என்ற சூத்திரத் தானே பெறப்படும்.

**308.** [அகரம் முதலிய சுட்டிடைச் சொல்லொடு 'கண்' எனும் இடப்பெயர் புணர்ந்த 'அங்கண்' முதலவாக வருமவற்றை ஏழனுருபு 'கண்' தொக்கு நின்ற பெயராகக்

கொள்ளலாம் என்றார் இவ்வுரைகாரர். சுட்டிடைச்சொல் கண்ணெனும் இடப்பெயரொடு புணரும்வழி 'அங்கண்' முதலவாக முடிவுபெறுதல் யாங்கனம்? அங்கண்மா ஞாலம் என்பதற்கு அழகிய இடமகன்ற உலகம் என்றே தொன்று தொட்டு உரை கூறப்படுதலின், ஆண்டு அகரச்சுட்டு வருதற்கு இயைபிலது என்க. அக்கொற்றன் முடிந்தாற் போலவே 'அக்கண்' என வலிமிகுதலே இயையும் என்க. அங்கண் முதலியன ஒரு சொல்லாகவே நின்று இடப்பொருள் உணர்த்தின என்றலே பொருந்தும்.]

### இளம்பூரணம்

### *309. எண் என்னும் உணவுப்பெயரது அல்வழி முடிபு*

**வேற்றுமை அல்வழி எண்என் உணவுப்பெயர்**
**வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்தே.**

இச்....எனின், அவ்வீற்றுள் ஒன்று அல்வழியுள் வேற்றுமை முடிபு போலத் திரிந்து முடிவது கூறு....ற்று.

*(இ-ள்.)* வேற்றுமை அல்லாதவிடத்து, எண் என்று சொல்லப்படுகின்ற உணவினை உணர்த்தும் பெயர், வேற்றுமையது திரிந்து முடியும் இயல்பு நிற்றலும் உரித்து எ-று.

*(உ-ம்.)* எட்கடிது சிறிது தீது பெரிது - என வரும். உம்மையான், எண்கடிது என்று இயல்பாதலே பெரும்பான்மை. *(13)*

### நச்சினார்க்கினியம்

### *308. எண் எனும் உணவுப்பெயரது அல்வழி முடிபு*

**வேற்றுமை அல்வழி எண்என் உணவுப்பெயர்**
**வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்தே.**

இஃது இவ்வீற்றுள் ஒன்று அல்வழியுள் வேற்றுமை முடிபு போலத் திரிந்து முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) வேற்றுமை அல்வழி - வேற்றுமை அல்லாத விடத்து; எண்ணென் உணவுப்பெயர் - வரையறைப் பொருண்மை உணர்த்தாது எண் என்று சொல்லப்படும் உணவினை உணர்த்தும் பெயர்; வேற்றுமை....உரித்து - வேற்றுமையது திரிந்து முடியும் இயல்பு நிற்றலும் உரித்து எ-று.

(உ-ம்.) எட்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

உம்மையான், தொகைமரபினுள் 'மொழிமுதலாகும்' (147) என்றனாற் கூறிய இயல்பு பெரும்பான்மை ஆயிற்று.

அஃது எண்கடிது என வரும். *(13)*

## இளம்பூரணம்

### *310. முரண் எனும் தொழிற்பெயர் இயல்பாய் முடிதல்*

**முரண்என் தொழிற்பெயர் முதல்இயல் நிலையும்.**

இச்....எனின், இவ்வீற்றுத் தொழிற்பெயருள் ஒன்றற்குத் தொழிற்பெயர் முடிபு விலக்கி, இவ்வீற்று அல்வழி முடிபும் வேற்றுமை முடிபும் கூறு.....ற்று.

(இ-ள்.) முரண் என்று கூறப்படும் தொழிற்பெயர், இவ்வீற்றிற்கு இருவழியும் முற்கூறிய இயல்பும் திரிபும் ஆகிய இயல்பின்கண்ணே[1] நின்று முடியும் எ-று.

(உ-ம்.) முரண் கடிது சிறிது தீது பெரிது - எனவும், முரட்கடுமை சேனை தானை பறை - எனவும் வரும்.

இதனைத் தொழிற்பெயர் எல்லாம் (11) என்பதன்பின் வையாத முறையன்றிய கூற்றினான், முரண்கடுமை என்னும் இயல்பும் அரண்கடுமை - அரட்கடுமை - என்னும் உறழ்ச்சியும் கொள்க. *(14)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*1) சூ. 303, 304*

2) முறையன்றிக் கூற்றினான், முறையன்றிய கூற்றினான்-என இருவகையாகவும் இத்தொடர் இடம் பெறுகிறது.

**நச்சினார்க்கினியம்**

## *309. 'முரண்' எனும் தொழிற்பெயர் இயல்பாய் முடிதல்*

**முரண்என் தொழிற்பெயர் முதல்இயல் நிலையும்.**

இஃது இவ்வீற்றுத் தொழிற்பெயருள் ஒன்றற்குத் தொழிற்பெயர்க்கு எய்திய உகரமும் வல்லெழுத்தும் விலக்கி, இவ்வீற்று அல்வழி முடிபும் வேற்றுமை முடிபும் எய்துவித்தது.

(இ-ள்.) முரண்....நிலையும் - மாறுபாடு உணர்த்தும் முரண் என்னும் தொழிற்பெயர், தொகைமரபிற் கூறிய (149) அல்வழிக்கண் திரியாது முடிந்த இயல்பின்கண்ணும், ஈண்டு வேற்றுமைக்கண் திரிந்து முடிந்த இயல்பின்கண்ணும் (302) நிலைபெற்று முடியும் எ-று.

(உ-ம்.) முரண்கடிது சிறிது தீது பெரிது ஞெகிழ்ந்தது நீண்டது[1] மாண்டது வலிது எனவும், முரட்கடுமை சேனை தானை பறை எனவும், முரண்ஞெகிழ்ச்சி நீட்சி[2] மாட்சி வலிமை எனவும் வரும்.

இதனைத் 'தொழிற்பெயரெல்லாம்' (306) என்பதன்பின் வையாத முறையன்றிக் கூற்றினான், முரண்கடுமை முரட்கடுமை-அரண்கடுமை அரட்கடுமை என்னும் உறழ்ச்சியும் கொள்க. (14)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*309.* 1, 2, முரணீண்டது, முரணீட்சி: வருமொழி முதல் திரிபு 150ஆம் சூத்திர விதியானும், நிலைமொழி யீறு கெடுதல் 160ஆம் சூத்திர இலேசானும் முடிக்கப்படும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**309. முரண்என் தொழிற்பெயர் முதலியல் நிலையும்.**

ஆசிரியர், முரண் என்னும் தொழிற்பெயர்க்கே ஈண்டு விதி கூறுதலின், அரண்கடுமை அரட்கடுமை என்று வருதலை ஈண்டு அமைத்தல் தகுவதன்று. அவற்றை இவ்வியற் புறனடையில் அமைக்கலாம். ஈண்டுத் தொழிற்பெயர் என்றது, முதனிலைத் தொழிற்பெயரை.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**309. முரண்என் தொழிற்பெயர் முதலியல் நிலையும்.**

முரண் என்னும் சொல், 'இருளும் ஒளியும் தம்முள் முரணாகும்' என்புழிப் பண்பாயும், 'மன்னர் தம்முள் முரணிப் போரிட்டனர்' என்புழித் தொழிலாயும் நின்றவாறு காண்க. 'முரண்கடுமை' எனத் திரியாதவழி நிலைமொழி பண்புப் பெயர் எனவும் கொள்க. இச்சூத்திரத்தைத் தொழிற்பெய ரெல்லாம் (306) என்பதன்பின் வையாது ஈண்டு வைத்தமை யால் இவ்வேறுபாடு பெறப்படும் என்க.

## இளம்பூரணம்

***311. மகரஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு***

மகர இறுதி வேற்றுமை ஆயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.

இச்.....எனின், மகரஈற்றிற்கு, மேற்கூறிய ணகர ஈற்று வேற்றுமை முடிபோடு இயைய, வேற்றுமை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* மகரஈற்றுப் பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணாயின், அம்மகரம் முற்றக்கெட்டு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* மரக்கோடு செதிள் தோல் பூ - என வரும்.

'துவர' என்றதனான், இயல்புகணத்துக்கண்ணும் உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மகரக்கேடு கொள்க.

*(உ-ம்.)* மரஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை- எனவும், நங்கை எங்கை செவி தலை புறம் - எனவும், நுங்கை தங்கை - எனவும் வரும். *(15)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***311.*** ஆசிரியர் ஒரு மெய்யெழுத்துக் கெட்டவழியே மற்றொரு மெய் ஆண்டு வந்து மிகும் என்று குறிப்பிடும் சூத்திரங் களுள் இதுவுமொன்று. *314, 326, 341*ஆம் சூத்திரங்களும் அன்ன.

**நச்சினார்க்கினியம்**

***310. மகரஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு***

**மகர இறுதி வேற்றுமை யாயின்**
**துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.**

இது முறையானே மகர ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) மகர.....மிகும் - மகர ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணாயின், அந் நிலை மொழி மகரம் முற்றக்கெட்டு, வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) மரக்கோடு செதிள் தோல் பூ என வரும். முண்டகக்கோதை எனவும் வரும்.

'துவர' என்றதனான், இயல்புகணத்துக்கண்ணும் உயர் திணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மகரக் கோடு கொள்க.

மரஞாண் மரநூல் (இவற்றிற்கு நான்கனுருபு விரிக்க) மரமணி யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக.

நங்கை எங்கை செவி தலை புறம் எனவும், நுங்கை[1] செவி தலை புறம் எனவும் வரும். ஈண்டு மகரக்கேடே கொள்க; முடிபு மேற்கூறுப (320). (15)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*310.* 1. நுங்கை: 325ஆம் சூத்திரவிதியான் முடியும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**311. மகர இறுதி......வல்லெழுத்து மிகுமே.**

"'துவர' என்றதனான், இயல்புகணத்துக்கண்ணும் உயர்திணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மகரக்கேடு கொள்க. மரஞாண் நூல் மணி...., நங்கை எங்கை..., நுங்கை தங்கை என வரும்" என்றனர் உரைகாரர். 'உரையசைக் கிளவியு ஞாங்கர்க் கிளந்த' (எழுத். 205), 'அதன்குண நுதலி' (சொல். 416), 'குறிப்பினு மெய்ம்மை யானும்' (ஷை 427) முதலிய இடங்களில் ஆசிரியர் மகரக்கேடு கொண்டிருக்கின்றமையின், அவற்றாலே இயல்புகணத்துக் கண் மகரக்கேட்டினைக் கொள்ளல் தகும். 'படர்க்கைப் பெயரும்' (321), 'நும்மென் ஒருபெயர்' (326) என்ற சூத்திரங்களில் உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் மெல்லெழுத்து மிகுதி கூறியிருக்

கின்றமையான், அம்மெல்லெழுத்து மிகுதி மகரக்கேடின்றி இயலாமையின் அச்சூத்திரங்களால் மகரக்கேடு பெறப்படும் எனக் கொள்ளலும் தகும்.

அவ்வாறாயின் இச்சூத்திரத்தின்கண் 'துவர' என்ற சொல் எற்றுக்கு எனின், வகரத்தின் முன்னர் மகரம் குறுகுமோ அவ்வாறின்றி முழுமையும் கெடுமோ என்னும் ஐயம் நீக்குதற்கு என்னலாம்.

*311.* [208ஆம் சூத்திரவுரைக்குறிப்பு ஈண்டும் ஏற்கும்.

பின்னூலார் போல, மகரம் வருமொழி வன்கணத்திற்கு இனமாகத் திரியும் என்று கூறார் ஆசிரியர். நிலைமொழி யீற்று மகரம் கெட்டவழியே வல்லெழுத்து மிகுதலும் மெல்லெழுத்து மிகுதலுமாம் என்பது ஆசிரியர் கொள்கை. ஆகலான், இயல்புகணத்திற்கு இச்சூத்திரத்தான் மகரக்கேடு மாத்திரம் விதித்தார். 321, 326ஆம் சூத்திரத்தான் மகரக்கேடு பெறப்படாது என்பது உரையாசிரியன்மார் துணிபு.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**311.** **அகர ஆகாரம்.....நீடலும் உரித்தே.**

'மகர இறுதி' (310) என்னும் சூத்திரத்தான் ஈற்று மகரம் கெட்டது. ஆசிரியர் கூறிய விதிப்படி, மர + அடி = மராஅடி என்றும் குள + ஆம்பல் = குளாஆம்பல் என்றும் வருதல் வேண்டும்.

மர என்பதன் ஈற்றகரத்தோடு அடி என்பதன் அகரம் சேருமிடத்து, இரண்டு அகரம் ஓர் ஆகாரமாகும். ஆகவே, மராடி என்னும் உருவம் அமைய, அதன்கண் வருமொழி முதலெழுத்து அறிவுறற்பொருட்டு அகரம் இட்டு மராஅடி என்று எழுதப்படுகிறது. ஆதலின், அகரம் அறிகுறியளவே நிற்பது. இனி, குள+ஆம்பல்=குளாம்பல் என்றாகும். வருமொழி முதற்கண் நெடிலிருப்பின் நிலைமொழியீற்றுக் குறில் கெடுதல் இயல்பு.

*311.* [குள + ஆம்பல் = குளாம்பல் என முடியும் என்பது இவர் கருத்து. வருமொழி முதல் ஆகாரம் ஆதலின், அறிகுறி எழுத்தாக அகரமிடுதல் வேண்டாமையின் 'குளாம்பல்' எனவே முடிக்கவேண்டும் என்கிறார். பாலசுந்தரம் அவர்கள் 'குளா ஆம்பல்' என முடிப்பர்.

நச்சினார்க்கினியர், "ஆகாரத்தை அகரமாக்குக" என மிகையாற் கூறியதனை இவர் கொண்டிலர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**310. மகர இறுதி.......வல்லெழுத்து மிகுமே.**

'வல்லெழுத்து மிகுமே' என்றதனான், ஏனை யெழுத்துக்கள் மிகா என்பது 'எடுத்த மொழி இனம் செப்பலும் உரித்தே (கிளவி.61) என்பதனான் அமைதலை ஓராமல், இவற்றைத் துவர என்னும் மிகையாற் கொள்வர் உரையாசிரியன்மார். 'துவர' என்பது மகரஈறு யாண்டும் கெட்டே நிற்கும் என்பதை வற்புறுத்தி நிற்பதாகலின் அது மிகையாகாமையும் உணர்க.

*310.* ['துவர' என்பதனை மிகைச் சொல்லாகக் கொண்டிலர் உரையாசிரியர் இருவரும்; அச்சொல் முற்ற என்னும் பொருள்தருவதாகலின், ஏனைய இயல்புகணத்துக் கண்ணும் (பிற பெயர்க்கண்ணும்) இவ்விதியைக் கொண்டனர்.]

## இளம்பூரணம்

## *312.* இவ்வீற்றுப் பெயர் அகரஆகாரங்கள் வருவழி முடிபு வேறுபடுதல்

**அகர ஆகாரம் வருஉங் காலை**
**ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே.**

இச்....எனின், அவ்வீற்று முடிபு வேற்றுமையுடையன கூறு.....ற்று.

(இ-ள்.) அகர முதல் மொழியும் ஆகாரமுதல் மொழியும் வருமொழியாய் வருங்காலை, நிலைமொழிக் கண் ஈற்றின்மேல் நின்ற அகரம் நீளாது நிற்பதேயன்றி, நீண்டு முடிதலும் உரித்து எ-று.

(உ-ம்.) மராஅடி குளாஅம்பல்[1] - எனவும், மரவடி குளவாம்பல் - எனவும் வரும்.

வருமொழி முற்கூறிய அதனான் இவ்வீற்றுள் பிறவும் வேறு முடிவன கொள்க.

(உ-ம்.) கோணாகோணம் கோணாவட்டம் - என வரும். கோணத்துட் கோணம், கோணத்துள் வட்டம் என அறிக. வேற்றுமை முடிபு.

முன்னர்ச் 'செல்வழி அறிதல்' (17) என்பதனான், குளாஅம்பல் என்புழி வருமொழி ஆகாரக் குறுக்கமும், கோணாகோணம் என்புழி வருமொழி வல்லெழுத்துக்கேடும் கொள்க. (16)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***312.*** மர+அடி=மரா அடி; இரண்டு அகரக்குறில் ஓர் ஆகார நெடிலாகத்திரியும். வருமொழிமுதல் அகரம் என்பது தோன்ற, அறிகுறியெழுத்தாக 'அ' எழுதப்படலாயிற்று. 'ரா' மூன்று மாத்திரையாக நீட்டி யொலிக்கப்படலாகாது. வருமொழி முதற்கண் நெடில்வரின், நிலைமொழியீற்றுக் குற்றுயிர் கெடுதல் இயல்பாதலின் குள+ஆம்பல்=குளாம்பல் என வரும். ('குளாஅம்பல்' என முடிதலாகாது.) இவை ரெட்டியார் கருத்து.

## நச்சினார்க்கினியம்

### *311. இவ்வீற்றயல் அகரம் நீடலும் நீடாமையும் உளவாம் இடன்*

**அகர ஆகாரம் வரூஉங் காலை**
**ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே.**

இஃது இவ்வீற்று முடிபு வேற்றுமையுடையன கூறுகின்றது.

(இ-ள்.) அகர....காலை - அகர முதல் மொழியும் ஆகார முதல்மொழியும் வருமொழியாய் வருங்காலத்து; ஈற்று.... உரித்து-மகர ஒற்றின்மேல நின்ற அகரம் நீண்டு முடிதலும் உரித்து, நீடாமையும் உரித்து எ-று.

(உ-ம்.) மரம் குளம் என நிறுத்தி, மகரம் கெடுத்து, அடி ஆம்பல் எனத்தந்து, ரகர ளகரங்களில் நின்ற அகரம் ஆகாரம் ஆக்கி, மராஅடி குளாஅம்பல் என முடிக்க.

மேல், செல்வழி அறிதல் வழக்கத் தான *(312)* என்பதனான், குளாஅம்பல் என்புழி, ஆம்பல் என்பதன் ஆகாரத்தை அகரம் ஆக்குக.

உம்மையான், மரவடி குளவாம்பல் என நீடாமையும் கொள்க.

வருமொழி முற்கூறியவதனான், இவ்வீற்றுப் பிறவும் வேறுபட முடிவன கொள்க.

கோணாகோணம் கோணாவட்டம் என வரும். இவற்றிற்கு உள் என்னும் உருபு விரிக்க.

கோணா கோணத்திற்கு வல்லெழுத்துக்கேடு மேலைச் சூத்திரத்து இலேசாற் கொள்க. *(16)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**311. அகர ஆகாரம்.....நீடலும் உரித்தே.**

'மர + அடி' = மராஅடி; குள+ஆம்பல்=குளா ஆம்பல் எனவரும். அகர நீடும் என்ற சிறப்புவிதியான் உடம்படுமெய் பெறாவாயின.

311. ['மராஅடி' முடிந்தாற் போலவே 'குளாஅம்பல்' என்பதும் முடியற்பாலது என்று கருதினர்போலும் உரையாசிரியன்மார்; உச்சரிப்பு எண்மை கருதி 'ஆம்பல்' என்னுமிடத்து ஆகாரம் குறுகியொலித்துக் குளாஅம்பல் என்றே முடிதல் ஆசிரியர் கருத்தாகத் துணிந்து, வருஞ் சூத்திரத்து இலேசாற் கொண்டனர் என்க.]

**இளம்பூரணம்**

***313. இவ்வீற்றுப்பெயர் மெல்லெழுத்தோடு உறழ்ந்து முடிதல்***

**மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே**
**ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு வேறு முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) மெல்லெழுத்தோடு உறழ்ந்து முடியும் மொழிகளும் உள; வழக்கின்கண் அவை வழங்கும் இடம் அறிக எ-று.

(உ-ம்.) குளங்கரை குளக்கரை சேறு தாது பூழி- என வரும்.

'செல்வழி அறிதல்' என்றதனான், குளங்கரை குளக்கரை- என்றது போல, அல்லன ஒத்த உறழ்ச்சி அல்ல என்பது கொள்க.

'வழக்கத்தான' என்றதனான், இவ்வீற்று வேற்றுமைக் கண் முடியாதன எல்லாம் முடித்துக்கொள்க.

*(உ-ம்.)* இலவங்கோடு எனவும், 'புலம்புக் கனனே' *(புறநா. 258)* எனவும், நிலத்துக் கிடந்தான் எனவும் வரும்.[1] *(17)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***313.*** 1) இவற்றுள் நிலைமொழியீற்று மகரம், முறையே திரிதலும், இயல்பாதலும், அத்துச்சாரியை பெறுதலும் காண்க.

**நச்சினார்க்கினியம்**

***312. இவ்வீற்று மெல்லெழுத்து உறழ்ந்து வரலுமாம் எனல்***

**மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே**
**செல்வழி அறிதல் வழக்கத் தான.**

இது மகரம் கெட்டு வல்லெழுத்து மிகுதலொடு மெல்லெழுத்தும் உறழ்க என்றலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) மெல்லெழுத்து.....உள - மகர ஈற்றுள், வல்லெழுத்தினொடு மெல்லெழுத்துப் பெற்று உறழ்ந்து முடியும் மொழிகளும் உள; வழக்கத்தான செல்வழி அறிதல்- வழக்கத்தின்கண் வழங்கும் இடம் அறிக எ-று.

*(உ-ம்.)* குளங்கரை குளக்கரை சேறு தாது பூழி என வரும். இவற்றுள், குளங்கரை குளக்கரை போல, அல்லன ஒத்த உறழ்ச்சியாய் வழங்கா என்றற்குச் 'செல்வழி அறிதல்' என்றார்.

வழக்கத்தான என்றதனான், குளத்துக்கொண்டான் ஈழத்துச் சென்றான் - குடத்துவாய் - பிலத்துவாய் - என்றாற்

போல்வன, மகரம் கெட்டு அத்துப் பெற்றன. இவை 'அத்தே வற்றே' (133) என்றதனான் ஒற்றுக் கெடாதாயிற்று[1], அஃது அல்வழிக்குக் கூறுதலின்.[2]

மழகளிறு என்பது 'மழவும் குழவும் இளமைப் பொருள' (சொல். 312 நச்.) என்ற உரிச்சொல். அது மகரஈறு அன்று[3].

சண்பகங்கோடு என்பது வழக்கிடத்துச் செல்லாது.

இன்னும் இதனானே, மகரம் கெடாது நிற்பனவும் கொள்க.

'புலம்புக் கனனே' (புறநா. 258) 'நலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' (மலைபடு. 50) எனவரும். *(17)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***312.*** 1. 'ஒற்றுக் கெடாவாயின' என்றிருத்தல் வேண்டும்.

2. கலத்துக்குறை (கலமும் குறையும்) என்பது அல்வழி முடிபு.

3. 'மழ' மகர ஈறன்று என்ற வாக்கியம் இடைச்செருகல் என்று களைக. இச்சூத்திரத்தை 'அறியாதுடம்படல்' என்னும் உத்திக்கு இனமாகக் கூறுவர் பேராசிரியர்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***313.*** **மெல்லெழுத்து உறழும்......வழக்கத் தான.**

"'வழக்கத்தான' என்றதனான், குளத்துக்கொண்டான் ஈழத்துச் சென்றான் குடத்துவாய் பிலத்துவாய் என்றாற் போல்வன மகரம் கெட்டு அத்துப்பெற்றன. இவை 'அத்தே வற்றே' (134) என்றதனான் ஒற்றுக் கெடாவாயின, அஃது

அல்வழிக்குக் கூறுதலின்" என நச்சினார்க்கினியர் கூறினார். அத்துவற்று முதலிய சாரியைகள் பெயர்க்கும் வேற்றுமை யுருபிற்கும் இடையே வருமாகலானும், குளத்துக் கொண்டான்-ஈழத்துச் சென்றான்-என்பன, குளத்துக்கண் கொண்டான் - ஈழத்துக்கண் சென்றான்-என்பவற்றின் திரிபெனக் கூறலாமாகலானும், குடத்துவாய் - பிலத்துவாய் - என்பன குடத்தினது வாய் - பிலத்தினதுவாய் - என்பவற்றின் திரிபெனக் கூறலாமாகலானும், அவர் அவ்வாறு கூற வேண்டுவதின்று. நிலத்துக் கிடந்தான் முதலியவற்றை 'மருதத்துப் புறனே' (புறத். 9), 'அந்தரத் தெழுதிய' (கற்பு.5) முதலிய ஆசிரியர் வழக்காற் கொள்க.

*313.* [வேற்றுமையுருபு தொக, அப்பொருட்கண் நிலைவருமொழிகள் புணர்வது (வேற்றுமைப்) பொருட் புணர்ச்சியாம். வேற்றுமைப் பொருள் தோன்ற வேற்றுமை யுருபினை இணைக்கும் சாரியைகள் தாம் தொகாது நிற்ப, பொருட்புணர்ச்சி நிகழ்தலுமுண்டு. அன்ன எடுத்துக் காட்டுக்களே குளத்துக்கொண்டான். குடத்துவாய் போல்வன என்க. இவற்றிடையே முறையே ஏழனுருபும் ஆறனுருபும் தொக்கன. நிலைமொழியீற்று மகரம் இச்சூத்திரத்துள் 'வழக்கத்தான' என்ற இலேசானே கெட்டது. அத்துமிசை ஒற்று என நிலைமொழி யொற்றினைக் கெடுக்கலாகாமைக்கு நச்சினார்க்கினியர் காரணம் சுட்டினார்.]

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**312. மெல்லெழுத் துறழும்......வழக்கத் தான.**

'வழக்கத்தான' எனறதனான், 'புலம்புக்கனனே', 'நலம் பெறு கண்ணுளர்' என மகரம் கெடாது நிற்றல் கொள்க- என்றனர் உரையாளர். மெல்லெழுத்து உறழ்ந்து வாராத சொற்களைக்காட்டுதல் அமைதியேயன்றி, மெல்லெழுத்துக் கெடாது நிற்றலைக் காட்டுதல் அமைதியன்று.

ஆசிரியர், மகர இறுதி என்னும் சூத்திரத்தான் மகரம் கெடுதலையும் வல்லெழுத்துத் தோன்றுதலையும் விதித்தார்;

ஈண்டு வல்லெழுத்தாதல் மெல்லெழுத்தாதல் தோன்றும் மொழிகளும் உள என்றார்.

*312.* [வேற்றுமைப் புணர்ச்சியில் நிலைமொழியீற்று மகரம் கெடாமல் நிற்பதனைக் குறிக்க, வேறு இயைபுடைய இடம் இல்லாமையின், உரையாசிரியன்மார் அவ்விரண்டு தொடர்களையும் குறித்தனர், இயற்புறனடையாற் கோடல் சேய்த்தாகலின்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***312.* மெல்லெழுத் துறழும்......வழக்கத் தான.**

ஆசிரியர் முன்னு பின்னும் 'ஒல்வழி' என்றே கூறியுள்ளமையான், ஈண்டுச் ' செல்வழி' என்பது பாடமாகாமையும், அதற்குப் பொருட் சிறப்பின்மையும் நோக்கியறிக.

'புலம்புக்கனனே' 'கலம்பெறு கண்ணுளர்' என்பவை மகரம் கெடாது வந்தன என்பர் உரையாளர். இவை மகரம் கெட்டு வருமொழிக்கேற்ற மெல்லெழுத்து மிக்கன என்பதே இலக்கண நெறியாகலின் அவர்கூற்று ஒவ்வாதென்க.

*312.* [சூ. 114, 246 என்னும் இரண்டன்கண்ணும் ஒல்வழி வந்துள்ளது. செல்வழி என்பது வழக்கத்தே நிகழுமிடன் என்ற பொருளில் நிகழ்வதனால், இதனை விடுத்து ஒல்வழியைக் கோடற்கண் சிறப்பு ஏதுமின்று.

"வருமொழி பகரத்தை நோக்கி நிலைமொழியீற்று மகாரம் கெடாது நிற்கும் என்ற உரையாளர்தம் கூற்று இலக்கண நெறியன்று என்று இவர் சுட்டுகிறார். மகரம் முதற்கண் கெடுவதும், கெட்டவழி வருமொழி முதல் பகரத்தை நோக்கித் தான் மகரமாகத் திரிவதும் இவர் சுட்டும் இலக்கணநெறி. எழுதப்படுவது என்னும் பொருட்கண் எழுது என்னும் முதனிலை யுரிச்சொல்லின் முன்னர்ச் செயப்படு பொருண்மை யுணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து......அவ் ஐகாரம் கெட்டு, கெட்டவழித் தகரம்

இரட்டித்து 'எழுத்து' என முடிந்தது" என்று சிவஞான முனிவர் சுட்டும் இலக்கணநெறி போல்வது இவ்வமைதி என்க. முனிவர் கூற்றைப் பாயிரவிருத்தியுள் அரசஞ்சண்முகனார் மறுத்துள்ளமை நோக்குக.

'அல்வழி யெல்லாம் மெல்லெழுத்தாகும்' (314) என்னும் சூத்திரவுரையுள், "மரங்குறிது மரஞ்சிறிது மரந்தீது மரம்பெரிது என வரும். மரம் பெரிது என்புழி (மகரம்) திரிபின்று என்பது ஆணைகூறல் என்னும் உத்தி" என நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளமை காண்க.]

## இளம்பூரணம்

### *314. 'இல்லம்' என்னும் மரப்பெயர் முடியுமாறு*

**இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்....ற்று.

*(இ-ள்.)* இல்லம் என்னும் மரத்தினை உணரநின்ற பெயர், விசை என்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* இல்லங்கோடு செதிள் தோல் பூ - என வரும். இதன்கண் மகரக்கேடு முன்னர் 'எல்லாம்' (19) என்பதனாற் கொள்க. *(18)*

## நச்சினார்க்கினியம்

### *313. இல்லம் எனும் மரப்பெயர் மெலிமிகல்*

**இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.**

இஃது இவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

*(இ-ள்.)* இல்ல.....இயற்று - புக்கு உறையும் இல் அன்றி இல்லம் என்னும் மரத்தினை உணரநின்ற சொல்; விசை என்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* இல்லங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

மேலைச் சூத்திரத்து 'வழக்கத்தான' *(312)* என்றதனான் மகரக்கேடு கொள்க. *(18)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***313.*** 282, 278, 262, 243ஆம் சூத்திரங்களை மாட்டேறு முறையே சுட்டியது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***314.*** **இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.**

நிலைமொழி மகரக்கேட்டினை மிகையாற் கொண்டனர் உரைகாரர். மகரத்தின்பின் மெல்லெழுத்து வாராது என்பது 'ஙஞண நமன' எனும் (25) முதலிய நான்கு சூத்திரங்களாற் பெறப்படுதலானும், இச்சூத்திரத்துள் மெல்லெழுத்து மிகும் என்பது கூறப்படுதலானும், மகரக்கேடு பெறப்படுகின்றது எனக்கொள்ளுதல் சாலும்.

***314.*** [மகரம் நிலைமொழியீற்றிற் கெட்டவழியே மெல்லெழுத்து மிகல் வேண்டுதலின், அக்கேட்டினை மிகையாற் கொண்டனர் உரைகாரர். நூன்மரபு மயக்க விதிகளான் மெல்லின மெய்யை யடுத்து இனமொத்த வல்லினம் முதலியன வரும் என்னுந்துணையே பெறப்பட்டதன்றி, நிலைமொழி யீற்று மகரம் கெடுதல் பெறப்பட்டிலது.]

**வேங்கடராகுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***313.*** **இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.**

ஈண்டு, மகரமே மெல்லெழுத்தாகத் திரியும் என்றலே அமைதியாகும் ஆயினும், மகரம் கெடும் என்று பொதுவிதி கூறினாராகலின், அதற்கு இயைய விதி கூறிச் செய்கிறார். இவ்வாறே முன்னர்க் கூறுதலும் காண்க.

***313.*** [*300, 315, 320*ஆம் சூத்திரங்களிலும் நிலைமொழி ஈறுகெட மெல்லெழுத்து வந்து மிகுதலைக் காணலாம். மகரம் கெட வல்லெழுத்து மிகுதலை 260ஆம் சூத்திரத்திற் காணலாம்.]

## இளம்பூரணம்

### *315. இவ்வீற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**அல்வழி எல்லாம் மெல்லெழுத்து ஆகும்.**

இச்....எனின், அவ்வீற்று அல்வழி முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* மகரஈறு அல்வழிக்கண் எல்லாம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* மரங்குறிது சிறிது தீது பெரிது-என வரும்.

'எல்லாம்' என்றதனான், இவ்வீற்று அல்வழிமுடிபில் முடியாதன எல்லாம் கொள்க.

*(உ-ம்.)* மரஞான்றது நீண்டது மாண்டது-எனவும், வட்டத்தழை வட்டப்பலகை - எனவும், கலக்கொள் கலநெல்- எனவும், நீலக்கண் பவளவாய் - எனவும், சொல்லுங் கொற்றன் - பறக்குநாரை - எனவும் வரும்.[1] *(19)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***315.*** 1) இவற்றுள் நிலைமொழியீற்று மகரம் கெட்டு இயல்பாதலும், மகரம் கெட்டவழி வல்லொற்றாதல் மெல்லொற்றாதல் மிகுதலும் காணப்படும்.

**நச்சினார்க்கினியம்**

## *314. இவ்வீற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**அல்வழி எல்லாம் மெல்லெழுத்து ஆகும்.**

இது மகரம் அல்வழிக்கண் திரிக என முற்கூறாமையின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) அல்வழி......ஆகும் - மகர ஈறு அல்வழிக்கண் எல்லாம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) மரங்குறிது சிறிது தீது பெரிது என வரும். மரம் பெரிது என்புழித் திரிபு இன்று என்பது ஆணைகூறல் என்னும் உத்தி.

இனி எல்லாம் என்றதனான், அல்வழிக்கண் மகர ஈறு பிறவாற்றான் முடிவன எல்லாம் கொள்க.

வட்டத்தடுக்கு சதுரப்பலகை ஆய்தப்புள்ளி வேழக் கரும்பு கலக்கொள் கலச்சுக்கு கலத்தோரை கலப்பயறு நீலக்கண் என்னும் பண்புத்தொகைக்கண்[1] மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடிந்தன.

ஆய்த வுலக்கை[2] அகரமுதல - இவை இயல்பு கணத்துக்கண் மகரம் கெட்டு முடிந்தன.

எல்லாருங் குறியர் - நாங் குறியேம் (321 உரை) - இவை உயர்திணைப்பெயர் மகரம் திரிந்து மெல்லெழுத்தாய் முடிந்தன.[3]

கொல்லுங் கொற்றன் - உண்ணுஞ் சாத்தன், 'கவள மாந்து மலைகெழு நாடன்' - பொருமாரன் - தாவுபரி - பறக்கு நாரை -ஓடுநாகம்-ஆடுபோர்-வருகாலம், கொல்லும் யானை-பாடும் பாணன், என இவை மகரம் திரிந்தும் கெட்டும் நிலைபெற்றும் வந்த பெயரெச்சம்.

இன்னும் இதனானே, இயல்புகணத்துக்கண்ணும் மகரம் கெடுதலும் கெடாமையும் கொள்க.

மரஞான்றது நீண்டது மாண்டது எனவும், மரம் யாது வலிது அடைந்தது எனவும் வரும்.

இன்னும் இதனானே, பவளவாய் என உவமத்தும், நிலநீர் என எண்ணிடத்தும்[4] கேடு கொள்க. (19)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***314.*** 1. இப்பண்புத்தொகைகளுள், முதலிரண்டும் வடிவு பற்றியன; அடுத்த இரண்டும் இருபெயரொட்டு; நீலக்கண் ஒன்றும் வண்ணம் பற்றியது; ஏனைய நான்கும் அளவு பற்றியன.

2. ஆயுத வுலக்கை (படைக்கலமாகிய உலக்கை- உசலப்படை) என்றிருத்தல் வேண்டும்.

3. இத்தொடர் 321ஆம் சூத்திரவுரையுள் வருதல் காண்க. ஈண்டு வருதல் பொருத்தமின்மையின், இடைச்செருகலாக விருத்தல் வேண்டும் என்று களைக. இதனைச் சுட்டி யுரைத்தார் சாத்திரியார்.

4. பவளம் போன்ற வாய்; நிலமும் நீரும்.

கொல்லுங் கொற்றன், உண்ணுஞ் சாத்தன் முதலான எடுத்துக்காட்டுள், தாவுபரி - ஆடுபோர் - வருகாலம் - என்னும் வினைத்தொகை மூன்றும் நீக்கப்பட வேண்டும், நிலை மொழியிறுதிக்கண் மகரம் கெட்டு முடிந்தன என்று கூற இயலாமையின். கவளமாந்து, பொருமாரன், பறக்கு நாரை, ஓடு நாகம் - என்பனவற்றுள் நிலைமொழியீற்று மகரம் மென்கணம் வரக் கெட்டு முடிந்தமை காண்க. தாவுபரி முதலிய மூன்றும் வருமொழி வன்கணம் நிகழ்தலின் நிலைமொழியீற்று மகரம் கெட்டு முடிதற்கு ஏலாமை காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**315. அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்.**

நச்சினார்க்கினியத்தில், "எல்லாருங்குறியர் - நாங் குறியேம் - இவை உயர்திணைப்பெயர் மகரம் திரிந்து மெல்லெழுத்தாய் முடிந்தன" என்று உளது. இதுவே அல்லது கிளப்பின் (322) என்ற சூத்திரத்திலும் உளது. இங்கு அஃது இடைச்செருகலாய் இருத்தல் கூடும்.

**315.** [சாத்திரியார் குறிப்பிட்ட இடைச்செருகல் என்ற செய்தி, 322ஆம் சூத்திரத்தேயே இடம்பெறவேண்டும். உயர்திணைப்பெயர் முடிபு ஈண்டு வேண்டா. இப்பிறழ்ச்சி ஏடெழுதுவோரால் எப்படியோ நேர்ந்துவிட்டது. நச்சினார்க்கினியருரையில் இது களையப்பெற வேண்டும்.]

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**314. அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்.**

'எல்லாம்' என்றதனான், வட்டத்தடுக்கு சதுரப்பலகை முதலியவற்றைக் கொள்க- என்று நச்சினார்க்கினியரும், வட்டத்தழை வட்டப்பலகை முதலியன கொள்க என்று இளம்பூரணரும் கூறினர். ஆசிரியர் 'ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும், புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' (482) என்றாராதலின், இவை ஐம்பா லறியும் பண்புதொகு மொழி அன்மையின், இவற்றிற்குப் புணர்ச்சி விதி கூறலாம் என்று ஆண்டு அமைப்பது பொருந்தும்.

**314.** [வடிவு பற்றிய மகரஈற்று நிலைமொழியாக நிற்கும் பண்புத்தொகை முடிபுகளை 482ஆம் சூத்திரத்தாற் புலப்படுத்துவதினும் ஈண்டே மகர ஈற்றுள் முடித்துக் காட்டுதல் மிக்க இயைபுடையதாக உரையாளர் கருதினர். முடிக்கப்படாத பண்புத்தொகைக் கிடையே, நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படும் வட்டத்தை

முதலியவற்றை ஆண்டு முடித்துக் காட்டுதல் சூத்திரத்துள் பண்புத்தொகை சுட்டப்பட்ட இயைபு பற்றிப் பொருந்தும் என்பது இவர் கொள்கை. இவ்விரு திறமும் பொருந்துவனவே.]

## இளம்பூரணம்

### 316. 'அகம்' கை எனும் வருமொழியொடு முடியுமாறு

**அகம்என் கிளவிக்குக் கைமுன் வரினே**
**முதல்நிலை ஒழிய முன்னவை கெடுதலும்**
**வரைநிலை இன்றே ஆசிரி யர்க்க**
**மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) அகம் என்னும் சொல்லிற்குக் கை என்னும் சொல் முன்வரின், முன் மகர இறுதி (15) என்றதனான் மகரம் கெட்டு நின்ற நிலைமொழி[1], முதல்நின்ற அகரம் ஒழிய[2], அகரமும் அதனாற் பற்றப்பட்ட ககர மெய்யும் கெட்டு முடிதலும் அவை கெடாது முடிதலும் நீக்கும் நிலைமையின்று ஆசிரியர்க்கு; அவ்விரண்டு இடத்தும் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

வருமாறு: அங்கை, அகங்கை - என வரும். (20)

#### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**316.** 1) வேற்றுமை முடிபைக் கூறும் 'மகர இறுதி' என்னும் சூத்திர விதிப்படி, இச்சூத்திரம் விதிக்கும் அல்வழிமுடிபில், நிலைமொழி யீற்று மகரக்கேட்டைக் கொள்கிறார் உரையாசிரியர்.

2) ஒழிய - கெடாது நிற்க; இச்சொல் இப்பொருட் டாதலை 284, 470, 473ஆம் சூத்திரங்களிலும் காண்க.

**நச்சினார்க்கினியம்**

### *315. 'அகம்' முன்னர்க் 'கை' முடியுமாறு*

**அகம்என் கிளவிக்குக் கைமுன் வரினே**
**முதல்நிலை ஒழிய[1] முன்னவை கெடுதலும்**
**வரைநிலை இன்றே ஆசிரி யர்க்க**
**மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.**

இது மகர ஈற்று அல்வழிக்கண் இம்மொழி இம்முடிபு எய்துக என்றலின், எய்தாதது எய்துவிக்கின்றது.

*(இ-ள்.)* அகம்....வரின் - அகம் என்னும் சொல்லிற்குக் கை என்னும் சொல் முன்னே வருமாயின்; முதனிலை.... கெடுதலும் - முன்நின்ற அகரம் கெடாது நிற்ப, அதன்முன் நின்ற ககரமும் மகரஒற்றும் கெட்டு முடிதலும் கெடாது நின்று முடிதலும்; வரைநிலை இன்று ஆசிரியர்க்க - நீக்கும் நிலைமை நின்று ஆசிரியர்க்கு; ஆவயினான மெல்லெழுத்து மிகுதல் - அவை கெட்டவழி, மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

வருமாறு: அங்கை எனவரும். அகங்கை எனக் கெடாது முடிந்தவழி, 'அல்வழி யெல்லாம்' *(314)* என்றதனான் மகரம் திரிந்து முடிதல் கொள்க. இது பண்புத்தொகை, அதிகாரத் தானும் பொருள் நோக்கானும் வேற்றுமைத் தொகையன்மை[2] உணர்க. *(20)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*315.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. 314ஆம் சூத்திரம் முதல் ஆறு சூத்திரங்கள் அல்வழி முடிபு கூறுவன. அகமாகிய கை என விரிதல் காண்க.

***சாத்திரியார் உரைக்குறிப்பு***

*316.* **அகமென் கிளவிக்குக்.....ஆவயி னான.**

'முன்னவை' என்றதற்கு, அதன்முன் நின்ற அகரமும் அகரத்தாற் பற்றப்பட்ட ககரமெய்யும் என இளம்பூரணரும்,

அதன்முன் நின்ற ககரமும் மகரவொற்றும் என நச்சினார்க் கினியரும் பொருள் கூறினர். நச்சினார்க்கினியர் கூறியதே பொருத்தமானது.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**315. அகம்என் கிளவிக்குக்.......ஆவயி னான.**

'ஆசிரியர்க்க' என இச்சூத்திரத்தும் புள்ளி மயங்கியல் 94ஆம் சூத்திரத்தும் ஆசிரியர் கூறியது நோக்கின், தொல்காப்பியனார் காலத்தில் ஆசிரியர் சிலர் இச்சொல் வழக்கை உடன்பட்டிலர் எனவும், ஆயினும் ஆசிரியர் பலர் மேற்கொண்டனர் எனவும், ஆகலின் அங்கை என்பதும் வழங்கற்பாலதே என்று விதித்தார் எனவும் உய்த்துணர்தல் கூடும்.

அகம் என்பதில் மகரம், வரும் வல்லெழுத்திற்கு ஏற்பத் திரிந்தது என்றால் நேரிதாயினும், மேற்கூறிய பொது விதிக்கியைய ஈண்டு மெல்லெழுத்து மிகும் என்றார்.

அஞ்செவி எனவருவது பிற்காலத்தது. (முல்லைப். 89)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**315. அகமென் கிளவிக்குக்.....ஆவயி னான.**

அகஞ்செவி என்பது அஞ்செவி என வருதலும் கொள்க என்பர் உரையாசிரியர். அகச்செவி என்பதே மரபாகலானும், அஞ்செவி என்பது அழகிய செவி என்னும் பொருள்படு மாகலானும் அதனை மிகையுள் அடக்கவேண்டா என்க.

**315.** [அஞ்செவி நிறைய மந்திரம் ஓதி என்புழி, மந்திரம் மறைப் பொருண்மைத்தாகலின், பிறர் கேளாதவாறு, கேட்பான் செவியகத்தே ஓதுதலின் செவியகம் அஞ்செவி எனப் பின்முன் தொக்க ஆறன் தொகையாம் என்க. இடம் விளங்கா மேற்கோளடியாயினும், தொல்லுரையாளர் எடுத்துக்காட்டிய தொடர் இது. அங்கை போல அஞ்செவியும் முடிந்தது எனக்கோடற்கண் பொருந்தாமை சிறிதுமின்று.]

## இளம்பூரணம்

### 3/7. 'இலம்' படு எனும் வருமொழியொடு முடிதல்

**இலம்என் கிளவிக்குப் படுவரு காலை**
**நிலையலும் உரித்தே செய்யு ளான.**

இச்.....எனின், அவ்வீற்றுள் உரிச்சொல் ஒன்றற்குச் செய்யுள் முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* இலம் என்னும் சொல்லிற்குப் படு என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து, முன் 'மகர இறுதி' *(18)* என்றதனான் கெட்ட ஈறு கெடாது முடிதலும் உரித்துச் செய்யுட்கண் எ-று.

வருமாறு: 'இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய'[1] *(மலைபடு. 576; பரிபா. 10: 126)*

உரிச்சொல்லாதலான் உருபு விரியாதெனினும்[2], இலத்தாற்பட்ட புலவர் என்னும் பொருள் உணரநிற்றலின், வேற்றுமை முடிபு ஆயிற்று. உம்மை, மகரஈறு என்னும் சாதியொருமை பற்றி வந்த எதிர்மறை[3]. *(21)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***3/7.*** *1)* 'இலம்படு புலவர் ஏற்றகை ஞெமிர' என்பது பரிபாடலடி. இவ்வடிக்கு 'இன்மையாற் பற்றப்பட்ட புலவரது ஏற்றகை நிறைய' என்று பரிமேலழகர் இளம்பூரணர் உரைத்தாங்கு உரைத்தார்.

*2)* உரிச்சொல் பெயர்த்தன்மைப் படுதலான் உருபு விரிகின்றது என்க.

*3)* 'நிலையலும்' என்ற உம்மை கெட்டு முடிதலும் உரித்து என எதிர்மறையாகப் பொருள்பட்டது. மெலிவரின் மகரம் கெடுதலும், பகரம் நீங்கலான பிற வலிவரின் மகரம் திரிதலும் கொள்க என்பது **நச்சினார்க்கினியம்**. 'இலம் என் கிளவிக்கு' என நான்காவது வருதலின், 'இலம்' என்னும்

சொல்லின் மகரவீறு ஈண்டு எழுவாயாகாது 'மகர விறுதி' *(311)* என்பது எழுவாயாய்த் தொடர்கிறது. இலம் என்ற சொல்லின் மகரவீறு குறிக்கப்பட்டதேல், சாதியொருமை யாகாது, அவ்வொன்றனையே சுட்டுதலின். நிலைமொழி பலவற்றது மகரவீற்றையும் அப்பொதுச் சூத்திரத்து மகரவிறுதி குறிக்குமாகலின் அது சாதியொருமையாம்.

**நச்சினார்க்கினியம்**

## *316. 'இலம்' முனர்ப் 'படு'வின் செய்யுள் முடிபு*

**இலம்என் கிளவிக்குப் படுவரு காலை**
**நிலையலும் உரித்தே செய்யு ளான.**

இஃது இலம் என்பது முற்றுவினைச்சொல் ஆகாது குறிப்பாகிய உரிச்சொல்லாய் நிற்குங்கால், அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) இலம்.....காலை - இல்லாமை என்னும் குறிப்பாகிய உரிச்சொற்கு உண்டாதல் என்னும் பொருள் படும் வினைக்குறிப்புப்பெயர் வருமொழியாய் வருங் காலத்து; செய்யுளான நிலையலும் உரித்து - செய்யுளிடத்து மகரம் கேடும் திரியும் இன்றி நிற்றலும் உரித்து எ-று.

எனவே, உம்மையான் பிறசொல் வருங்காலத்துக் கேடும் திரிபும் பெற்று நிற்றலும் உரித்து எனக்கொள்க.

(உ-ம்.) 'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' *(மலைபடு. 576)* இதற்கு இல்லாமை உண்டாகின்ற புலவர் எனப் பொருள் கூறுக.

'இலம்பாடு நாணுத் தரும்' *(சிலப். 9:71)* என்கின்ற தாலோ எனின், இல்லாமை உண்டாதல் நாணுத்தரும் என்று பொருள் கூறுக. இதனை நெற்பாடு[1] பெரிது என்றாற்போலக் கொள்க.

இது 'பொருள் இலம்'[2] என முற்றுவினைச்சொல் ஆமாறும் உணர்க. இலநின்றது எனக் கெட்டவாறும்,

இலங்கெட வியந்தான் - இலஞ்சிறிதாக - இலந்தீதென்றே - எனக் கசதக்கள் வரும்வழித் திரிந்தவானும் காண்க.

'எல்லாம்' (314) என்றதனான், இலம் வருவது போலும்- இலம் யாரிடத்தது - என வகர யகரங்களின் முன்னர்க் கெடாது நிற்றல் கொள்க.

இதனை 'இலத்தாற் பற்றப்பட்ட புலவர்' என வேற்றுமை என்றாரால் உரையாசிரியர் எனின், பற்றப்பட்ட புலவர் என்பது பெயரெச்சமாதலின் 'பற்ற' என்னும் தொழில் தோற்றுவிக்கின்ற முதனிலைச் சொல்லைச் சூத்திரத்து ஆசிரியர் எடுத்தோதிற்றிலர் ஆதலானும், 'படு' என்பது தானும் புலவர் என்னும் பெயரொடு முடியுங்கால், காலம் காட்டும் ஈறுகள் இரண்டும் தொக்க முதனிலைச் சொல்லாய் நிற்றலின்[3] அதனை எடுத்தோதினார் ஆதலானும், ஆசிரியர்க்கு அங்ஙனம் கூறுதல் கருத்தன்மை உணர்க.

அன்றியும், பற்றப்பட்ட என்புழி இரண்டு முதனிலை கூடி ஒன்றாய் நின்று பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தாராமையானும்[4], அல்வழி அதிகாரம் ஆதலானும், அது பொருளன்மை உணர்க. (21)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***316.*** 1. நெல் உண்டாதல் (நெல் விளைதல்); 371ஆம் சூத்திரவிதியான் அல்வழிக்கண்ணும் லகரம் திரிந்தது என்க.

2. பொருள் இல்லேமாயினம் என்பது பொருள். இலம்:தன்மைப் பன்மைக் குறிப்பு முற்று.

3. பரிபாடல் 10 : 12 பாடலடி 'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' என்பதற்கும் பரிமேலழகர் உரையாசிரியரைப் பின்பற்றியே பொருள் கூறினார். பற்றப்பட்ட புலவர் என விரிப்பின், பற்ற எனப் பிரிப்பதற்கேற்ற தொழில் முதனிலையை ஆசிரியர் சுட்டிற்றிலர்; 'படுபுலவர்' என்பது காலவுருபு தொக்க வினைத்தொகை யாதலின் அம்

முதனிலைச் சொல்லைப் பட்டபுலவர் என ஒரு காலங் காட்டுமாறு விரித்தல் கூடாமையின் அது முதனிலைச் சொல்லாகவே நிற்றல் வேண்டும் என்பது ஆசிரியர் கருத்தாம் *(482:6,7)* சொல். *415* நச்சினார்க்கினியர் உரையுள்ளும் காண்க.

*4.* 'பற்றப்பட்ட' என விரித்தற்கேற்ற இரண்டு முதனிலைகளைச் சுட்டுதல் இயலாது என்பதும் ஆசிரியர்க்கு வேற்றுமைப் பொருள்பட விரித்தல் கருத்தன்மையைக் காட்டும்.

'மறையிறந்து மன்று படும்' (குறள் *1138*), 'போற்றினும் பொத்துப்படும்' (ஷை *468*) 'சொற்பொருள் சோர்வு படும்' (ஷை*1046*) - இவை பெயர்ப்பின் 'படு' வந்தன; 'துன்பங்கள் சென்று படும்' (ஷை *1045*) - இது வினையெச்சத்தின்பின் படு. இவை யிரண்டன் பின்னரும், 'படும்' உண்டாம் என்றே வேறு பொருள்பட்டதென்க. 'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' என்பதும் அது. (இ.கொ. *78:10, 11* உரை)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*317.* **இலமென் கிளவிக்குப்.......செய்யு ளான.**

இஃது அல்வழி முடிபாயின், 'அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்' *(315)* என்ற முற்சூத்திரத்தால் இச் செய்கையும் பெறப்படுமாதலின், இச்சூத்திரம் வெற்றெனத் தொடுத்ததாக முடியும். அன்றியும் 'படர்க்கைப் பெயரும்' *(321)* 'உயர்திணை யாயின்' *(325)* என்பன வேற்றுமைப் புணர்ச்சியைக் கூறுதலின், 'அல்வழி யெல்லாம்' *(315)* என்றதன் பின்னர் வந்த சூத்திரங்கள் எல்லாம் அல்வழியைப் பற்றியன எனக்கூறுதல் இயையாது. 'இலம்படு' என்ற பகுதி வேற்றுமைப் புணர்ச்சியாகும் என இளம்பூரணர் கூறினரேயன்றி, 'படுபுலவர்' என்ற பகுதி வேற்றுமைப் புணர்ச்சியாகும் எனக்கூறிற்றிலர். ஆகலின் 'இலம்படு' என்பது இளம்பூரணர் கூறியவாறே வேற்றுமைப் புணர்ச்சி யாகும்.

***317.*** [நச்சினார்க்கினியர் 'இலம்படு' என்னும் புணர் நிலையை அல்வழியாகக் கொண்டார். அல்வழிமுடிபாயின் 315ஆம் சூத்திரவிதியால் பெறப்படுதலின், இச்சூத்திரம் வெற்றெனத் தொடுத்தலாய் முடியும் என்றார் இவ்வுரைகாரர்.

சூத்திரம் 315 முதல் 320 முடிய அல்வழி பற்றியன. அல்வழியதிகாரம் ஆறு சூத்திரங்களில் தொடர்ந்தது.

ஆசிரியர் உரிச்சொல்லை விதந்தோதியே முடிப் பாராதலின் இவ்வுரிச்சொற்புணர்நிலை கிளந்தோதப்பட்டது. 'அல்வழி யெல்லாம்' என்னும் பொதுச் சூத்திரத்தான் இம்முடிபு செல்லாது என்றே கொள்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**316. இலமென் கிளவிக்குப் .......செய்யு ளான.**

இலம் என் கிளவி - வறுமையென்னும் பொருளின தாகிய, ஈறு 'பாடு' கெட்ட இலம் என்னும் உரிச்சொல்.

இலம்பாடு என்னும் இச்சொல், புலப்பாடு வாய்பாடு கடப்பாடு - என்பவற்றைப் போல, விகுதியொடு கூடி நின்றல்லது பொருளுணர்த்தற்கு ஏலாது எனினும், நல்லிசைப் புலவோர் இலம்பாடு என்னும் சொற்குரிய வறுமை என்னும் பொருளில், பாடு என்னும் இறுதிநிலையின்றி இலம் என்னும் முதனிலையை மட்டும் கொண்டு செய்யுளின்கண் ஆளுதலை நோக்கி, ஆசிரியர் அதனை நிறுத்த சொல்லாக வைத்து இவ்விதி கூறினாராவார்.

இலம்படு என்பது இன்மையானது உற்ற என அல்வழியாகவும், இன்மையை உற்ற என வேற்றுமை யாகவும் பொருள் விரிதலின், இடம் நோக்கிப் பொருள் கொள்க.

**இளம்பூரணம்**

**318. 'ஆயிரம்' ஒத்த எண்ணோடு அத்துப் பெற்று முடிதல்**

**அத்தொடு சிவணும் ஆயிரத்து இறுதி**
**ஒத்த எண்ணு முன்வரு காலை.**

இச்.......எனின், இவ்வீற்று எண்ணுப் பெயருள் ஒன்றற்குத் தொகைமரபினுள் (22) எய்திய ஏ-என் சாரியை விலக்கி அத்து வகுத்.....ற்று.

(இ-ள்.) ஆயிரம் என்னும் எண்ணுப்பெயரின் மகரமெய், தனக்கு அகப்படுமொழியாய்ப் பொருந்தின எண்ணுப்பெயர் தன்முன் வருங்காலத்து, தொகைமரபிற் கூறிய ஏ என்சாரியை ஒழித்து அத்துச்சாரியை பொருந்தி முடியும் எ-று.

(உ-ம்.) ஆயிரத்தொன்று ஆயிரத்திரண்டு மூன்று நான்கு என ஒட்டுக.

நிலைமொழி முற்கூறாது சாரியை முற்கூறிய அதனான், இதன் முன்னர்க் குறை - கூறு - முதல் - என வந்தவழியும், இம்முடிபு கொள்க.

(உ-ம்.) ஆயிரத்துக்குறை கூறு முதல்-என ஒட்டுக.[1] (22).

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***318.*** 1) குறை முதலியன கருத்துவகையான் ஆயிரத்துக்கு அகப்பட்ட எண்ணைக் குறிப்பனவாதல் கொள்ளப்படும். முதல்-ஈண்டு முதற்கூற்றினைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**நச்சினார்க்கினியம்**

***317. ஆயிரம் ஒத்த எண் வருவழி அத்துப்பேறு***

**அத்தொடு சிவணும் ஆயிரத்து இறுதி**
**ஒத்த எண்ணு முன்வரு காலை.**

இஃது இவ்வீற்று எண்ணுப் பெயருள் ஒன்றற்குத் தொகைமரபினுள் உயிரும் புள்ளியும் இறுதி யாகி (164) என்பதனான் எய்திய ஏயென் சாரியை விலக்கி அத்து வகுக்கின்றது.

*(இ-ள்.) ஆயிரத்து இறுதி - ஆயிரம் என்னும் எண்ணுப் பெயரின் இறுதி மகரம்[1], ஒத்த எண்ணு முன்வருகாலை - தனக்கு அகப்படும் மொழியாய்ப் பொருந்தின எண்ணுப் பெயர் தன்முன் வருங்காலத்து; அத்தொடு சிவணும் - தொகை மரபிற் கூறிய ஏயென் சாரியை ஒழித்து அத்துச்சாரியை யொடு பொருந்தி முடியும் எ-று.*

*(உ-ம்.) ஆயிரத்தொன்று ஆயிரத்தொன்பது என ஒன்று முதல் ஒன்பதின்காறும் ஒட்டுக. மகரத்தை அத்தின்மிசை ஒற்று என்று கெடுத்து (133), 'அத்தின் அகரம் அகரமுனை இல்லை' (125) என்று முடிக்க[2] ஆயிரத்தொருபது என்றாற் போல்வனவற்றிற்கும் ஒட்டுக.*

*நிலைமொழி முற்கூறாததனான், ஆயிரத்துக்குறை கூறு முதல் என்பனவும் கொள்க[3]. இன்னும் இதனானே, ஆயிரப்பத்து என்புழி மகரம் கெடுத்து வல்லொற்று மிகுத்து முடிக்க.* *(22)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***317.*** **1. 'ஆயிரம் என்னும் மகரவீற்றுச் சொல்' என்றிருப்பின் சிறக்கும் என்பர் சாத்திரியார். மகரம் அத்தொடு சிவணும் என்று முடிப்பினும் குற்றமின்று.**

**2. ஆயிரம் + அத்து + ஒன்று > ஆயிர + அத்து + ஒன்று > ஆயிர + த்து + ஒன்று > ஆயிரத்து + ஒன்று = ஆயிரத்தொன்று (105)**

**3. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.**

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***318.*** **அத்தொடு சிவணும்.....முன்வரு காலை.**

*ஆயிரத்திறுதி என்றதற்கு ஆயிரம் என்னும் எண்ணுப் பெயரின் மகரம் எனப் பொருள் கூறினர் உரைகாரர். பலவற்றிறுதி (221) என்றவிடத்தில் பல என்னும் அகர ஈற்றுச்*

சொல் எனப்பொருள் கூறியதுபோல, ஈண்டும் ஆயிரம் என்னும் மகரவீற்றுச் சொல் எனப் பொருள் கூறியிருப்பின் பொருந்தும்.

**3/8.** [ஆயிரம் என்னும் மகரஈற்றுச்சொல் என்ற பொருளே அத்தொடு சிவணும் என்னும் பயனிலைக்கு மிகப் பொருந்தும். சாத்திரியார் கூற்று ஏற்புடைத்தே. நிலைமொழி யீற்றெழுத்துச் சாரியையொடு பொருந்துவதாகக் கூறுவதன் கண் தவறின்று.]

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**3/7. அத்தொடு சிவணும்......முன்வருங் காலை.**

ஆயிரத்துக்குறை ஆயிரத்துக்கூறு ஆயிரத்து முதல் - என்பன காட்டுதல் ஈண்டமையாது, குறை முதலியன எண்ணுப்பெயர் அன்மையின்,

ஆயிரம் என்பது ஸஹஸ்ரம் என்பதன் திரிபு எனத் தோன்றுகிறது.

**3/7.** [குறை கூறு என்பன எண்ணுப்பெயரல்ல ஆயினும் கருத்துவகையான் 'அகப்பட்ட' எண்ணினைக் குறிப்பன வாதலின் ஈண்டு ஆயிரத்துக்குறை முதலியவற்றை எடுத்துக் காட்டினர் உரையாளர். ஆயிரத்து முதல் என்புழி, 'முதல்' முற்பட்ட கூற்றினைக் குறிக்கும் எனக்கொள்ளலாம்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**3/7. அத்தொடு சிவணும்.....முன்வரு காலை.**

நச்சினார்க்கினியர் ஆயிரத்துக் குறை கூறு என்பவற்றை ஈண்டே இலேசினான் முடித்துக்கொள்க என்றார். ஆசிரியர் வருமொழியை விதந்து கூறியுள்ளமையான் அவர்கருத்து ஒவ்வாதென்க. ஆயிரத்துக்குறை என்பது ஆயிரமும் அதனுடைய குறையும் எனப்பொருள் தருதலின் அஃது அல்வழி முடிபாய் அத்துச்சாரியை பெற்றதென்க.

*317.* ['வேற்றுமை முடிபாய்' எனப் பிழைபட அச்சிற்கண்டது அல்வழி முடிபாய் எனத் திருத்தப் பட்டுள்ளமை காண்க. குறை கூறு என்பன கருத்துவகையான் 'தம்மகப்பட்ட' எண்ணை உணர்த்தக்கூடும். ஆயிரத்தினது குறை ஆயிரத்துக்குறை, (இது கலத்துக்குறை போல்வது அன்று) இவ்வேற்றுமை முடிபினை நச்சினார்க்கினியர், "இலேசினான் முடித்துக்கொள்க" என்றற்கண் முரண் பாடில்லை என்க.]

## இளம்பூரணம்

### 319. *'ஆயிரம்' அடையடுத்து வரினும் அற்றாதல்*

**அடையொடு தோன்றினும் அதன்ஓ ரற்றே.**

இச்....எனின், அவ்வெண்ணுப்பெயர் அடை யடுத்தவழி முடியுமாறு கூறு.....ற்று.

(இ-ள்.) அவ்ஆயிரம் என்னும் எண்ணுப்பெயர் அடையடுத்த மொழியொடு தோன்றினும், மேற்சொன்னத னோடு ஒருதன்மைத்தாய் அத்துப்பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) பதினாயிரத்தொன்று இரண்டு - என ஒட்டுக. மேல் *(22)* இலேசினான் வந்தனவும் அடையடுத்து ஒட்டுக.

(உ-ம்.) பதினாயிரத்துக் குறை கூறு முதல் - என வரும். *(23)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*319.* 1) பத்து + ஆயிரம் = பதினாயிரம் என 436ஆம் சூத்திர விதியான் முடிந்தது.

## நச்சினார்க்கினியம்

### 318. *'ஆயிரம்' அடையொடு புணரினும் அற்றாதல்*

**அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே.**

இஃது 'அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய' (110) என்றமையின், அவ்வெண்ணுப்பெயரை அடையடுத்து முடிக்கின்றது.

(இ-ள்.) அடையொடு....ஓரற்று - அவ்வாயிரம் என்னும் எண்ணுப்பெயர் அடையடுத்த மொழியொடு வரினும், முற்கூறியதனோடு ஒரு தன்மைத்தாய் அத்துப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) பதினாயிரத்தொன்று இரண்டு - இருபதினாயிரத்தொன்று ஆறாயிரத்தொன்று நூறாயிரத்தொன்று முந்நூறாயிரத்தொன்று ஐந்நூறாயிரத்தொன்று என ஒட்டுக.

முன்னர் இலேசினான் முடிந்தவற்றையும் அடையடுத்து ஒட்டுக. பதினாயிரத்துக்குறை கூறு-முதல் எனவும், நூறாயிரப்பத்து எனவும் வரும். (23)

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**318.** **அடையொடு தோன்றினும் அதனே ரற்றே.**

இது மேற்கூறிய எண்ணுப்பெயர்க்குச் சிறப்பு விதியாகலின், பதினாயிரத்துக்குறை புறம் கூறு முதல். என்று வருதலை உரையாளர் ஈண்டுக் காட்டுதல் பொருந்தாது.

**318.** [மேற்கூறிய அமைதியை ஈண்டும் கொள்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**318.** **அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே.**

மற்றிஃது 'அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய' (110) என்பதனான் அடங்காதோ எனின், எண்ணுப் பெயர் அடையடுத்து வரின் பொருள் வேறாகி நிற்கும் ஆதலின் அடங்காது. ஆதலின் இச்சூத்திரம் வேண்டும் என்க. ஓராயிரத்தொன்று என்புழி அடை வந்தமையான் பொருள் வேறுபாட்டிலதாயினும் இனம்சுட்டி நிற்றலான் ஓராற்றான் வேறுபட்டதென்க.

*318.* [சூ. 239 உரையுள் இவ்வுரைகாரர், "உரையாசிரியன்மார் அடையடுத்துவரினும் பிறபொருட்பெயர் வரினும் இவ்விதி கொள்க என்பர். அடையடுப்பினும் புணர்வது இகர ஈறே ஆதலின் அது வேண்டா கூறலாம்" எனக் குறிப்பிட்டார். "எண்ணுப்பெயர் அடையடுத்து வரின் பொருள் வேறாகி நிற்குமாதலின் இச்சூத்திரம் வேண்டு மென்க" என்று இச்சூத்திரவுரையுள் இவர் அமைதி கூறியது முன்னர்த் தாம் வரைந்ததனொடு மாறாதல் காண்க.]

## இளம்பூரணம்

### *320. ஆயிரம் அளவுநிறைப் பெயர்களொடு முடியுமாறு*

**அளவும் நிறையும் வேற்றுமை இயல.**

இச்.....எனின், அவ்வெண்ணின் முன்னர் அளவுப் பெயர் நிறைப்பெயர் வந்தால் முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* ஆயிரத்துமுன் அளவும் நிறையும் வந்தால், இவ்வீற்று வேற்றுமை இயல்பாய் *(15)* மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஆயிரக்கலம் சாடி தூதை பானை - எனவும், ஆயிரக்கழஞ்சு தொடி பலம் - எனவும் ஒட்டுக.

இன்னும் இம்மாட்டேற்றானே, மேல் 'துவர' *(15)* என்ற இலேசினான் இயல்புகணத்துக்கண் கேடு எய்திய மகரம், ஈண்டும் கெடுத்துக் கொள்க.

*(உ-ம்,)* ஆயிர நாழி வட்டி அகல் - என வரும்.

பதினாயிரக்கலம் என்றாற்போல அடையடுத்து வந்த வழியும் ஒட்டுக. *(24)*

## நச்சினார்க்கினியம்

### *319. அளவும் நிறையும் வருவழி ஆயிரம் முடியுமாறு*

**அளவும் நிறையும் வேற்றுமை இயல.**

இஃது அவ்வெண்ணின் முன்னர் அளவுப் பெயரும் நிறைப்பெயரும் வந்தால் முடியுமாறு கூறுதலின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) அளவும்.....இயல - அதிகாரத்தான் ஆயிரம் தானே நின்றுழியும் அடையடுத்து நின்றுழியும், அளவுப் பெயரும் நிறைப்பெயரும் வந்தால், மகர ஈற்று வேற்றுமை யோடு ஒத்து, வல்லெழுத்து வந்துழி மகரம் கெட்டு வல்லெழுத்துமிக்கும், இயல்புகணம் வந்துழித் 'துவர' (310) என்னும் இலேசான் எய்திய மகரம் கெட்டும் புணரும் எ-று.

(உ-ம்.) ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் என நிறுத்தி, கலம் காடி தூதை பானை மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கஃசு கழஞ்சு தொடி துலாம் பலம் எனவும் தந்து ஒட்டுக.

'வேற்றுமை யியல' எனவே, தாம் வேற்றுமையல்ல வாயின[1]. (24)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***319.*** 1. 'வேற்றுமை யியற்கை' எனவே, இவை வேற்றுமை யல்லவாயின என்று 166ஆம் சூத்திரவுரையுள்ளும் குறித்தார்.

## இளம்பூரணம்

### *321. படர்க்கை முன்னிலைப் பெயர்களும், தொடக்கம் குறுகும் பெயர்களும் வேற்றுமைக்கண் முடியுமாறு*

**படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்**
**தொடக்கும் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்**
**வேற்றுமை யாயின் உருபுஇயல் நிலையும்**
**மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.**

இச்...எனின், இவ்வீற்றுள் சில உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் உருபியலுள் முடிந்தவாறே. ஈண்டுப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் முடியும் எனக் கூறு....ற்று.

(இ-ள்.) எல்லாரும் என்னும் படர்க்கைப் பெயரும், எல்லீரும் என்னும் முன்னிலைப் பெயரும், ஒருமொழி முதல்குறுகி முடியும் தாம்-நாம்-யாம்-என்னும் பெயரும், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணாயின், உருபு புணர்ச்சிக்கண் சொன்ன இயல்பின்கண்ணே நின்று, சாரியை பெறுவன ஈறுகெட்டு இடையும் ஈறும் சாரியை பெற்றும்,நெடுமுதல் குறுகுவன நெடுமுதல் குறுகியும் முடியும். அந்நெடுமுதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிகும் எ-று.

(உ-ம்.) எல்லார்தங்கையும் எல்லீர்நுங்கையும் செவியும் தலையும் புறமும் - எனவும், தங்கை நங்கை எங்கை செவி தலை புறம் - எனவும் ஒட்டுக.

'வேற்றுமையாயின்' என்றதனான், படர்க்கைப் பெயர்க்கும் முன்னிலைப் பெயர்க்கும் இயல்புகணத்து ஞகரமும் நகரமும் வருவழி, தம்முச் சாரியையும் நும்முச் சாரியையும் ஈறு கெடுதல் கொள்க.

'ஆவயினான' என்றதனான். படர்க்கைப் பெயர்க்கும் முன்னிலைப் பெயர்க்கும் ஞகரமும் நகரமும் வந்துழி அவை மிகுதலும், தொடக்கம் குறுகும் பெயர்க்கும் ஞகரமும் நகரமும் வஞ்துழி மகரம் கெட்டு அவை மிகுதலும் கொள்க.

(உ-ம்.) எல்லார் தஞ்ஞாணும் எல்லீர்நுஞ்ஞாணும் நூலும்- எனவும், தஞ்ஞாண் நஞ்ஞாண் எஞ்ஞாண் நூல் எனவும் வரும்.

இன்னும் 'ஆவயினான' என்றதனான், படர்க்கைப் பெயரும் முன்னிலைப்பெயரும் சாரியை பெறாது இறுதி உம்முப்பெறுதலும் கொள்க.[1]

இன்னும் அதனானே, உருபீற்றுச் செய்கை யெல்லாம் கொள்க.

(உ-ம்.) தமகாணம் - என வரும். அகர உருபு கொடுத்து முடித்தவாறு[2]. (25)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*321.* 1) எல்லார்ஞாணும் எல்லீர்ஞாணும் - எனக் காண்க.

2) தம்+அ+காணம் = தமகாணம்; 162ஆம் சூத்திர விதியான் குற்றொற்று உயிர்வருமிடத்து இரட்டாது முடிந்தது. தம்முடைய காணம் என ஆறாவதன் உடைமைப் பொருள் விரியும்.

**நச்சினார்க்கினியம்**

***320. இவ்வீற்றுப் படர்க்கை முன்னிலை ப் பெயர்களும் தாம் நாம் யாம் - என்பனவும் முடியுமாறு***

**படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்**
**தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்**
**வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்**
**மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.**

இஃது உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் உருபியலுள் முடிந்தவாறே ஈண்டுப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் முடிக என எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) படர்க்கைப்....பெயரும் - எல்லாரும் என்னும் படர்க்கைப் பெயரும் எல்லீரும் என்னும் முன்னிலைப் பெயரும் (191), தொடக்கம்......கிளவியும் - கிளைத் தொடர்ச்சிப் பொருளவாய் நெடுமுதல் குறுகி முடியும் தாம் நாம் யாம் என்னும் பெயராகிய நிலைமையையுடைய சொல்லும் (188); வேற்றுமை.....நிலையும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணாயின், உருபு புணர்ச்சிக்குக் கூறிய

இயல்பின்கண்ணே நின்று முடியும்; ஆவயினான மெல்லெழுத்து மிகுதல் - மேல் நெடுமுதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

எல்லாரும் என்பதனை மகரஒற்றும் உகரமும் கெடுத்து ரகரப் புள்ளியை நிறுத்தி, கை செவி தலை புறம் எனத் தந்து, இடையிலே தம்முச்சாரியையும் இறுதியிலே உம்முச் சாரியையும் கொடுத்து, எல்லார்தங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க. இதற்கு 'அம்மின் இறுதி' (124) என்னும் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனான் பிற சாரியைக்கண் மகரஒற்றுத் திரிந்து 'ஙஞந ஆகும்' எனச் செய்கை செய்து முடிக்க.

எல்லீரும் என்பதற்கு இடையிலே நும்முச்சாரியையும் இறுதியிலே உம்முச்சாரியையும் கொடுத்து, முற்கூறிய செய்கைகள் எல்லாம் செய்து, எல்லீர் நுங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க.

தாம் நாம் என்பனவற்றை 'ஏனை யிரண்டும் நெடுமுதல் குறுகும்' (118) எனக் குறுக்கி, 'மகர இறுதி' என்பதன்கண் (310) மகரம் கெடுத்துத் தங்கை நங்கை செவி தலை புறம் என முடிக்க. யாம் என்பதனை ஆகாரத்தை எகரமாக்கி, யகர ஒற்றைக்கெடுத்து, 'மகர இறுதி' என்பதன்கண் 'துவர' என்றதனான் மகரம் கெடுத்து, எங்கை செவி தலை புறம் என முடிக்க. தொடக்கம் குறுகுவனவற்றிற்கு இச்சூத்திரத்தான் மெல்லெழுத்து மிகுக்க.

'உருபியல் நிலையும்' என்றதனான், வேற்றுமையாதல் பெறாநிற்கவும், பின்னும் 'வேற்றுமையாயின்' என்ற மிகையானே, படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் இயல்புகணத்து ஞகாரமும் நகாரமும் வந்துழித் தம்முச் சாரியையும் நும்முச்சாரியையும் பெறுதலும், மகரம் கெட்டு உம்முப் பெறுதலும், 'ஆவயினான' என்றதனான் ஒற்று இரட்டுதலும் கொள்க.

எல்லார்தஞ்ஞாணும் - எல்லீர்நுஞ்ஞாணும் நூலும் எனவரும்.

இன்னும் 'ஆவயினான' என்றதனானே, எல்லார்தம் எல்லீர்நும் என நின்றவற்றின் முன்னர், ஏனை மணி யாழ் வட்டு அடை என்பன வந்துழி மகரம் கெடாமையும் உம்முப் பெறுதலும் கொள்க.

இன்னும் இதனானே, தொடக்கம் குறுகுவன வற்றிற்கும் தம்மணி யாழ் வட்டு அடை என மகரம் கெடாமையும் கொள்க.

இன்னும் இதனானே, தமகாணம் நமகாணம் எமகாணம் நுமகாணம் என உருபீற்றுச் செய்கைகளும்[1] கொள்க.

இன்னும் இதனானே, நும் என்பதற்கு மகரத்தை மெல்லொற்றாக்கி, நுங்கை செவி தலை புறம் என வருதலும், நுஞ்ஞாண் என ஒற்றிரட்டுதலும், நும்வலி என மகரம் கெடாது நிற்றலும் கொள்க.[2]

இன்னும் இதனானே, எல்லார்கையும் எல்லீர்கையும் எனத் தம்மும் நும்மும் பெறாது நிற்றலும் கொள்க. *(25)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***320.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. 325ஆம் சூத்திரவுரையில் இவ்வுதாரணங்கள் காட்டப் படுதலானும், ஆண்டுக் குறிப்பிடுதலே பொருத்தமாத லானும் இப்பகுதி இடைச்செருகலெனக் களைக. சாத்திரியார் சுட்டும் குறிப்பு இது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***321.*** **படர்க்கைப் பெயரும்.....ஆவயி னான.**

தொடக்கம் என்றதற்கு நெடுமுதல் எனப் பொருள் கூறினர் உரைகாரர். அவ்வாறாயின், தாம் நாம் என்பனவே கொள்ளப்படுமன்றி, யாம் என்பது கொள்ளப்படாததாகும். அதற்கு ஆரம்பம் எனப் பொருள் கொளல் சாலும்.

'அம்மின் இறுதி' (130) என்னும் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனான் பிறசாரியைக்கண் மகரவொற்றுத் திரிந்து 'ஙஞந ஆகும்' எனச் செய்கை செய்து முடிக்க என்றார் நச்சினார்க்கினியர். எல்லார்தங்கையும் போன்றவிடத்துத் தம் முதலியன சாரியையாகக் கொள்ளப்படினும், அச்சூத்தி ரத்தில் 'மெய்திரிந்து' எனக் கூறப்பட்டமையானும், இச்சூத்திரத்தில் மெல்லெழுத்து மிகும் எனக் கூறப்பட்டமை யானும் அவர்தம் கூற்றுப் பொருந்தாது என்க.

"'உருபியல் நிலையும்' என்றதனான் வேற்றுமையாதல் பெறாநிற்கவும், பின்னும் வேற்றுமையாயின் என்ற மிகையானே......" என்றார் நச்சினார்க்கினியர். அவ்வாறு அவர் கூறியதற்குக் காரணம் உருபுபுணர்ச்சியை வேற்றுமைப் புணர்ச்சியாக அவர் கொண்டதே ஆம். உருபு புணர்ச்சியை ஓரிடத்தும் ஆசிரியர் வேற்றுமைப் புணர்ச்சி எனக் கூறாமையின் 'உருபியல் நிலையும்' என்றதனான் வேற்றுமையாதல் பெறுதலின்று.

நச்சினார்க்கினியர் உரையுள், "இன்னும் இதனானே, நும் என்பதற்கு மகரத்தை மெல்லொற்றாக்கி நுங்கை - செவி- தலை-புறம் என வருதலும், நுஞ்ஞாண் என ஒற்றிரட்டுதலும், நும்வலி என மகரம் கெடாது நிற்றலும் கொள்க" என உளது. இதனை 'நும்மெனும் ஒருபெயர்' (326) என்ற சூத்திரத்தில் நச்சினார்க்கினியர் கூறியிருக்கின்ற மையான், ஈண்டு அஃது இடைச்செருகல் என்பது திண்ணம்.

**321.** [யாம் என்பதன்கண் நெட்டுயிரே முதலில் உள்ளது என்று கோடற்கண் இழுக்கில்லை. அவ் ஆகாரநெட்டுயிர் (இனமொத்த அகரக் குற்றுயிராகத் திரியாது) எகரக் குற்றுயி ராகத் திரிந்தது என்க. யகர ஒலிக்கும் எகர ஒலிக்குமிடையே பிறப்பிட ஒற்றுமை யுண்மையானன்றே 'யாது' எது எனவும் 'யாவன்' எவன் எனவும் திரியலாயின?

'உயர்திணை யாயின் நம்மிடை வருமே' (325) என்னும் சூத்திர விதியான் 'எல்லா நங்கையும்' என முடியுமிடத்து, நம்முச்சாரியை இறுதி மகரம் வகர மெல்லெழுத்தாகத் திரிந்து நிற்றதற்கு இவ்வுரைகாரர் நச்சினார்க்கினியருரையையே பின்பற்ற வேண்டும். ஆண்டு 'மெல்லெழுத்து' மிகுதல் இல்லை என்க.

உருபுபுணர்ச்சியை நச்சினார்க்கினியர் வேற்றுமைப் புணர்ச்சியாக மயங்கினார் என்கிறார் இவ்வுரையாளர். உருபியல் நிலையும் சொற்கள் உரிய சாரியைப் பேற்றொடு பொருட்புணர்ச்சி பெறும் என்பதே நச்சினார்க்கினியர் கூறிய மெய்யுரை. அதனைத் தாம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சியே பெறும்; சாரியைப் பேறு நீங்கிய வழியே அல்வழி முடிபு பெறும் என்க.

இவர் நச்சினார்க்கினியர் உரையுள் இடைச்செருகல் எனக் குறித்த செய்தி சாலப் பொருந்தும்.

நச்சினார்க்கினியர் உரையுள் உருபியல் நிலையும் என வந்த புணர்ச்சியெல்லாம் வேற்றுமைப் பொருட்புணர்ச்சியே என்பது உயிர்மயங்கியல் 18, 51, 61, 79, 92 புள்ளி மயங்கியல் 27, 29, 63 குற்றியலுகரப் புணரியல் 17ஆம் சூத்திரங்களால் தெளியலாம்.]

## இளம்பூரணம்

**322. *மேலனவற்றின் அல்வழி முடிபு***

**அல்லது கிளப்பின் இயற்கை ஆகும்.**

இச்.....எனின், மேலனவற்றிற்கு அல்வழி முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) மேற்கூறிய படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவியும் அல்வழியைச் சொல்லுமிடத்து இயல்பாய் முடியும் எ-று.

ஈண்டு இயல்பு என்றது சாரியை பெறாமை நோக்கி[1], இவற்றின் ஈறு திரிதல்[2] 'அல்வழி எல்லாம்' (19) என்பதனுள் 'எல்லாம்' என்னும் இலேசினாற் கொள்க.

(உ-ம்.) எல்லாருங் குறியர் சிறியர் தீயர் பெரியர் - எனவும், எல்லீருங் குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் - எனவும், தாங்குறியர் சிறியர் தீயர் பெரியர் - எனவும், தாங்குறிய சிறிய தீய பெரிய - எனவும், நாங்குறியம் சிறியம் தீயம் பெரியம் - எனவும், யாங் குறியேம் சிறியேம் தீயேம் பெரியேம் - எனவும் வரும்.

இன்னும் 'எல்லாம்' என்னும் இலேசினானே, இவ்வீற்றுக்கண் மென்கணத்து மகரம் ஒழிந்தன வந்தவழி, மகரம் அவ்வொற்றாய்த் திரிதலும் கொள்க.[3]

(உ-ம்.) எல்லாருஞ் ஞான்றோர் நீண்டார் - எனவும், எல்லீருஞ் ஞான்றீர் நீண்டீர் - எனவும், தஞ் ஞான்றார் நீண்டார்-எனவும், தாஞ்ஞான்ற நீண்ட எனவும், நாஞ் ஞான்றாம் நீண்டாம் - எனவும், யாஞ் ஞான்றேம் நீண்டேம் - எனவும் கொள்க. (26)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*322.* 1) சாரியை பெறாமையை ஆசிரியர் இயற்கை யாகும் என்றமை 164, 188ஆம் சூத்திரங்களிலும் காண்க.

2) இவற்றின் ஈறு முற்றும்மை யாதலின், 'அம்' சாரியையது ஈற்று மகரம் போல (130) வன்கணம் வருமிடத்து (கசத)த்திரியும் என்றார்.

3) மகரம் அவ்வொற்றாய்த் திரியும் என்னாது, மகரம் கெட மென்கணத்து ஞகர நகரங்கள் மிகும் என்று உரையாசிரியர் சொல்லியிருப்பின் சிறக்கும், 326ஆம் சூத்திர விதிக்கேற்ப.

## நச்சினார்க்கினியம்

### 321. அப்பெயர்கள் அல்வழிக்கண் முடியுமாறு

**அல்லது கிளப்பின் இயற்கை ஆகும்.**

இது முற்கூறிய மூன்று பெயர்க்கும் அல்வழிமுடிபு கூறுகின்றது.

(இ-ள்.) அல்லது......ஆகும் - அம்மூன்று பெயரும் அல்வழியைச் சொல்லுமிடத்து இயல்பாய் முடியும் எ-று.

ஈண்டு 'இயற்கை' என்றது, சாரியை பெறாமை நோக்கி[1]. இவற்றின் ஈறு திரிதல் 'அல்வழி யெல்லாம்' (314) என்பதனுள் 'எல்லாம்' என்றதனாற் கொள்க.[2]

(உ-ம்.) எல்லாருங் குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், எல்லீரும் குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் எனவும், தாங்குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், தாங்குறிய சிறிய தீய பெரிய எனவும், நாங்குறியம் சிறியம் தீயம் பெரியம் எனவும், யாங்குறியேம் சிறியேம் தீயேம் பெரியேம் எனவும் வரும்.

இன்னும் 'எல்லாம்' (314) என்றதனானே, இவற்றின் முன்னர் ஞகாரம் நகாரம் வந்தால், அவை அவ்வொற்றாய்த் திரிதல் கொள்க.[3]

எல்லாருஞ்ஞான்றார் நீண்டார் - எல்லீருஞ் ஞான்றீர் நீண்டீர் - எனவும், தாஞ்ஞான்றார் நீண்டார் எனவும், நாஞ்ஞான்றாம் நீண்டாம் எனவும், யாஞ்ஞான்றேம் நீண்டேம் எனவும் வரும்.

இனி, எல்லோரும் வந்தார் யாத்தார் அடைந்தார் - எல்லீரும் வந்தீர் யாத்தீர் அடைந்தீர் - எனவும், தாம் வந்தார் யாத்தார் அடைந்தார் எனவும், நாம் வருதும் யாத்தும் அடைதும் - யாம் வருவேம் யாப்பேம் அடைவேம் எனவும் ஏனைக்கணங்களின் முன்னர் மகரம் திரியாது நிற்றல் 'உயிரீறாகிய உயர்திணைப்பெயரும்' (153) என்பதனான் முடியும். (26)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***321.*** *1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.*

*2. ஈற்று மகரம் கெட மெல்லெழுத்து மிகும் என்று நச்சினார்க்கினியர் கூறியிருப்பின், 325ஆம் சூத்திரத்திற்கு ஏற்ப அமைதலின், சிறக்கும் எனத் தோற்றுகிறது.*

*3. மேற்குறித்தவாறே ஈண்டும், அவை ஈற்று மகரம் கெட வருமொழி மெல்லெற்று மிகுதல் கொள்க என்று இத்தொடர் இருந்திருப்பின் சிறக்கும்.*

**இளம்பூரணம்**

***323. எல்லாம் எனும் பெயர் இருவழியும் முடியுமாறு***

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லாம் எனும்பெயர் உருபியல் நிலையும்**
**வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது.**

இச்.....எனின், இதுவும் அவ்வீற்று விரவுப்பெயருள் ஒன்றற்கு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் உருபியலொடு மாட்டெறிந்து முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமைப் பொருட் புணர்ச்சியிடத்தும், எல்லாம் என்னும் விரவுப்பெயர் உருபுபுணர்ச்சியின் இயல்பிலே நின்று வற்றுச் சாரியையும் இறுதி உம்முச்சாரியையும் பெற்று முடியும். அப்பெயர் வேற்றுமை அல்லாதவிடத்துச் சாரியை பெறுதல் நிலையாதாயே முடியும் எ-று.

மாட்டேறு ஏலாத அல்வழியினையும் உருபியலொடு மாட்டெறிந்து விலக்கிய மிகுதியான், வன்கணத்து இறுதி உம்மைப் பேறும் நிலைமொழி மகரக்கேடும் வருமொழி வல்லெழுத்துப்பேறும், மென்கணத்து மகரக் கேடும், பண்புத் தொகைக்கண் மகரக்கேட்டோடு இறுதி உம்முப்பேறும் கொள்க.

(உ-ம்.) எல்லாக் குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் - எனவும், எல்லாவற்றுக் கோடும் செவியும் தலையும் புறமும் - எனவும், எல்லா ஞான்றன நீண்டன மாண்டன-எனவும், எல்லா ஞாணும் நூலும் மணியும் யாப்பும் வலிமையும் அடையும் ஆட்டமும் - எனவும், எல்லாவற்று ஞாணும் நூலும் மணியும் யாப்பும் வலிமையும் அடையும் ஆட்டமும் - எனவும் வரும்.

எல்லாக் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் - என உயர்திணைக்கண்ணும் ஒட்டுக.[1]

ஈண்டுச் சாரியை பெற்றவழி மகரக்கேடு வற்றின் மிசை ஒற்றாய்க் கெட்டது. இது விரவுப்பெயர் ஆகலின், ஈற்றுப் பொது முடிபிற்கு (15) ஏலாதென்று சாரியை வல்லெழுத்துக் கொள்ளப்பட்டது.[2] (27)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*323.* 1) 325ஆம் சூத்திரவுரையுள் இடம்பெற வேண்டும் இவ்வாக்கியம் இடைச்செருகல் என விலக்கற்பாலது, அஃறிணை முடிபே ஈண்டுக் கூறப்பட வேண்டுதலின்.

2) வற்றுச் சாரியை பெறுதலும், மகரம் கெடுதலும் முறையே 190, 134ஆம் சூத்திர விதியாற் கொள்க.

விரவுப்பெயரை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பா ராதலின், ஈற்றுப் பொது முடிபு (311) ஈண்டு ஏலாது; வற்றுச் சாரியைக்குரிய இறுதி வல்லெழுத்துக் கொள்ளப்பட்டது (எல்லாம்+கோடு> எல்லாம்+வற்று+கோடு> எல்லா வற்றுக்கோடு+உம் = எல்லாவற்றுக்கோடும்)

**நச்சினார்க்கினியம்**

***322. எல்லாம் இருவழியு முடியுமாறு***

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லாம் எனும்பெயர் உருபியல் நிலையும்**
**வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது.**

இஃது இவ்வீற்றுள் விரவுப்பெயர் ஒன்றற்கு அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும் உருபியலொடு மாட்டெறிந்து எய்தாதது எய்துவிக்கிறது.

(இ-ள்.) அல்லது......கண்ணும் - அல்வழிக்கண் சொல்லினும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் சொல்லினும்; எல்லாம்....நிலையும் - எல்லாம் என்னும் விரவுப்பெயர் உருபு புணர்ச்சியின் இயல்பிலே நின்று முடியும் (189); வேற்றுமை.....நிலையாது - அப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி அல்லாதவிடத்து வற்றுச் சாரியை நில்லாதாய் முடியும் எ-று.

'உருபியல் நிலையும்' என்ற மாட்டேறு, அல்வழிக்கண் உம்முப்பெற்று நிற்றலும், பொருட்புணர்ச்சிக்கண் வற்றும் உம்மும் பெற்று நிற்றலும் உணர்த்திற்று.

உம்முச்சாரியை ஒன்றுமே பெற்று முடிகின்ற அல்வழியினையும் வற்றும் உம்மும் பெற்று முடிகின்ற வேற்றுமையோடு உடனோதி, அதுவும் வற்றுப் பெறுமாறு போல மாட்டெறிந்து மிகையானே, வன்கணத்து அல்வழிக்கண் நிலைமொழி மகரக்கேடும் வருமொழி வல்லெழுத்துப் பேறும்[1], மென்கணத்து மகரம் கெட்டு உம்முப்பெற்றும் பெறாதும் வருதலும், ஏனைக்கணத்து மகரம் கெட்டு உம்முப் பெற்றும் மகரம் கெடாதும் உம்முப் பெறாதும் வருதலும் கொள்க.

(உ-ம்.) எல்லாக்குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் எனவும், எல்லா ஞாணும் நூலும் மணியும் எனவும், எல்லா ஞான்றன நீண்டன மாண்டன எனவும், எல்லா யாழும் வட்டும் அடையும் எனவும், எல்லாம் வாடின ஆடின எனவும் வரும்.

இனி, வேற்றுமைக்கண், எல்லாவற்றுக்கோடும் செவியும் தலையும் புறமும் என இவை வற்றும் உம்மும் பெற்றன. இவற்றிற்கு மகரம் வற்றின்மிசை ஒற்று என்று

கெடுக்க (133)[2]. இனி மென்கணத்துக்கண் எல்லாவற்று ஞாணும் நூலும் மணியும் எனவும், ஏனைக்கணத்துக்கண் எல்லாவற்றியாப்பும் வலிவும் அடைவும் எனவும் வரும். ஏனைக்கணமும் வற்றும் உம்மும் பெற்றன. (27)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***322.*** 1. மகரக்கேடும் வல்லெழுத்துப்பேறும் 133ஆம் சூத்திரத்தானும், உம்முப்பேறு 189ஆம் சூத்திரத்தானும் கொள்க.

2. மகரக்கேடு 'வேற்றுமை யல்வழி' என்ற இலேசாற் கொள்க என்றிருப்பின் சிறக்கும். 133ஆம் சூத்திரவிதி அல்வழிக்கே ஓதுவதாக (கலத்துக்குறை) இவ்வுரைகாரரே 312ஆம் சூத்திரவுரையுள் குறிப்பிட்டுள்ளமை காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***323.*** **அல்லது கிளப்பினும்.......சாரியை நிலையாது.**

'எல்லாம் குறியவும்' என்றன 'எல்லாம் நம் குறியவும்' என்றாகி, அங்கு மகரம் கெட்டுப் பின்னர் நம் கெட, வரும் சூத்திரத்து உம்மையான் வல்லெழுத்துமிகுதி பெற்று 'எல்லாக்குறியவும்' என்றாயின.

"மாட்டேறு ஏலாத அல்வழியினையும் உருபியலொடு மாட்டெறிந்து விலக்கிய மிகுதியான், அல்வழிக்கண் வன்கணத்து இறுதி உம்முப்பேறும் நிலைமொழி மகரக் கேடும் வருமொழி வல்லெழுத்துப் பேறும்....கொள்க" என்றார் இளம்பூரணர். அதனானே நிலைமொழி மகரக்கேடும் வருமொழி வல்லெழுத்துப் பேறும் கொண்டார் நச்சினார்க்கினியர். 'உம்மை நிலையும் இறுதியான' (190) என்ற சூத்திரத்தான் உம்முப்பேறும், 'மெல்லெழுத்து மிகினும்' (324) என வரும் சூத்திரத்தான் உம்மையான் வல்லெழுத்துப் பேறும் கொள்ளல் கூடுமாயிருக்க, இவ்வாறு உரைகாரர் ஏன் கொண்டனரோ?

*323.* [எல்லாக்குறியவும் என்று முடிபிற்கு, இடையே நம்முச் சாரியை புணர்ந்து பின் கெட்டதாக இவர் எழுதுவது எவ்வாறோ நேர்ந்து விட்ட பிழைபோலும். நம்முச்சாரியை உயர்திணைக்கே உரியது. இம்முடிபு அஃறிணைக்கு உரியது.]

ஆசிரியர் விரவுப்பெயரை விதந்தோதியே முடிப்பா ராதலின், *190, 324*ஆம் சூத்திரங்களான் உம்மைப்பேறும் வல்லெழுத்துப்பேறும் கொள்ளுதலே பொருந்தும் என்னும் இவ்வுரைகாரர் கூற்றுப் பெரிதும் பொருந்தும்.

**வேங்கடராசுலு ரெட்டியாரர் உரைக்குறிப்பு**

*322.* **அல்லது கிளப்பினும்.......சாரியை நிலையாது.**

முன்னர், 'உயர்திணை யாயின் உருபியல் நிலையும்' *(324)* என்று, உயர்திணைப்பெயராய் வருதற்கு விதி கூறுதலின், அஃறிணைப் பெயராய் வரும்வழிப் பெறும் முடிபே இச்சூத்திரத்திற் கூறுகின்றனர் என்பது பெறப்படும். ஆதலின், எல்லாக் குறியரும் சிறியரும் தியரும் பெரியரும் என உயர்திணைக்கண்ணும் வரும் என்று இளம்பூரணர் ஈண்டு அமைப்பது பொருந்தாது.

*322.* [இவ்வுரைகாரர் குறித்தவாறு இளம்பூரணர் உயர்திணை முடிபு ஈண்டுக் கூறுதல் பொருந்தாது. ஏடெழுது வோரால் நேரிட்ட இடைச்செருகல் இது.]

**இளம்பூரணம்**

***324. அப்பெயர் அல்வழிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடிதல்***

**மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

இச்.....எனின், மேற்கூறிய எல்லாம் என்பதற்கு அல்வழிக்கண் எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு.....ற்று.

(இ-ள்.) அவ்வெல்லாம் என்பது, அல்வழிக்கண் மேல் (27) இலேசினாற் கூறிய வல்லெழுத்தே அன்றி, மெல் லெழுத்து மிக்கு முடியினும் குற்றமில்லை எ-று.

மேற்கூறிய செய்கைமேலே இது கூறினமையின், மகரக்கேடும் இறுதி உம்முப்பேறும் கொள்க.

(உ-ம்.) எல்லாங் குறியவும்[1] சிறியவும் தீயவும் பெரியவும் - எனவும், எல்லாங் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் - எனவும் ஒட்டுக.

இனி உரையிற் கோடல் என்பதனான், இறுதி உம் இன்றி, எல்லாங்குறிய சிறிய தீய மெலிய - என(வும், எல்லாங் குறியர் சிறியர் தீயர் பெரியர் - எனவும்[2]) வரும்.

மேல் இலேசினாற் கூறிநின்ற (27) வல்லெழுத்தினொடு மெல்லெழுத்து வகுத்தமையின் இஃது அல்வழி யாயிற்று. (28)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

324. 1) குறியவை எல்லாம் என்பது பொருள்.

2) அடைப்புக்குறியுள் இட்ட இப்பகுதி இடைச் செருகல் என்று குறிப்பிடுவர் சாத்திரியார், உயர்திணை முடிபு இவ்வஃறிணைக்கண் இடம்பெறலாகாமையின்.

**நச்சினார்க்கினியம்**

*323. அப்பெயர் அல்வழிக்கண் மெலியும் மிகப் பெறுதல்*

மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.

இஃது ஒருசார் வல்லெழுத்தேயன்றி மெல்லெழுத்தும் விதித்தலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) மெல்லெழுத்து.....இல்லை - அவ் எல்லாம் என்பது, அல்வழிக்கண் மேல் இலேசினாற் கூறிய வல்லெழுத்தே யன்றி, மெல்லெழுத்து மிக்க முடியினும் குற்றமில்லை எ-று.

எனவே, வல்லெழுத்து மிகுதலே பெரும்பான்மை யாயிற்று. முற்கூறிய செய்கை மேலே இது கூறினமையின் மகரக்கேடும் உம்முப்பேறும் கொள்க.

(உ-ம்.) எல்லாங்குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் என வரும்.

'மானமில்லை' என்றதனான், உயர்திணைக்கண் வன்கணத்து மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு இறுதி உம்முப்பெற்று முடிதலும், இயல்புகணத்துக்கண் மகரம் கெட்டு உம்முப்பெற்று முடிதலும் கொள்க.

எல்லாக் கொல்லரும் சான்றாரும் தச்சரும் பார்ப்பாரும் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் எனவும், எல்லா ஞான்றாரும் நாய்களும் மணியகாரரும் வணிகரும் அரசரும் எனவும் வரும்.

இன்னும் இதனானே, உயர்திணைக்கண் எல்லாங் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் என மகரம் கெட்டு மெல்லெழுத்து மிக்கு உம்முப் பெறுதலும், எல்லாங் குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும்[1] - குறியீர் குறியம் எனவும் - உம்முப்பெறாது வருதலும் கொள்க.

இன்னும் இதனானே, இடைக்கணத்தும் உயிர்க் கணத்தும் மகரம் கெடாது உம்மின்றி வருதலும் கொள்க.

எல்லாம் வந்தேம் அடைந்தேம் என வரும். (25)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*323.* 1. குறியர் எல்லாரும் என உம்மை பெற்றும், குறியரெல்லாம் என உம்மை பெறாதும் முறையே பொருள்படுமாறு காண்க.

சொல். 189 நச். சூத்திரத்தான், தன்மைப் பன்மைக்கன்றி 'எல்லாம்' உயர்திணைக்கண் வாராது என்றார். எல்லாக் குறியேமும்-எல்லாங் குறியேமும் - எல்லாங் குறியேம் - எனவே சூத்திர விதிக்கேற்ப வருதல் வேண்டும். இச்சொல், ஏனைய முன்னிலை படர்க்கைக்கண்ணும் வருதலை 'ஆக்கம்' என்ற சொற்பொருளால் தழுவிக்கொண்டார் நச்சினார்க்கினியர். ஆக்கம் - பெரும்பான்மை. சாத்திரியார் பிறவிடங்கட்கு வருதலை மறுத்துரைப்பார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*323.* மெல்லெழுத்து மிகினும் மானமில்லை.

எல்லாக் கொல்லரும் சான்றாரும் தச்சரும்...என்றும், எல்லாங் குறியரும் சிறியரும்....என்றும் உயர்திணைப் பெயர் வருமென்று நச்சினார்க்கினியர் ஈண்டுக் காட்டுதல் பொருந்தாது. இதுவும் மேற் சூத்திரத்திற் கூறிய அஃறிணைப் பெயர்க்கே விதியாதலின்.

*323.* [அல்வழிக்கண் உயர்திணைப்பெயர் முடியுமாறு வேறு விதியாற் கூறப்படாமையின், நச்சினார்க்கினியர் ஈண்டு மிகையான் முடித்தார், அஃறிணைக் கோதிய வல்லெழுத்தும் மெல்லெழுத்தும் மிக்கு முடியுமாறு காட்டும் இயை புடைமை பிறாண்டு இல்லையாதலின்.]

**இளம்பூரணம்**

*325. 'எல்லாம்' உயர்திணைப் பெயராயவழிப் புணருமாறு*

உயர்திணை யாயின் உருபுஇயல் நிலையும்.

இச்....எனின், மேலதற்கு உயர்திணை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* அவ்வெல்லாம் என்பது அஃறிணைப் பெயராய் அன்றி உயர்திணைப் பெயராய் நின்ற நிலைமை யாயினும், உருபுபுணர்ச்சியின் இயல்பிலே நின்று ஆண்டுக் கூறிய நம்முச்சாரியை பெற்று முடியும் எ-று.

வற்று வகுத்த செய்கைமேல் (27) வருத்தமையின், மகரக் கேடு கொள்க. இறுதி உம்மையும் அச்செய்கை மேலே வகுத்தமையின் கொள்க.

*(உ-ம்.)* எல்லா நங்கையும் செவியும் தலையும் புறமும்- எனவரும்.

மேல் 'மானம் இல்லை' *(28)* என்றதனான், அல்வழிக் கண் வன்கணத்து மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு இறுதி உம்முப்பெற்று முடிதலும், இயல்புகணத்துக்கண் மகரம் கெட்டு இறுதி உம்முப் பெற்று முடிதலும் கொள்க.[1]

*(உ-ம்.)* எல்லாக் கொல்லரும் சேவகரும் தச்சரும் புலவரும் - எனவும், எல்லா ஞாயிறும்[2] நாயகரும் மணிய காரரும் - வணிகரும் - அரசரும் - எனவும்வரும். *(29)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***325.*** *1)* எல்லாம்+கொல்லர்=எல்லாக் கொல்லரும்: மகரம் கெட்டு வல்லெழுத்துமிக்கு இறுதி உம்முப்பெற்று முடிந்தவாறு. இறுதி உம்மையை முற்றும்மையாகக் கோடலுமாம்.

*2)* எல்லா ஞான்றாரும் என இருத்தல் வேண்டும், 'ஞாயிறு' அஃறிணையாதலின். 'தன்னுள் ளுறுத்த பன்மைக் கல்லது, உயர்திணை மருங்கின் ஆக்க மில்லை' *(பெய. 33)* என்பவாதலின், எல்லாக் குறியேமும் சிறியேமும் தீயேமும் பெரியேமும் - எனத் தன்மைப் பன்மைப் பெயரை வருமொழியாக நிறுத்தி முடிக்கவேண்டும் என்பர் சாத்திரியார்; படர்க்கைப் பெயராகக் காட்டியவை இடைச் செருகலாதல் வேண்டும் என்பர்.

## நச்சினார்க்கினியம்

## 324. அஃப்பெயர் உயர்திணைக்கண் வேற்றுமையில் முடியுமாறு

**உயர்திணை யாயின் உருபியல் நிலையும்.**

இஃது எல்லாம் என்பதற்கு உயர்திணை முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* உயர்திணை....நிலையும் - எல்லாம் என்பது உயர்திணையாய் நிற்குமாயின், உருபுபுணர்ச்சியின் இயல்பிற்றாய், இடைக்கண் நம்மும் இறுதிக்கண் உம்மும் பெற்று முடியும் எ-று.

உருபியலுள் 'எல்லாம் என்னும் இறுதி முன்னர் வற்றென் சாரியை' (189) வகுத்ததனான், வற்றின் மிசை ஒற்று என்று மகரம் கெடுத்த அதிகாரத்தான் 'உயர்திணை யாயின் நம் இடை வரும்' (190) என நம்மின் முன்னும் மகரம் கெடுத்தார்.[1] அதனோடு ஈண்டு மாட்டெறிதலின் அதுகொண்டு ஈண்டும் மகரம் கெடுக்க. 'அம்மின் இறுதி' (129) என்புழித் தன்மெய் என்றதனான் நம்முச்சாரியையினது மகரம் திரிதல் கொள்க.

*(உ-ம்.)* எல்லா நங்கையும் செவியும் தலையும் புறமும் என ஒட்டுக.

வருமொழி வரையாது கூறலின், எல்லா ஞாற்சியும் நீட்சியும் என ஏற்பனவற்றொடு முடிபறிந்து ஒட்டுக. (29)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***324.*** 1. 25, 27, 28ஆம் நூற்பாக்களான் மகரத்திற்கு நட்பெழுத்துக்கள் பகரமும் யகரமும் வகரமுமே ஆதலின், பகையெழுத்தாகிய நகரம் வந்தவழி மகரம் கெட்டது என்றலும் ஒன்று.

## இளம்பூரணம்

### *326. நும் வேற்றுமைக்கண் மெல்லெழுத்து மிக்கு முடிதல்*

**நும்என் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே.**

*இச்....எனின்,* இதுவும் அவ்வீற்று விரவுப்பெயருள் ஒன்றற்கு வேற்றுமை முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* நும் என்று சொல்லப்படுகின்ற ஒரு விரவுப் பெயர் வேற்றுமைக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* நுங்கை செவி தலை புறம் - என வரும். மகரம் மேல் 'துவர' *(15)* என்ற இலேசினாற் கெட்டது.

'ஒருபெயர்' என்றதனான், ஞகர நகரங்கள் வந்த விடத்தும் அவ்வொற்று மிகுதல் கொள்க.

*(உ-ம்.)* நுஞ்ஞாண் நுந்நூல் - என வரும்.

ஒன்றென முடித்தல் என்பதனான், உங்கை என உம் என்பதன் முடிபும் இவ்வாறு கொள்க. *(30)*

## நச்சினார்க்கினியம்

### *325. 'நும்' ஈறுகெட மெலி மிகுதல்*

**நும்என் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே.**

இது நும் என்பதன் மகரஈற்றிற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

*(இ-ள்.)* நும்மென்....மிகும் - நும் என்று சொல்லப் படுகின்ற விரவுப்பெயர் பொருட்புணர்ச்சிக்கண் மெல் லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) நுங்கை செவி தலை புறம் எனவரும். 'மகர இறுதி' (310) என்பதன்கண் 'துவர' என்பதனான் மகரம் கெடுக்க.

'ஒன்றென முடித்தல்' என்பதனான், உங்கை என வருவதூஉம் கொள்க. 'துவர' என்றதனான், ஞகர நகரங்கள் வந்துழி மகரம் கெடுதலும், 'ஒருபெயர்' என்றதனான் ஒற்றுமிகுதலும் கொள்க.

நுஞ்ஞாண் நூல் எனவரும்.

இன்னும் 'ஒருபெயர்' என்றதனான், நும்மணி யாழ் வட்டு அடை என மகரம் கெடாமையும் கொள்க. (30)

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**325. நும்என் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே.**

'ஒன்றென முடித்தல்' என்பதனான், உங்கை என வருவதூஉம் கொள்க - என்றனர் உரையாளர். உம் என வழங்கும் சொல் நும் என்பதன் மரூஉவாகலானும், அதுவும் மிகப்பிற்பட்ட வழக்கே யாகலானும் அதனை இந்நூலில் அமைத்தல் தகாது.

325. [நும் சாரியையது மரூஉவே 'உம்' சாரியை. தம் காலத்து அதன் வழக்குப் பயிற்சி கண்டு அதனை ஒன்றென முடித்தலான் உரையாளர் கொண்டனர் போலும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**325. நும்என் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே.**

நீயிர் நும் என்பனவற்றுள் எது மூலச்சொல் என்பதை உணரும் வகையில், நும் என்பதற்குச் சிறப்புக்கொடுத்து ஆசிரியர் இலக்கணம் கூறலாயினர். இம்மரபினை நன்குணர்ந்த தொல்காப்பியனார், நீயிர் என்பது நும் என்பதன்

திரிபே என்பது புலப்பட, அது திரிந்த நெறியை அடுத்த சூத்திரத்தான் எடுத்துக்கூறி, அதனை வலியுறுத்துவாராய்ச் சொல்லதிகாரத்தும் 'நும்மின் திரிபெயர்' என்று ஓதினார். ஆதலின் முன்னிலைப்பெயர் எனற்குரியது நும் என்பதே என்பது தோன்ற ஈண்டு 'நும்மென் ஒருபெயர்' என்றார்.

*325.* ['நும்' என்பதனைப் பெயர் அடிப்படைச் சொல்லாகிய பிராதிபதிகமாகவும், நீயிர் என்பதனை அதன் முதல் வேற்றுமை யுருவமாகவும் கொள்ளுதல், "வடமொழி யிலக்கணம் இவ்வாறிருக்கும்" என்பதனை ஓர் எடுத்துக் காட்டுக்கொண்டு ஆசிரியர் தொல்காப்பியனார் தமிழ் நூலார்க்குக் குறிப்பிட்ட செய்தியாகப் பிரயோக விவேக உரை கூறும் செய்தி ஈண்டு உளங்கொளத்தக்கது.]

**இளம்பூரணம்**

***327. அல்வழிக்கண் 'நும்' நீயிர் எனத் திரிந்து இயல்பாய் முடிதல்***

**அல்லதன் மருங்கின் சொல்லுங் காலை**
**உக்கெட நின்ற மெய்வயின் ஈவர**
**இ-இடை நிலைஇ ஈறுகெட ரகரம்**
**நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே**
**அப்பால் மொழிவயின் இயற்கை ஆகும்.**

இச்....எனின், மேலதற்கு அல்வழி முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அந் நும் என் ஒருபெயர்தன்னை அல்வழி யிடத்துச் சொல்லுங்காலை, நகரத்து உகரம் கெட, அந்நின்ற மெய்யிடத்து ஈகாரம் வர, ஓர் இகரம் இடையிலே பெற்று, மகரம் கெட, அவ்விடத்து ஒரு ரகரம் புள்ளியொடு பொருந்தி நிற்றல் வேண்டும்; வருமொழியிடத்து அம்மொழிதான் இவ்வாறு திரியாது இயல்பாதல் வேண்டும் எ-று.

(உ-ம்.) நீஇர்[1] குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் - என வரும். நீஇர் ஞான்றீர் நீண்டீர் மாண்டீர் - என இயல்பு கணத்தோடும் ஒட்டுக. (31)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**327.** 1) நீர் முன்னிலைப் பன்மைப் பெயரன்று. தொல்காப்பியனார் 'நீஇர்' என்பதனையே அப்பெயராகக் குறித்தார். நும்மின் திரிபெயராகிய 'நீஇர்' என்பதனைப் பிற்காலத்தார் இகரத்தை நீக்கி நீர் எனக்கொண்டனர்; யகர வகர உடம்படு மெய்யடுத்து இகரத்தை நீயிர் நீவிர் என உச்சரித்துத் தொல்காப்பியனார் விதித்த சொல்லமைப்பினை நெகிழ்த்துப் போயினர். நன்னூலார் எல்லீர் நீயிர் நீவிர் நீர் என இந்நான்கனையும் முன்னிலைப்பன்மைப் பெயராக ஓதினார்.

'குன்று முண்டுநீர் பாடினிர் செலினே' (110) என 'நீர்' புறநானூற்றிலும் இடம்பெற்றமை காண்க.

'யாம்அவ ணின்று(ம்) வருதும் நீயிரும்' என 'நீயிர்' (சிறுபா. 143, பெரும்பா. 28, மலைபடு. 53) பத்துப்பாட்டுள் பயின்றுள்ளமை காண்க.

**நச்சினார்க்கினியம்**

**326. அதன் அல்வழி முடிபு**

**அல்லதன் மருங்கின் சொல்லுங் காலை**
**உக்கெட நின்ற மெய்வயின் ஈவர**
**இ இடை நிலைஇ ஈறுகெட ரகரம்**
**நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே**
**அப்பால் மொழிவயின் இயற்கை ஆகும்.**[1]

இது நும் என்பதற்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) அல்லதன்.....காலை - நும் என்பதனை அல்வழிக்கண் கூறுமிடத்து; உக்கெட.....வர - நகர உகரத்துள் உகரம் கெட்டுப் போக, ஒழிந்துநின்ற நகர ஒற்றிடத்தே ஈகாரம் வந்து நிற்ப; இ-இடை நிலைஇ ஈறுகெட - ஓர் இகரம் இடையிலே வந்து நிலைபெற்று மகரமாகிய ஈறு கெட்டுப் போக; புள்ளியொடு புணர்ந்து ரகரம் நிற்றல்வேண்டும் - ஆண்டுப் புள்ளிபெற்று ஒரு ரகரம் வந்து நிற்றலை விரும்பும் ஆசிரியன்; அப்பால்....ஆகும் - அக்கூற்றினையுடைய நிலைமொழியிடத்து வரும்சொல் இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) நீயிர்[2] குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் என வரும்.

'சொல்லுங்காலை' என்றதனானே, நீயிர் ஞான்றீர் நீண்டீர் மாண்டீர் யாத்தீர் வாடினீர் அடைந்தீர் என ஏனைக் கணத்திலும் ஒட்டுக. (31)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***326.*** 1. "இனித் தொல்காப்பியனாரும் தமிழில், 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' (சொல்.65) என்றாராயினும், வடநூலில் எழுவாய் வேற்றுமை இவ்வாறிருக்கும் என்றறிதற்கு, நும் என்னும் ஒரு பெயரை மாத்திரம் எழுவாய் வேற்றுமை யாக்காது பிராதிபதிகம் ஆக்கிப் பின்னர் நும்மை.....நுங்கண் என இரண்டு முதல் ஏழ் இறுதியும் வேறுபடுத்து வேற்றுமையாக்கினாற்போல,

'அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை' (எழுத்.326)

என்னும் சூத்திர விதிகொண்டு நீயிர் என வேறுபடுத்து எழுவாய் வேற்றுமை என்னும் பிரதமாவிபத்தி ஆக்குவர். இவ்வாறு நின்-தன்-தம்-என்-எம்-நம்- என்பனவற்றையும் பிராதிபதிகம் ஆக்கி, பின் நீ-தான்-தாம்-யான்-யாம்-நாம்- எனத் திரிந்தவற்றை எழுவாய் வேற்றுமை யாக்காமை யானும், 'எல்லாம் நீயிர் நீ எனக் கிளந்து' என்றும் 'நீயிர் நீ என வரூஉங் கிளவி' என்றும் பெயரிலுள் பெயர்ப் பிராதி

பதிகமாகச் சூத்திரம் செய்தயானும், 'அல்லதன் மருங்கின்' என்னும் சூத்திரத்தை வடமொழிக்கு எழுவாய் வேற்றுமை இவ்வாறிருக்கும் என்று தமிழ் நூலார் அறிதற்கு செய்தாரென்க." (பி. வி. கா. 7 உரை)

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***327.* அல்லதன் மருங்கின்......இயற்கை ஆகும்.**

இர் ஈர் மின் இவற்றை முன்னிலைப் பன்மை விகுதியாக 'இர்ஈர் மின்னென' (சொல். 224) என ஆசிரியர் கூறியிருக்கின்றமையான், 'நீஇர்' என்றது நீ என்ற ஒருமைக்கு அவ்விகுதியைச் சேர்த்தமையான் வந்ததாகலாம். இர் ஈர் என்பன வினைவிகுதி அல்லவோ எனின், எல்லீரும் என்றவிடத்து ஈர் இருக்கின்றமையான், பெயர்வினைகட்கு அவை பொதுவே என்னலாம்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***326.* அல்லதன் மருங்கின்.....இயற்கை யாகும்.**

வடமொழியில், பிராதிபதிகமாய் இருப்பவற்றை முதல்வேற்றுமைய ஆக்குதல் போல, நும் என்னும் பிராதிபதிகத்தை எழுவாய் வேற்றுமையாக்கிக் காட்டினார் என்பர் பிரயோக விவேக நூலார். அவர் கூறுவது: "வடநூலில், எழுவாய் வேற்றுமை யாக்காது பிராதிபதிகமாக்கி, பின்னர், நும்மை....நுங்கண் என இரண்டு முதல் ஏழிறுதியும் வேறுபடுத்து வேற்றுமையாக்கினாற் போல, 'அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை' என்னும் சூத்திரவிதி கொண்டு நீயிர் என வேறுபடுத்து, எழுவாய் வேற்றுமை என்னும் பிரதமாவிபத்தி ஆக்குவர். இவ்வாறு நின் தன் தம் என் எம் நம் என்பனவற்றையும் பிராதிபதிகமாக்கி, பின் நீ தான் தாம் யான் யாம் நாம் எனத் திரிந்தவற்றை எழுவாய் வேற்றுமை

யாக்காமை யானும், 'எல்லாம் நீயிர்' என்றும் 'நீயிர் நீயென வரூஉம் கிளவி' என்றும் பெயரியலுள் பெயர்ப் பிராதி பதிகமாகச் சூத்திரம் செய்தலானும், 'அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை' என்னும் சூத்திரத்தை, வடமொழிக்கு எழுவாய் வேற்றுமை இவ்வாறிருக்கும் என்று தமிழ்நூலார் அறிதற்கே செய்தார் என்க."

வடமொழியில் பிராதிபதிகமாய் இருப்பவற்றை எழுவாய் வேற்றுமை யாக்கும் முறையைத் தமிழர்க்கு அறிவிக்கும் பொருட்டே இவ்வாறு சூத்திரம் செய்தார் என்று பிரயோகவிவேகமுடையார் கூறுவது ஊகம் மாத்திரம் என்று கொள்ளற்பாலது. என்னையெனின், வடமொழியில் இவ்வாறிருக்கும் என்பதனைக் கிளந்தோதாமையானும், பிராதிபதிகத்தோடு (பெயரோடு) உருபு சேர்ந்து எழுவாய் வேற்றுமையாகும் என்னாது, 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்றும் நிலையே' என்றாராகலானும் என்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***326.*** **அல்லதன் மருங்கின்.....இயற்கை யாகும்.**

(நும்-நீம்-நீஇர்) நீஇர் என்பது வழக்காறு காரணமாக உடம்பொடுமெய் பெற்று நீயிர் என வரும்.

***326.*** [சூ. 140. உரையுள் இவ்வுரைகாரர், "ஒரு மொழிப் புணர்ச்சிக்கண் நிற்கும் உயிரும் புணர்ச்சி விகாரத்தான் மிகும் உயிரும் உடம்படுமெய் பெறா என அறிக" என்று குறிப்பிட்டுள்ளமைக்கு, 'நீஇர்' என்புழி இகரம் யகர உடம்படுமெய் பெறும் என்ற கூற்று முரண்டுபடுதல் காண்க.]

**இளம்பூரணம்**

***328. மகரஈற்றுத் தொழிற்பெயர் இருவழியும் உகரம் பெற்று முடிதல்***

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இச்......எனின், இவ்வீற்றுத் தொழிற்பெயர்க்கண் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் முடிபு வேற்றுமை கூறு....ற்று.

*(இ-ள்.)* மகர ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம், அல்வழிக்கண்ணும் வேற்றுமைகக்கண்ணும், ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பினவாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், இயல்புகணத்து உகரம் பெற்றும் வரும் எ-று.

*(உ-ம்.)* செம்முக்[1]கடிது சிறிது தீது பெரிது - எனவும், செம்முஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், செம்முக்கடுமை சிறுமை தீமை பெருமை - எனவும், செம்முஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும்.

'எல்லாம்' என்றதனான், உகரம் பெறாது அல்வழிக்கண் நாட்டங்[2]கடிது - என மெல்லெழுத்தாய்த் திரிவனவும், வேற்றுமைக்கண் நாட்டக்கடுமை - என மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு வருவனவும் கொள்க. *(32)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***328.*** *1)* 'செம்' என்னும் முதனிலைத் தொழிற்பெயர் பொருமுதல், மூடுதல், தைத்தல் என்னும் பொருட்டாதலை **அடிகளாசிரியர்** குறிப்பிடுகிறார்.

*2)* 'நாடு' என்னும் ஈரெழுத்து மொழிக்குற்றியலுகரம் அம் விகுதி பெற்று நாட்டம் என விகுதிபெற்ற தொழிற் பெயராயே வரும்.

**நச்சினார்க்கினியம்**

***327. இவ்வீற்றுத் தொழிற்பெயர் பிறஈற்றுத்***
***தொழிற்பெயர் போல முடிதல்***

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இது வேற்றுமைக்கண் மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கும் (310) அல்வழிக்கண் மெல்லெழுத்தாய்த் திரிந்தும் (314) வரும் என எய்தியதனைவிலக்கி, ஞகார ஈற்றுத் தொழிற் பெயர் போல மகர ஈற்றுத் தொழிற்பெயர் நிற்குமெனப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) தொழிற்பெயர்.....இயல - மகர ஈற்றுத் தொழிற் பெயரெல்லாம், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல, அல்வழியினும் வேற்றுமையினும், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) செம்மு[1]க்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், செம்முக் கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். 'தும்முச் செறுப்ப' (குறள் 1312) என்பதும் அது. இவை 'குறியதன் முன்னர்த் தன்உரு இரட்டல்' (160).

'எல்லாம்' என்றதனான், உகரம் பெறாது நாட்டங்[2] கடிது - ஆட்டங் கடிது - என மெல்லெழுத்தாய் அல்வழிக்கண் திரிதலும், ஆட்டக்கடுமை என வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுதலும் கொள்க. (32)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**327.** 1, 2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**327. தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

'எல்லாம்' என்றதனான், உகரம் பெறாது, நாட்டங் கடிது - ஆட்டங்கடிது - என்றல்போல் வருதலும் கொள்க என்றனர் உரையாளர். நாட்டம் ஆட்டம் என்பவற்றில் அம் விகுதியே ஆகலின், இத்தகைய சொற்களை ஆசிரியர்

கருதிற்றிலர். அவர் கருதியவை தும் செம் திரும் என்பன போன்ற தொழிற்பெயர்களே ஆகும். நாட்டம் ஆட்டம் என்பவற்றை மகரவீற்றுத் தொழிற்பெயராகக் கொள்ளின், தும் செம் என்பவை தும்மல் செம்மல் என வழங்குதலின், அவற்றை லகரவீற்றுத் தொழிற்பெயர் என்றன்றே கொள்ளுதல் வேண்டும்? அவ்வாறன்றி, அவற்றை மகர வீறாகவே கொண்டு, தும்முக்கடிது செம்முக் கடிது என்று உரையாளர் உதாரணம் காட்டியது அமையாதன்றே?

இவ்வாசிரியர் முதனிலைத் தொழிற்பெயரையே தொழிற்பெயர் என்று இவ்வியலிற் கூறுகின்றார் என்பது, ஞகர நகர ணகரவீற்றுத் தொழிற்பெயர்களைக் கூறியதனான் அறியப்படும்; என்னெனின், ஞகர நகர ணகர ஈற்று விகுதிகளையுடைய தொழிற்பெயர்கள் இல ஆதலின்.

***327.*** [ரெட்டியார் கூற்றினையே பாலசுந்தரம் அவர்களும் வலியுறுத்தினார். விகுதிபெற்ற தொழிற்பெயர் முடிபினையும் இலேசினான் அடக்கிக் கூறினர் உரையாளர்; விகுதிபெற்ற தொழிற்பெயர்களை மகரவீற்றினும் லகர வீற்றிலும், முதனிலை திரிந்தவற்றை ளகரவீற்றிலும் அடக்கிக் கூறினர்; 'தொழிற்பெயர்' என்ற பொதுமையான் ஏனை யிரண்டனையும் உரையில் தழீஇக் கூறினர், ஆயினும் அவை ஆசிரியர்கருத்தன்மை, ஞகர நகர ணகர ஈற்றுத் தொழிற் பெயர்களையே அவர் ஓதியமையான் அறியப்படும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***327.*** **தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.**

'எல்லாம்' என்றதனான், நாட்டம் ஆட்டம் என்பன உகரம் பெறாது வந்தன என்பர் உரையாசிரியர். அவை, நாடு ஆடு என்னும் குற்றுகர வீற்றுத் தொழிற்பெயர்கள் அம்விகுதி பெற்று நின்றனவாதலின் பொருந்தாதென்க.

*327.* [ஈரெழுத்தொருமொழிக் குற்றுகரவீறு பெரும் பான்மையும் அம் விகுதி பெற்றன்றித் தொழிற்பெயராக நில்லாமையின், அவற்றை மகரவீறாகக் கொண்டு எடுத்துக் காட்டினர் உரையாசிரியன்மார். பிற தொடர்க்குற்றுகரமும் உரிய விகுதி பெற்றன்றித் தொழிற்பெயராக நிற்றல் பெரும்பான்மையும் இல்லை. எ-டு: பழகு-பழக்கம்; மல்கு-மல்குதல்; அஃகு-அஃகுதல்; ஆக்கு-ஆக்கம்; எஞ்சு-எஞ்சுதல்; நோக்கு வாடு- போன்ற முதனிலைத் தொழிற் பெயர் சிறுபான்மைய என்க.]

## இளம்பூரணம்

### *329. ஈம், கம், உரும் - இம்மூன்று சொல்லும் அன்னவாதல்*

**ஈமும் கம்மும் உரும்என் கிளவியும்**
**ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன.**

இச்....எனின், பொருட்பெயருள் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் தொழிற்பெயரோடு ஒத்து முடிவன கண்டு, அவை கூறு....ற்று.

(இ-ள்.) ஈம் என்னும் சொல்லும் கம் என்னும் சொல்லும் உரும் என்னும் சொல்லும் ஆகிய அம்மூன்று பெயரும், அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், அத்தொழிற்பெயரோடு ஒரு தன்மையவாய், வன்கணம் வந்தவழி உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், இயல்பு கணத்து உகரம் பெற்றும் முடியும் எ-று.

(உ-ம்.) ஈமுக் கடிது கம்முக் கடிது உருமுக் கடிது[1] சிறிது தீது பெரிது - எனவும், ஈமுஞான்றது கம்முஞான்றது உருமுஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், ஈமுக்கடுமை கம்முக்கடுமை உருமுக்கடுமை சிறுமை தீமை பெருமை - எனவும், ஈமுஞாற்சி கம்முஞாற்சி உருமுஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும். (33)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*329.* 1) உரும் - இடியேறு. ஈம், கம் இவற்றுக்குப் பொருள் முறையே சுடுகாடும், உலோகத்திற் சிற்பத் தொழிலும் எனக்கொள்க.

**நச்சினார்க்கினியம்**

## *328. ஈம் கம் உரும் - இம்மூன்றும் அத்தொழிற்பெயர் அனையவாதல்*

**ஈமும் கம்மும் உரும்என் கிளவியும்**
**ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன.**

இது பொருட்பெயருள் சில தொழிற்பெயரோடு ஒத்து முடிக என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* ஈமும்.......பெயரும் - ஈம் என்னும் சொல்லும் கம் என்னும் சொல்லும் உரும் என்னும் சொல்லுமாகிய அம்மூன்று பெயரும்; அவற்று ஓரன்ன - முற்கூறிய தொழிற்பெயரோடு ஒரு தன்மையவாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும் எ-று.

ஈம் என்பது சுடுகாடு; கம் என்பது தொழில்.

*(உ-ம்.)* ஈமுக்கடிது கம்முக்கடிது உருமுக்கடிது[1] சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஈமுக்கடுமை கம்முக்கடுமை உருமுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் ஒட்டுக.

'கிளவி' என்றதனான், வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும், உயிர் வருவழி உகரம் பெறாது, ஈமடைவு ஈமடைந்தது என நிற்றலும் கொள்க.

**தன்னின முடித்தல்** என்பதனான் அம்மு தம்மு நம்மு எனச்சாரியைக்கண்ணும் உகரம் வருதல் கொள்க. *(33)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***328.*** *1.* இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**இளம்பூரணம்**

## *330. ஈழும் கம்மும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் முடியுமாறு*

**வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்**
**தோற்றம் வேண்டும் அக்குஎன் சாரியை.**

இச்....எனின், மேல் முடிபு கூறிய மூன்றனுள் இரண்டற்கு வேற்றுமைக்கண் வேறொரு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* வேற்றுமைப்பொருட் புணர்ச்சியாயின், இறுதி உரும் ஒழிந்த இரண்டும், அக்கு என்னும் சாரியை தோற்றி முடிதல் வேண்டும் எ-று.

'தோற்றம்' என்றதனான்[1], உருமு நீக்குதல் வேண்டும் என்க.

*(உ-ம்.)* ஈமக்குடம் கம்மக்குடம் சாடி தூதை பானை - என வரும்.

மேல் *(33)* வேற்றுமை கூறிய முடிபு குணவேற்றுமைக் கண்ணது என்றும், ஈண்டுக் கூறிய முடிபு பொருட்பெயர்க் கண்ணது[2] என்றும் கொள்க. *(34)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***330.*** *1)* உருமுப் பற்றிய ஒரு சூத்திரம் இதற்கு முன்னர் இடம்பெற்றிருக்கக் கூடும் எனத் தோற்றுகிறது.

*2)* பொருட்பெயர் - குணவேற்றுமை - பற்றிய வேற்றுமை முடிபுகளை 217, 347ஆம் சூத்திவுரையிற் காணலாம்.

## நச்சினார்க்கினியம்

### 329. ஈமும் கம்மும் அக்குப் பெற்று முடியுமாறு

**வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்**[1]
**தோற்றம் வேண்டும் அக்குஎன் சாரியை.**

இது மேல் முடிபு கூறிய மூன்றனுள் இரண்டற்கு வேற்றுமைக்கண் வேறொரு முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமை....சாரியை - வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின், இறுதியில் உரும் ஒழிந்த இரண்டும் அக்கு என்னும் சாரியை தோன்றி முடிதலை வேண்டும் ஆசிரியன் எ-று.

*(உ-ம்.)* ஈமக்குடம் கம்மக்குடம் சாடி தூதை பானை எனவும், ஞாற்சி நெருப்பு மாட்சி விறகு எனவும் ஒட்டுக.

அக்கு வகுப்பவே, நிலைமொழித் தொழிலாகிய உகரம் கெட்டு, முற்கூறிய வல்லெழுத்து விலக்கப்படாமையின் நின்று முடிந்தது.

வன்கணத்திற்கு, முன் நின்ற சூத்திரத்திற் கூறியது குண வேற்றுமைக்கு என்றும், ஈண்டுக் கூறியது பொருட் புணர்ச்சிக்கு என்றும் கொள்க.[2] *(34)*

#### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***329.*** 1, 2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

#### வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***329.*** வேற்றுமை யாயின்.....அக்கென் சாரியை.

'ஏனையிரண்டும்' என்பது மற்ற இரண்டும் என்னும் பொருளதே யாகலின், அதனால் உரும் ஒழிந்தன இரண்டும் என்றும் பொருள் வாராது. இதனை நோக்குங்கால், உரும்

என்னும் சொல்லிற்குச் சிறப்புவிதி கூறிய சூத்திரமொன்று இதற்குமேல் இருக்கலாம் எனத் தோன்றுகிறது. 'ஏனை வகரம்' (382) என்னுமிடத்தில் ஏனை என்னும் சொல்லின் பொருள் அறியத்தந்தது.

***329.*** [இவ்வுரையாளர் சொல்லியாங்கு, 'உரும்' என்றற்குச் சிறப்புவிதிச் சூத்திரமொன்று இருந்திருக்க வேண்டும்.

'உரையிற்கோடலான்' சாத்திரியார் உரும் என்றது நீங்கலான இரண்டனையும் கொண்டார்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***329.*** **வேற்றுமை யாயின்......அக்கென் சாரியை.**

ஏற்புழிக் கோடல் என்பதனான், 'ஏனை யிரண்டும்' என்றது ஈமும் கம்மும் எனக்கொள்க. 'மேனை இரண்டும்' எனப் பாடம் இருத்தல் வேண்டும் எனக் கருதவேண்டியுளது. மேனை - மேல்நின்றவை; அஃதாவது முதற்கண் நின்ற ஈமும் கம்மும்.

***329.*** ['மேனை' என்ற சொல்லாட்சி தொல் காப்பியத்துள் பிறாண்டு மேற்கொள்ளப்பட்டிலது. மேல்நின்றவை என அச்சொல் பொருள்படினும், 'முதற்கண் நின்றவை' எப்படி ஆம்?]

**இளம்பூரணம்**

## *331. மகரம் புணர்மொழிக்கண் குறுகுதல்*

**வகார மிசையும் மகாரம் குறுகும்.**

இச்....எனின், **பருந்து விழுக்காடாய்**[1] அரையளபு குறுகல் (நூன். 13) என்பதற்கு ஒரு புறனடை கூறு.....ற்று.

*(இ-ள்.)* மேல் மொழிக்கண் கூறிய னகாரை முன்னரே யன்றி (மொழி. 19), ஈண்டுப் புணர்மொழிக்கண் வகாரத்தின் மேலும் மகாரம் குறுகும் எ-று.

*(உ-ம்.)* நிலம் வலிது - என வரும். (35)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*331.* 1) நிலத்தில் காணப்படும் இரையை நெடுஞ் சேய்மைத்தாகிய விண்ணினின்று கண்டு அது பிழையாதவாறு கொத்திச் செல்லும் பருந்தினது வீழ்வு போல, நூன்மரபிற் கண்ட அரையளவு மகரம் குறுகுதற்கு நெடுஞ்சேய்மைத் தாகிய இவ்வியலில் இச்சூத்திரம் புறநடையமைத்துப் பொருள் கொள்விக்கிறது.

**நச்சினார்க்கினியம்**

## *330. புணர்மொழிக்கண் வகாரம் வருவழி மகரஈறு குறுகுதல்*

**வகார மிசையும் மகாரம் குறுகும்.**

இது முன்னர் 'அரையளபு குறுகல்' (13) எனவும், 'னகாரை முன்னர்'' (52) எனவும் கூறிய மகரம் இருமொழிக் கண்ணும் குறுகும் என அதன் ஈற்றகத்து எய்தாதது எய்துவிக்கின்து.

(இ-ள்.) வகார....குறுகும் - மகாரம் ஒருமொழிக் கண்ணேயன்றி, வகரத்தின் மேலும் குறுகும் எ-று.

*(உ-ம்.)* நிலம் வலிது - வரும் வண்ணக்கன் என வரும். (35)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*330.* **வகார மிசையின் மகாரம் குறுகும்.**

உரையாசிரியன்மார் வகார மிசையும் எனப் பாட மோதுவார். அது பாடமாயின், மகரக்குறுக்கம் வருமிடம்

கூறியதாகுமன்றி மகரம் குறுகுதற்குக் காரணம் கூறியதாகாது. இடம் கூறுதலே ஆசிரியர் கருத்தாயின், இந்நூற்பா மொழி மரபின்கண் இருத்தல் வேண்டும்.

***330.*** [மொழிமரபிற் கூறிய ஒருமொழிக்கணன்றி, புணர் மொழிக்கண்ணும் நிலைமொழி யிறுதிக்கண் மகரம் குறுகும் என்பது இச்சூத்திரம். நிலைமொழியிறுதி மகரம் குறுகுதற்குக் காரணம் 'வகாரமிசை' என்றதனான் உய்த்துணரப்படுமன்றே? தொன்றுதொட்ட 'வகார மிசையும்' என்ற பாடத்தை வேறாகக் கோடலாற் போந்த மிக்க பயன் யாது?]

## இளம்பூரணம்

### *332. இவ்வீற்று நாட்பெயரது வேற்றுமை முடிபு*

**நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன**
**அத்தும் ஆன்மிசை வரைநிலை இன்றே**
**ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர்.**

இச்....எனின், இவ்வீற்று நாட்பெயர்க்கு வேற்றுமை முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* மகரஈற்று நாட்பெயர்ச்சொல், மேல் (உயிர்.45) இகர ஈற்று நாட்பெயரிற் கிளந்த தன்மையவான ஆன் பெற்று முடியும்; அத்துச்சாரியை ஆன்சாரியை மேலும் பிறசாரியை மேலும்[1] நீக்கும் நிலைமை யின்றாம்; அவ்விடத்து மகர வொற்றுத் தன்வடிவு கெடுக என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* மகத்தாற் கொண்டான்[2] மகத்து ஞான்று கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவரும்.

ஒற்று என்னாது மெய் என்றதனான்,[3] நாட்பெயர் அல்லாத பொருட்பெயர்க்கண்ணும் அம்முடிபு கொள்க.

*(உ-ம்.)* மரத்தாற் கொண்டான்[4] சென்றான் தந்தான் போயினான் - எனவரும். *(36)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*332.* 2) மகநாளின்கண் கொண்டான் என ஏழாவதன் பொருட்டாக வுரைக்க.

1) 'அத்து ஆன்மிசையும்' என உம்மையை மாறுக. உம்மை எச்சவும்மை.

3) 'மெய்' ஈண்டு மிகைச்சொல்.

4) 'மரத்திடத்து' என ஈண்டும் ஏழன் பொருட்டாகவே உரைக்கப்படும்.

**நச்சினார்க்கினியம்**

## *331. இவ்வீற்று நாட்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு*

**நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தனை**
**அத்தும் ஆன்மிசை வரைநிலை இன்றே**
**ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர்.**

இஃது இவ்வீற்று நாட்பெயர்க்கு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) நட்பெயர்க்கிளவி மேல்கிளந்தன்ன - மகர ஈற்று நாட்பெயர், இகர ஈற்று நாட்பெயர் போல, ஆன் சாரியை பெற்றுமுடியும்; அத்து ஆன்மிசையும்....இன்று - அத்துச்சாரியை ஆன்சாரியை மேலும் பிறசாரியை மேலும் வருதல் நீக்கும் நிலைமையின்று; ஒற்று....புலவர் - ஆண்டு நிலைமொழி மகர ஒற்றுக் கெடுக என்று கூறுவர் புலவர் எ-று.

உம்மையை 'ஆன்மிசையும்' எனமாறுக.

(உ-ம்.) மகத்தாற் கொண்டான் ஓணத்தாற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என்க. ஏனை நாள்களோடும் ஒட்டுக. மகர ஒற்றுக் கெடுத்து, 'அத்தின் அகரம் அகரமுனை

இல்லை' (125) என அகரம் கெடுத்து, 'குற்றிய லுகரமும் அற்றென' (105) என 'ஆன்' ஏற்றி, 'ஆனின் னகரமும்' (124) என்றதனான் றகரமாக்கி முடிக்க[2]. மகத்து ஞான்று கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என ஞான்று என்னும் சாரியைமேல் அத்து வந்தது.

வரையாது கூறினமையின் இம்முடிபு நாற்கணத்தும் கொள்க. மகத்தான் ஞாற்றினான்[3] நிறுத்தினான் மாய்ந்தான் வந்தான் அடைந்தான் என வரும். (36)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*331.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. மகம்+அத்து+ஆன்+கொண்டான்> மகம்+அத்து+ ஆன்+கொண்டான்> மகத்து+ஆன்+கொண்டான்> மகத்தான் கொண்டான்=மகத்தாற்கொண்டான். குற்றியலுகரத்தின்மேல் உயிரேறி முடிதல் 105ஆம் சூத்திரவிதியாற் கொள்க.

3. மகநாளின்கண் கொடி நாற்றினான்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*331.* **நாட்பெயர்க் கிளவி.....என்மனார் புலவர்.**

'மேற்கிளந் தன்ன' என்ற மாட்டேற்றான், இகரவீற்று நாட்பெயர்க்கு விதித்த ஆன்சாரியை வருதல் பெறப்பட்டது. அவ் ஆன்சாரியை இகரவீற்று நாட்பெயர்க்கு முன் வருமிடத்து, அந்நாட்பெயர்ச்சொல் மெய்யீறு அன்றாதலின் ஈற்றெழுத்துக் கெட்டிலது. அம்மாட்டேற்றான், ஈண்டு மெய்யெழுத்துக் கெடுதல் அமையாமையின், 'ஒற்றுமெய் கெடுதல்' கூறுவாராயினார். ஆயின் 'ஆன்மிசை அத்தும் வரும்' என்றாராகலின், அத்துச்சாரியை வரும்வழி மேல்நின்ற ஒற்றுக்கெடுமன்றே? ஆகலின் 'ஒற்றுமெய் கெடுதல்' என்றது வேண்டாவாம் எனின், மாட்டேற்றுக் கூறியவழி, அம்மாட்டேற்றான் முடியாதனவற்றைக் கிளந்தோதுதலே இவ்வாசிரியர் வழக்கம்.

*331.* ['ஒற்றுமெய் கெடுதல்' வேண்டா கூறலாக முடியாதவாறு ஏற்ற அமைதி கூறினார் இவ்வுரைகாரர். உரையாசிரியன்மார், அத்தின்மிசை ஒற்றென நிலைமொழி யீற்று மகரம் கெடுவதனை ஆசிரியர் 'ஒற்றுமெய் கெடுதல்' என வேண்டா கூறலாக ஓதிய மிகையினை நோக்காது விடுத்துப்போனமை வியப்பாகவுள்ளது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*331.* **நாட்பெயர்க் கிளவி....என்மனார் புலவர்**

'அத்தே வற்றே ஆயிரு மொழிமேல், ஒற்றுமெய் கெடுதல்' (133) என்பதனான் நிலைமொழி ஒற்றுக் கெடுமேனும், மாட்டேற்றிக் கூறுமிடத்து ஐயம் தோன்றா வண்ணம் இவ்வாறு விளங்கக் கூறுதல் முன்னையோர் மரபு என்பது தோன்ற, 'என்மனார் புலவர்' என்றார்.

உம்மையை 'ஆன்மிசையும்' எனக் எனக் கூட்டிப் பிற சாரியையும் வரும் என்று கூறி, மகத்துஞான்று கொண்டான் எனக்காட்டுவர் உரையாசிரியர். ஞான்று என்பது நாள்அன்று (அந்நாள்) என்னும் சொற்களின் மரூஉவாகலானும், ஞான்று என்பதொரு சாரியை ஆசிரியர் கூறாமையானும் அது பொருந்துமாறில்லை.

*331.* ['என்மனார் புலவர்' என்பதற்கு இவர் குறிப்பிடும் விளக்கம் ரெட்டியார் அவர்கள் தம் ஆராய்ச்சிக் குறிப்பிற் சுட்டியது.

'ஞான்று' காலத்தைக் குறித்து வரும் சாரியை; சான்றோர் செய்யுளுள் அது காலப்பொருட்டாய் நிகழ்தல் 'ஊசல் ஊர்ந்தாட ஒருஞான்று வந்தானை' (கலி.37) என்புழிக் காணலாம். ஆகலின், மகத்துஞான்று கொண்டான் என்று உரையாசிரியன்மார் எடுத்துக் காட்டியதை இவர் பொருந்தா தென்றல் பொருந்தாமை உணரப்படும். -தி. வே. கோ.

## இளம்பூரணம்

### *333. னகார ஈற்றுப்பெயரது வேற்றுமை முடிபு*

**னகார இறுதி வல்லெழுத்து இயையின்**
**றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே.**

இச்....எனின், னகாரஈற்று வேற்றுமை முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* னகார ஈற்றுப்பெயர், வல்லெழுத்து முதல் மொழி வருமொழியாய் வந்தியையின், றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் எ-று.

*(உ-ம்.)* பொற்குடம் சாடி தூதை பானை - என வரும். *(37)*

## நச்சினார்க்கினியம்

### *332. னகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**னகார இறுதி வல்லெழுத்து இயையின்**
**றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே.**

இது நிறுத்தமுறையானே ணகார இறுதி வேற்றுமைக் கண் புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* னகார....பொருட்கு - னகார ஈற்றுப்பெயர் வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வந்தியையின், றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் எ-று.

*(உ-ம்.)* பொற்குடம் சாடி தூதை பானை என வரும். *(37)*

## இளம்பூரணம்

### *334. மன் முதலிய ஏழும் அன்னவாய் முடிதல்*

**மன்னும் சின்னும் ஆனும் ஈனும்**
**பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அன்ன இயல என்மனார் புலவர்.**

இச்...எனின், அவ்வீற்று அசைநிலை இடைச் சொல்லும்[1], ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர நின்ற இடைச்சொற்களும்[2], வினையெச்சமும் முடியுமாறு கூறு....ற்று.

(இ-ள்.) மன் என்னும் சொல்லும், சின் என்னும் சொல்லும்[3], ஆன் என்னும் சொல்லும், ஈன் என்னும் சொல்லும், பின் என்னும் சொல்லும், முன் என்னும் சொல்லும், வினையெச்சமாகிய சொல்லும், மேற்கூறிய இயல்பினவாய் னகரம் றகரமாய் முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) 'அதுமற் கொண்கன் தேரே' 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்' (அகநா. 7) - எனவும், ஆற்கொண்டான் ஈற்கொண்டான்[4] பிற்கொண்டான் முற்கொண்டான்[5] வரிற் கொள்ளும் செல்லும் தரும் போம் - எனவும் வரும்.

பெயராம் தன்மையவாகிய ஆன் ஈன் - என்பவற்றை முற்கூறாததனான், ஆன்கொண்டான் - ஈன்கொண்டான் - எனத் திரியாது முடிதலும் கொள்க.

பின்-முன்-என்பன பெயர்நிலையும்[6] வினையெச்ச நிலையும்[7] உருபுநிலையும்[8] படும். அவற்றுள் வினையெச்ச நிலை ஈண்டு வினையெஞ்சு கிளவியும் என்பதனான் முடியும்; உருபுநிலை உருபியலுள் முடியும். ஈண்டுப் பெயர் கூறுகின்றது. அதனை முற்கூறாததனான், பின்கொண்டான் - முன்கொண்டான் - எனத் திரியாமையும் கொள்க.

இயல என்றதனான், ஊன் என்னும் சுட்டு ஊன் கொண்டான் - என இயல்பாய் முடிதல் கொள்க. (38)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**334.** 1) மன்னும் சின்னும் ஆம்.

2) ஆனும் ஈனும் பின்னும் முன்னும் ஆம்.

*3) இசின் என்பதன் முதற்குறை.*

*4) அவ்விடத்துக் கொண்டான், இவ்விடத்துக் கொண்டான்.*

*5) பின்னிடத்துக் கொண்டான், முன்னிடத்துக் கொண்டான்.*

*6) அ) திருவள்ளுவர்க்குப்பின் (பிற்பட்ட காலம்); பின் தொடர்ந்தான் (பிற்பட்ட இடம்)*

*ஆ) 'வருமுன்னர்க் காவாதான்' (குறள்-435) -முற்பட்ட காலம்*

*7) 'கற்றபின் நிற்க அதற்குத் தக' ஷை - கற்றால் என வினையெச்சம்.*

*8) 'பின்' உருபு நிலையில் 'ஏர்ப்பின் சென்றான்' என வரும். நச்.*

*ஆன்: 'ஆன்வந் தியையும் வினைநிலை யானும்' (வினை.33)*

*ஈன்: 'ஈனோர்க் குரைப்பாம் பதிகத்துள் இயன்ற வாறே' (சீவக. 29)*

**நச்சினார்க்கினியம்**

### *333. 'மன்' முதலிய ஏழும் அன்ன இயல்பின வாதல்*

**மன்னும் சின்னும் ஆனும் ஈனும்**
**பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்**
**அன்ன இயல என்மனார் புலவர்.**

இஃது அவ்வீற்று அசைநிலை இடைச்சொற்களும்[1], ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச் சொற்களும்[2], வினையெச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) மன்னும்....கிளவியும் - மன் என்னும் சொல்லும், சின் என்னும் சொல்லும், ஆன் என்னும் சொல்லும், ஈன் என்னும் சொல்லும், பின் என்னும் சொல்லும், முன் என்னும் சொல்லும், வினையெச்சமாகிய சொல்லும்; அன்ன....புலவர் - முற்கூறிய இயல்பினை யுடையவாய், னகரம் றகரமாய்த் திரிந்து முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) 'அதுமற் கொண்கன் தேரே' 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்' (அகநா. 7) எனவும், ஆற்கொண்டான் ஈற்கொண்டான் பிற்கொண்டான் முற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், வரிற்கொள்ளும் செல்லும் தரும் போம் எனவும் வரும்.

பெயராம் தன்மையவாகிய ஆன் ஈன் என்பவற்றை முற்கூறாததனான், ஆன்கொண்டான் ஈன்கொண்டான் எனத் திரியாமையும் கொள்க.

பின்முன் என்பன பெயரும் உருபும் (சொல். 83 நச்) வினையெச்சமுமாய் (ஷ 231) நிற்றலின், பெயர் ஈண்டுக் கூறினார். ஏனைய உருபியலுள்ளும், 'வினையெஞ்சு கிளவி' என்பதன்கண்ணும் முடியும்[3], அப்பெயரை முற்கூறா ததனான், பின்கொண்டான் முன்கொண்டான் எனத் திரியாமையும் கொள்க.

'இயல' என்றதனான், ஊன் என்னும் சுட்டு ஊன் கொண்டான் என இயல்பாய் முடிதல் கொள்க. (38)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

333. 1, 2, 3. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*333.* **மன்னும் சின்னும்......என்மனார் புலவர்.**

*இசின் என்பது சின் என முதற்குறையாய் நின்றது.*

*பின் முன் என்பவை காலப்பொருளவாய் நிற்குங்கால், பின் கொள்வான் - முன் கொண்டான் - என இயல்பாதலைப் புறனடையாற் கொள்க. ஊன் என்னும் சுட்டுப்பெயர் திரியாமையான் விலக்கப்பட்டது.*

**இளம்பூரணம்**

***335. சுட்டும் வினாவும் முதலாக வரும் 'வயின்' சொற்கள் நான்கும் அன்னவாதல்***

**சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்**
**அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒருசார் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொல்லிற்கு முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) சுட்டெழுத்தினை முதலாகவுடைய வயின் என்னும் சொல்லும்[1], எகரமாகிய முதலையுடைய வயின் என்னும் சொல்லும், மேல் னகரம் றகரமாய் முடியும் என்ற அப்பண்பு நிலைபெற்று முடியும் இயற்கையையுடைய என்று சொல்லுவார் எ-று.

(உ-ம்.) அவ்வயிற் கொண்டான் இவ்வயிற் கொண்டான் உவ்வயிற் கொண்டான் எவ்வயிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

'இயற்கைய' என்றதனான், திரியாது இயல்பாய் முடிவனவும் கொள்க.

(உ-ம்.) கான்கோழி[2] - என வரும். (39)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*335. 1) 'அவ்வயின் மூன்றும்' (வினை. 28)*

*2) 'கானங்கோழி' என அம்முப்பெற்று வருவதை நச்சினார்க்கினியர் இவ்வியற் புறனடையாற் கொள்வார்; கானாங்கோழி என்பது மரூஉ முடிபு என்றும் குறிப்பார்.*

**நச்சினார்க்கினியம்**

## *334. அவ்வயின் முதலிய மூன்றும் எவ்வயினும் அன்ன முடிபினவாதல்*

**சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்**
**அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப.**

இஃது இவ்வீற்றுள் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர்த்தும் இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டு முதல்....வயினும் - சுட்டெழுத்தினை முதலாகவுடைய வயின் என்னும் சொல்லும், எகரமாகிய முதல் வினாவினையுடைய வயின் என்னும் சொல்லும்; அப்பண்பு.....என்ப - மேல் ணகரம் றகரமாம் என்ற தன்மை நிலைபெற்று முடியும் இயல்பையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) அவ்வயிற் கொண்டான் இவ்வயிற்கொண்டான் உவ்வயிற் கொண்டான் எவ்வயிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'இயற்கைய' என்றதனான், திரியாது இயல்பாய் முடிவனவும் கொள்க. (39)

**இளம்பூரணம்**

## *336. 'குயின்' ஈறு திரியாது இயல்பாய் முடிதல்*

**குயின்என் கிளவி இயற்கை ஆகும்.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்....ற்று.

(இ-ள்.) குயின்[1] என்னும் சொல் திரியாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) குயின்குழாம் செலவு தோற்றம் பறைவு - என வரும், குயின் என்பது மேகம். (40)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*336.* 1) குயின் - மேகம்.

**நச்சினார்க்கினியம்**

## 335. 'குயின்' இயல்பாதல்

**குயின்என் கிளவி இயற்கை ஆகும்.**

இது னகரம் திரியாது இயல்பு ஆகுக என்றலின், எய்தியது விலக்குகின்றது.

(இ-ள்.) குயின்....ஆகும் - குயின் என்னும் சொல் திரியாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) குயின் குழாம் செலவு தோற்றம் பறைவு எனவரும். குயின் என்பது மேகம். அஃது அஃறிணைப் பெயர்.

தொகைமரபினுள் உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் இயல்பாக என்றார் (153, 155).

குயின் வினையுமாம்.[1]

'இயற்கை' என்றதனான், கான்கோழி கோன்குணம் வான்கரை என வருவனவும் கொள்க. (40)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***335.*** குயின்: 'அயின்று' என்பது போல அமைந்த 'குயின்று' என்ற சொல்லின் முதனிலை வினையாதலின் 'குயில்' எனவே லகார வீறாக இவ் வினைமுதனிலை இருத்தல் வேண்டும் என்ப. குயிலுதல் - மணி பொன் முதலியவற்றான் அரிய வேலைப்பாட்டினை இழைத்தல். 'அகல்' அகன் என்றும் 'நல்' நன் என்றும், 'வல்' வன் என்றும் வருதல் போலக் 'குயில்' குயின் என்றும் வழங்கும் என்பது நச்சினார்க்கினியர் கருத்தாம்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***335.*** **குயினென் கிளவி இயற்கை யாகும்.**

இந்நூற்பாவினை யடுத்துத் 'தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெய ரியல' என்றொரு நூற்பா இருந்து கெட்டிருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது, 'மின்னும் பின்னும் பன்னும்.....தொழிற்பெய ரியல' (345) என இவ்வீற்றுத் தொழிற்பெயர் விதியோடு மாட்டேற்றுதலின் என்க.

***335.*** ['எகர ஒகரம் பெயர்க்கு ஈறாகா' (272) என்ற சூத்திரத்தில் முன்னிலைமொழி **இயைபு** வல்லெழுத்து மிகுதற்கு விதி கூறாமல் அடுத்த சூத்திரத்தில் 'மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகாஅ' என முன்னிலைமொழி மிகுதற்கு விதி குறிப்பாற் புலப்படுத்தினார் ஆசிரியர். அதுபோல, னகரஈற்றுத் தொழிற்பெயர் புணர்ச்சிக்கு விதி கூறாமல் 'மின்னும் பின்னும்' (345) என்ற சூத்திரத்தில் 'தொழிற்பெய ரியல' என்ற தொடரால் னகர ஈற்றுத் தொழிற்பெயர்கள் போலப் புணர்ச்சி விதி பெறும் என்று புலப்பட வைத்ததனையும் 'ஞாபகம் கூறல்' என்னும் உத்தி வகைக்கு இனமாகக் கொள்ளலாமன்றே? எனவே, இவ்வுரைகாரர் ஊகம் இவ்விடத்து வேண்டா.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### *337. 'எகின்'மரப்பெயர் அம்முப் பெறுதல்*

**எகின்மரக் கிளவி ஆண்மர இயற்றே.**

இச்....எனின், திரிபுவிலக்கி அம்மு விதித்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* எகின் என்னும் சொல் மரப்பெயராயின், ஆண்மரத்தினது இயல்பிற்றாய் அம்முப்பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* எகினங்கோடு செதிள் தோல் பூ - என வரும். *(41)*

## நச்சினார்க்கினியம்

### *336. 'எகின்'மரப்பெயர் அம்முப் பெறுதல்*

**எகின்மரம் ஆயின் ஆண்மர இயற்றே.**

இது திரிபு விலக்கி அம்மு வகுத்தலின் எய்தியது விலக்கி *(332)*ப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* எகின்....இயற்று - எகின் என்பது புள்ளன்றி மரப்பெயராயின், ஆண் மரத்தின் இயல்பிற்றாய், அம்முப் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* எகினங்கோடு செதிள் தோல் பூ எனவரும். *(41)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***336.*** மாட்டேறு 304, 283ஆம் சூத்திரங்களைக் கொள்ளும்.

## இளம்பூரணம்

### *338. ஏனை எகின்பெயரது வேற்றுமை முடிபு*

**ஏனை எகினே அகரம் வருமே**
**வல்லெழுத்து இயற்கை மிகுதல் வேண்டும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஒழிந்த மரம் அல்லா எகின்[1], நிலை மொழிக்கண் அகரம் வந்து முடியும்; அவ்விடத்து வருமொழி வல்லெழுத்தின் இயல்பு மிக்கு முடிதல் வேண்டும் எ-று.

*(உ-ம்.)* எகினக்கால் செவி தலை புறம் - என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாதனான், இயல்பு கணத்துக்கண்ணும் அகரப்பேறு கொள்க.

*(உ-ம்.)* எகின ஞாற்சி யாப்பு அடைவு - என வரும்.

'இயற்கை' என்றதனான், அகரப் பேற்றொடு மெல் லெழுத்துப் பேறும் கொள்க[2].

*(உ-ம்.)* எகினங்கால் செவி தலை புறம் - என வரும். (42)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

***338.*** 1) அன்னப்பறவை

2) அம்முச்சாரியை பெறும் என்று உரையாசிரியர் குறிப்பிடாமை காண்க. அவ் அகரம் ஆறன் பொருட்டாக வருவது என்பர் மொழியியல் வித்தகர் ரெட்டியார் அவர்கள்.

## நச்சினார்க்கினியம்

### *337. ஏனை எகின் முடியுமாறு*

**ஏனை எகினே அகரம் வருமே**
**வல்லெழுத்து இயற்கை மிகுதல் வேண்டும்.**

இதுவும் அது, திரிபு விலக்கி அகரமும் வல்லெழுத்தும் விதித்தலின்.

(இ-ள்.) ஏனை எகின் அகரம் வரும் - மரம் அல்லாத எகின் நிலைமொழிக்கண் அகரம் பெற்று முடியும்; வல்லெழுத்து........வேண்டும் - ஆண்டு வருமொழி வல்லெழுத்து இயல்பு மிக்கு முடிதலை வேண்டும் ஆசிரியன் எ-று.

(உ-ம்.) எகினக்கால் செவி தலை புறம் என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாதனான், இயல்பு கணத்தும் அகரப்பேறு கொள்க.

எகின ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை யாப்பு அடைவு எனவரும்.

'இயற்கை' என்றதனான், அகரத்தொடு மெல்லெழுத்துப் பேறும் கொள்க. எகினங்கால் செவி தலை புறம் என வரும்.

இனிச் சிறுபான்மை எகின்சேவல் எகினச்சேவல் பெடை என்பன ஆறனுருபு விரிவுழி ஈண்டை இலேசான் முடிக்க[1]. பண்பு கருதியவழி[2] இவ்வோத்தின் புறனடையான் முடிக்க. (42)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***337.*** 1.ஆறனுருபு விரிவுழி வல்லெழுத்து மிகுதல் கூடாமையின், இவ்வுரைப்பகுதி பொருந்துமாறில்லை எனத் தோற்றுகிறது. ஆறனுருபு பொருள்செயற்கு மாத்திரமே விரிக்கப்படும் என்க.

2. வருமொழி கடுமை சிறுமை தீமை பெருமை எனக் கொள்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***338.*** **ஏனை எகினே அகரம் வருமே.**

“மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாதனான், இயல்புகணத்துக்கண்ணும் அகரப்பேறு கொள்க. எகின ஞாற்சி.......என வரும்” என உரைகாரர் கூறினர். மேலைச் சூத்திரத்தில் அம்சாரியை வரும் எனக் கூறினமை யானும், இச் சூத்திரத்தில் அகரப்பேறும் வல்லெழுத்து மிகுதியும் கூறுகின்றமையானும், இரண்டனையும் ஒரு சூத்திரத்தில் கூறுதல் பொருந்தாது.

***338.*** *[‘மாமரக் கிளவியும்’ ‘பனையும் அரையும்’ (சூ.231, 283) என்னும் சூத்திரங்களில் முறையே மாமரக்கிளவி ஒரு முடிவும் ஆவும் மாவும் பிறிதொரு முடிவும் பெறுதலையும், பனையும் ஆவிரையும் ஒரு முடிபும் அரை பிறிதொரு முடிவும் பெறுதலையும் ஆசிரியர் விதித்தாற் போல, மேலைச்சூத்திரத்தினையும் இச்சூத்திரத்தினையும் ஒன்றாக ஓதினும் எகின்பெயர் இரண்டும் வெவ்வேறு முடிவு பெறுதற்கண் இழுக்கி யாதும் இன்று என்று உரைகாரர் கருதி, இவ்விரு சூத்திரத்தையும் ஒன்றாக ஓதாமையை விதப்பாகக் கொண்டு “இயல்புகணத்துக்கண் அகரப்பேறு கொள்க” என்றனர்.]*

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***337.*** **ஏனை எகினே.....மிகுதல் வேண்டும்.**

‘இயற்கை’ என்றதனான் மெல்லெழுத்துப்பேறும் கொள்க - என்று, எகினங்கால் முதலியவற்றை உரையாளர் காட்டுதல் பொருந்தாது, ஆசிரியர் ‘மிகுதலும் உரித்தே’ என்னாமல், ‘மிகுதல் வேண்டும்’ என்றே கூறினாராகலின்.

ஈண்டு விதித்த அகரம் ஆறன்பொருளில் வந்ததாகும் எனத்தோன்றுகிறது. கன்னடத்தில் ஆறனுருபாக அகரமே

உளது. அவ்வாறாயின், எகினக்கால் என்பது எகினதுகால் என்று பொருள்படும். இவ்வாறு அகரம் விதிக்கும் இடங்களி லெல்லாம் இப்பொருள் பொருந்துவது அறிதற்பாலது.

*337.* [தம் காலத்து வழக்கு நோக்கி உரையாசிரியன்மார் மெல்லெழுத்துப் பேற்றினைத் தழுவிக்கொண்டனர் போலும்.

ஈண்டு அகரம் ஆறன்பொருட்டாக வருமாறு போல, கன்னக்குடம் (346) வல்லநாய் (374) என்புழி வருவதாகக் கோடற்கில்லை. கன்னுத்தொழிலான் அமைந்த குடம், வல்லினுள் நாய் என முறையே மூன்றாவதன் பொருட் டாகவும் ஏழாவதன் பொருட்டாகவும் விரிதல் காண்க. 'அது' விரிப்பின் கிழமைப் பொருளே தோன்றும் என்க.]

## இளம்பூரணம்

### *339. இவ்வீற்றுக் கிளைப்பெயர் இயல்பாய் முடிதல்*

**கிளைப்பெயர் எல்லாம் கிளைப்பெயர் இயல.**

இச்....எனின், இவ்வீற்றிற் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) னகர ஈற்றுக் கிளைப்பெயர் எல்லாம் ணகர ஈற்றுக் கிளைப்பெயர் போலத் (12) திரியாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) எயின்குடி சேரி தோட்டம் பாடி - எனவரும்.

எல்லாம் என்றதனான், அக்குச்சாரியையும் வல்லெழுத்தும் பெற்று எயினக் கன்னி என முடிதலும்[1], பார்ப்பனக்கன்னி - என நிலைமொழி ஈறு திரிந்து அக்கும் வல்லெழுத்தும் பெறுதலும்,[2] இனிச் சாரியை பெறாது ஈறு திரிந்து வேளாண்குமரி - வேளாண் வாழ்க்கை - என முடிதலும் கொள்க. (43)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*339.* எயின்+அக்கு+கன்னி> எயின்+அ+கன்னி> எயின்+அ+க்+கன்னி= எயினக்கன்னி என முடிக்க. (129)

2) பார்ப்பு+அன்+அக்கு+கன்னி = பார்ப்பனக்கன்னி.

**நச்சினார்க்கினியம்**

## 338. இவ்வீற்றுக் கிளைப்பெயர் இயல்பாய் முடிதல்

**கிளைப்பெயர் எல்லாம் கிளைப்பெயர் இயல.**

இது னகரம் திரிதலை விலக்கி இயல்பாக என்றலின், எய்தியது விலக்கியது.

(இ-ள்.) கிளைப்பெயர்.....இயல - னகர ஈற்றுக் கிளைப் பெயரெல்லாம், ணகர ஈற்றுக் கிளைப்பெயர் போலத் திரியாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) எயின்குடி சேரி தோட்டம் பாடி என வரும். எயின் வந்தது என்று அஃறிணைக்கும் எய்துதலின், தொகை மரபினுள் (153) முடியாதாயிற்று, ஆண்டு உயர்திணைக்கே கூறுதலின்[1].

இனி, 'எல்லாம்' என்றதனானே, எயினக்கன்னி பிள்ளை என அக்கும் வல்லெழுத்தும் பெறுதலும்[2], எயின வாழ்வு என வல்லெழுத்துப் பெறாமையும் கொள்க.

இன்னும் இதனானே, பார்ப்பனக்கன்னி குமரி சேரி பிள்ளை என, ஆகாரம் குறுகி அக்கும் வல்லெழுத்தும் கொடுத்தும்[3], பார்ப்பன வாழ்க்கை என வல்லெழுத்துக் கொடாதும் முடிக்க.

இன்னும் இதனானே, நான்கு கணத்துக்கண்ணும் வெள்ளாளன் என நின்றதனை, அன் கெடுத்துப் பிரித்து ளகர

ஒற்றினை ணகர ஒற்றாக்கி, வெள்ளாண் குமரி பிள்ளை மாந்தர் வாழ்க்கை ஒழுக்கம் என முடிக்க[4].

இன்னும் இதனானே, முதலெழுத்தை நீட்டி ளகர ஒற்றினைக் கெடுத்து வேளாண் என முடிக்க.

இதனானே 'பொருந வாழ்க்கை'யும் முடிக்க[5].

வேட்டுவக்குமரி என்பது மரூஉ வழக்கு[6]. (43)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*338.* 1. 'எயின்' கோ என்பது போல உயர்திணைப் பொருள்படுவதோர் அஃறிணைச்சொல். இளம்பூரணர் உரைக்குறிப்பு (சூ. 294 (3) ) நோக்குக.

2,3. இளம்பூரணர் உரைக்குறிப்பு நோக்குக.

4. வெள்ளாளன்+குமரி > வெள்ளாள்+குமரி > வெள்ளாண்+குமரி = வெள்ளாண் குமரி.

5. பொருநன் + வாழ்க்கை.

6. 'வேடு' சாதியை உணர்த்தும் பெயர் (சீவக. 126 நச்.)

வேடன் 'வேட்டுவன்' எனத்திரியும்; வேட்டுவன் + குமரி = வேட்டுவக் குமரி எனமுடியும்.

**இளம்பூரணம்**

***340. 'மீன்' ஈற்று னகரம் றகரத்தோடு உறழ்ந்து முடிதல்***

**மீன்என் கிளவி வல்லெழுத்து உறழ்வே.**

இச்.....எனின், இதுவும் அவ்வீற்றுள் ஒன்றற்கு வேறு முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* மீன் என்னும் சொல் திரிபு வல்லெழுத்தி னோடு உறழ்ந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* மீன்கண் மீற்கண் செவி தலை புறம் - என வரும். *(44)*

## நச்சினார்க்கினியம்

### *339. 'மீன்' இறுதி வல்லெழுத்தோடு உறழ்தல்*

**மீன்என் கிளவி வல்லெழுத்து உறழ்வே.**

இஃது இயல்பு *(338)* விலக்கித் திரிபு வல்லெழுத்தி னோடு *(332)* உறழ்க என்றலின், (எய்தியது விலக்கிப்) பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* மீன்.....உறழ்வு - மீன் என்னும் சொல் திரிபு வல்லெழுத்தினோடு உறழ்ந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* மீன்கண் மீற்கண், மீன்சினை மீற்சினை, மீன்றலை மீற்றலை, மீன்புறம் மீற்புறம் எனவரும். *(44)*

## இளம்பூரணம்

### *341. தேன் வன்கணம் வருவழி முடியுமாறு*

**தேன்என் கிளவி வல்லெழுத்து இயையின்**
**மேல்நிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்**
**ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே**
**வல்லெழுத்து மிகுவழி இறுதி இல்லை.**

இதுவும் அது.

*(இ-ள்.)* தேன் என்னும் சொல், வல்லெழுத்து முதல் மொழியாய் வந்து பொருந்தின், மேல் மீன் என்னும் சொல்லிற்குச் சொன்ன திரிபு உறழ்ச்சியின் நிலைமை ஒத்து

முடிதலும், வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலும் ஆகிய அம்முறைமையினையுடைய இரண்டனையும் உரித்தாதலையும் உடைத்து; வல்லெழுத்து மிகுமிடத்து நிலைமொழியிறுதி னகரவொற்று நிலையின்றிக் கெடும் எ-று.

'உரிமையும்' என்ற உம்மை, 'மெல்லெழுத்து மிகினும்'(46) என மேல் வருகின்ற முடிபினை நோக்கி நின்றது[1].

*(உ-ம்.)* தேன்குடம் தேற்குடம் சாடி தூதை பானை - எனவும், தேக்குடம் சாடி தூதை பானை - எனவும் வரும். *(45)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*341.* 1) வரும் சூத்திரத்து மெல்லெழுத்து மிகுதியை நோக்குதலின், இவ்வும்மை எதிரது தழீஇய எச்சவும்மை ஆயிற்று.

**நச்சினார்க்கினியம்**

***340. 'தேன்' முடியுமாறு***

**தேன்என் கிளவி வல்லெழுத்து இயையின்**
**மேல்நிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்**
**ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே**
**வல்லெழுத்து மிகுவழி இறுதி இல்லை.**

இதுவும் அது, மேலதனொடு மாட்டெறிதலின்.

*(இ-ள்.)* தேன்.....இயையின் - தேன் என்னும் சொல் வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வரின்; மேனிலை....மிகுதலும் - மீன் என்பதற்குக் கூறிய திரிபுறழ்ச்சி நிலை ஒத்து முடிதலும், வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலும் ஆகிய; ஆமுறை....உடைத்து - அம்முறையினை யுடைய இரண்டனையும் உரித்தாதலையும் உடைத்து;

வல்லெழுத்து.... இல்லை - வல்லெழுத்து மிக்கு வருமிடத்து இறுதியில் நின்ற னகரம் கெடும் எ-று.

'உரிமையும்' என்னும் உம்மை 'மெல்லெழுத்து மிகினும்' (341) என மேல் வருகின்றதனை நோக்கிற்று[1].

(உ-ம்.) தேன்குடம் தேற்குடம் சாடி தூதை பானை - என மேனிலை ஒத்தன. தேக்குடம் சாடி தூதை பானை என னகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கன. (45)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***340.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்பு நோக்குக.

## இளம்பூரணம்

## *342. அஃது ஆண்டு மெல்லெழுத்தும் மிக்கு முடிதல்*

**மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

இச்.....எனின், மேலதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தேன் என கிளவி, வல்லெழுத்து வந்தால் வல்லெழுத்து மிகுதலேயன்றி, மெல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றம் இல்லை எ-று.

னகரக்கேடு அதிகாரத்தால் கொள்க (45)

(உ-ம்.) தேங்குடம் சாடி தூதை பானை - என வரும். (46)

## நச்சினார்க்கினியம்

## *341. அப்பெயர் னகரம்கெட்டு மெலி மிகவும் பெறுதல்*

**மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை.**

இதுவும் அது, உறழ்ச்சியும் வல்லெழுத்துமன்றி, மெல்லெழுத்தும் விதித்தலின்.

*(இ-ள்.)* மெல்லெழுத்து..... இல்லை - முற்கூறிய தேன் என் கிளவி, வல்லெழுத்து வந்தால், அவ்வல்லெழுத்து மிகுதலேயன்றி, மெல்லெழுத்து மிகினும் குற்றமில்லை எ-று.

னகரக்கேடு அதிகாரத்தாற் கொள்க. *(340)*[1]

*(உ-ம்.)* தேங்குடம் சாடி தூதை பானை எனவரும். *(46)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***341.*** 1. வருமொழித் தொழிலாகிய மெல்லெழுத்து வகுப்பவே, வருமொழித் தொழிலாகிய வல்லெழுத்துப் பேறு விலக்குண்டது என்று 229ஆம் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டமை காண்க. னகரக்கேடு நிலைமொழித் தொழிலாகலின், அதிகாரத்தாற் கொள்ள வேண்டுவதாயிற்று.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***342.*** **மெல்லெழுத் தியையின் மிகுதியொடு உறழும்.**

உரையாசிரியன்மார் 'இறுதியொடு உறழும்' எனப் பாடம் கொள்வர். அது மெல்லெழுத்து என்னும் எழுவாயொடு இயையாமையின், பொருந்தாமை புலனாம்.

***342.*** ['மிகுதியொடு உறழும்' என்புழி, மிகுதலோடு இயல்பும் ஆதலே உறழ்ச்சியின் பொருள் ஆதலின், 'மிகுதியொடு' மிகையாவான் செல்லும். உறழ்ச்சி ஈண்டு இப்பொருட்டாதல் சூ. *395* இலும் புலப்படும். திரிபு மூன்றனுள் ஏற்புடையதொன்றனை உய்த்துணர்வான் உறழ்தற்குப் பொருளாகக் கொள்ளல் வேண்டும். இறுதியொடு: வேற்றுமை மயக்கத்தான் இறுதிக்கண் எனப்பொருள்படும். பாடமாற்றத்தான் சிறப்புப் புதிதாக விளைவதொன்றின்று.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### 343. மென்கணம் வருவழி அச்சொல் முடியுமாறு

**மெல்லெழுத்து இயையின் இறுதியோடு உறழும்.**

இச்.....எனின், மேலதற்கு மென்கணத்துக்கண் தொகைமரபிற் கூறிய (5) முடிபொழிய, வேறுமுடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அத்தேன் என் கிளவி மெல்லெழுத்து முதல் மொழி வந்து இயையின், நிலைமொழி இறுதி னகாரஒற்றுக் கெடுதலும் கெடாமையும் ஆகிய உறழ்ச்சியாய் முடியும் எ-று.

(உ-ம்.) தேன்ஞெரி தேஞெரி நுனி முரி - என வரும்.

மேல் 'மானம் இல்லை' (46) என்றதனான், 'இறுதி யோடு உறழும்' என்றது, ஈறுகெட்டு வருமொழி மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் உறழ்தற்கும்[1], வருமொழி மிகாது இறுதி கெட்டும் கெடாதும் உறழ்தற்கும்,[2] அவ்விரண்டற்கும் உரித்தாய்ச் சென்றதனை விலக்கி, வருமொழி மிகாதே நிற்ப அவ்வீறே கெட்டும் கெடாதும் நின்று உறழும் என்பது கொள்ளப்பட்டது.

அதன்மேல் ஆமுறை (45) என்றதனான், சிறுபான்மை ஈறுகெட்டுத் தேஞ்ஞெரி நுனி முரி - என மெல்லெழுத்து மிகுதலும் கொள்க. (47)

#### இளம்பூரணம் உரைக்குறிப்பு

343. 1) தேஞ்ஞெரி தேஞெரி என்னும் உறழ்ச்சி

2) தேன்ஞெரி தேஞெரி என்னும் உறழ்ச்சி. இவ்விரண்டனுள் பின்னதே கொள்ளப்படும்.

"ஈறுகெட்டு.....உறழ்தற்கும், வருமொழி... உறழ் தற்கும் என இவ்விரண்டற்கும்" -- உரையுள் இச்சொல் விடப் பட்டுள்ளதனை இயைக்கவேண்டும்.

**நச்சினார்க்கினியம்**

## *342. அப்பெயர் மென்கணம் வருவழி முடியுமாறு*

**மெல்லெழுத்து இயையின் இறுதியோடு உறழும்.**

இது தொகை மரபினுள் 'வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி' (148) என்பதனாற் கூறிய இயல்பை விலக்கி, உறழும் என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* மெல்லெழுத்து....உறழும் - அத்தேன் என் கிளவி, மெல்லெழுத்து முதல் மொழி வந்தியையின், நிலைமொழியிறுதியின் னகர ஒற்றுக் கெடுதலும் கெடாமையும் ஆகிய உறழ்ச்சியாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* தேன்ஞெரி தேஞெரி - தேனுனி தேநுனி தேன்மொழி தேமொழி - என வரும்.

மேல் 'ஆமுறை' (340) என்றதனான், தேஞெரி தேஞ்ஞெரி - தேனுனி தேந்நுனி - தேமொழி தேம்மொழி - என னகரம் கெட்டுத் தத்தம் மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் முடிந்தனவும் கொள்க.

இனி, மேல் 'மானமில்லை' (341) என்றதனான், ஈறுகெட்டு மெல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிவனவும் கொண்டு, தேஞெரி தேநுனி தேமொழி என்பன காட்டின், அவை முற்கூறியவற்றுள் அடங்கும் என்க. (47)

**இளம்பூரணம்**

## *344. அது வருமொழி இறாவோடு இயல்பாய் முடியுமாறு*

**இறாஅல் தோற்றம் இயற்கை ஆகும்.**

இச்....எனின், இன்னும் அதற்கு உயிர்க்கணத்து ஒரு மொழிக்கண் முடியும் வேற்றுமை முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) தேன் என்னும் சொல் இறால் என்னும் வருமொழியது தோற்றத்துக்கண், நிலைமொழி னகரம் கெடாதே நின்று இயல்பாய் முடியும் எ-று.

வருமாறு: தேனிறால் - என வரும். (48)

### நச்சினார்க்கினியம்

## 343. அப்பெயர் 'இறால்' வருவழி முடியுமாறு

**இறாஅல் தோற்றம் இயற்கை ஆகும்.**

இஃது அத்தேன் என்பதற்கு உயிர்க்கணத்து ஒருமொழி முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்.) இறாஅல் தோற்றம் - தேன் என்னும் சொல் இறால் என்னும் வருமொழியது தோற்றத்துக்கண்; இயற்கை ஆகும் - நிலைமொழியின் னகரம் கெடாதே நின்று இயல்பாய் முடியும் எ-று.

வருமாறு: தேனிறால் என வரும். (48)

### இளம்பூரணம்

## 345. திரிந்து முடியுமாறு

**ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே.**

இச்.....எனின், இதுவும் அதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) அத்தேன் என்பது, இறால் என்னும் வருமொழிக்கண், பிறிதுமொரு தகரவொற்றுடன் மிகு தகரத்தொடு நின்று முடிதலும் உரித்து எ-று.

மேல் 'வல்லெழுத்து மிகுவழி இறுதி இல்லை' (143) என்றதனான், நிலைமொழியீறு கெடுக்க.

தகரம் மிகும் என்னாது ஒற்றுமிகு தகரம் என்றதனான் ஈரொற்று ஆக்குக.

வருமாறு: தேத்திறால் - என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாததனான், பிற வருமொழிக் கண்ணும் இம்முடிபு கொள்க.

(உ-ம்.) தேத்தடை தேத்தீ - என வரும்.

'தோற்றம்' என்றதனான் (48), தேனடை தேனீ - என்னும் இயல்பும் கொள்க. (49)

**நச்சினார்க்கினியம்**

**344. அது 'தேத்திறால்' எனவும் முடிதல்**

**ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே.**

இஃது அதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) ஒற்று....உரித்து - அத்தேன் என்பது இறாலொடு புணருமிடத்து, பிறிதுமொரு தகர ஒற்றாய் மிகும் தகரத்தொடு நின்று முடிதலும் உரித்து எ-று.

'வல்லெழுத்து மிகுவழி இறுதி இல்லை' (340) என்றதனான், நிலைமொழி ஈறு கெடுக்க. தகரம் மிகும் என்னாது 'ஒற்றுமிகு தகரம்' என்றதனான், ஈரொற்று ஆக்குக.

வருமாறு: தேத்திறால் என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாததனான், பிற வருமொழிக்கண்ணும் இம்முடிபு கொள்க.

தேத்தடை தேத்தீ எனவரும்.

'தோற்றம்' என்றதனான், தேனடை தேனீ என்னும் இயல்பும் கொள்க. (49)

## இளம்பூரணம்

### *346. மின் முதலிய நான்கும் இருவழியும் வன்கணம் வருவழி உகரம் பெறுதல்*

**மின்னும் பின்னும் பன்னும் கன்னும்**
**அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் அனைய.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு வேறுமுடிவு கூறு....ற்று.

*(இ-ள்.)* மின் என்னும் சொல்லும் பின் என்னும் சொல்லும் பன் என்னும் சொல்லும் கன் என்னும் சொல்லும் ஆகிய அந்நான்கு சொல்லும், வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல, வன்கணம் வந்தவழி உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், மென்கணத்துக்கண்ணும் இடைக்கணத்துக்கண்ணும் உகரம் பெற்றும், இயல்பாய் முடியும் எ-று. (உகரம் பெற்று இயல்பாயும் முடியும் என்றிருத்தல் வேண்டும்.)

*(உ-ம்.)* மின்னுக்கடிது பின்னுக்கடிது பன்னுக்கடிது கன்னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது யாது - எனவும், மின்னுக்கடுமை பின்னுக்கடுமை பன்னுக்கடுமை கன்னுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை யாப்பு - எனவும் வரும்.

'தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல' என்று ஓதாது இவ்வாறு எடுத்தோதிய அதனான், இம்முடிபினைத் தொழிற்பெயர்க்கும் பொருட்பெயர்க்கும் உடன்கொள்க.

மின் என்பதொரு தொழிலும் உண்டு, பொருளும் உண்டு. பிறவும் அன்ன. (50)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*346. 1)* பின்-பின்னுதல்; பின்னிவிட்ட கூந்தல்
பன் - சொல்லுதல்; சொல்
கன் - கன்னான் தொழில்; கன்னான்

**நச்சினார்க்கினியம்**

## *345. மின் முதலிய நாற்சொல்லும் இருவழியும் முடியுமாறு*

**மின்னும் பின்னும் பன்னும் கன்னும்**
**அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல.**

இஃது அல்வழிக்கண் இயல்பாயும் வேற்றுமைக்கண் திரிந்தும் வருக (147, 332) என எய்துவித்த முடிபை விலக்கித் தொழிற்பெயர் இயல்பாம் (296, 297) எனப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) மின்னும்.....சொல்லும் - மின் என்னும் சொல்லும் பின் என்னும் சொல்லும் பன் என்னும் சொல்லும் கன் என்னும் சொல்லும் ஆகிய அந்நான்கு சொல்லும்; தொழிற்பெயர் இயல - அல்வழியினும் வேற்றுமையினும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல, வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) 'மின்னுச்செய் விளக்கத்து' (கலி. 41:6) 'பின்னுப் பிணி அவிழ்ந்த' (காரிகை மேற்.) எனவும், பன்னுக் கடிது கன்னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மின்னுக்கடுமை பின்னுக்கடுமை பன்னுக் கடுமை கன்னுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

'தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல' என ஓதாது கிளந்தோதினார், இவை தொழில்நிலைக்கண் அன்றி வேறு தம்பொருள் உணர நின்றவழியும், இம்முடிபு எய்தும் என்றற்கு,

மின் என்பது மின்னுதல் தொழிலும் 'மின்னு நிமிர்ந் தன்ன' (புறநா. 57) என மின் எனப்படுவதொரு பொருளும் உணர்த்தும். ஏனையவும் அன்ன[1]. (50)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*345.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***345.*** **மின்னும் பின்னும்......தொழிற்பெய ரியல.**

இந்நான்கும் பெயர்ப்பொருளின ஆதலின் 'தொழிற் பெய ரியல' என்றார். மின்-மின்னற்கொடி; பின்-கூந்தலொழுங்கு; பன்-சொல்; கன்-கொல்லச்சாதி. இவை தொழிலையுணர்த்துங்கால் முதனிலைத் தொழிற் பெயர்களாம்.

**இளம்பூரணம்**

***347. வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண் ஏனை எகின் கிளவியோடு ஒத்தல்***

**வேற்றுமை யாயின் ஏனை எகினொடு**
**தோற்றம் ஒக்கும் கன்என் கிளவி.**

இச்....எனின், மேல் முடிபு கூறியவற்றுள் ஒன்றற்கு வேற்றுமை முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) வேற்றுமைப்பொருட்புணர்ச்சியாயின், ஒழிந்த மரம் அல்லா எகினொடு தோற்றம் ஒத்து, அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும், கன் என்னும் சொல் எ-று.

(உ-ம்.) கன்னக்குடம் சாடி தூதை பானை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - என வரும்.

சிறுபான்மை கன்னக்கடுமை - எனக் குணவேற்றுமைக் கண்ணும் இம்முடிபு கொள்க.[1]

'தோற்றம்' என்றதனான், அல்வழிக்கண் அகரமும் வன்கணத்துக்கண் மெல்லெழுத்தும் கொள்க.[2]

(உ-ம்.) கன்னங்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது - என வரும்.

இன்னும் 'தோற்றம்' என்றதனான், சிறுபான்மை கன்னங் கடுமை சிறுமை தீமை பெருமை எனக் குண வேற்றுமைக்கண்ணும் அகரமும் மெல்லெழுத்தும் கொள்க.

இக்கன் என்பதனது வேற்றுமை முடிபிற்கு மேல் (50) கூறியது குணவேற்றுமைக்கு எனவும், ஈண்டுக் கூறியது பொருட்பெயர்க்கு எனவும் கொள்க.[3] (51)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**347.** 1) பொருட்பெயர் குணவேற்றுமை இரண்டற்கும் வேற்றுமை முடிபு கூறியுள்ளமை 217, 330, 375ஆம் சூத்திர வுரையுள்ளும் காண்க.

2) **அல்வழி வன்கணத்துக்கண் அகரமும் மெல்லெழுத்தும் கொள்க**-என்று இவ்வாக்கியம் இருத்தல் வேண்டும்.

3) சூத்திரம் 330 உரையிலும் இவ்வாறே சுட்டியுள்ளமை காண்க.

### நச்சினார்க்கினியம்

*346. அவற்றுள் 'கன்' வேற்றுமைக்கண் முடியுமாறு*

**வேற்றுமை யாயின் ஏனை எகினொடு**
**தோற்றம் ஒக்கும் கன்னென் கிளவி.**

இது நிலைமொழிக்கண் உகரம் விலக்கி அகரம் வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) வேற்றுமை.....கிளவி - வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாயின், ஒழிந்த மரம் அல்லாத எகினொடு தோற்றம் ஒத்து, அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும், கன் என்னும் சொல் எ-று.

(உ-ம்.) கன்னக்குடம் சாடி தூதை பானை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை என வரும். கன்னக்கடுமை எனக் குண வேற்றுமையும் சிறுபான்மை கொள்க.[1]

'தோற்றம்' என்றதனான், அல்வழிக்கண் வன்கணத்து அகரமும் மெல்லெழுத்தும், ஏனைக்கணத்து அகரமும் கொள்க.

கன்னங் கடிது சிறிது தீது பெரிது எனவும், கன்ன ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும் வரும்.

கன்னங்கடுமை என குணவேற்றுமைக்கண்ணும் இவ்விதி கொள்க.

'பொன்னகர் வரைப்பிற் கன்னந்[2] தூக்கி' (ஐங். 247) என்பதோ எனின், அது மகர ஈற்றுப் பொருட்பெயர். (51)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***346.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. கன்னம் - நோய் தீர்தற்பொருட்டுக் கோயிற்குக் காணிக்கையாகச் செய்து கொடுக்கும் சிறுபடிவம்.

## இளம்பூரணம்

### *348. இவ்வீற்று இயற்பெயர் முன்னர்த் தந்தை வருவழிப் புணருமாறு*

**இயற்பெயர் முன்னர்த் தநதை முறைவரின்**
**முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்**
**மெய்ஒழித்து[1] அன்கெடும் அவ்வியற் பெயரே.**

*இச்....எனின், இவ்வீற்று விரவுப்பெயருள் இயற் பெயர்க்குந் தொகைமரபினுள் (13) எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....ற்று.*

*(இ-ள்.) னகார ஈற்று இயற்பெயர் முன்னர்த் தந்தை என்னும் முறைப்பெயர் வருமொழியாய் வரின், முதற்கண் மெய்கெட அதன்மேல் ஏறிநின்ற அகரம் கெடாது நிலை பெறும்; நிலைமொழியாகிய இயற்பெயர் (அவ் 'வன்' என்னும் சொல்லில்)[2] அகரம் ஏறிநின்ற மெய்யை ஒழித்து[3] அவ் 'அன்' தான் கெட்டு முடியும் எ-று.*

*(உ-ம்.) சாத்தந்தை கொற்றந்தை - என வரும்.*

*'முதற்கண் மெய்' என்றதனான், சாத்தன்றந்தை கொற்றன் றந்தை - என்னும் இயல்பு முடியும் கொள்க. (52)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*348. 1) ஒழித்து - அவ்விடத்தேயே நிற்கச் செய்து. 177, 351ஆம் சூத்திரங்களிலும் இவ்வாறே பொருள்படுதல் காண்க.*

*2) மிகையான இச்சொற்றொடர் நீக்கப்படுக.*

*3) ஒழித்து: (இளம்பூரணர் உரைக்கேற்ப,) கெடா தொழித்து-கெடாமல் செய்து - எனப் பொருள் செய்க.*

### நச்சினார்க்கினியம்

## *347. இவ்வீற்று இயற்பெயர் முன்னர்த் 'தந்தை' புணருமாறு*

**இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்**
**முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்**
**மெய்ஒழித்து[1] அன்கெடும் அவ்வியற் பெயரே.**

இஃது 'அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா ருளவே' (155) என்றதற்கு ஈண்டுத் திரிபு கூறலின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) இயற்பெயர்....வரின் - இவ்வீற்று விரவுப் பெயருள், இயற்பெயரின் முன்னர்த் தந்தை என்னும் முறைப்பெயர் வருமொழியாய் வருமாயின்; முதற்கண்..... நிலையும் - அத்தந்தை என்பதன் முதற்கண் நின்ற தகர ஒற்றுக்கெட, அதன்மேல் ஏறிநின்ற அகரம் கெடாது நிற்கும்; அவ்வியற்பெயர் மெய் ஒழித்து அன்கெடும் - அந்நிலை மொழியாகிய இயற்பெயர், அன் என்னும் சொல்லில் அகரம் ஏறிநின்ற மெய்யை ஒழித்து அவ் 'அன்' தான் கெட்டு முடியும் எ-று.

(உ-ம்.) சாத்தந்தை கொற்றந்தை என வரும்.

'முதற்கண் மெய்' என்றதனான், சாத்தன்றந்தை கொற்றன்றந்தை என்னும் இயல்பு முடியும் கொள்க. (52)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***347.*** 1) இச்சொல்லாட்சி 350 ஆம் சூத்திரத்தும் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***348.*** **இயற்பெயர் முன்னர்.....அவ்வியற் பெயரே.**

இச்சூத்திரம் 'அஃறிணை விரவுப்பெயர்' (156) என்ற சூத்திரத்திற்குத் திரிபு கூறுகின்றது எனக் கொண்டார் நச்சினார்க்கினியர். இங்கு உயர்திணை அஃறிணை இரண்டற்கும் விதி கூறப்படுகின்றமையான், அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாது எனத் தோன்றுகின்றது.

***348.*** [தொல்லுரைகாரர் இருவரும் அஃறிணை விரவுப் பெயரை உயர்திணை விரவுப்பெயர்க்கு இனமாகக் கொண்டிலர். விரவுப்பெயரது உண்மைத் தன்மையை விளக்க வந்த தன்னோடியையின்மை நீக்கிய விசேடணமாகவே

'அஃறிணை' நின்றது என்னும் கருத்தினர் அன்னோர். சாத்திரியார் சேனாவரையர் கருத்தினைப் பின்பற்றி அஃறிணை விரவுப்பெயர் உயர்திணை விரவுப்பெயர் என இரண்டாகக் கொண்டார். அம்மயக்கம் பற்றி நச்சினார்க் கினியருரையை மறுக்கும் இக்கருத்து ஏலாது என்க.]

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***347.*** **இயற்பெயர் முன்னர்த்.......அவ்வியற் பெயரே.**

கொற்றன்+தந்தை என்னும் பெயர்கள் கொற்றந்தை என்றாயின கொண்டு இவ்வாறு விதி கூறினார். வருமொழி முதலிலுள்ள மெய் கெடுதலும், நிலைமொழியீற்றின் னகரமே யன்றி அதன் அயலதாகிய அகரம் கெடுதலும் இயல்பல்ல. இதன் உண்மைத் தன்மை மொழி நூலாய்ச்சியான் அறிதற்பாலது.

***347.***[ஒரே ஓசைப்பட இரண்டசை நிகழுமிடத்து ஓரசை கெட்டுவிடுதல் மொழியியல் நூலார் கண்ட வழக்கு நெறி. ஈண்டு நிலைமொழியீற்றசையும் (அன்) வருமொழி முதலசையும் (அந்) அன்னவாதல் காண்க.]

**இளம்பூரணம்**

***349. ஆதன், பூதன்-என்னும் இயற்பெயர்கள் புணருமாறு***

> **ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு**
> **பெயர்ஒற்று அகரம் துவரக் கெடுமே.**

இச்....எனின், மேலதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) மேற்கூறிய இயற்பெயருள், ஆதனும் பூதனும் என்னும் இயற்பெயர்கள், மேற்கூறிய செய்கையொடு நிலை மொழிப் பெயருள் 'அன்' கெட நின்ற ஒற்றும், வரு மொழியுள் ஒற்றுக்கெட நின்ற அகரமும், முற்றக் கெட்டு முடியும் எ-று.

வருமாறு: ஆந்தை பூந்தை - என வரும்.

'இயல்பு' என்றதனான், பெயரொற்றும் அகரமும் கெடாதே நின்று முடிந்தவாறே முடிந்தாலும் கொள்க.

வருமாறு: ஆதந்தை பூதந்தை - என வரும்.

'துவர' என்றதனான், அழான் - புழான்[1] - என நிறுத்திப் பொருந்தின செய்கை செய்து, அழாந்தை புழாந்தை - என முடிக்க. (53)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*349.* 1) அழானும் புழானும் இயற்பெயர் போலும்.

**நச்சினார்க்கினியம்**

### *348. ஆதன், பூதன் முன்னர் அம்முறைப்பெயர் புணருமாறு*

**ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு**
**பெயர்ஒற்று அகரம் துவரக் கெடுமே.**

இது மேலதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

*(இ-ள்.)* ஆதனும் பூதனும் - முற்கூறிய இயற்பெயருள், ஆதனும் பூதனும் என்னும் இயற்பெயர்கள் தந்தை என்னும் முறைப்பெயரொடு முடியுங்கால்; கூறிய இயல்பொடு - முற்கூறிய நிலைமொழி அன் கெடுதலும் வருமொழித் தகர ஒற்றுக் கெடுதலும் ஆகிய செய்கைகளுடனே; பெயர்...... கெடும் - நிலைமொழிப் பெயரில் 'அன்'கெட நின்ற தகர ஒற்றும், வருமொழியில் தகர ஒற்றுக்கெட நின்ற அகரமும் முற்றக்கெட்டு முடியும் எ-று.

வருமாறு: ஆந்தை பூந்தை என வரும்.

'இயல்பு' என்றதனான், பெயரொற்றும் அகரமும் கெடாதே நிற்றலும் கொள்க. ஆதந்தை பூதந்தை என வரும்.

இனித்'துவர' என்றதனான், அழான் புழான் என நிறுத்தித் தந்தை வருவித்து, நிலைமொழி னகரமும் வருமொழித் தகரமும் அகரமும் கெடுத்து, அழாந்தை புழாந்தை[1] என முடிக்க. *(53)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***348.*** இடைப்பதங்கள் தொக்க தொகைக்கு உதாரணமாகச் சாத்தங் கொற்றன்-பெருவாயில் முள்ளி-காரிமாறன்-வடுகங் கண்ணன் - என்பனவற்றை 350ஆம் சூத்திர விதியாற் காட்டுவர் பி.வி. நூலார் (கா.26). சாத்தனுக்கு மகனாகிய கொற்றன் - பெருவாயிலார்க்கு மகனாகிய முள்ளி முதலாகப் பொருள் விரியும்.

1. அழானுக்குத் தந்தை, புழானுக்குத் தந்தை.

**இளம்பூரணம்**

***350. இயற்பெயர் பண்படுத்து வருவழி இயல்பாய் முடிதல்***

**சிறப்பொடு வருவழி இயற்கை ஆகும்.**

இச்.....எனின், எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள். இவ்வியற்பெயர் பண்பு அடுத்து வருவழி, முற்கூறிய இருமொழிச் செய்கையும் தவிர்த்து இயல்பாய் முடியும்[1] எ-று.

(உ-ம்.) பெருஞ்சாத்தன்றந்தை பெருங்கொற்றன் றந்தை- எனவரும். *(54)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***350.*** *1)* பண்படை நிலைமொழிக்கே உரியது என்றார்.

**நச்சினார்க்கினியம்**

## *349. இயற்பெயர் அடையடுத்துழி இயல்பாய் முடிதல்*

**சிறப்பொடு வருவழி இயற்கை ஆகும்.**

இஃது எய்தியது விலக்கியது.

(இ-ள்.) சிறப்பொடு....ஆகும் - அவ்வியற்பெயர் பண்பு அடுத்து வரும்வழி, முற்கூறிய இருவகைச் செய்கையும் தவிர்ந்து இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) பெருஞ்சாத்தன்றந்தை, பெருங்கொற்றன் றந்தை[1] என வரும். கொற்றங் கொற்றன்றந்தை[2], சாத்தங் கொற்றன்றந்தை என்றாற் போல்வன பண்பன்றி அடையடுத்தனவாதலின் புறனடையான் முடிக்க. (54)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***349.*** 1. பண்படை சாத்தனுக்கன்றி, அவன்தந்தைக்கு அன்று.

2. கொற்றனுக்கு மகனாகிய கொற்றன், சாத்தனுக்கு மகனாகிய கொற்றன் எனப் பெயரடைகளும் கொற்றனுக்கே உரிய என்றவாறு.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***350.*** **சிறப்பொடு வருவழி இயற்கை ஆகும்.**

'சிறப்பொடு' என்பதற்குப் பண்புஅடுத்து எனப் பொருள் கூறினர் உரையாளர். ('பெருஞ்சாத்தன்' என இல்குணம் அடுத்து வழக்கின்கண்ணும் இனம் சுட்டாது வருதலின்) இவ்வாறு பொருள்கூறாது சிறப்புப் பெயராய் எனக்கூறலாமெனத் தோற்றுகிறது. ஆங்குச் சிறப்புப் பெயர் என்றதற்கு இனம் சுட்டாத தனிப்பெயர் என்பது பொருளாம்.

*350.* [(இல்குணமன்றி) உள்குணமாகிய பண்பு 'சிறப்பு' எனப்படும் என்பது உரையாளர் கருத்து. சாத்தர் இருவர் உளராயவழி, வயது மூத்தான் பெருஞ்சாத்தன் எனப்படு மன்றே? பெருஞ்சாத்தன் தந்தை என இயற்பெயர் பண்படை யடுத்து வருமிடத்து இயல்பாக முடியும் என்பது சூத்திரம். கருங்குழலாதன் தந்தை, கணியன்பூதன் தந்தை என உதாரணம் காட்டுவர் பாலசுந்தரம்.

சிறப்பு என்பதற்குச் சிறப்புப்பெயர் என்று பொருள் கூறி, அது இனஞ்சுட்டாத தனிப்பெயராக வரும் என்றார் சாத்திரியார். ஆசிரியன்சாத்தன் தந்தை, புலவன்பூதன் தந்தை என்ற உதாரணங்களை இவர் கருதியிருக்கக்கூடும். ]

## இளம்பூரணம்

### *351. அவ்வியற்பெயர் மக்கள் முறைப்பெயர் புணர்வழிப் படும் விகாரம்*

**அப்பெயர் மெய்ஒழித்து[1] அன்கெடு வழியும்**
**நிற்றலும் உரித்தே அம்என் சாரியை**
**மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான.**

இச்....எனின், மேலதற்கு ஒருவழி எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு.....ற்று.

(இ-ள்.) அவ்வியற்பெயர் மக்கள் என்னும் முறைப்பெயர் வந்து கூடுமிடத்தின் கண்ணும், பிறிதிடத்தும், தான் ஏறிய மெய்யை ஒழித்து அன்கெடும்; அவ்வழி அம் என் சாரியை நிற்றலும் உரித்து எ-று.

(உ-ம்.) சாத்தங்[2] கொற்றன் கொற்றங் கொற்றன் எனவும், சாத்தங்குடி கொற்றங்குடி - எனவும் வரும். (55)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*351.* 1) 348 (1) - இல் வரைந்த குறிப்புக் காண்க.

2) 'அம்' சாரியைத் திரிபினை 130ஆம் சூத்திரத்தாற் கொள்க.

## நச்சினார்க்கினியம்

### 350. இயற்பெயர் மகனாகிய முறைப்பெயர் வருவழி முடிபு

**அப்பெயர் மெய்ஒழித்து அன்கெடு வழியும்**
**நிற்றலும் உரித்தே அம்என் சாரியை**
**மக்கள் முறைதொகூஉம் மருங்கின் ஆன.**

இது மேலதற்கு வேறொரு வருமொழிக்கண் எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) அப்பெயர் மக்கள் ஆன முறைதொகூஉம் மருங்கினும் - அவ்வியற்பெயர் முன்னர்த் தந்தையன்றி மகனாகிய முறைப்பெயர் வந்து தொகுமிடத்தினும்; மெய் ஒழித்து அன் கெடுவழி அம் என் சாரியை நிற்றலும் உரித்து - அவ்வியற்பெயரில் தான் ஏறிய மெய் நிற்க, அன் கெட்டு அம்முச்சாரியை வந்து நிற்றலும் உரித்து எ-று.

'ஆன' என்பதனை மக்களோடும், உம்மையை மருங்கினொடும் கூட்டுக. 'முறை தொகூஉம் மருங்கின்' என்றது, இன்னார்க்கு மகன் என்றும் முறைப்பெயராய்ச் சேருமிடத்து என்றவாறு.

(உ-ம்.) கொற்றங்கொற்றன் சாத்தங்கொற்றன் என நிலைமொழி அன் கெட்டுழி அம்மு வந்தது[1]. இவற்றிற்கு அது என்றும் உருபு விரியாது அதன் உடைமைப் பொருள் விரிக்க[2]. இது முறைப்பெயர்.

இனி, உம்மையான், கொற்றங்குடி சாத்தங்குடி[3] எனப் பிறபெயர் தொக்கனவும் கொள்க.

'மெய்யொழித்து' என்றதனானே, கொற்றமங்கலம் சாத்தமங்கலம் என்பவற்றின்கண் அம்மின் மகரம் கெடுதலும், வேட்டமங்கலம் வேட்டங்குடி[4] என்பவற்றின் நிலைமொழி ஒற்று இரட்டுதலும் கொள்க. (55)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***350.*** 348ஆம் சூத்திர உரைக்குறிப்பு ஈண்டும் கொள்க.

1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. கொற்றனுடைய மகனாகிய கொற்றன்- சாத்தனுடைய மகனாகிய கொற்றன் - என ஆறன் வேற்றுமைக் குரிய உடைமைப் பொருள் விரிக்கப்படும். அது என்னும் ஆறனுருபு அஃறிணையொருமைச்சுட்டுப்பெயர் போறலின் மகனாகிய உயர்திணைப் பெயரோடியையாது. ஆறனுருபு பெயர்கொண்டு முடிதலின், இத்திணை மயக்கினைப் பரிகரித்தனர் தமிழ்நூலார் எனவே கொள்க.

3. சாத்தனது குடியிருப்பாகிய ஊர், கொற்றனது குடியிருப்பாகிய ஊர்.

4. வேடன்+மங்கலம், வேடன்+குடி: டகரம் இரட்டித்தது; னகரம் முறையே கெடுதலும் மெல்லொற்றாகத் திரிதலும் எய்திற்று.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***350.*** **அப்பெயர் மெய்யொழித்து.....மருங்கினான**

நிலைமொழி யீற்று அன் கெடும் என்றும் அங்கு அம் வரும் என்றும் கூறினது இயல்பாதல் இன்று. வல்லெழுத்து வரும்வழி, நிலைமொழி யீற்று னகரம் அவற்றின் இன மெல்லெழுத்தாய்த் திரிந்துளது.

பிட்டன்+கொற்றன்=பிட்டங்கொற்றன்

அந்துவன்+சாத்தன்=அந்துவஞ் சாத்தன்

என்றிவ்வாறு திரிதலே முறைமை.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**350.** அப்பெயர் மெய்யொழித்து......மருங்கி னான.

கொற்றங்கொற்றனார் -மூலங்கீரனார் -பூதம்புல்லனார்-சல்லியங்குமரனார் என வரும். பூதன்+தத்தனார் என்பது மெய்யொடும் அன் கெட்டுப் பூதத்தனார் (அகநா. 74) எனவும் வரும்.

## இளம்பூரணம்

**352. தான், பேன், கோன் - இவ்வியற்பெயர்கள் மேலை முறைப்பெயர்களொடு புணருமாறு**

**தானும் பேனும் கோனும் என்னும்**
**ஆமுறை இயற்பெயர் திரிபுஇடன் இலவே.**

இச்.....எனின், மேலதற்கு ஒருவழி எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு....ற்று.

(இ-ள்.) அவ்வியற்பெயருள் தானும் பேனும் கோனும் என்னும் முறையினையுடைய இயற்பெயர்கள், தந்தை - மக்கள் - என்னும் முறைப்பெயரொடு புணரும்வழி மேற்கூறிய திரிபுகள் இன்றி இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) தான்றந்தை[1] பேன்றந்தை கோன்றந்தை- எனவும், தான்கொற்றன் பேன்கொற்றன் கோன்கொற்றன்- எனவும் வரும். (56)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**352.** 1) தகரம் னகரத்தின் முன்னர் றகரமாகத் திரிதல் 150ஆம் சூத்திர விதி.

## நச்சினார்க்கினியம்

### *351. இயற்பெயர்சில தந்தையும் மகன் முறையும் வருவழி இயல்பாதல்*

**தானும் பேனும் கோனும் என்னும்**
**ஆமுறை இயற்பெயர் திரிபிடன் இலவே.**

இது மேலதற்கு ஒருவழி எய்தியது விலக்கியது.

*(இ-ள்.)* தானும்.....இயற்பெயர் - அவ்வியற்பெயருள், தானும் பேனும் கோனும் என்னும் அம்முறையினையுடைய இயற்பெயர்கள், தந்தையொடும் மக்கள் முறைமையொடும் புணரும்வழி; திரிபு இடன்இல-முற்கூறிய திரிபுகள் இன்றி இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* தான்றந்தை பேன்றந்தை கோன்றந்தை[1] எனவும், தான்கொற்றன் பேன்கொற்றன் கோன்கொற்றன்[2] எனவும் வரும். பேன், கோன் என்பன முற்கால வழக்கு.

இவை தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (155) என்புழி இயல்பாயினவேனும், ஈண்டு இவ்வீற்றிற்குத் திரிபு கூறுதலின் அதனை விலக்கி இயல்பாம் என்பது கூறினார்[3]. *(56)*

#### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***351.*** தான் பேன் கோன் என்னும் இயற்பெயர்கள் தாயன் பேயன் கோவன் என்பவற்றின் திரிபுகள் என்றார் பாலசுந்தரம் அவர்கள். அதுவே பொருந்துவதாகத் தோற்றுகிறது.

*1. தா(ன் என்பா)னுக்குத் தந்தை என்க.*

*2. தா(ன் என்பா)னுக்கு மகனாகிய கொற்றன் என்க.*

3. திரிபு 347, 348, 350 ஆம் சூத்திரங்களின் விதியான் வந்தவை. அவை இயற்பெயரிறுதி அன் கெடலும், முறைப் பெயர் முதற்கண் நின்ற எழுத்துக் கெடலும், அம்முச்சாரியை தோன்றலும் முதலாயின.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**351.** **தானும் பேனும்.......திரிபிடன் இலவே.**

தாயன் பேயன் கோவன் என்னும் சொற்களே இடைக் குறையாய்த் தான் பேன் கோன் என வழங்குதல் நோக்கி, 'ஆமுறை இயற்பெயர்' என்றார். தான்தந்தை-தான் என்பானின் தந்தை: தான்கொற்றன்- தான் என்பானின் மகனாகிய கொற்றன் எனப் பொருள் கொள்க.

## இளம்பூரணம்

## 353. *தான், யான் - எனும் பெயர்கள் வேற்றுமைக்கண் தன், என் - ஆதல்*

**தான்யான் எனும்பெயர் உருபுஇயல் நிலையும்.**

இச்......எனின், விரவுப்பெயருள் தான் என்பதற்கும், உயர்திணைப் பெயருள் யான் என்பதற்கும், வேற்றுமைக்கண் தொகைமரபினுள் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு....ற்று.

(இ-ள்.) தான் என்னும் விரவுப்பெயரும், யான் என்னும் உயர்திணைப் பெயரும், மேல் தொகைமரபினுள் கூறிய இயல்புகள் ஒழித்து, உருபுபுணர்ச்சியிற் கூறிய இயல்பின் கண்ணே நிலைபெற்று, தான் என்பது நெடுமுதல் குறுகித் 'தன்' என்றாயும், யான் என்பது யகரம் கெட்டு ஆகாரம் எகரமாய் 'என்' என்றாயும் முடியும் எ-று.

(உ-ம்.) தன்கை என்கை[1] செவி தலை புறம் - எனவும், தன்ஞாண் என்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை - எனவும் வரும். (57)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***353.*** *1) என்கை: 193, 189 ஆம் சூத்திர விதியான் முடியும்.*

**நச்சினார்க்கினியம்**

## *352. தான், யான் - எனுமிவை தன், என் - எனத் திரிதல்*

**தான்யான் எனும்பெயர் உருபியல் நிலையும்.**

*இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (155) என்பதனானே இயல்பாய் நின்ற தான் என்பதனையும் 'உயரீறாகிய' (153) என்பதனான் இயல்பாய் நின்ற யான் என்பதனையும் அவ்வியல்பு விலக்கி உருபியலொடு மாட்டெறிதலின்.*

*(இ-ள்.) தான்....நிலையும் - தான் என்னும் விரவுப் பெயரும் யான் என்னும் உயர்திணைப்பெயரும், உருபியலிற் கூறிய இயல்பிலே நிலைபெற்றுத்(192, 188) தான் என்பது நெடுமுதல் குறுகித் தன் என்றும், யான் என்பது ஆகாரம் எகரமாய் யகரம் கெட்டு என் என்றும் முடியும் எ-று.*

*(உ-ம்.) தன்கை என்கை செவி தலை புறம் - என வரும்.*

*வருமொழி வரையாது கூறினமையின்[1], இயல்பு கணத்துக்கண்ணும் தன்ஞாண் என்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை என வரும்.* *(57)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***352.*** *1. வருமொழி வரையாது கூறியமை 324, 327, 331, 345ஆம் சூத்திர முதலியவற்றுளும் காண்க.*

**இளம்பூரணம்**

## *354. அப்பெயர்கள் அல்வழிக்கண் இயல்பாய் முடிதல்*

**வேற்றுமை அல்வழிக் குறுகலும் திரிதலும்**
**தோற்றம் இல்லை என்மனார் புலவர்.**

இச்....எனில், மேலவற்றிற்கு அல்வழிமுடிபு கூறு....ற்று.

(இ-ள்.) மேற்கூறிய தான் யான் என்னும் பெயர்கள், வேற்றுமைப் புணர்ச்சி அல்லாதவிடத்து, தான் என்பது நெடுமுதல் குறுகலும் யான் என்பது அவ்வாறு திரிதலும் தோற்றமின்றி, இயல்பாய் முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) தான் குறியன் சிறியன் தீயன் பெரியன் ஞான்றான் நீண்டான் மாண்டான் - எனவும், யான் குறியேன் சிறியேன் தீயேன் பெரியேன் ஞான்றேன் நீண்டேன் மாண்டேன் - எனவும் வரும்.

'தோற்றம்' என்றதனான், வேற்றுமைக்கண் அவ்வாறன்றித் திரிதலும் கொள்க.

(உ-ம்.) தற்புகழ் தற்பாடி[1] எனவும், எற்புகழ் எற்பாடி[2] - எனவும் வரும். (58)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**354.** 1) தற்பாடி, எற்பாடி -தன்னைப்பாடி, என்னைப்பாடி
தற்புகழ், எற்புகழ் - தன்னைப்பற்றிய புகழ், என்னைப் பற்றிய புகழ்

**நச்சினார்க்கினியம்**

## 353. அல்வழிக்கண் அவை இயல்பாய் முடிதல்

**வேற்றுமை அல்வழிக் குறுகலும் திரிதலும்**
**தோற்றம் இல்லை என்மனார் புலவர்.**

இஃது அல்வழிக்கண் இயல்பாக என்றலின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) வேற்றுமை அல்வழி - முற்கூறிய தான் யான் என்பன வேற்றுமைப் புணர்ச்சி அல்லாதவிடத்து; குறுகலும்...புலவர் - தான் என்பது நெடுமுதல் குறுகுதலும், யான் என்பது அவ்வாறு திரிதலும் தோற்றமின்றி இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

(உ-ம்.) தான் குறியன் சிறியன் தீயன் பெரியன் ஞான்றான் நீண்டான் மாண்டான் வலியன் எனவும், யான் குறியேன் சிறியேன் தீயேன் பெரியேன் ஞான்றேன் நீண்டேன் மாண்டேன் வலியேன் எனவும் வரும்.

'தோற்றம்' என்றதனான், வேற்றுமைக்கண் அவ்வாறன்றி னகரம் திரிதலும் கொள்க.

தற்புகழ் தற்பாடி, எற்புகழ் எற்பாடி[1] என வரும். (58)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*353.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**இளம்பூரணம்**

***355. அழன் ஈறுகெட வருமொழி வல்லெழுத்து மிகுதல்***

**அழன்என் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) அழன் என்னும் சொல், அழ என னகரஈறு கெட, வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) அழக்குடம்[1] சாடி தூதை பானை - என வரும். அழன் என்பது பிணம். (59)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*355.* 1) ஈமக்கடன் இறுக்க நீர்முகந்த குடம்.

## நச்சினார்க்கினியம்

### 354. 'அழன்' வேற்றுமை முடிபு

**அழன்என் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே.**

இது வேற்றுமைக்கண் ணகரம் திரியாது கெடுக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* அழன்....மிகும் - அழன் என்னும் சொல் தன் ஈற்று ணகரம் கெட, வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* அழக்குடம்[1] சாடி தூதை பானை எனவரும், அழக்குடம் என்பது பிணக்குடத்தை.

## நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**354.** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

### 356. 'முன்' என்கிளவி 'இல்'லொடு முடியுமாறு

**முன்என் கிளவி முன்னர்த் தோன்றும்**
**இல்என் கிளவிமிசை றகரம் ஒற்றல்**
**தொல்இயல் மருங்கின் மரீஇய மரபே.**

இச்....எனின், இவ்வீற்றுள் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉக்களுள்[1] ஒன்றற்கு வேறுமுடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* முன் என்னும் சொல்லின் முன்னர்த் தோன்றும் இல் என்னும் சொல்லின் மேலாக றகரவொற்று வந்து முடிதல், பழையதாகிய இயல்பினையுடைய இடத்து மருவி வந்த இலக்கண முடிபு எ-று.

வருமாறு: முன்றில் - என வரும்.

இது 'கடைக்கண்' என்றாற்போல வரூஉம் மரூஉ முடிபு போலன்றி, முன்னில் என ஒற்று இரட்டி முடியற்பாலது, இருமொழிக்கும் இயல்பில்லதோர் ஒற்று மிக்கு முடிந்த மரூஉ முடிபு. *(60)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***356.*** *1)* நிலைமொழி வருமொழி செய்தற்கு இயைந்த மரூஉ; சூத்திர விதியான் முறையே முடிக்கப்பட்டது.

*2)* பின்முன் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை.

*3)* 'இருமொழிக்கும் இயல்பில்லதோர் ஒற்று' என்று இளம்பூரணர் குறிப்பிட்டார். றகர ஒற்று அவ்வாறு இருமொழிக்கும் இயைபு இல்லாதது ஒன்றன்று. நச்சினார்க்கினியர் நிலைமொழியாக மாறிநின்ற 'முன்' என்பதன் ஈற்று னகரத்திற்கு இனமான வல்லொற்று றகரம் எனச் சுட்டிப் போந்தார்.

### நச்சினார்க்கினியம்

### *355. 'முன்' இல்லொடு புணர்வழி இலக்கண மரூஉ முடிபு*

**முன்என் கிளவி முன்னர்த் தோன்றும்**
**இல்என் கிளவிமிசை றகரம் ஒற்றல்**
**தொல்இயல் மருங்கின் மரீஇய மரபே.**

இது 'மருவின் தொகுதி' *(111)* என்றதனாற் கூறிய இலக்கண மரூஉக்களில் ஒன்றற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) முன்னென்....ஒற்றல் - முன் என்னும் சொல்லின் முன்னே வரும் இல் என்னும் சொல்லின் மேல் றகர ஒற்று வந்துநின்று முடிதல்; தொல்லியல்.....மரபு - பழையதாகிய இயல்பினையுடைய வழக்கிடத்து மருவி வந்த இலக்கண முடிபு எ-று.

வருமாறு: முன்றில் என வரும்.

இல்முன் என நிற்கற்பாலது முன்றில் என்று தலை தடுமாறுதலின், மரூஉ ஆயிற்று. முன் என்பதற்கு ஒற்று இரட்டுதல் இலக்கணமேனும், அதுவன்றித் தனக்கு இனமாயதொரு றகரஒற்றுப் பெறுதலின், வேறு முடிபாயிற்று[1]. (60)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*355.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**இளம்பூரணம்**

### *357. 'பொன்' செய்யுட்கண் 'பொலம்' என முடியுமாறு*

**பொன்என் கிளவி ஈறுகெட முறையின்**
**முன்னர்த் தோன்றும் லகார மகாரம்**
**செய்யுள் மருங்கின் தொடரிய லான.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்குச் செய்யுள் முடிபு[1] கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) பொன் என்னும் சொல், பகர முதல்மொழி வந்தவிடத்து, தன் ஈற்றின் னகரம் கெட, முறையானே அதன் முன்னர் லகாரமும் மகாரமும் தோன்றி முடியும்; யாண்டெனின், செய்யுளிடத்துச் சொற்கள் தம்மின் தொடர்ச்சிப்படும் இயல்பின்கண் எ-று.

'முறையின்' என்றதனான், லகரம் உயிர்மெய்யாகவும் மகரம் தனிமெய்யாகவும் கொள்க.

(உ-ம்.) 'பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி' (மலைபடு. 574) - என வரும்.

'தொடரியலான' என்றதனான், பகரம் அல்லாத வன்கணத்துக்கண்ணும் சிறுபான்மை ஈறுகெட்டு லகரமும் வல்லெழுத்துக்கு ஏற்ற மெல்லெழுத்தும் மிக்கு முடிதலும் கொள்க.

(உ-ம்.) பொலங்கலம் பொலஞ்சுடர் பொலந்தேர் - என வரும்.

***ஒன்றென முடித்தல்*** என்பதனான், 'பொலநறுந் தெரியல்' (புறநா. 29) 'பொலமல ராவிரை' (கலி. 138) - என்றாற்போல வரும் பிறகணத்து முடிபும் கொள்க. (61)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*357. 1)* செய்யுளிடத்து நிகழ்வனவாக வருமுடிவுகள் உயிர்மயங்கியலுள் *6, 11, 32, 35, 56, 86* ஆம் சூத்திரங்களிலும், புள்ளிமயங்கியலுள் 10, 21, 61 ஆம் சூத்திரங்களிலும், குற்றியலுகரப் புணரியலுள் 75 ஆம் சூத்திரத்திலும் விதிக்கப்பெற்றுள.

"'போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியன்னார்' (சிலப். 1:60) என்னும் சிலப்பதிகாரப் பாட்டும், 'பூநறுந் தேறல் பொலன்வண்ணத் தேந்தி' (1 : 35 : 177) என்னும் உதயணன் கதையும் அறிவார் 'பொலனே' வேண்டுவர் என வுணர்க" என்பர் தக்கயாகப்பரணி உரையாசிரியர். இஃது **அடிகளாசிரியர்** குறிப்பு.

**நச்சினார்க்கினியம்**

***356. 'பொன்' செய்யுள் முடிபு பெறுமாறு***

**பொன்னென் கிளவி ஈறுகெட முறையின்**
**முன்னர்த் தோன்றும் லகாரம் மகாரம்**
**செய்யுள் மருங்கின் தொடரிய லான.**

இஃது இவ்வீற்றுப்பெயர் ஒன்றற்குச் செய்யுள் முடிபு[1] கூறுதலின், எய்தாது எய்துவித்தது.

(இ-ள்.) பொன்னென்....கெட - பொன் என்னும் சொல் தன்ஈறாகிய னகரம் கெடாநிற்க; முன்னர் லகார மகாரம் முறையின் தோன்றும் - அதன் முன்னர் லகரமும் மகர ஒற்றும்

முறையானே வந்து நிற்கும்; செய்யுள் மருங்கின் தொடரியலான - அங்ஙனம் நிற்பது, செய்யுளிடத்துச் சொற்கள் தம்முள் தொடர்ச்சிப்படும் இயல்பின்கண் எ-று.

'முறையின்' என்றதனான் மகரம் ஒற்றாதல் கொள்க.

*(உ-ம்.)* 'பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி' *(மலைபடு. 74)* என வரும்.

'தொடரியலான' என்றதனானே, வன்கணத்துக்கண் லகரம் நிற்க மகரம் வல்லெழுத்திற்கேற்ற மெல்லெழுத்தாகத் திரிதல் கொள்க.

'பொலங்கலம் சுமந்த பூண்டாங் கிளமுலை' *(அகநா.16)* 'பொலஞ்சுட ராழி பூண்ட தேரே' 'பொலந்தார்க் குட்டுவன்' என வரும்.

இன்னும் இதனானே, 'பொலனறுந் தெரியல்' *(புறநா.29)* 'பொலமலர் ஆவிரை' என்றாற்போல மகரம் கெட்டுப் பிறகணத்து[2] முடிதலும் கொள்க. *(61)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***356.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. பிறகணம் என்றது ஈண்டு மென்கணத்தை. இடைக்கணம் வருமிடத்து னகரம் கெடாமை முடிதல் 'பொலன்வள்ளத் தேந்தி' *(பெருங். 1 : 35 : 177)* எனக் காண்க. **அடிகளாசிரியர்** குறிப்பு இது.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***356.*** பொன்னென் கிளவி....தொடரிய லான.

லகர ஒற்றொடு மகரம் மயங்காதாகலின், லகரம் என்றது உயிர்மெய்யை என்பது பெறப்படும்.

பொலம் என நின்றவழி அவ்வீறு அம்முச்சாரியையின் இயல்பிற்றாகலின், வல்லெழுத்து வரின் மகரம் கிளையொற் றாகத் திரியும் என்க. இஃது உய்த்துணர்தலின் பாற்படும்.

'தொடரியலான' என்றது, தொடர்மொழி இயல் பினதாக ஆதற்கண் என்றவாறு. இதுவும் 'மரீஇய மரபு' என்பதுணர, இதனை 'முன்னென் கிளவி' என்பதன்பின் வைத்தார்.

## இளம்பூரணம்

### *358. யகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**யகார இறுதி வேற்றுமைப் பொருள்வயின்**
**வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே.**

இச்....எனின், யகார ஈற்றிற்கு வேற்றுமை முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* யகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், வல்லெழுத்து முதல்மொழி வந்தியையின், அவ்வல்லெழுத்து மிக்கு முடிபு எ-று.

*(உ-ம்.)* நாய்க்கால் செவி தலை புறம் - என வரும். *(62)*

## நச்சினார்க்கினியம்

### *357. யகரஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்**
**வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே.**

இது நிறுத்த முறையானே யகர ஈற்றிற்கு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* யகர இறுதி - யகர ஈற்றுப்பெயர்; வேற்றுமைப்....மிகும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண், வல்லெழுத்து முதல்மொழி வந்தியையின் அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* நாய்க்கால் செவி தலை புறம் என வரும். *(62)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*357.* இச்சூத்திரத்துக்குப்பின்னர் *360*ஆம் சூத்திரம் இருத்தல் வேண்டும் என்பது அறிஞர் சிலர் கருத்து. வேற்றுமையதிகாரமே தொடர்தலின் சூத்திரக்கிடக்கையான் இடர்ப்பாடில்லை. வல்லெழுத்து மிகுதியைக் கூறிய பின்னர் வல்லெழுத்து மிகாமையைக் குறிப்பிடுதலும், மெல்லெழுத்தோடு உறழும் உறழ்ச்சியைப் போன்றதோர் இயல்புடைமையே எனலாம்.

### இளம்பூரணம்

### *359. தாய் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிதல்*

**தாய்என் கிளவி இயற்கை ஆகும்.**

இச்....எனின், இவ்வீற்று விரவுப்பெயருள் ஒன்றற்கு வேறு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* தாய் என்னும் சொல் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* தாய்கை செவி தலை புறம் - என வரும்.

இவ்வியல்பு,மேல் *(64)* இன்னவழி மிகும் என்கின்றமையின், *'அஃறிணை விரவுப்பெயர்' (156)* என்பதனுள் அடங்காதாயிற்று. *(63)*

### நச்சினார்க்கினியம்

### *358. 'தாய்' இயல்பாய் முடிதல்*

**தாய்என் கிளவி இயற்கை ஆகும்.**

இது விரவுப்பெயருள் ஒன்றற்கு, எய்திய வல்லெழுத்து விலக்கிற்று.

*(இ-ள்.) தாயென்......ஆகும் - தாய் என்னும் சொல் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் எ-று.*

*(உ-ம்.) தாய்கை செவி தலை புறம் என வரும்.*

*மேலைச்சூத்திரத்தான் மிகுதியும் கூறுதலின், அஃறிணை விரவுப் பெயருள் (155) அடங்காதாயிற்று[1]. (63)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***358.** 1. இவ்வாறே, தான் முதலிய இயற்பெயரும் 'அஃறிணை விரவுப்பெயர்' என்னும் சூத்திர விதியுள் அடக்கப்படாமையை 351ஆம் சூத்திரவுரையுள் குறிப்பிட்டார்; 250ஆம் சூத்திரவுரையுள், 'நீ' அச்சூத்திர விதியுள் அடக்கலாகாமையைக் குறித்தார்.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***359.*** **தாய்என் கிளவி இயற்கை யாகும்.**

*இஃது 'அஃறிணை விரவுப்பெயர் 'இயல்புமா ருளவே' (156) என்ற சூத்திரத்திற் கூறப்பட்டதன்றோ வெனின், ஆங்கு உம்மை கூறப்பட்டமையானும் இங்கே இயல்பே கூறப்பட்டமையானும் அதற்கு இது நியமவிதி எனக் கொள்ளலாமாகலின், இது கூறியது கூறல் அன்று.*

**இளம்பூரணம்**

***360.** அச்சொல் மகன்வினையை வருமொழியாகச்*
*சொல்லின் வலி மிகுதல்*

**மகன்வினை கிளப்பின் முதல்நிலை இயற்றே.**

*இச்....எனின், மேலதற்கு அடையடுத்து வந்தவழி, இன்னவாறு முடியும் என, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.*

(இ-ள்.) அத்தாய் என்னும் சொல், மகனது வினையைக் கிளந்து சொல்லுமிடத்து, இவ்வீற்று முதற்கண் கூறிய (62) நிலைமையின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

(உ-ம்.) மகன்றாய்க்கலாம் செரு தார் படை - என வரும்.

மகன் வினை என்றது, மகற்குத் தாயாய பண்டை நிலைமையன்றி, அவனொடு பகைத்த நிலைமையை. *(64)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***360.*** *1)* தாய்மகனொடு பகைத்த நிலைமை என்று இளம்பூரணர் உரைக்க, நச்சினார்க்கினியர் மகன் தாயொடு கலாய்த்த கலாம் என்று குறிப்பிடுகிறார்.

**நச்சினார்க்கினியம்**

***359. 'மகன்தாய்' மகன்வினை வருவழி முடியுமாறு***

**மகன்வினை கிளப்பின் முதல்நிலை இயற்றே.**

இஃது எய்தாதது எய்துவித்தது, தாய் என்பது அடை அடுத்துழி வல்லெழுத்து மிகுக என்றலின்.

(இ-ள்.) மகன்....இயற்று - தாய் என்னும் சொல், தனக்கு அடையாய் முன்வந்த மகனது வினையைப் பின்னாக ஒருவன் கூறுமிடத்து,[1] இவ்வீற்றுள் முதற்கண் கூறிய நிலைமையின் (357) இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

(உ-ம்.) மகன்றாய்க்கலாம் செரு துறத்தல் பகைத்தல் எனவரும், மகன் தாயொடு கலாய்த்த கலாம் எனவிரியும். ஏனையவற்றிற்கும் ஏற்கும் உருபு விரிக்க[2]. வினை ஈண்டுப் பகைமேற்று. *(64)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*359. 1) மகனது வினையைத் தாய் என்னும் சொல்லின் பின்னர்க் குறிக்குமிடத்து என்று பொருள் செய்க.*

*2) தாயொடு மலைந்த செரு, தாயைத் துறத்தல், தாயொடு பதைத்தல்.*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**359. அதன்வினை கிளப்பின் முதனிலை யற்றே.**

*'மகன்வினை' என்பது உரையாசிரியன்மார் பாடம்.*

*(இ-ள்.) தாய் என்னும் பொதுப்பெயரின் தொழிலை விதந்து கூறுமிடத்துப் பொதுவிதியாக முன்னர்க் கூறிய இயல்பிற்றாய், வல்லெழுத்து வரின் மிகும். வினையென்றது தொழிற்பண்பினை.*

*(எ-டு: தாய்க்காட்சி செய்கை தோற்றம் பரிவு என வரும். மகன் வினையேயன்றி, மகள் தாய்க் கலாம் என மகள்வினை கிளப்பினும், வாளா தாய்க்கலாம் எனக் கிளப்பினும் வல்லெழுத்து மிகுதலானும், தாய் என்பது விரவுப்பெய ராகலான் மகவு பிள்ளை என அஃறிணைச் சொற்களைக் கூட்டிக் கூறினும் இவ்விதி பொருந்துமாகலானும், 'மகன்' என வரைந்து கூறுதல் குன்றக் கூறலாம். அன்றியும், வல்லெழுத்து மிகுதற்கு மகன் என்னும் சொல் எவ்வாற் றானும் ஏதுவாகாமையானும் அது பாடமன்மை தெளியலாம். தொடை நயம் இப்பாடத்தான் சிறத்தலும் காண்க.*

**இளம்பூரணம்**

***361. இவ்வீற்றுள் சில வல்லெழுத்தொடு மெல்லெழுத்து மிக்கு உறழ்ந்து முடிதல்***

**மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்கூறிய வல்லெழுத்தினொடு மெல்லெழுத்து மிக்கு உறழ்ந்து முடியும் மொழிகளும் உள எ-று.

(உ-ம்.) வேய்ங்குறை வேய்க்குறை சிறை தலை புறம் - என வரும். (65)

**நச்சினார்க்கினியம்**

## *360. இவ்வீற்றுப் பெயர் மெல்லெழுத்தோடு உறழ்வனவும் உளவாதல்*

**மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே.**

இஃது எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) மெல்லெழுத்து....உள - யகர ஈற்றுள், அதிகார வல்லெழுத்தினொடு மெல்லெழுத்து மிக்கு உறழ்ந்து முடிவனவும் உள எ-று.

(உ-ம்.) வேய்க்குறை வேய்ங்குறை செய்கை தலை புறம் என வரும். (65)

**இளம்பூரணம்**

## *362. இவ்வீற்றுப் பெயரது அல்வழி முடிபு*

**அல்வழி எல்லாம் இயல்பென மொழிப.**

இச்....எனின், இவ்வீற்றிற்கு அல்வழி முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) யகர ஈற்று அல்வழியெல்லாம் இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* நாய்கடிது சிறிது தீது பெரிது - என வரும்.

'எல்லாம்' என்றதனான், இவ்வீற்றுஉருபு வாராது[1] உருபின் பொருள்பட வந்த இடைச்சொல் முடியும், வினையெச்ச முடியும், இருபெயரொட்டுப் பண்புத்தொகை முடிபும், அல்வழி உறழ்ச்சி முடிபும் கொள்க.

*(உ-ம்.)* அவ்வாய்க் கொண்டான் - இவ்வாய்க் கொண்டான் - உவ்வாய்க் கொண்டான் - எவ்வாய்க் கொண்டான்[2] - சென்றான் தந்தான் போயினான் எனவும், தாய்க்[3]கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - எனவும், பொய்ச்சொல் மெய்ச்சொல் - எனவும், வேய் கடிது வேய்க்கடிது சிறிது தீது பெரிது - எனவும் வரும். *(66)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*362. 1)* இவ்வீற்று உருபாவது வாய் என்னும் ஏழாவதன் உருபு.

*2)* அவ்வாய்க் கொண்டான் முதலிய நான்கும் இடைச் சொற்றொடர்.

*3)* தாய் - தாவி.

**நச்சினார்க்கினியம்**

## *361.* இவ்வீற்றது அல்வழி முடிபு

**அல்வழி எல்லாம் இயல்பென மொழிப.**

இஃது அவ்வீற்று அல்வழிக்கு எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* யகர ஈற்று அல்வழியெல்லாம் இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* நாய்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

'எல்லாம்' என்றதனான், அவ்வாய்[1]க்கொண்டான் - இவ்வாய்க்கொண்டான் - உவ்வாய்க் கொண்டான் - எவ்வாய்க் கொண்டான் - சென்றான் தந்தான் போயினான் என உருபின் பொருள்பட முடிவனவும், தாய்க்கொண்டான் தூய்ப் பெய்தான் என்றாற்போலும் வினையெச்சமும், பொய்ச் சொல் மெய்ச்சொல் எய்ப்பன்றி என்றாற்போலும் பண்புத்தொகையும், வேய்கடிது வேய்க்கடிது என்னும் அல்வழியுறழ்ச்சி முடிபும் கொள்க.(66)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***361.*** 1. அவ்வாய் முதலியன அவ்விடம் முதலாகப் பொருள்படும். **398**ஆம் சூத்திரவுரையுட் குறித்த அதோள் முதலியனவும் அன்ன.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***361.*** **அல்வழி யெல்லாம் இயல்பென மொழிய.**

'அவ்வாய்' என்றது ஆசிரியர் காலத்து ஏழாம் வேற்றுமையுருபு தொக்க பெயராய்க் கருதப்பட்டிருத்தலான், அவ்வாய்க்கொண்டான் முதலியவற்றை வேற்றுமை வழியதாகக் கொள்ளலாம். வேய்கடிது வேய்க்கடிது என்ற உறழ்ச்சியைப் புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளலாம்.

***361.*** [அவ்வாய் முதலிய நான்கும் உருபின் பொருள்பட வந்த இடைச்சொல் என்பது உரையாளர்தம் துணிபு. ஆகவே, அவ்வாய்க்கொண்டான் முதலியவை உருபின் பொருள்பட முடியினும் இடைச்சொற்றொடர் ஆதலின் அல்வழி முடிபாய் இச்சூத்திரவுரையுள் இடம்பெற்றன என்க. வேய்கடிது வேய்க்கடிது என்னும் அல்வழி யுறழ்ச்சி முடிபினை அதிகாரப்புறனடையுள் அடக்குதல் செய்த் தாகலின், ஈண்டு 'எல்லாம்' என்ற இலேசானே உரைகாரர் கொண்டனர்.]

**இளம்பூரணம்**

## *363. ரகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ரகார இறுதி யகார இயற்றே.**

இ-ச்.....எனின், ரகார ஈற்று வேற்றுமை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* ரகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், யகார ஈற்று இயல்பிற்றாய், வல்லெழுத்து வந்தவழி மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* தேர்க்கால் செய்கை தலை புறம் - என வரும். *(67)*

**நச்சினார்க்கினியம்**

## *362. ரகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ரகார இறுதி யகார இயற்றே.**

இது நிறுத்த முறையானே ரகார ஈற்று வேற்றுமைமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* ரகார..... இயற்று - ரகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், யகார ஈற்று இயல் பிற்றாய், வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்குமுடியும் எ-று.

*(உ-ம்.)* தேர்க்கால் செலவு தலை புறம் என வரும்.

இம்மாட்டேற்றினை யகரஈற்று வேற்றுமை அல்வழி என்னும் இரண்டையும் கருதி மாட்டெறிந்தார் என்பார், அல்வழி முடிபும் ஈண்டுக்காட்டுவர். யாம் இவ்வோத்தின் புறனடையாற் காட்டுதும். இது ழகர ஈற்றிற்கும் ஒக்கும்.

மாட்டேற்றான் உறழ்ச்சியும் கொள்க.[1]

வேர்ங்குறை வேர்க்குறை என வரும். *(67)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***362.*** *1. 360ஆம் சூத்திரவிதியான் யகாரவீற்று உறழ்ச்சி முடிக்கப்பட்டது போன்று, இவ்வீற்று உறழ்ச்சியையும் மாட்டேற்றான் கொண்டார்.*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***362.*** **ரகார இறுதி யகார இயற்றே.**

*இவ்வீற்று அல்வழிக்குரிய விதி நூலுள் காணப் படாமையின், அச்சூத்திரம் இருந்து கெட்டிருத்தல் வேண்டும்; அல்லது, 'யகார இயற்று' என்னும் மாட்டேறு பொதுப்பட நின்றதாகக் கொண்டு, 'அல்வழி யெல்லாம் இயல்பென மொழிப' (361) என்பதனை விதியாகக் கொள்ள வேண்டும். அவ்விதிப்படி, ரகரவீறு அல்வழிக்கண் தேர்குறிது சிறிது தீது பெரிது என வருதலும், அச்சூத்திரத்து 'எல்லாம்' என்ற மிகையானே வேர்குறிது வேர்க்குறிது என்னும் உறழ்ச்சியும், தகர்க்குட்டி என இருபெயரொட்டின்கண் மிகுதலும் கொள்க.*

***362.*** *[இம்மாட்டேறு வேற்றுமை அல்வழி என்னும் இரண்டற்கும் பொதுவாக நின்றது எனக்கோடல், பண்டை யுரையாளருள் ஒருசாரார் கருத்து என்பது நச்சினார்க்கினியர் உரையாற் போதரும்.]*

## இளம்பூரணம்

### *364. ஆர் முதலிய நான்கும் மெல்லெழுத்து மிக்கு முடியுமாறு*

**ஆரும் வெதிரும் சாரும் பீரும்**
**மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்.**

இச்....எனின், இவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* ஆர் என்னும் சொல்லும் வெதிர் என்னும் சொல்லும் சார் என்னும் சொல்லும் பீர் என்னும் சொல்லும், மெல்லெழுத்து மிக்கு முடிதல் மெய்ம்மை பெறத் தோன்றும் எ-று.

*(உ-ம்.)* ஆர்ங்கோடு வெதிர்ங்கோடு சார்ங்கோடு பீர்ங்கோடு செதிள் தோல் பூ - என வரும்.

'மெய்பெற' என்றதனான், பிறவும் மெல்லெழுத்து மிகுதல் கொள்க.

*(உ-ம்.)* குதிர்ங்கோடு துவர்ங்கோடு செதிள் தோல் பூ - எனவரும்.

இன்னும் அதனானே, பீர் என்பது, மேல் அம்முப் பெற்றவழி *(70)* இயைபு வல்லெழுத்து வீழ்வும் கொள்க. *(68)*

**நச்சினார்க்கினியம்**

### *363. ஆர் முதலிய நான்கும் மெலி மிகப் பெறுதல்*

**ஆரும் வெதிரும் சாரும் பீரும்**
**மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்.**

இஃது இவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

*(இ-ள்.)* ஆரும்....பீரும் - ஆர் என்னும் சொல்லும் வெதிர் என்னும் சொல்லும் சார் என்னும் சொல்லும் பீர் என்னும் சொல்லும்; மெல்லெழுத்து.....தோன்றும் - மெல்லெழுத்து மிக்கு முடிதல் மெய்ம்மைபெறத் தோன்றும் எ-று.

*(உ-ம்.)* ஆர்ங்கோடு வெதிர்ங்கோடு சார்ங்கோடு பீர்ங்கொடி செதிள் தோல் பூ எனவரும்.

'பீர்' மரம் என்பார் பீர்ங்கோடு[1] என்பர். 'பீர்வாய்ப் பிரிந்தநீர் நிறைமுறை செய்து'[2] என்றாற் போலச் சான்றோர் பலரும் செய்யுள் செய்தவாறு காண்க.

'மெய்பெற' என்றதனான், 'ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்' (அகநா. 92) என ஆர் அம்முப் பெறுதலும், மாரிப் பீரத்து அலர்சில கொண்டே (குறுந். 98) எனப் பீர் அத்துப் பெறுதலும் கொள்க. இதனை அதிகாரப் புறனடையான் முடிப்பாரும் உளர்.

இன்னும் இதனானே, கூர்ங்கதிர்வேல் ஈர்ங்கோதை என்றாற் போலவும், குதிர்ங்கோடு விலர்ங்கோடு துவர்ங்கோடு சிலிர்ங்கோடு[3] என்றாற் போலவும், மெல் லெழுத்து மிகுவன கொள்க.

இன்னும் இதனானே, துவரங்கோடு என அம்முப் பெறுதலும் கொள்க. (68)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*363.* 1. கோடாகிய சினை மரத்தொடு வருதல் மர. 89ஆம் சூத்திரத்தான் அறியப்படும்.

2. வாய்க்கால் வழி வரும் நீரைப் பீர்க்கங் கொடிக்குப் பாயுமாறு இறைத்து என்று பொருள் கொள்க.

3. குதிர் முதலிய நான்கும் மரப்பெயர். **கணே.**

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*363.* **ஆரும் வெதிரும்......மெய்பெறத் தோன்றும்.**

நச்சினார்க்கினியர் 'ஆரங்கண்ணி' என்று ஆர் அம்முச் சாரியை பெறுதலும், 'மாரிப் பீரத்தலர்' என்று பீர் அத்துச் சாரியை பெறுதலும் கொள்க என்றார். அஃது ஆசிரியர்க்குக் கருத்தாயின், 'ஆரும் பீரும் அம்மொடு சிவணும்' என்று சூத்திரம் செய்திருப்பார். அவ்வாறு செய்யாமையின், ஆர் என்னும் மரப்பெயர் அம்முச்சாரியை பெறும் என்றல்

ஆசிரியர் கருத்தன்று, அன்றியும், 'பீரென் கிளவி அம்மொடு சிவணும்' என்றவர், 'பீரென் கிளவிக்கு அத்தும் அம்மும்' என்றாற்போன்று விதி கூறுவார். இவற்றால் நச்சினார்க்கினியர் கூறியவை ஆசிரியர்காலத்து வழக்கல்ல என்று கொள்க. இவற்றை இளம்பூரணர் புறனடையில் அமைத்தது பொருந்தும்.

*363.* [இளம்பூரணர் புறனடையால் அமைத்த சாரியைப் பேற்றை நச்சினார்க்கினியர் சூத்திரத்து மிகையான் அடக்கிக் கொண்டார், ஆண்டுப் படும் இயைபினும் ஈண்டுப் படும் இயைபுடைமை செறிவுடைத்தென்பது கருதி. சங்க விலக்கியத்துள் இச்சாரியைப்பேறு இரண்டும் பெரு வழக்கின என்று உணர்ந்தார் போலும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*363.* ஆரும் வெதிரும்....மெய்பெறத் தோன்றும்.

ஆரங்கண்ணி என்பது ஆராகிய அழகிய கண்ணி எனப் பொருள் கோடற்கும் ஏற்பதாகலின், ஆர் அம்முச்சாரியை பெறும் என உரையாளர் கூறுவது நிரம்பாது என்க.

**இளம்பூரணம்**

***365. சார் எனும் பெயர் 'காழ்' வருவழி வல்லெழுத்து மிகுதல்***

[1]**சார்என் கிளவி காழ்வயின் வலிக்கும்.**

இச்....எனின், மேலனவற்றுள் சார் என்பதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) சார் என்னும் சொல் காழ்' என்னும் சொல்லொடு புணருமிடத்து வல்லெழுத்து மிக்குப் புணரும் என்று.

வருமாறு: சார்க்காழ் என வரும். (69)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*365.* 1) 'அவற்றுள்' என்ற தனிச்சொல் இருப்பின் சிறக்கும்.

2) காழ் - விதை; வயிரம் என்னும் உள்ளீடு அன்று என்பர் நச்சினார்க்கினியர்.

## நச்சினார்க்கினியம்

### *364. 'சார்', 'காழ்' வருவழிப் புணருமாறு*

**சார்என் கிளவி காழ்வயின் வலிக்கும்.**

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது.

(இ-ள்.) சாரென்....வலிக்கும் - சார் என்பது காழ் என்பதனொடு புணருமிடத்து வல்லெழுத்து மிக்குப் புணரும் எ-று.

வருமாறு: சார்க்காழ் என வரும், சாரினது வித்து என்பதே பொருள். இதனை வயிரம் எனின் கிளந்தோதுவர்[1] என்றுணர்க. (69)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*364.* 1. மரத்தின் அகக்காழாகிய வயிரம் எனின், கிளந்தோதுவர் என்றார். மரத்தின் உறுப்பாக 'வயிரம்' மரபியலுள் சொல்லப்பட்டிலது; பழம் என்புழிக் காழாகிய விதை சொல்லப்பட்டதாம். அகக்காழ் உள்ளீடாதலின் புறத்தே தோன்றாது. கிளந்தோதலாவது 'காழ்வயிரமாயின்' என்றாற் போல விசேடித்துச் சூத்திரித்தல்.

## இளம்பூரணம்

### *366. பீர் எனும் பெயர் (வன்கணம் வருவழி) அம்மொடு பொருந்துதல்*

**பீர்என் கிளவி அம்மொடும் சிவணும்.**

இச்....எனின், அவற்றுள் பீர் என்பதற்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

*(இ-ள்.)* பீர் என்னும் சொல், மெல்லெழுத்தேயன்றி, அம்முச்சாரியையும் பெற்றுவந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* பீரங்கோடு செதிள் தோல் பூ - என வரும். *(70)*

**நச்சினார்க்கினியம்**

### *365. 'பீர்' அம்முச் சாரியையொடும் முடிதல்*

**பீர்என் கிளவி அம்மொடும் சிவணும்.**

*(இ-ள்.)* பீரென்.....சிவணும் - பீர் என்னும் சொல், மெல்லெழுத்தேயன்றி அம்முப்பெற்றும் முடியும் எ-று.

*(உ-ம்.)* பீரங்கொடி, செதிள் தோல் பூ எனவும், 'பொன்போற் பீரமொடு பூத்த புதன்மலர்' *(நெடு. 14)* எனவும் வரும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று. *(70)*

**இளம்பூரணம்**

### *367. லகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**லகார இறுதி னகார இயற்றே.**

இச்....எனின், லகார ஈற்றிற்கு னகார ஈற்று வேற்றுமை யோடு இயைய வேற்றுமைமுடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* லகார ஈற்றுப்பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், வல்லெழுத்து முதல்மொழி வரின், னகார ஈற்றின் இயல்பிற்றாய், லகாரம் றகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* கற்குறை சிறை தலை புறம் - எனவரும். *(71)*

## நச்சினார்க்கினியம்

### 366. லகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு

**லகார இறுதி னகார இயற்றே.**

இது நிறுத்த முறையானே லகாரஈற்றை வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் புணர்க்கின்றது.

*(இ-ள்.)* லகார.....இயற்று - லகார ஈற்றுப் பெயர், வன்கணம் வந்துழி, னகார ஈற்று இயல்பிற்றாய், லகரம் றகரமாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* கற்குறை சிறை தலை புறம் - நெற்கதிர் சோறு தலை புறம் - என வரும். *(71)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***366.*** *1.* நெல் + தலை = நெற்றலை; *149, 366*ஆம் சூத்திர விதிகளான் முடிக்க.

## இளம்பூரணம்

### 368. இவ்வீற்றுப்பெயர் மென்கணம் வருவழி லகரம் னகரமாதல்

**மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்.**

இச்....எனின், அவ்வீறு மென்கணத்தொடு முடியுமாறு கூறு.....ற்று.

*(இ-ள்.)* அவ்வீறு, மென்கணம் வந்தியையின் லகாரம் னகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* கன்ஞெரி நுனி முறி - என வரும்.

இச்சூத்திரத்தினை வேற்றுமையது ஈற்றுக்கண் அல்வழியது எடுத்துக்கோடற்கண் சிங்க நோக்காக[1] வைத்தமையான், அல்வழிக்கும் இம்முடிபு கொள்க.

*(உ-ம்.)* கன்ஞெரிந்தது நீண்டது மாண்டது-எனவரும். *(72)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*368. 1) இவ்வாறே 398ஆம் சூத்திரவுரையிலும் இளம்பூரணர் குறிப்பிடுவார். நச்சினார்க்கினியரும் இவ்வீரிடத்தும் இளம்பூரணருரையை வழிமொழிந்தார்.*

**நச்சினார்க்கினியம்**

***367. இவ்வீறு இருவழியும் மென்கணம் வருவழித் திரிதல்***

**மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்.**

*இது னகரமாம் என்றலின், இவ்வீற்றிற்கு எய்தாதது எய்துவித்தது.*

*(இ-ள்.) மெல்லெழுத்து.....ஆகும் - அவ்வீறு* மென்கணம் வந்து இயையின் னகாரமாகத் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.) கன்ஞெரி நுனி முரி என வரும்.*

இச்சூத்திரத்தினை வேற்றுமையிறுதிக்கண் அல்வழியது எடுத்துக்கோடற்கண் சிங்கநோக்காக வைத்தமையான்[1], அல்வழிக்கும் இம்முடிபு கொள்க.

*கன்ஞெரிந்தது நீண்டது மாண்டது எனவரும். (72)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*367. 1. இவ்வாறே 397ஆம் சூத்திரக்கிடக்கை முறையையும் உரையுள் குறிப்பிடுவார்.*

**இளம்பூரணம்**

***369. அல்வழிக்கண் (வன்கணம் வருவழி) லகரம் வல்லெழுத்தோடு உறழ்ந்து முடிதல்***

**அல்வழி எல்லாம் உறழ்என மொழிப.**

இச்.....எனின், இவ்வீற்றிற்கு அல்வழி முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) இவ்வீற்று அல்வழிக்கண் எல்லாம் தன் திரிபு வல்லெழுத்தினோடு உறழ்ந்து முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) கல்குறிது கற்குறிது சிறிது தீது பெரிது - என வரும்.

'எல்லாம்' என்றதனான், கல்குறுமை கற்குறுமை - எனக் குணம் பற்றி வந்த வேற்றுமைக்கும் இவ்வுறழ்ச்சி கொள்க.

இன்னும் அதனானே, இவ்வீற்று வினைச்சொல் ஈறு திரிந்தனவும் கொள்க.

(உ-ம்.) வந்தானாற்[1] கொற்றன் - என வரும்.

இன்னும் அதனானே, அக்காற் கொண்டான் - இக்காற் கொண்டான் - உக்காற் கொண்டான் - எக்காற் கொண்டான்- சென்றான் தந்தான் போயினான் - என, உருபு வாராது உருபின் பொருள்பட வந்தவற்றின்[2] முடியும் ஈண்டே கொள்க.

இதனாற் பிறவும் உள்ளவாறு அறிந்து ஒட்டிக் கொள்க. (73)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***369.*** *1) ஆல்: அசைநிலை. வினைமுற்றோடொன்றி(ப் பிரிக்கப்பட முடியாததாய்) இவ்வசைநிலை நிகழ்கிறது, 'இவ்வாறு உரைத்தாரால் உரையாசிரியர் எனின்' என்புழிப் போல.*

*2) அக்கால் முதலிய நான்கும் அவ்விடத்தே - அக்காலத்தே- என்பன முதலாக ஏழனுருபின் பொருள்பட (நிலம், காலம்) வந்தன.*

**நச்சினார்க்கினியம்**

## *368. இவ்வீற்று அல்வழி முடிபு*

**அல்வழி எல்லாம் உறழ்என மொழிப.**

இஃது இவ்வீற்று அல்வழிமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* அல்வழி.....மொழிப-இவ்வீற்று அல்வழிகள் எல்லாம் தம் திரிபு வல்லெழுத்திேனாடு உறழ்ந்து முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* கல்குறிது கற்குறிது சிறிது தீது பெரிது என வரும்.

'எல்லாம்' என்றதனான், கல்குறுமை கற்குறுமை சிறுமை தீமை பெருமை எனக் குணம் பற்றி வந்த வேற்றுமைக்கும் உறழ்ச்சி கொள்க.

இன்னும் இதனானே, வினைச்சொல் ஈறு திரிந்தனவும் உருபு திரிந்தனவும் கொள்க.

வந்தானாற் கொற்றன் பொருவானாற் போகான்[1] எனவும், அத்தாற் கொண்டான் இத்தாற் கொண்டான் உத்தாற் கொண்டான் எத்தாற்[2] கொண்டான் எனவும் வரும்.

அக்காற் கொண்டான் [3] போலப் பிறவும் முடிபுள்ளன எல்லாம் இதனான் முடித்துக் கொள்க. (73)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***368.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. அதனான் இதனான் முதலியவை, அத்தான் இத்தான் முதலாக அன்சாரியை கெட்டு, கெட்டவழித் தகரம் இரட்டித்து முடிந்தன. குறள் 524, பரி.உரை காண்க.

3. காலமும் இடமும் பற்றிய ஏழாம் வேற்றுமை யுருபின் பொருள்பட வந்த சொற்கள் அக்கால் இக்கால் உக்கால் எக்கால் என்பன.

## இளம்பூரணம்

## *370. தகரம் வருவழி லகரம் ஆய்தமாகத் திரிதலும் உண்மை*

**தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்**
**புகர்இன்று என்மனார் புலமை மோரே.**

இச்....எனின், மேலதனுள் ஒரு கூற்றிற்கு எய்தியதன்-மேல் சிறப்புவிதி கூறு.....ற்று.

*(இ-ள்.)* அவ்வாறு றகாரமாய்த் திரிந்த லகாரம், தகர-முதல்மொழி வருமொழியாய் வந்தவழி, அவ்வாறு றகரமாய்த் திரிதலேயன்றி, ஆய்தமாய்த் திரிந்து நிற்றலும் குற்றமின்று என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

*(உ-ம்.)* கஃறீது கற்றீது - என வரும்.

'புகரின்று' என்றதனான், 'நெடியதன் இறுதி' *(75)* என்பதனுள், வேறீது வேற்றீது - என்னும் உறழ்ச்சிமுடிபும் கொள்க. *(74)*

## நச்சினார்க்கினியம்

## *369. லகரம் ஆய்தமாகவும் திரிந்து நிற்குமிடன்*

**தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்**
**புகர்இன்று என்மனார் புலமை யோரே.**

இது லகரம் றகரமாய்த் திரிதலே யன்றி ஆய்தமாகவும் திரியும் என்றலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

*(இ-ள்.)* தகரம்.....புலமையோரே - தகரம் முதலாகிய மொழி வந்தால், லகரம் றகரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிந்து நிற்றலும் குற்றமின்று என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) கஃறீது கற்றீது[1] என வரும்.

'புகரின்று' என்றதனான், 'நெடியதன் இறுதி' (370) என்பதனுள், வேறீது வேற்றீது என்னும் உறழ்ச்சி முடிபும் கொள்க. (74)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***369.*** 1. கல் + தீது = கற்றீது; நிலைமொழியீற்று லகரம் றகரமாதல் 360ஆம் சூத்திரவிதியானும், வருமொழித் தகரத்திரிபு 149ஆம் சூத்திரவிதியானும் கொள்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***369.*** **தகரம் வருவழி.......புலமை யோரே.**

வருமொழித் திரிபு தொகைமரபினுள் (149) பெறப்படும். பஃறாழிசை பஃறொடை என விதியீறாகி நின்ற லகரத்திற்கும் இவ்விதி ஒக்கும். ஏற்புழிக் கோடல் என்பதனான் இத்திரிபு குறில்வழி நின்ற லகரத்திற்கேயாம் என அறிக.

***369.*** [பஃறாழிசை பஃறொடை என்புழி, நிலைமொழி யீற்று லகரம் ஆய்தமாகத் திரிதலை இவ்வுரைகாரர் உடன்படுகிறார். நிலைமொழியாக நின்றவை பல் சில் என்னும் லகரப்புள்ளி யீற்றுச் சொற்கள். சூ. 215- உரையுள், "உரையாளர், அருத்தாபத்தியானும் மிகையானும் பல்கடல் பல்சேனை பல்யானை பல்வேள்வி பன்மீன் பஃறுளி பல்லறம என வருவனவற்றை அடக்கிக் கூறுவர். அதனாற் பல சில என்பவையே அகரம் நீங்கிப் பல்சில் என நின்றன என்பது அவர்கருத்து. அக்கருத்து மொழியியலுக்கு மாறானதாகும்" என்று குறிப்பிடும் இவர், பல்சில் என்பனவே பல சில எனத் திரிந்து வருவன என்னும் துணிவினராதல் புலனாம். ஆசிரியர் 'தொடரல் இறுதி' (214) எனப் பல சில என்பவற்றைப் புணர்நிலைக்குரியவாகக் காட்டுதற்கு இவர் யாது அமைதி கூறவியலும்? திரிந்த சொற்களை நிலைவரு மொழிகளாக ஆசிரியர் விதிப்பாரா?]

## இளம்பூரணம்

### *371. தனிநெடிலை யடுத்த லகாரஈறு இயல்பாய் முடிதலும் உடைமை*

**நெடியதன் இறுதி இயல்புமார் உளவே.**

இச்.....எனின், மேலதற்கு எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி கூறு.....ற்று.

(இ-ள்.) நெடியதன் இறுதிக்கண் நின்ற லகார ஈறு, குறியதன் இறுதிக்கண் நின்ற லகாரம் போலத் திரிந்து உறழ்தலேயன்றி (73) இயல்பாய் முடிவனவும் **உள எ-று.**

(உ-ம்.) பால்கடிது சிறிது தீது[1] பெரிது - என வரும்.

இயல்பாகாது திரிந்தன வேல்கடிது வேற்கடிது - என்றாற் போல்வன. (75)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***371.*** பால் + தீது = பாறீது (150, 161ஆம் சூத்திர விதியான் முடியும்) என முடிதலின், **வல்கணத்து** ஏனைய மூன்றுமே கொள்க.

## நச்சினார்க்கினியம்

### *370. தனி நெடிலொற்று இயல்பாதலும் உண்மை*

**நெடியதன் இறுதி இயல்புமார் உளவே.**

இஃது 'அல்வழி யெல்லாம் உறழ்' (368) என்றதனோடு, இயல்பாக என்றலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது.

(இ-ள்.) நெடியதன்.....உள - நெட்டெழுத்தின் ஈற்று லகாரஈறு, குறியதன் இறுதிக்கண் நின்ற லகாரம் போலத் திரிந்து உறழ்தலேயன்றி, இயல்பாய் முடிவனவும் உள எ-று.

(உ-ம்.) பால்கடிது சிறிது தீது[1] பெரிது என வரும். இயல்பு ஆகாது திரிந்தன வேற்கடிது என்றாற்போல்வன.(75)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*370.* 1. (பால் + தீது = பாறீது; வருமொழி முதல் தகரம் றகரமாதல், நிலைமொழி ஈறு கெடுதல் இவற்றை 149, 160ஆம் சூத்திரங்களாற் கொள்க.) ஈண்டுத் திரிபின்றி இயல்பாய் முடியும் என்பதே உரையாசிரியன்மார் இருவரும் கொண்ட கருத்து. வேறீது என்னும் முடிபு அவ்விதிகளான் அமையும்.

## இளம்பூரணம்

### *372. நெல் முதலிய நான்கு பெயரும் அல்வழிக்கண்ணும் ஈறு றகரமாதல்*

**நெல்லும் செல்லும் கொல்லும்[1] சொல்லும்**
**அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல.**

இச்.....எனின், இவ்வீற்று அல்வழியுள் சிலவற்றிற்கு வேறு முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) நெல் என்னும் சொல்லும் செல் என்னும் சொல்லும் கொல் என்னும் சொல்லும் சொல் என்னும் சொல்லும் ஆகிய இவை நான்கு சொல்லும், அல்வழியைச் சொல்லுமிடத்தும், தம் வேற்றுமைமுடிபின் இயல்பின வாய், லகாரம் றகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) நெற்கடிது செற்கடிது கொற்கடிது சொற்கடிது சிறிது தீது பெரிது - என வரும். (76)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*372.* 1) செல் - மேகம் ; கொல் - கொல்லுத் தொழில்.

## நச்சினார்க்கினியம்

### *371. நெல் முதலிய நாற்சொல்லும் அல்வழிக்கண் முடியுமாறு*

**நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்**
**அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல.**

இஃது அல்வழிக்கண் உறழ்ந்து முடிக என்றதனை (368) வேற்றுமை முடிபைப் பெறுக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) நெல்லும்.....சொல்லும் - நெல் என்னும் சொல்லும். செல் என்னும் சொல்லும்[1] கொல் என்னும் சொல்லும்[2] சொல் என்னும் சொல்லும் ஆகிய இந்நான்கு சொல்லும்; அல்லது.....இயல - அல்வழியைச் சொல்லுமிடத்தும், தாம் வேற்றுமை முடிபின் இயல்பினவாய், லகரம் றகரமாய்த் திரிந்து முடியும் எ-று.

உம்மை சிறப்பு[3].

(உ-ம்.) நெற்காய்த்தது செற்கடிது கொற்கடிது சொற்கடிது சிறிது தீது பெரிது என வரும். (76)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*371.* 1, 2. செல் - மேகம் ; கொல் - கொல்லனது கொல்லுத்தொழில்.

3. கிளப்பினும் : வேற்றுமை முடிபினது ஆற்றலைக் குறித்தலின் உயர்வு சிறப்பும்மை.

## இளம்பூரணம்

### *373. இல் எனும் சொல் (வன்கணம் வருவழி) நால்வகையான் முடியுமாறு*

இல்என் கிளவி இன்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலும் ஐஇடை வருதலும்
இயற்கை ஆதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிடன் உடைத்தே.

இச்....எனின், இவ்வீற்று வினைக்குறிப்புச் சொல் ஒன்றற்கு வேறு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) இல் என்னும் சொல் புக்குறையும் இல்லை உணர்த்தாது ஒருபொருளது இல்லாமையை உணர்த்து மிடத்து, வல்லெழுத்து முதல்மொழி வந்தவழி மேல் வருகின்ற ஐகாரத்தொடு வல்லெழுத்து மிகுதலும், வல்லெழுத்து வாராது ஐகாரமே வந்து முடிதலும், ஐகாரம் வாராது இயல்பாய் முடிதலும், ஆகாரம் வந்து முடிதலும் ஆகிய இம்முடிபு நான்கும், இச்சொல்லிற்கு முடிபாகக் கொள்ளத்தகும் மரபானே இதன் முடிபு ஆகும் இடனுடைத்து எ-று.

'கொளத்தரு மரபின்' என்றதனான், வல்லெழுத்து மிக்கவழி ஐகாரம் வருதலும், ஆகாரம் மிக்கவழி வல்லெழுத்து மிகுதலும் கொள்க.

இயல்பு முற்கூறாதொழிந்ததனான், வல்லெழுத்து மிகுதி ஆகாரம் வந்த வழிக்கே முடிதலின் சிறப்புடைத்து ஆதலும், ஐகாரம் வந்தவழி மிகுதலும் மிகாமையும் உடைமையின் சிறப்பின்று ஆதலும் கொள்க.[1]

(உ-ம்.) இல்லைக்கல் இல்லைகல், இல்கல் இல்லாக்கல் சுனை முடி பறை - எனவரும்.

இல்லைக்கல் - இல்லை கல் - என்பன இல்லை என்னும் ஐகார ஈற்றுச் சொல் முடிபன்றோ என்றும், இல்லாக்கல் என்பது உள்ள என்னும் பெயரெச்சத்து எதிர் மறையாகிய ஆகாரஈற்றுச் சொல்லது முடிபன்றோ என்றும், இல்கல் [2] என்பது பண்புத்தொகை முடிபன்றோ என்றும் கூறின், அம்முடிபுகளோடு இம்முடிபுகள் எழுத்தொப்புமை அன்றி, இவை ஓசைவேற்றுமையுடைய என்பது போலும் கருத்து. அவ்வோசை வேற்றுமையாவன: ஐகார ஈறாகியவழி அவ் ஐகாரத்துமேல் ஒலியூன்றியும் [3], லகார ஈறாயவழி ஒரு திரண்மையாக ஒலியாது அந்த லகார ஒற்றின்மேல் ஒலி யூன்றியும்[4], அந்த லகார ஈறு இயல்பு முடிபாயவழிப் பண்புத்தொகைபோல் ஒரு திரண்மையாய் ஒலியாது

இடையற்று லகரத்தின்மேல் ஒலியூன்றியும்[5], ஆகார ஈறாய வழி ஒரு திரண்மையாய்[6] அவ்ஆகாரத்துமேல் ஒலியூன்றியும் (ஆண்டு லகார ஈறாயவழி ஒரு திரண்மையாக ஒலியாது அந்த லகரத்துமேல் ஒலியூன்றியும்)[7] வரும் வேறுபாடுகள் போலும்.

இல் என்பது எதிர்மறை வினைக்குறிப்புமுற்று விரவுவினை[8]. *(77)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***373.*** *1)* இவ்விலேசினான், வல்லெழுத்து மிகுதி ஆகாரம் ஈறாயவழிச் சிறப்புடைத்தாகலும், ஐகாரம் ஈறாயவழி சிறப்பின்றாகலும் கொள்ளப்படும்.

*2)* நச்சினார்க்கினியர் பெயரெச்சவிகுதி தொக்கு நின்ற தொடராகக் கொள்வர்.

*3)* இல்லை கல் என்றவழி, வினைமுற்றுத் தொடர் என்பது தோன்ற நிலைமொழியீற்று ஐகாரத்தின்மேல் அழுத்தங்கொடுத்து உச்சரித்தல் வேண்டும்.

*4)* இத்தொடர் ஈண்டே அமைதல் பொருந்தும்.

*5)* இல் கல் என்றவழி, பண்புத்தொகைபோல **ஒரு** சொல் நீர்மைப்பட ஒலியாது நிலைமொழியீற்று லகரத்தில் அழுத்தம் கொடுத்து ஒலித்தல் வேண்டும்.

*6)* 'ஒரு திரண்மையாய் ஒலியாது' என ஒருசொல் விடுபட்டதனை இணைத்துரைக்க. ஆகாரத்தின்மேல் ஒலியூன்ற வேண்டுதலின், ஒருசொல் நீர்மைப்பட ஒலிக்கலாகாமை பெற்றாம்.

*7)* இடைச்செருகலெனக் களைக, முன்னரே சொல்லப் பட்டமையான்.

*8)* 'வாழ்க்கை, எனைமாட்சித் தாயினும் இல்' (குறள்52)
'இவறியார் இல் (லாகியார்)' இல் - இலர் (ஷெ935பரி.)
'வன்கணார் இல்' (குறள் 276)

'இல்லாக் கல்' என்பதனை இளம்பூரணர் வினை முற்றுத் தொடராகவே கொண்டுள்ளார் எனத் தோன்றுகிறது. இல்லா என்புழி ஆகாரம் சாரியை; சாரியை நோக்கி வல்லெழுத்து மிக்கது எனக்கொள்ளவேண்டும். 'இல்லா' என்பதனை 'உள்ள' என்பதன் எதிர்மறையாகிய பெயரெச்சக் குறிப்பாக நச்சினார்க்கினியர் கொண்டார்.

**நச்சினார்க்கினியம்**

*372. 'இல்' எனும் வினைக்குறிப்பு முடிந்து நிற்குமாறு*

**இல்என் கிளவி இன்மை செப்பின்**
**வல்லெழுத்து மிகுதலும் ஐஇடை வருதலும்**
**இயற்கை ஆதலும் ஆகாரம் வருதலும்**
**கொளத்தகு மரபின் ஆகிடன் உடைத்தே.**

இஃது இவ்வீற்று வினைக்குறிப்புச் சொல்லுள் ஒன்றற்கு எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* இல்லென்......செப்பின் - இல் என்னும் சொல், இருப்பிடமாகிய இல்லை யுணர்த்தாது ஒரு பொருளின் இல்லாமையை உணர்த்துமிடத்து; வல்லெழுத்து....வருதலும் - வல்லெழுத்து முதல்மொழி வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடிதலும், ஐகாரம் இடையே வருதலும், இரண்டும் வாராது இயல்பாய் முடிதலும், ஆகாரம் வந்து முடிதலுமாகிய இந்நான்கு முடிபும்; கொளத்தகு.....உடைத்து-சொற்கு முடிபாகக் கொளத்தகு முறையானே, தன்முடிபாம் இடனுடைத்து எ-று.

'கொளத்துரு மரபின்' என்றதனான், வல்லெழுத்து முதல்மொழி வந்துழி ஐகாரம் வருதலும், ஐகாரம் வந்துழி வல்லெழுத்து மிகுதலும் மிகாமையும், ஆகாரம் வந்துழி வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க.

*(உ-ம்.)* இல் என நிறுத்தி, கொற்றன் சாத்தன் தெளிவு பொருள் எனத்தந்து, வல்லெழுத்தும் ஐகாரமும் கொடுத்து, இல்லைக்கொற்றன் என ஏனையவற்றோடும் ஒட்டுக.

இன்னும் அவ்வாறே நிறுத்தி ஐகாரமே கொடுத்து, இல்லைகொற்றன் சாத்தன் தெளிவு பொருள் என வல்லெழுத்து மிகாதும் முடிக்க.

இன்னும் 'கொளத்தரு மரபின்' என்றதனான், ஏனைக் கணத்தின் முன்னும் ஐகாரமே கொடுத்து, இல்லைஞாண் நூல் மணி வானம் ஆடை என ஒட்டுக.

இஃது இல் என்பதொரு முதனிலை நின்று வருமொழி யோடு இங்ஙனம் புணர்ந்தது என்பது உணர்தற்கு 'இல்லென் கிளவி' என்றும், 'இயற்கை யாதலும்' என்றும் கூறினார். இம்முடிபு வினையியலுள் விரவுவினைக்கண் 'இன்மை செப்பல்' என்புழி, 'இல்லை இல்' (சொல். 222 சேனா.) என்று உரைகூறியவதனானும், அவனில்லை என்றாற் போல்வன உதாரணமாக எல்லா ஆசிரியரும் காட்டியவற்றானும் உணர்க.

இதனானே, இங்ஙனம் புணர்த்த சொல் அன்றி, இல்லை என ஐகார ஈறாய் நிற்பதொரு சொல் இன்மையும் உணர்க. ஆயின், இன்மை முதலியவற்றையும் இவ்வாறே புணர்க்க வெனின், அவை வருமொழியின்றி ஒரு சொல்லாய் நிற்றலின் புணர்க்காராயினார்.

இனி இயல்பு வருமாறு: எண்ணில் குணம் செய்கை துடி பொருள் எனவும், 'பொய்யில் ஞானம்' 'மையில் வாண்முகம், (கலி 7 : 8) எனவும் வரும்.

இனி ஆகாரம் வருமாறு: இல்லாக்கொற்றன் சாத்தன் தேவன் பொருள் என ஆகாரம் வல்லெழுத்துப் பெற்றன.

பிற்கூறிய இரண்டும் இல் என்னும் வினைக்குறிப்பு முதனிலை அடியாகத் தோன்றிய பெயரெச்சமறை தொக்கும் விரிந்தும் நின்றன[1].

இயல்பு முற்கூறாததனான், இம்முடிபிற்கு வேண்டும் செய்கை செய்க[2]. தாவினீட்சி[3] என்றாற்போல வேறுபட வருவனவற்றிற்கும் வேண்டும் செய்கை செய்து முடிக்க. (77)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*372.* 1. பெயரெச்ச மறையைக் காட்ட, பிற சொற்களிற் போல ஆகார இறுதிநிலை இல் என்னும் வினைக்குறிப்பு முதனிலைக்கு வேண்டா, முதனிலையே எதிர்மறைப் பொருட்டாதலின். ஆயினும், செல்-உண்-முதலான உடன் பாட்டுப் பொருளவாகிய முதனிலைக்கு எதிர்மறைப் பொருளையுணர்த்த ஆகாரம் இறுதி நிலையாக இயைவது போல, இச்சொற்கும் (ஒப்புமையாக்கம் கருதி) ஆகார இறுதிநிலை விரிந்து வருதல் கொள்ளப்படும். எண்ணில் குணம் என்புழி, பெயரெச்ச மறையைக் காட்டும் ஆகார இறுதிநிலை தொக்கது; இல்லாக் கொற்றன் என்புழி அது விரிந்து நின்றது.

2. இல் + ஆ : ஆகாரம் புணர்ந்துழி லகர ஒற்று இரட்டுதல் 160ஆம் சூத்திர விதியாற் கொள்க. இல்லா + கொற்றன் : 222 ஆம் சூத்திரத்து உம்மையாற்றலான் வல்லொற்று மிகுதல் கொள்க; எதிர்மறைக் குறிப்பு வினைக்கு வாய்பாடின்றேனும் (ஒப்புமையாக்கம் பற்றி) ஆகார இறுதி பெற்றியலுதலின் செய்யா எனும் வாய்பாட்டுப் பெயரெச்சம் என உபசார வழக்கால் ஏற்றப்பட்டதென்க.

3. தா + இல் + நீட்சி = தாவினீட்சி; வகரவுடம்படு மெய் இடைவருதலின் தாவில் எனமுடியும்; தாவில் + நீட்சி என்புழி, வருமொழி நகரத்திரியும் நிலைமொழியீற்று லகரக் கேடும் முறையே 149ஆம் சூத்திர விதியானும் 160 சூத்திரத்துள் இலேசினானும் கொள்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**373.** **இல்லென் கிளவி......ஆகிடன் உடைத்தே.**

ஐகாரவீற்றுப் பெயர்ச் சொல்லைப் பற்றியே 'வேற்றுமை யல்வழி' (159) என்ற சூத்திரத்திலும், ஆகார வீற்று வினையெச்சத்தைப் பற்றியே 'செய்யா என்னும்' (223)

என்ற சூத்திரத்திலும் ஆசிரியர் கூறினார்; இன்று இல முதலிய சொற்களை வினைக்குறிப்பாக வினையியலிற் கூறினார். ஆகலான் 'இல்கல்' என்பது அஃறிணை போன்று வினைத் தொகையாகுமன்றிப் பண்புத்தொகை ஆகாமையான், இளம்பூரணர் வினவிய கடா பொருந்தாதென்க. இக்கடாவும் கடாவிற்கு விடையாயுள்ள தொடரும் இடைச்செருகல் எனத்தோன்றுகிறது. இது நச்சினார்க்கினியர் உரையானும் விளங்கும்.

*373.* ['இல்கல்' அஃறிணை போன்று வினைத்தொகை ஆகுமன்றிப் பண்புத்தொகை யாகாமையான் - என்னும் சாத்திரியாரது இவ்வுரைப்பகுதி சோர்வினான் நேர்ந்த பிழைபாடுடையது. இல்கல் அஃறிணை இரண்டும் வினைத் தொகையாகா; பண்புத்தொகையேயாம். இன்மை + கல் = இல்கல்; இலதாகிய கல் என ஒன்றன்பால் அறியவரும் இறுதிநிலை தொக்கது. பண்புத் தொகையாகியவழி ஒருசொல் நீர்மைப்பட ஒலிக்கும். இது நிலைமொழி வருமொழி செய்யப்பட்டுப் 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றாது' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

ஈண்டு 'இல்கல்' பயனிலைத் தொடராதலின், பண்புத் தொகை போல ஒரு திரண்மையாய் ஒலியாது, லகரத்தின் மேல் ஒலியூன்றிப் பிளவுபட ஒலிக்கும் - என்பது இளம்பூரணருரையாம்.

நச்சினார்க்கினியர் 'இல்கல்' பெயரெச்சமறை தொக்க தாக ('இல்லாக்கல்' என்புழி அம்மறை விரிந்தது காண்க.) உரைத்தலின், அவருரையில் இளம்பூரணருரை விளக்கம் போந்திலது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*372.* **இல்லென் கிளவி.........ஆகிட னுடைத்தே.**

இல்லை என்னும் குறிப்புமுற்று, முன்பிருந்து பின் இல்லாத நிலையை உணர்த்தும். வால் இல் குதிரை

என்றாங்கு வரும். இன்மை என்னும் பண்புப்பெயர் எப்பொழுதும் இல்லாமையை உணர்த்தும். கொம்புஇல் குதிரை என்றாங்கு வரும்.

ஈண்டுக் கூறிய இன்மை 'பொருண்மை சுட்டல்' ஆகிய உண்மை என்னும் பண்புச் சொற்குரிய எதிர்மறைச் சொல்லாம்.

இவ்வாறே உளதாதற்றன்மை உணர்த்தும் 'உண்டு' என்னும் சொல்லையும் பின்னர் (430) விதந்து விதி கூறுவார்.

## இளம்பூரணம்

### *374. 'வல்' இருவழியும் உகரச்சாரியை பெறுதல்*

**வல்என் கிளவி தொழிற்பெயர் இயற்றே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) வல் என்னும் சொல், அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரம் பெற்றும் முடியும் எ-று.

(உ-ம்.) வல்லுக் கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், வல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும். (78)

## நச்சினார்க்கினியம்

### *373. 'வல்' தொழிற்பெயர் போல உகரம் பெற்று முடிதல்*

**வல்என் கிளவி தொழிற்பெயர் இயற்றே.**

இஃது இருவழியும் திரிந்தும் உறழ்ந்தும் வருமென, எய்தியதனை விலக்கி, ஞகார ஈற்றுத் தொழிற்பெயரொடு மாட்டெறிதலின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ-ள்.) வல்லென்.....இயற்று - வல் என்னும் சொல், அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்றுமுடியும் எ-று.

(உ-ம்.) வல்லுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், வல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும். (78)

## இளம்பூரணம்

### 375. அச்சொல், நாய்-பலகை-எனும் வருமொழியொடு முடியுமாறு

**நாயும் பலகையும் வரூஉங் காலை**
**ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே**
**உகரம் கெடுவழி அகரம் நிலையும்.**

இச்....எனின், மேலதற்கு எய்தியது ஒரு மருங்கு மறுத்துப் பிறிது விதி கூறு....ற்று.

(இ-ள்.) மேல் நின்ற வல் என்பதன்முன் நாய் என்னும் சொல்லும் பலகை என்னும் சொல்லும் வருமொழியாய் வருங்காலத்து, அவ்விடத்து உகரம் கெடாதே நின்று முடிதலே யன்றி, கெட்டு முடியவும் பெறும்; அவ்வுகரம் கெடுமிடத்து அகரம் நிலைபெற்று முடியும் எ-று.

வருமாறு: வல்ல நாய் வல்லப்பலகை[1] - என வரும்.

'அகரம் நிலையும்' என்னாது 'உகரம் கெடும்' என்றதனான், பிற வருமொழிக் கண்ணும் அவ் அகரப்பேறு கொள்க.

(உ-ம்.) வல்லக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவரும். (79)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***375.*** *1)* வல்லினுள் நாய், வல்லைப் பரப்பிய பலகை - என விரிக்க.

**நச்சினார்க்கினியம்**

### *374. 'நாய்', 'பலகை' வருவழி, வல் முடியுமாறு*

**நாயும் பலகையும் வரூஉங் காலை**
**ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே**
**உகரம் கெடுவழி அகரம் நிலையும்.**

இஃது எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) நாயும்....காலை - வல் என்பதன்முன் நாய் என்னும் சொல்லும் பலகை என்னும் சொல்லும் வருமொழியாய் வருங்காலத்து; ஆவயின்....உரித்து - அவ்விடத்து உகரம் கெடாது நிற்றலேயன்றிக் கெட்டு முடியவும் பெறும்; உகரம்.....நிலையும் - அவ்வுகரம் கெடுமிடத்து அகரம் நிலைபெற்று முடியும் எ-று.

வருமாறு: வல்லநாய் வல்லப்பலகை[1] என வரும்.

உம்மை எதிர்மறை யாகலான், உகரம் கெடாதே நின்று வல்லுநாய், வல்லுப்பலகை என வருதலும் கொள்க.

அகரம் நிலையும் என்னாது உகரம் கெடுவழி என்றதனான், பிற வருமொழிக்கண்[2] இவ் அகரப் பேறும் வல்லெழுத்து மிகுதியும் கொள்க.

வல்லக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (79)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*374.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. அவை குணவேற்றுமை பற்றி வரும் பெயர்கள் என்க; மேலே கூறிய நாயும் பலகையும் பொருட்பெயராம்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*374.* **நாயும் பலகையும்........அகரம் நிலையும்.**

மேற்சூத்திரத்தில் வல் என்னும் சொற்கு விதித்த உகரம் முற்றுகரம் ஆதலின் அது கெடுதற்கு ஈண்டு விதி கூறினார்.

*374.* [முற்றியலுகரம் தானேறிய மெய்யை நிறுத்திக் கெடவே. அகரச்சாரியை அம்மெய்ம்மீது ஏறி முடியும். முற்றியலுகரம் தானேறிய மெய்யொழித்துக் கெடுவதும், குற்றியலுகரம் தான் கெடாது நின்று வருமுயிர் ஏற இடங்கொடுப்பதும் இவருரையுள் ஆங்காங்கு நினைவுறுத்தப்படும்.]

## இளம்பூரணம்

### *376. பூல் முதலிய மூன்றும் அம்முப்பெற்றுப் புணர்தல்*

**பூல்வேல் என்றா ஆல்என் கிளவியோடு**
**ஆமுப் பெயர்க்கும் அம்இடை வருமே.**

இச்....எனின், சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* பூல் என்னும் சொல்லும் வேல் என்னும் சொல்லும் ஆல் என்னும் சொல்லும் ஆகிய அம்மூன்று பெயர்க்கும், வேற்றுமைக்கண், திரிபின்றி அம்முச்சாரியை இடைவந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* பூலங்கோடு வேலங்கோடு ஆலங்கோடு செதிள் தோல் பூ என வரும். *(80)*

**நச்சினார்க்கினியம்**

## *375. பூல் முதலிய மூன்றும் அம்முப் பெறுதல்*

**பூல்வேல் என்றா ஆல்என் கிளவியோடு**
**ஆமுப் பெயர்க்கும் அம்இடை வருமே.**

*இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.*

*(இ-ள்.)* பூல்.....பெயர்க்கும் - பூல் என்னும் சொல்லும் வேல் என்னும் சொல்லும் ஆல் என்னும் சொல்லும் ஆகிய அம்மூன்று பெயர்க்கும்; அம் இடை வரும் - வேற்றுமைக் கண் திரிபின்றி அம்முச்சாரியை இடைவந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* பூலங்கோடு வேலங்கோடு ஆலங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின், இயல்பு கணத்தும் ஒட்டுக.

பூலஞெரி வேலஞெரி ஆலஞெரி நீழல் விறகு என வரும்.

என்றா என எண் இடையிட்டமையான்[1], பூலாங்கோடு பூலாங்கழி என ஆகாரம் பூலுக்குக் கொள்க. *(80)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***375.*** 1. எண்ணிடைச்சொல் ஒடு, பூல் வேல் இவற்றோடும் இயைந்து எண்ணுமேனும், என்றா என மற்றோர் எண்ணிடைச் சொல்லைப் பெய்தமையை இலோசாகக் கொண்டு பூல் என்னும் மரப்பெயரிறுதிக்கு ஆகாரம் கொள்வித்தார்.

## இளம்பூரணம்

### *377. இவ்வீற்றுத் தொழிற்பெயர் உகரம் பெற்று முடியுமாறு*

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

*இச்......எனின், இவ்வீற்றுத் தொழிற்பெயர்க்கு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....ற்று.*

*(இ-ள்.) லகார ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம் ஞகார ஈற்றுத் தொழிற்பெயரின் இயல்பினவாய், அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரம் பெற்றும் முடியும் எ-று.*

*(உ-ம்.) கல்லுக்[1] கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், கல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும்.*

*'எல்லாம்' என்றதனான், இவ்வாறு முடியாது பிறவாற்றான் முடிவனவும் கொள்க.*

*(உ-ம்.) பின்னல் கடிது துள்ளல் கடிது, பின்னற் கடுமை துன்னற் கடுமை - என வரும்.[2]*

*இன்னும் அதனானே, மென்கணம் வந்தவழி, பின்னன் ஞான்றது. பின்னன் ஞாற்சி - என மெல்லெழுத்தாய்த் திரிந்து முடிவனவும் கொள்க.* *(81)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***377.** 1) கல்லு - கல்லுதல் : முதனிலைத் தொழிற்பெயர்*

*2) அல்விகுதிபெற்ற தொழிற்பெயர்களைக் காட்டுதல் பொருந்தாது என்ப பிற்கால உரையாசிரியர்.*

**நச்சினார்க்கினியம்**

## *376. இவ்வீற்றுத் தொழிற்பெயர் பிறஈற்றுத் தொழிற்பெயர் அனையவாதல்*

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இஃது இவ்வீற்றுத் தொழிற்பெயர்க்கு அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும் உறழ்ச்சியும் திரிபும் விலக்கி, ஞகார ஈற்றுத் தொழிற்பெயரொடு மாட்டெறிதலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) தொழிற்பெயர்....இயல - லகார ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம், ஞகார ஈற்றுத் தொழிற்பெயரின் இயல்பினவாய், இருவழியும், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) புல்லுக்கடிது கல்லுக்கடிது வல்லுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், வல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும். இவற்றிற்குப் புல்லுதல் கல்லுதல் வல்லுதல்[1] எனப் பொருளுரைக்க.

இனி எல்லாம் என்றதனான், தொழிற்பெயர் விதி எய்தாது பிறவிதி எய்துவனவும் கொள்க.

கன்னல்கடிது பின்னல்கடிது கன்னற்கடுமை பின்னற் கடுமை எனவும் வரும்.[2]

இதனானே, மென்கணம் வந்துழி, பின்னன் ஞான்றது நீண்டது மாண்டது - பின்னன் ஞாற்சி நீட்சி மாட்சி - என ஒட்டுக.

இனி, ஆடல் பாடல் கூடல் நீடல் முதலியனவும்[3], அல்வழிக்கண் இயல்பாயும், வேற்றுமைக்கண் திரிந்தும்[4] முடிதல் இதனாற் கொள்க. (81)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*376.* 1. வல்லுதல் - வல்லமை பெறுதல்.

2. அல்விகுதி பெற்ற தொழிற்பெயர்க்கு இவ்வுறழ்ச்சி முடிபு இருவழியும் கொள்கிறார். கன்னல் - கன்னான் தொழில்.

3. ஈரெழுத்து மொழியாக நின்ற குற்றுகரவீறு அல்விகுதி பெற்ற தொழிற்பெயர்கள் இவை.

4. வேற்றுமைக்கண் திரிதற்கு விதி 366ஆம் சூத்திரம்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*376.* **தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

துன்னல் பின்னல் முதலிய லகரஈற்றுத் தொழிற் பெயர்கள் உகரம் பெறாது முடிதலை 'எல்லாம்' என்றதனாற் கொள்க - என்றனர் உரையாளர். அச்சொற்களில் அல் என்பது விகுதியே ஆதலின், அவை துன் பின் என னகர வீற்றுத் தொழிற்பெயர்களேயாம் ஆகலானும், ஆசிரியர் தொழிற் பெயர் எனக்கொண்டவை முதனிலைத் தொழிற்பெயர்களே என்பது தெளிவாம் ஆகலானும் அவர்கள் கூற்றுப் பொருந்து வதன்று. துன்னல் பின்னல் என்பவை போல்வன லகார வீற்றுத் தொழிற்பெயர்கள் ஆகுமெனின், உரிஞுதல் பொருநுதல் என ஞகார நகார வீற்றுத் தொழிற்பெயர்களும், பண்ணல் பண்ணுதல் - மண்ணல் மண்ணுதல் - என ணகார ஈற்றுத் தொழிற்பெயர்களும், செம்முதல் திருமுதல் என மகார வீற்றுத் தொழிற்பெயர்களும், கொள்ளல் கொள்ளுதல் என ளகாரவீற்றுத் தொழிற்பெயர்களும், லகரவீற்றனவேயாக முடியுமாதலின், லகாரவீற்றுத் தொழிற்பெயர் ஒன்றே உண்டு எனல்வேண்டும். ஆசிரியர் மேற்காட்டிய ஈறுகளிலெல்லாம் தொழிற்பெயர்க்கு விதிகூறியிருத்தலானும், முதனிலை யளவாயிருக்கின்ற முரண் என்னும் சொல்லை முரணுதல் என

லகர வீறாகக் கருதாமல் ணகாரவீறாகவே கருதி, முரணென் தொழிற்பெயர் முதலியல் நிலையும் என்று விதி கூறினா ராகலானும், துன்னல் பின்னல் என்பவை லகாரவீற்றுத் தொழிற்பெயர்கள் ஆகா. ஆடல் பாடல் என்பனவும் அன்ன. லகரவீற்றுத் தொழிற்பெயராவன கொல் முதலியன.

*376.* [327ஆம் சூத்திரக் குறிப்பினை நோக்குக. ஆசிரியர் முதனிலைத் தொழிற்பெயரையே எடுத்தோதுதல் இவ்வுரை காரரால் மீண்டும் வற்புறுத்தப்படுகிறது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*376.* **தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.**

பின்னல் கடிது - துன்னல் கடிது - என்பவை பின்னற் கடிது - துன்னற் கடிது - எனப் பொதுவிதி பெற்று வருவதனை 'எல்லாம்' என்னும் மிகையாற் கொள்க என்ப உரை யாசிரியன்மார். அவை பின் துன் என்னும் னகரஈறு அல் என்னும் தொழிற்பெயர்விகுதி பெற்று நிற்பனவாதலின், லகர ஈறாதற்கு ஏலா என்க.

*376.* [விகுதிபெற்றதொழிற்பெயர்களை உரையா சிரியன்மார் ஈண்டு அடக்கலாகாமை ரெட்டியார் அவர்களது ஆராய்ச்சியுரையுள்ளும் புலனாம்.]

## இளம்பூரணம்

### *378.* *'வெயில்' அத்தும் இன்னும் பெற்றுப் புணர்தல்*

**வெயில்என் கிளவி மழைஇயல் நிலையும்.**

இச்....எனின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்...ற்று.

(இ-ள்.) வெயில் என்னும் கிளவி, மழை என்னும் சொல்லியல்பின்கண்ணே நிலைபெற்று, அத்தும் இன்னும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) வெயிலத்துக் கொண்டான் வெயிலிற் கொண்டான்[1] சென்றான் தந்தான் போயினான் - என வரும். (82)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**378.** 1) இன் சாரியையது னகரம் திரிதலை 123ஆம் சூத்திரத்து மிகையாற் கொண்டார் இளம்பூரணர்.

## நச்சினார்க்கினியம்

### 377. 'வெயில்' அத்தும் இன்னும் பெற்று முடிதல்

**வெயில்என் கிளவி மழைஇயல் நிலையும்.**

இது திரிபு விலக்கி அத்தும் இன்னும் வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) வெயில்....நிலையும் - வெயில் என்னும் சொல் மழை என்னும் சொற்போல் (287) அத்தும் இன்னும் பெற்று முடியும் எ-று.

மழை என்பதனை 'வளியென வரூஉம்' (242) என்பதனுடனும், வளி என்பதனைப் 'பனியென வரூஉம்' (241) என்பதனுடனும் மாட்டெறிந்தவாறு காண்க.

(உ-ம்.) வெயிலத்துக் கொண்டான் வெயிலிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். இஃது அத்துமிசை ஒற்றுக் கெடாது நின்ற இடம்[1]. இஃது அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து (133) மிக்கது, அதிகார வல்லெழுத்து இன்மையின்[2]. இயல்பு கணத்தும் கொள்க, சாரியை வருமொழி வரையாது கூறினமையின். (82)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**377.** 1) ஒற்றுக்கெடாமைக்கு அமைதி ரெட்டியார் ஆராய்ச்சி யுரையிற் காண்க. 'மழையியல்' என்றோதிய நயம் அது.

2) நிலைமொழி புள்ளியீறு ஆதலின், திரிபேயன்றி வல்லெழுத்து மிகுதி கூறப்படாமை அறிக.

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**377. வெயிலென் கிளவி மழையியல் நிலையும்**

வெயிலென் கிளவிக்கு அத்தும் இன்னும் சாரியை யாகும் என்று விதி கூறின், 'அத்தே வற்றே' (133) என்னும் சூத்திர விதிப்படி, வெயில் என்னும் சொல்லின் லகரமெய் கெடும். அவ்வாறன்றி 'மழையியல் நிலையும்' (287) என்று மாட்டெறிந்தாராகலின், அம்மாட்டேற்றால், பனி முதலிய சொற்களின் ஈற்றெழுத்துக் கெடாதவாறே ஈண்டும் கெடாது நின்றது. இவ்வாறு மாட்டெறியாமல் அத்துச்சாரியையினை விதித்த இடங்களில் எல்லாம் (தனிக்குறிலை யடுத்த மெய் தவிர), நிலைமொழியீற்றுமெய் கெடுதல் கொள்க.

**377.** [ஆசிரியர் இவ்வாறு மாட்டேற்றியதற்கு மிக நுண்ணிய நயமான காரணம் குறிப்பிடுகிறார் இவ்வுரைகாரர்.

மாட்டேறின்றி அத்துச்சாரியை விதித்த இடங்களில் எல்லாம் நிலைமொழியீற்றுமெய் கெடுதல் 317, 331ஆம் சூத்திரமுடிபிற் காண்க. தனிக்குறிலை யடுத்த மெய் இரட்டுதல் 305ஆம் சூத்திரமுடிபிற் காண்க.]

**இளம்பூரணம்**

***379. சுட்டுமுதல் வகரஈற்றுச் சொல் மூன்றும் வற்றுப் பெற்றுப் புணர்தல்***

> **சுட்டுமுதல் ஆகிய வகர இறுதி**
> **முற்படக் கிளந்த உருபியல் நிலையும்.**

இச்....எனின், வகார ஈற்றுப் பெயர் நான்கினும் சுட்டு முதல் வகரம் மூன்றற்கும் வேற்றுமை முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) சுட்டெழுத்தை முதலாகவுடைய வகார ஈற்றுச் சொல், வேற்றுமைக்கண், முற்படச் சொன்ன உருபு புணர்ச்சியின் இயல்பு நிலைபெற்று, வற்றுப் பெற்றுப் புணரும் எ-று.

(உ-ம்.) அவற்றுக்கோடு இவற்றுக்கோடு உவற்றுக் கோடு செவி தலை புறம் - என வரும்.[1]

'முற்படக் கிளந்த' என்றதனான், வற்றினோடு இன்னும் பெறுதல் கொள்க.

(உ-ம்.) அவற்றின்கோடு இவற்றின்கோடு உவற்றின் கோடு செவி தலை புறம் - என வரும். (83)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*379.* 1) 189, 179, 178ஆம் சூத்திர விதிகளால் முடிக்க.

**நச்சினார்க்கினியம்**

### *378. சுட்டுமுதல் வகரம் வற்றொடு சிவணி முடிதல்*

**சுட்டுமுதல் ஆகிய வகர இறுதி**
**முற்படக் கிளந்த உருபியல் நிலையும்.**[1]

இது நிறுத்த முறையானே வகரஈறு வேற்றுமைக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டு.....இறுதி - வகர ஈற்றுப்பெயர் நான்கனுள் சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகரஈற்றுப் பெயர் மூன்றும்; முற்படக்......நிலையும் - முற்படக் கூறிய உருபுபுணர்ச்சியின் இயல்பினவாய் வற்றுப் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) அவற்றுக்கோடு இவற்றுக்கோடு உவற்றுக் கோடு செவி தலை புறம் - என வரும்.

'முற்படக் கிளந்த' என்றதனானே, வற்றினோடு இன்னும் பெறுதல் கொள்க.

அவற்றின்கோடு இவற்றின்கோடு உவற்றின்கோடு செவி தலை புறம் என ஒட்டுக. இஃது ஏனைக் கணத்தோடும் ஒட்டுக. *(83)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***378.*** *1. நிலையுமாற்றை 183, 178, 177ஆம் சூத்திர* விதிகளான் முறையே கொண்டு முடிக்க.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***379.*** **வேற்றுமை யல்வழி ஆய்த மாகும்.**

ஆய்தம் தன்முன் நிற்கும் வல்லெழுத்தின் பிறப்புடைய தாகலின், அஃகடிய என்பது போல்பவை 'அக்கடிய' என்பது முதலாக ஒலிக்கும். பிற்காலத்தார் அவ்வொலிக்கேற்ப 'அக்கடிய' என்று எழுதினர் ஆகலின், 'அஃகடிய' என்று எழுதும் வழக்கு இக்காலத்து இலதாயிற்று.

**இளம்பூரணம்**

***380. அவை (வன்கணம் வருவழி) அல்வழிக்கண் வகரம் ஆய்தமாகத் திரிந்து முடிதல்***

**வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும்.**

இச்....எனின், மேலனவற்றிற்கு அல்வழிமுடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* அச்சுட்டு முதலாகிய வகராஈறு, வன்கணம் வந்தால், வேற்றுமைப் பொருட்புணர்ச்சி அல்லாத அல்வழிக்கண், அவ்வகரம் ஆய்தமாகத் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* அஃகடிய இஃகடிய உஃகடிய சிறிய தீய பெரிய-என வரும். *(84)*

**நச்சினார்க்கினியம்**

### *379. அவ்வகரம் அல்வழிக்கண் ஆய்தமாதல்*

**வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும்.**

இது மேலனவற்றிற்கு அல்வழிமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* வேற்றுமை.....ஆகும் - அச்சுட்டுமுதல் வகரம், வன்கணத்துக்கண், வேற்றுமை அல்லாதவிடத்து ஆய்தமாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* அஃகடிய இஃகடிய உஃகடிய சிறிய தீய பெரிய என வரும். இவ்வழக்கு இக்காலத்து அரிது. *(84)*

**இளம்பூரணம்**

### *381. மென்கணம் வருவழி, வகரம் வந்த மெல்லெழுத்தாய்த் திரிதல்*

**மெல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து ஆகும்.**

இச்....எனின், மேலனவற்றிற்கு மென்கணத்து முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* அச்சுட்டு முதலாகிய வகரஈறு, மென்கணம் வந்தியைந்தவிடத்து, அவ்வகரம் அம்மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும் எ-று.

*(உ-ம்.)* அஞ்ஞாண் இஞ்ஞாண் உஞ்ஞாண் நூல் மணி - எனவரும். *(85)*

**நச்சினார்க்கினியம்**

### *380. அவ்வகரம் மென்கணத்தொடு முடியுமாறு*

**மெல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து ஆகும்.**

இஃது எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) மெல்லெழுத்து.....ஆகும் - அவ்வகர ஈறு, மென்கணம் வந்தியையுமாயின், அவ்வகர ஒற்று அவ்வம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) அஞ்ஞாண் இஞ்ஞாண் உஞ்ஞாண் நூல் மணி என வரும். (85)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**380. மெல்லெழுத் தியையின் அவ்வெழுத் தாகும்.**

அஞ்ஞாண்கள் அந்நூல்கள் அம்மலர்கள் என வரும். நிலைமொழி அவ் என்னும் பன்மைச்சொல் என்பது விளங்க, வருமொழியீற்றின்கண் கள்விகுதி கூட்டிக் கூறுதல் தகவுடைத்து என்க, அ இ உ என்னும் சுட்டுக்களொடு மெல்லெழுத்துப் புணரினும், அவையும் அஞ்ஞாண் இந்நூல் உம்மலர் என அம்மெல்லெழுத்து மிக்கு முடியுமாதலின் என்க.

## இளம்பூரணம்

**382. ஏனை இடைக்கணமும் உயிர்க்கணமும் வருவழி, வகரம் இயல்பாய் முடிதல்**

**ஏனவை புணரின் இயல்புஎன மொழிப.**

இச்.....எனின், மேலனவற்றிற்கு இடைக்கணத்தும் உயிர்க்கணத்தும் முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அச்சுட்டு முதலாகிய வகரஈறு, ஒழிந்த இடைக்கணமும் உயிர்க்கணமும் வந்து புணரின், அவ்வகரம் திரியாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) அவ்யாழ் இவ்யாழ் உவ்யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக. (86)

## நச்சினார்க்கினியம்

### 381. ஏனை இடை உயிர்க்கணங்கள் வருவழி இயல்பாதல்

**ஏனவை புணரின் இயல்பென மொழிப.**

இதுவும் அது, அவ்வீறு ஏனைக்கணங்களொடு புணருமாறு கூறுதலின்.

(இ-ள்.) ஏனவை.....மொழிப - அச்சுட்டுமுதல் வகர ஈற்றோடு இடைக்கணமும் உயிர்க்கணமும் வந்து புணருமாயின், அங்ஙனம் திரியாது இயல்பாய் முடியுமென்று கூறுவர் புலவர் எ-று.

(உ-ம்.) அவ்யாழ் இவ்யாழ் உவ்யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக.

ஈண்டுக் கூறியது நிலைமொழிக்கு என்றும், ஆண்டு 'நின்ற சொல்முன் இயல்பாகும்' (144) என்றது வருமொழிக்கு என்றும் உணர்க.[1] (86)

#### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

381. 1. இவ்வாக்கியம் இடைச்செருகல் என்ப சாத்திரியார். மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று என்று, நுண்மையல்லாதவற்றையும் விளக்கிச் செல்லும் இயல்பினர் நச்சினார்க்கினியராதலின், இவ்வாக்கியம் இருப்பினும் ஏதமின்று. இளம்பூரணரும் சேனாவரையரும் இன்னரல்லர்.

#### சாத்திரியார் உரைக்குறிப்பு

382. ஏனவை புணரின் இயல்பென மொழிப.

"ஈண்டுக் கூறியது நிலைமொழிக்கு என்றும், ஆண்டு 'நின்ற சொல்முன் இயல்பா கும்மே' (145) என்றது

வருமொழிக்கு என்றும் உணர்க" என நச்சினார்க்கினியத்தில் காணப்படும் தொடர் இடைச்செருகலாயிருத்தல் கூடும்.

*382.* [சாத்திரியார் வரைந்துள்ள குறிப்புச் சாலப் பொருந்தும்.]

**இளம்பூரணம்**

### *383. ஏனை உகர ஈறு தொழிற்பெயர் இயல்பிற்றாதல்*

**ஏனை வகரம் தொழிற்பெயர் இயற்றே.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒழிந்த ஒன்றற்கும் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஒழிந்த வகரஈறு, ஞகரஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், அல்லனவற்றுக்கண் உகரமே பெற்றும் முடியும் எ-று.

*(உ-ம்.)* தெவ்வுக் கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், தெவ்வுக் கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும். *(87)*

**நச்சினார்க்கினியம்**

### *382. 'தெவ்' தொழிற்பெயர் போல உகரம் பெற்று முடிதல்*

**ஏனை வகரம் தொழிற்பெயர் இயற்றே.**

இஃது எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.)* ஏனை.....இயற்று - வகரக்கிளவி நான்மொழி ஈற்றது *(81)* என்றதனுள் ஒழிந்துநின்ற உரிச்சொல்லாகிய

வகரம், இருவழியும், ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல் பிற்றாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் மென் கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) தெவ்வுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், தெவ்வுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

**உரையிற்கோடல்** என்பதனான், தெம்முனை என வகர ஒற்று மகர ஒற்றாகத் திரிதல் காண்க. (87)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***383.*** **ஏனை வகரம் தொழிற்பெயர் இயற்றே.**

"உரையிற்கோடல் என்றதனான், தெம்முனை என வகரவொற்று மகரவொற்றாகத் திரிதல் கொள்க" என்றார் நச்சினார்க்கினியர். அம்முனை போன்ற சொற்களைக் கண்டு ஒற்றுமைப் போலியான் பிற்காலத்துத் தெம்முனை வந்திருத்தல் வேண்டும். ஆகலின் அதனை ஈண்டு உரையிற் கோடலால் கொள்ளவேண்டா எனத் தோன்றுகிறது.

***383.*** [உரிச்சொல்லினை ஆசிரியர் கிளந்தோதியே முடிப்பாராதலின், உரிச்சொல் முடிபு கூறும் இச்சூத்திரத் தேயே உரையிற்கோடலான், மகரம் வருவுழி 'தெவ்'வின் வகரமெய் மகரமாய்த் திரிந்து முடிதலை நச்சினார்க்கினியர் குறிப்பிட்டார். சுட்டிடைச் சொல்லின் இயற்கையும் இவ்வகர ஈற்றுரிச்சொல்லின் இயற்கையும் முற்றிலும் வேறுபட்டன: ஆண்டு மகரம் மிகுதல்; ஈண்டு வகரம் மகரமாகத் திரிதல். ஒற்றுமைப் போலியான் இம்முடிபு கோடல் யாண்டையதென்க.]

## இளம்பூரணம்

### *384. ழகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ழகார இறுதி ரகார இயற்றே.**

இச்....எனின், ழகார ஈற்று வேற்றுமை முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* ழகார ஈற்றுப்பெயர், வன்கணம் வந்தால், வேற்றுமைக்கண், ரகார ஈற்று இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* பூழ்க்கால் சிறகு தலை புறம் - என வரும். *(88)*

## நச்சினார்க்கினியம்

### *383. ழகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ழகார இறுதி ரகார இயற்றே.**

இது நிறுத்த முறையானே ழகார ஈற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* ழகார....இயற்று - ழகார ஈற்றுப்பெயர், வன்கணம் வந்தால், வேற்றுமைக்கண் ரகார ஈற்றின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* பூழ்க்கால் சிறகு தலை புறம் என வரும். *(88)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*383.* **ழகார இறுதி ரகார இயற்றே.**

ரகார ஈற்றுச் சூத்திரவுரையுள் அல்வழிக்குக் கூறிய விளக்கம் இதற்கும் ஒக்குமாதலின், ழகாரவீற்று அல்வழிக் கண் யாழ்குறிது சிறிது தீது பெரிது என வல்லெழுத்து

இயல்பாக முடியுமெனக் கொள்க. சிறுபான்மை வீழ்குறிது வீழ்க்குறிது என உறழ்ந்து முடிதலையும், பூழ்ப்பறவை என இருபெயரொட்டின்கண் மிக்கு முடிதலையும் 'உரையிற் கோடல்' என்னும் உத்தியாற் கொள்க.

## இளம்பூரணம்

### 385. 'தாழ்' கோல் என்னும் வருமொழியொடு புணருமாறு

**தாழ்என் கிளவி கோலொடு புணரின்**
**அக்குஇடை வருதல் உரித்தும் ஆகும்.**

இச்....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) தாழ் என்னும் சொல் கோல் என்னும் சொல்லொடு புணருமிடத்து, வல்லெழுத்து மிகுதலேயன்றி, அக்குச்சாரியை இடைவந்து முடிதலும் உரித்து எ-று.

வருமாறு: தாழக்கோல் - என வரும். (89)

## நச்சினார்க்கினியம்

### 384. 'தாழ்', 'கோல்' வருவழி முடியுமாறு

**தாழ்என் கிளவி கோலொடு புணரின்**
**அக்குஇடை வருதல் உரித்தும் ஆகும்.**

இஃது இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது. வல்லெழுத்தினோடு அக்கு வகுத்தலின்.

(இ-ள்.) தாழ்...புணரின் - தாழ் என்னும் சொல் கோல் என்னும் சொல்லொடு புணருமிடத்து; அக்கு....ஆகும்- வல்லெழுத்து மிகுதலேயன்றி, அக்குச்சாரியை இடையே வந்து நிற்றலும் உரித்து[1] எ-று.

உரித்தும் ஆகும் என்னும் உம்மையை வருதலும் உரித்தாகும் என மாறுக.

எனவே, அக்குப் பெறாது வல்லெழுத்து மிகுதல் வலியுடைத்தாயிற்று.

வருமாறு: தாழக்கோல் தாழ்க்கோல் என வரும்.

இது தாழைத் திறக்கும் கோல் என விரியும்.[2] (89)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**384. தாழென் கிளவி......உரித்து மாகும்.**

தாழக்கோல் என வரும்; உம்மையால் தாழ்க்கோல் எனவும் வரும். இத்தொகை, தாலிப் பொன் என்பது போலத் தாழிற்குரிய கோல் என விரியும். தாழாகிய கோல் என இருபெயரொட்டு எனினும் ஒக்கும். கோல் என்பது கணையமரம். தாழ் என்பது புதவக்கதவங்களைத் தழுவி (அடைத்து) நிற்பதாகலின் காரணப்பெயராம். அத்தாழினை வனைதற்குரிய தடியே ஈண்டுக் கோல் எனப்பட்டதாகலின், நான்காவது விரிதலே சால்புடைத்து என்க.

உரையாசிரியன்மார் தாழைக் திறக்குங் கோல் என இரண்டாவது விரியும் என்றனர். திறவுகோல் என்பது திறக்கும் கருவி. அதனைத் தாழ் எனற்கு ஒல்லாது.

**384.** [சாவியை மலையாள நாட்டார் 'தாக்கோல்' என வழங்கிவருகின்றமை கொண்டு, தாழ்க்கோல் - தாழக்கோல் - என்பதற்குப் பொருள் காணல் அமையாது என்ற விளக்கம் சாலச்சிறந்தது. உரையாசிரியன்மார் தாழைத் திறக்குங்கோல் என்று விரித்துப் பொருள் கூறியமை தம் காலத்துக் கதவு பூட்டுதல் திறத்தல் முறை பற்றியது போலும். இவர் குறித்த நிலையே பண்டை வழக்கு என்க.]

## இளம்பூரணம்

### *386. தமிழ் என்னும் நிலைமொழியும் அற்றாதல்*

**தமிழ்என் கிளவியும் அதன்ஓ ரற்றே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* தமிழ் என்னும் சொல்லும், அதனோடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து மிகுதலே யன்றி, அக்கும் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* தமிழக் கூத்து சேரி தோட்டம் பள்ளி - என வரும். *(90)*

## நச்சினார்க்கினியம்

### *385. 'தமிழ்' அக்கும் பெற்று முடிதல்*

**தமிழ்என் கிளவியும் அதனோ ரற்றே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* தமிழ்....ஓரற்று - தமிழ் என்னும் சொல்லும், முற்கூறிய தாழ் என்னும் சொல்லொடு ஒரு தன்மைத்தாய், வல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி அக்குச்சாரியையும் பெற்று முடியும் எ-று.

'அதனோ ரற்றே' என்றதனான், இதற்கும் தமிழ்க்கூத்து என வல்லெழுத்து மிகுதலே வலியுடைத்து.

*(உ-ம்.)* தமிழக்கூத்து சேரி தோட்டம் பள்ளி என வரும். தமிழையுடைய கூத்து[1] என விரிக்க.

தமிழதரையர்[3] என்றாற் போல்வன வல்லெழுத்து பெறாது அக்குப் பெற்றன. 'உணரக் கூறிய' (405) என்னும் புறனடையாற் கொள்க.

தமிழநாடு தமிழ்நாடு - தமிழயாழ் தமிழ்யாழ்- தமிழவரையர் தமிழரையர் என ஏனைக் கணத்து முடிபு 'எப்பெயர் முன்னரும்' *(128)* என்பதனுள் 'முற்ற' என்றதனான் முடித்தாம். *(90)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*385.* 1. தமிழியலுக்கு ஏற்ப அமைந்த கூத்து.

2. தமிழைப் பேசும் சேரி, தோட்டம் என்க; தமிழைப் பயிற்றும் பள்ளி என்க. (பள்ளி: சமண் பள்ளியுமாம்.)

3. தமிழைப் பேசும் நிலப்பரப்பையாளும் வேந்தர். தமிழ்+அக்கு+தரையர்> தமிழ்+அ+ தரையர் = தமிழதரையர்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*385.* **தமிழென் கிளவியும் அதனோ ரற்றே.**

தமிழக்கூத்து செய்தி தூய்மை பாணி என வரும். தமிழிற்குரிய கூத்து என நான்காவது விரிக்க. உடைமைப் பொருள் விரிக்கின், இச்சாரியை ஆறனுருபாய் மயக்கம் செய்யும் என்க.

## இளம்பூரணம்

### *387. 'குமிழ்' மரப்பெயர் அம்முச்சாரியை பெற்று முடிதல்*

**குமிழ்என் கிளவி மரப்பெயர ராயின்**
**பீர்என் கிளவியோடு ஓர்இயற்று ஆகும்.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....ற்று.

(இ-ள்.) குமிழ் என்னும் சொல், குமிழ்த்தல் என்னும் தொழிலன்றி மரப்பெயராயின், பீர் என்னும் கிளவியொடு ஓரியல்பிற்றாய், மெல்லெழுத்தும் அம்முச்சாரியையும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) குமிழ்ங்கோடு குமிழங்கோடு செதிள்தோல் பூ - எனவரும்.

'ஓரியற்று' என்றதனான், பிறவற்றிற்கும் இம்முடிபு கொள்க.

(உ-ம்.) மகிழ்ங்கோடு மகிழங்கோடு - என ஒட்டுக. (91)

## நச்சினார்க்கினியம்

### 386. 'குமிழ்' மரப்பெயர் மெல்லெழுத்துப் பெற்று முடிதல்

**குமிழ்என் கிளவி மரப்பெய ராயின்**
**பீர்என் கிளவியோடு ஓர்இயற்று ஆகும்.**

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்தும் அம்மும் வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

(இ-ள்.) குமிழ்....ஆயின் - குமிழ் என்னும் சொல் குமிழ்த்தல் என்னும் தொழிலன்றி மரப்பெயராயின்; பீர்...ஆகும் - பீர் என்னும் சொல்லோடு ஓரியல்பிற்றாய் ஒருவழி மெல்லெழுத்தும் ஒருவழி அம்மும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) குமிழ்ங்கோடு குமிழங்கோடு செதில் தோல் பூ எனவரும்.

'ஓரியற்று' என்றதனான் பிறவற்றிற்கும் இம்முடிபு கொள்க.

மகிழ்ங்கோடு மகிழங்கோடு என வரும். (91)

## இளம்பூரணம்

### 388. 'பாழ்' வல்லெழுத்தொடு மெல்லெழுத்து உறழ்ந்து முடிதல்

**பாழ்என் கிளவி மெல்லெழுத்து உறழ்வே.**

இச்...எனின், இதுவும் இவ்வீற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) பாழ் என்னும் சொல் வல்லெழுத்தொடு மெல்லெழுத்து உறழ்ந்து முடியும் எ-று.

(உ-ம்.) பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு சேரி தோட்டம் பாடி - என வரும். (92)

**நச்சினார்க்கினியம்**

## 387. 'பாழ்' வேற்றுமையுள் முடியுமாறு

**பாழ்என் கிளவி மெல்லெழுத்து உறழ்வே.**

இது வல்லெழுத்தினொடு மெல்லெழுத்துப் பெறுக என்றலின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) பாழ்....உறழ்வு - பாழ் என்னும் சொல் ஈறு வல்லெழுத்தினொடு மெல்லெழுத்துப் பெற்று உறழ்ந்து முடியும் எ-று.

(உ-ம்.) பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு சேரி தோட்டம் பாடி என ஒட்டுக. இது பாழுட்கிணறு என விரியும, பாழ்த்த கிணறு என வினைத்தொகை முடியாமையின்.[1] (92)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***387.*** 1. வல்லொற்று மெல்லொற்று மிகுதலின் வினைத் தொகையாக முடித்தல் இயலாதென்றார். அன்றியும் வினைத்தொகையாயின், நிலைமொழி வருமொழி செய்தல் கூடாது என்பது (482).

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*387.* **பாழ்என் கிளவி மெல்லெழுத் துறழ்வே.**

பாழ்ங்கிணறு என்பதைப் பாழினுட் கிணறு என ஏழாம் வேற்றுமைப்பொருள்பட விரிப்பர் நச்சினார்க்கினியர். அஃதொவ்வாது. பாழினை உற்ற கிணறு என இரண்டாவது விரித்தலே சால்பென்க.

*387.* [பாழ் - பாழ்பட்ட இடம், அவ்விடத்துள் காணப்படும் கிணறு என விரித்தற்கண் என்னை ஏதம்? கிணறு பாழ்படினும், அது பாழ்பட்ட இடத்தின்கண்ணதாயினும், இப்பொருள் வேறுபாடு, இத்தொடர் வேற்றுமைமுடிபு கோடலைத் தடைசெய்தின்று.]

## இளம்பூரணம்

### *389. 'ஏழ்' அன்சாரியை பெறுதல்*

**ஏழ்என் கிளவி உருபுஇயல் நிலையும்.**

இச்....எனின், இவ்வீற்று எண்ணுப்பெயர்க்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு....ற்று.

(இ-ள்.) ஏழ் என்னும் எண்ணுப்பெயர் இறுதி, உருபு புணர்ச்சிக்கண் சொன்ன இயல்பின்கண்ணே நிலைபெற்று[1], அன் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) ஏழன் காயம் சுக்கு தோரை பயறு - என வரும்.

இயைபு வல்லெழுத்து இவ்வோத்தின் புறனடையான் வீழ்க்க. *(93)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*389.* 1) 199ஆம் சூத்திரவிதி

ஏழனாற் கொண்ட காயம் என விரித்தார் நச்சினார்க்கினியர். (ஏழு பணத்தினான் என்க.)

## நச்சினார்க்கினியம்

### *388. 'ஏழ்' அன்சாரியை பெற்று முடிதல்*

**ஏழ்என் கிளவி உருபியல் நிலையும்.**

இஃது எண்ணுப்பெயர் இவ்வாறு முடிக என்றலின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) ஏழ்.....நிலையும் - ஏழ் என்னும் எண்ணுப் பெயர் இறுதி, உருபுபுணர்ச்சிக்கண் கூறிய இயல்பின் கண்ணே நிலைபெற்று அன்பெற்று முடியும் எ-று.

அஃது 'அன்என் சாரியை ஏழன் இறுதி' (194) என்பதாம்.

(உ-ம்.) ஏழன் காயம் சுக்கு தோரை பயறு என வரும். இயைபு வல்லெழுத்து ஓத்தின் புறனடையான் (405) வீழ்க்க. இஃது ஏழனாற்[1] கொண்ட காயம் என விரியும். (93)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*388.* 1. ஏழ்பணத்தினாற் கொண்டது என்க.

**இளம்பூரணம்**

### *390. அளவு நிறைப்பெயர்கள் வருவழி, ஏழ் 'எழு' ஆதல்*

**அளவும் நிறையும் எண்ணும் வருவழி**
**நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்**
**கடிநிலை இன்றே ஆசிரி யர்க்க.**

இச்....எனின், மேலதற்கு எய்தாதது எய்துவித்....ற்று.

(இ-ள்.) அவ் ஏழ் என்னும் எண்ணுப்பெயர், அளவுப் பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயரும் வருமொழி யாய் வருமிடத்து, நெடுமுதல் குறுகுதலும் ஆண்டு உகரம் வருதலும் ஆசிரியர்க்கு நீக்கும் நிலைமை இன்று எ-று.

(உ-ம்.) எழுகாலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி - எனவும், எழுகழஞ்சு தொடி பலம் எனவும், எழுமூன்று எழுநான்கு எனவும் வரும்.

'நிலை' என்றதனான், வன்கணத்துப் பொருட் பெயர்க்கும் இம்முடிபு கொள்க.

*(உ-ம்.) எழுகடல் சிலை திசை பிறப்பு - என வரும்.(94)*

## நச்சினார்க்கினியம்

## *389. 'ஏழ்' அளவு நிறை எண்ணுப் பெயரொடு புணருமாறு*

**அளவும் நிறையும் எண்ணும் வருவழி**
**நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்**
**கடிநிலை இன்றே ஆசிரி யர்க்க.**

இது மேலதற்கு எய்தாதது எய்துவித்தது.

*(இ-ள்.) அளவும்.....வருவழி* - அவ் ஏழ் என்பதன் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப் பெயரும் வருமொழியாய் வருமிடத்து; நெடுமுதல்.... ஆசிரியர்க்க - முன் நின்ற நெட்டெழுத்தின் மாத்திரை குறுகலும் ஆண்டு உகரம் வருதலும் நீக்கும் நிலைமையின்று ஆசிரியர்க்கு எ-று,

(உ-ம்.) எழு கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், எழுகழஞ்சு தொடி பலம் எனவும், எழுமூன்று எழுநான்கு எனவும் வரும்.

'நிலை' என்றதனான், வன்கணத்துப் பொருட் பெயர்க்கும் இம்முடிபு கொள்க.

எழுகடல் சிலை திசை பிறப்பு என வரும். *(94)*

## இளம்பூரணம்

## *391. எழுபத்து 'எழுபஃது' என முடிதல்*

**பத்துஎன் கிளவி ஒற்றுஇடை கெடுவழி**
**நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி.**

இச்....எனின், மேலதற்கு ஒருவழி எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு....ற்று.

(இ-ள்.) அவ் ஏழ் என்பதனொடு பத்து என்பது புணருமிடத்து, அப்பத்து என் கிளவி இடையொற்றுக் கெடுவழி, ஆய்தமாகிய புள்ளி நிற்றல் வேண்டும். எ-று.

வருமாறு: எழுபஃது - என வரும். (95)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***391.*** முற்றுகரமாகலின் உயிர் வருவழிக் கெட்டது (குற்றியலுகரமாயின் தான் கெடாது நின்று வருமுயிர் ஏற இடங்கொடுக்கும் என்க.)

**நச்சினார்க்கினியம்**

***390. அப்பெயர் 'பத்து' என்பதனொடு முடியுமாறு***

**பத்துஎன் கிளவி ஒற்றிடை கெடுவழி**
**நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி.**

இது மேலதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது, வருமொழி நோக்கி விதித்தலின்.

(இ-ள்.) பத்தென்....கெடுவழி - அவ் ஏழனொடு பத்து என்பது புணருமிடத்து, அப்பத்து என் கிளவி இடையொற்றுக் கெடுவழி; ஆய்தப்புள்ளி நிற்றல் வேண்டும் - ஆய்தமாகிய புள்ளி நிற்றலை விரும்பும் ஆசிரியன் எ-று.

வருமாறு: எழுபஃது என வரும். (95)

**இளம்பூரணம்**

***392. 'ஏழ்' ஆயிரம் வருவழி உகரம் பெறாது முடிதல்***

**ஆயிரம் வருவழி உகரம் கெடுமே.** [1]

இச்.....எனின், மேலதற்கு ஒருவழி எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* அவ் ஏழ் என்பது, ஆயிரம் என்பது வருமிடத்து, முன்பெற்ற உகரம் பெறாது முடியும் எ-று.

வருமாறு : எழாயிரம் - என வரும். *(96)*

## நச்சினார்க்கினியம்

### *391. 'ஆயிரம்' வருவழி 'ஏழ்' முடியுமாறு*

**ஆயிரம் வருவழி உகரம் கெடுமே.**

இது நெடுமுதல் குறுகிநின்று உகரம் பெறாது என்றலின், எய்தியது ஒரு மருங்கு மறுத்தது.

*(இ-ள்.)* ஆயிரம்...கெடும் - ஏழ் என்பதன்முன் ஆயிரம் என்னும் எண்ணுப்பெயர் வருமொழியாய் வருமிடத்து, நெடுமுதல் குறுகிநின்று உகரம் பெறாது முடியும்[1] எ-று.

வருமாறு : எழாயிரம் என வரும்.[2] *(96)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***391.*** 1. உயிர் வருதலின், நிலைமொழியீற்று முற்றுகரம் முன்னர் வந்தியைந்தது *(389)*, ஈண்டுக் கெடலாயிற்று.

2. ஏழாயிரம் என முதல் குறுகாது முடிதலை வருஞ் சூத்திரத்துள் இலேசான் முடிப்பார்.

### பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***391.*** **ஆயிரம் வருவழி உகரம் கெடுமே.**

*(இ-ள்.)* எழு என விதியீறாய் நின்ற சொல்லின் முன் ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர் வரின் உகரம் கெடும்.

எழு என்பதன்கண் உகரம் கெட்டவழி, ழகர ஈறு குறிற்கீழ் ஒற்றாய் நிற்றற்கு ஏலாமையின், முதல் நீளும் என்பது உய்த்துணரப்படும் ஆதலின், எடுத்துக் கூறாராயினார் என அறிக.

எழு > ஏழ் + ஆயிரம் = ஏழாயிரம் என வரும்.

*391.* ['எழாயிரம்' எனக் குறில்வழி ழகரம் வருதல் கூடாது என்பதனை உட்கொண்டு அதனை ஏழாயிரமாகக் கொள்ளுமிவர், ஓராயிரம் இராயிரம் என்னும் புணர்ப் புக்களை மாத்திரம் (464) உடன்படுதல் எவ்வாறு பொருந்தும்? தொல்லுரையாசிரியன்மார் எழாயிரம் என முடித்துக் காட்டியதே சாலும் என்க.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### *393. ஏழ் எனும் பெயர் நூறாயிரம் வருவழி இயல்பாகவே புணர்தல்*

**நூறூர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக்**
**கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே.**

இச்....எனின், இதுவும் மேலதற்கு ஒருவழி எய்தியது முழுவதும் விலக்குதல் நுதலிற்று.

*(இ-ள்.)* அவ் ஏழ் என்பது, நூறு என்னும் சொல் ஊர்ந்து வருகின்ற ஆயிரக்கிளவியாகிய நூறாயிரம் என்பதற்குமுன், கூறிய நெடுமுதல் குறுகி உகரம் பெறுதல் இன்று எ-று.

வருமாறு : ஏழ் நூறாயிரம் - என வரும்.

'கூறிய' என்றதனான், நெடுமுதல் குறுகி உகரம் பெற்று எழுநூறாயிரம் என்றும் ஆகும்.

இவ்விலேசினானே, ஏழாயிரம் என்றும் ஆம்.

இன்னும் இதனானே, இயல்புகணத்து முடிபும் கொள்க.

*(உ-ம்.)* எழு ஞாயிறு எழுநாள் - என வரும். *(97)*

## நச்சினார்க்கினியம்

### 392. 'நூறாயிரம்' வருவழி, 'ஏழ்' இயல்பாய் முடிதல்

**நூறுஊர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக்**
**கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே.**

இஃது எய்தியது முழுவதூஉம் விலக்கிற்று, எய்திய உகரம் கெட்டு அதன்மேல் நெடுமுதல் குறுகாது என்றலின்.

(இ-ள்.) நூறு....இன்று - அவ் ஏழ் என்பது, நூறு என்னும் சொல்மேல் வரும் ஆயிரம் என்னும் சொல்லிற்கு; கூறிய.....இன்று - முற்கூறிய நெடுமுதல் குறுகி உகரம் பெறுதலின்று எ-று.

வருமாறு : ஏழ் நூறாயிரம் என வரும்.

'கூறிய' என்றதனான், நெடுமுதல் குறுகி உகரம் பெற்று எழுநூறாயிரம் எனவும் வரும்.

இதனானே, ஏழாயிரம் என மேல் (391) முதனிலை குறுகாமையும் கொள்க.[1]

இதனானே, எழுஞாயிறு எழுநாள் எழுவகை என இயல்புகணத்து நெடுமுதல் குறுகி உகரம் பெறுதலும் கொள்க. (97)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***392.*** 1. உயிர் வருவழி முதனிலை குறுகாமை 394ஆம் சூத்திரத்தாற் பெறப்படுமெனின், ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர் அதிகாரம் இச்சூத்திரத்தொடு முடிதலின், ஈண்டே இலேசினாற் கொண்டனர் உரைகாரர் இருவரும் என்க. பிற எண்ணுப்பெயர் முதலியனவே அச்சூத்திரத்தான் முடிக்கப்படும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***392.*** **நூறூர்ந்து வரூஉம்.....குறுக்க மின்றே.**

(இ-ள்.) எழு என்னும் சொல், நூறு என்பதனைத் தொடர்ந்து வரும் ஆயிரம் என்னும் தொகை மொழிக்கு, மேற் பொதுவிதியாற் கூறிய நெடுமுதல் குறுக்கம் இல்லை. உகரக்கேடு மேலைச்சூத்திரத்துக் கூறப்பட்டது.

எழு + நூறாயிரம் = ஏழ்நூறாயிரம் எனவரும்.

'கூறிய' என்றதனான், சிறுபான்மை எழுநூறாயிரம் என வருதலும் கொள்க.

***392.*** [இவ்வுரைகாரர் சூ. 471உரையுள், "இருநூறாயிரம் முந்நூறாயிரம் என வரின் நிலைமொழி இருநூறு முந்நூறு என்றும், வருமொழி ஆயிரம் என்றும் பொருள்படும். ஒரு நூறாயிரம் என்பதன்கண் அவ்ஐயம் நிகழாது" என்று குறிப்பிடுவர். இச்சூத்திரவுரையுள் 'கூறிய' என்றதனான் சிறுபான்மை எழுநூறாயிரம் என வருதலையும் உடன்பட்டார். ஆண்டு எழுநூறு + ஆயிரம் எனவும் நிலை மொழி வருமொழி செய்தலுண்டன்றே? பின்னர் இவர் எழுதுவதனோடு இக்கூற்று முரண்படுதல் காண்க.]

**இளம்பூரணம்**

***394.*** ***பேரெண்ணுப்பெயர் வருவழியும் 'ஏழ்' மேலை முடிபே பெறுதல்***

**ஐஅம் பல்-என வரூஉம் இறுதி**
**அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும்.**

இச்....எனின், இதுவும் மேலதற்கு ஒருவழி எய்தியது முழுவதும் விலக்குதல் நுதலிற்று.

(இ-ள்.) அவ் ஏழ் என்பதன் முன், ஐ என்றும் அம் என்றும் பல் என்றும் வருகின்ற இறுதிகளையுடைய,

பொருட்பெயர் அல்லாத எண்ணுப் பெயராகிய தாமரை - வெள்ளம் - ஆம்பல் - என்பன வந்தாலும், நெடுமுதல் குறுக்கமின்றி, உகரம் பெறாது அவ்வியல்பின்கண்ணே நின்று முடியும் எ-று.

வருமாறு: ஏழ்தாமரை ஏழ்வெள்ளம் ஏழாம்பல் எனவரும். (98)

**நச்சினார்க்கினியம்**

### *393. தாமரை முதலிய பேரெண்ணுப்பெயர் வருவழியும் அற்றாதல்*

**ஐஅம் பல்என வரூஉம் இறுதி**
**அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும்.**

இதுவும் அது.

(இ-ள்.) ஐ அம் பல் என வரூஉம் இறுதி - அவ் ஏழன் முன்னர் ஐ என்றும் அம் என்றும் பல் என்றும் வருகின்ற இறுதிகளையுடைய; அல்பெயர் எண்ணினும் - பொருட் பெயர் அல்லாத எண்ணுப் பெயராகிய தாமரை வெள்ளம் ஆம்பல் என்பன வந்தாலும்; ஆயியல் நிலையும் - நெடுமுதல் குறுகி உகரம் பெறாது[1] அவ்வியல்பின்கண்ணே (392) நின்று முடியும் எ-று.

வருமாறு: ஏழ்தாமரை ஏழ்வெள்ளம் ஏழாம்பல் எனவரும். (98)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*393.* 1. நெடுமுதல் குறுகுதலும் உகரம் பெறுதலும் செய்யாது முடியும் என ஈரிடத்தும் எதிர்மறை கொள்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*393.* ஐஅம் பல்என......ஆயியல் நிலையும்.

விகுதிகளைக்கொண்டு பெயர்நிலைக் கிளவிகளைச் சுட்டிக் கூறும் மரபு வடமொழிக்கே உரியதெனக் கருதற்க; அது தமிழுக்கும் உரியதே என்பதை உணர்த்த 'ஐஅம் பல்என வரூஉம் இறுதி அல்பெயர்' என்றார்.

***393.*** [ஈண்டு வடமொழிமரபினைத் தமிழிற்கும் உரித்தாதலைச் சுட்டும் இவர், பிராதிபதிகத்தைப் பிரதமா விபத்தியாக்கும் வடமொழி மரபினை ஆசிரியர் 'அல்லதன் மருங்கின்'*(326)* என்னும் சூத்திரத்து நினைவு படுத்தியமையைத் தாம் நெகிழ்த்துப் போயினார். அதனையும் குறிப்பிட்டிருப்பின் சிறக்கும்.

விகுதி பற்றிக் கூறும் வடமொழி மரபு, தமிழின்கண், பெயர்ச்சொல்லிடத்து மாத்திரமன்றி, வினைச்சொல்லிடத்து முண்டு என்பதனைப் 'பின்முன் கால்நடை' (வினை. 32) என்னும் சூத்திரத்தாற் புலப்படுத்தினார் ஆசிரியர். அதனையும் இவர் சுட்டியிருப்பின் சிறக்கும்.]

### இளம்பூரணம்

### *395.* உயிர்க்கணம் வருவழியும் அற்றாதல்

**உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.**

இச்....எனின், இதுவும் மேலதற்கு எய்தியது ஒருவழி முழுவதும் விலக்குதல் நுதலிற்று.

*(இ-ள்.)* அவ் ஏழ் என்பது, அளவு முதலிய பெயர்களுள் உயிர்முதல் மொழி வரினும், நெடுமுதல் குறுகி உகரம் வாராதும் முடியும்[1] அவ்வியல்பின் திரியாது முடியும் எ-று.

*(உ-ம்.)* ஏழகல் ஏழுழக்கு ஏழொன்று ஏழிரண்டு என வரும். *(99)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

***395.*** *1)* நெடுமுதல் குறுகுதலும் உகரம் வருதலுமின்றி முடியும் அவ்வியல்பு என்க. எனவே, நெடுமுதல் குறுகாதும் உகரம் வாராதும் முடியும் என்றவாறு.

## நச்சினார்க்கினியம்

### *394. உயிர்க்கணம் வருவழியும் இயல்பாதல்*

**உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.**

**இதுவும் அது.**

*(இ-ள்.)* உயிர்....திரியாது - அவ்ஏழ் என்பதன் முன்னர் அளவுப்பெயரும் எண்ணுப்பெயரும் ஆகிய உயிர்முதல் மொழி வரினும், நெடுமுதல் குறுகி உகரம் பெறாது முடியும்[1] இயல்பின் திரியாது முடியும் எ-று.

*(உ-ம்.)* ஏழகல் ஏழுழக்கு, ஏழொன்று ஏழிரண்டு எனவரும். *(99)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***394.** 1.* மேலைச் சூத்திரவுரைப் பகுதிக் குறிப்பு ஈண்டும் கொள்க.

## இளம்பூரணம்

### *396. 'கீழ்' வேற்றுமைக்கண் உறழ்ச்சி முடிபு கோடல்*

**கீழ்என் கிளவி உறழத் தோன்றும்.**

இச்.....எனின், இவ்வீற்றுள் ஒன்றற்கு வேற்றுமைக்கண் வேறு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* கீழ் என்னும் சொல் உறழ்ச்சியாகத் தோன்றி முடியும் எ-று.

*(உ-ம்.)* கீழ்குளம் கீழ்க்குளம் - என வரும்.

'தோன்றும்' என்றதனான், நெடுமுதல் குறுகாது உகரம் வருதலும் கொள்க. இயைபு வல்லெழுத்து இவ்வோத்தின் புறனடையான் வீழ்க்க.

(உ-ம். கீழுகுளம் சேரி தோட்டம் பாடி எனவரும். *(100)*

### நச்சினார்க்கினியம்

## *395. 'கீழ்' இயல்போடு உறழ்தல்*

**கீழ்என் கிளவி உறழத் தோன்றும்.**

இஃது இவ்வீற்றுள் ஒன்றற்கு வேற்றுமைக்கண் உறழ்ச்சி கூறுகின்றது.

(இ-ள்.) கீழ்....தோன்றும் - கீழ் என்னும் சொல் உறழ்ச்சியாய்த் தோன்றி முடியும் எ-று.

'தோன்றும்' என்றதனான், நெடுமுதல் குறுகாது வல்லெழுத்துப் பெற்றும் பெறாதும் வருகின்ற உறழ்ச்சியாய் வருமென்று கொள்க. இயைபு வல்லெழுத்து அதிகாரத்தான் *(383)* கொள்க.

(உ-ம்.) கீழ்க்குளம் கீழ்குளம் சேரி தோட்டம் பாடி என வரும். *(100)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*395.* **கீழ்என் கிளவி உறழத் தோன்றும்.**

கீழ் என்னும் பண்புப் பெயர்சொல் என விதந்தோதாது பொதுப்படக் கூறினமையின், அஃது இடமுணர்த்தி வருங்காலும் திசையுணர்த்தி வருங்காலும் இவ்விதி கொள்க. உறழத்தோன்றுதல் பண்பிற்கும் (கீழ்குலம் கீழ்க்குலம் - சாதி தொழில் பண்பு), மிகுதல் ஏனையவற்றிற்கும் (கீழ்க்குன்றம் சுனை தெற்றி பாறை; கீழ்க்குளம் சேரி தோட்டம் பாடி) வலியுடைத்தென்க.

### இளம்பூரணம்

## *397. ளகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு*

**ளகார இறுதி ணகார இயற்றே.**

இச்....எனின், ளகார ஈற்றிற்கு, ணகாரஈற்று வேற்றுமை முடிபோடு இயைய, வேற்றுமை முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) ளகார ஈற்றுப்பெயர், வேற்றுமைக்கண் ணகார ஈற்று இயல்பிற்றாய், வன்கணம் வந்தால், ளகாரம் டகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) முட்குறை நிறை தலை புறம் - என வரும். (101)

## நச்சினார்க்கினியம்

### 396. ளகார ஈற்றுப் பெயரது வேற்றுமை முடிபு

**ளகார இறுதி ணகார இயற்றே.**

இது நிறுத்த முறையானே ளகார ஈற்றுச் சொல் வேற்றுமைக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ளகார.....இயற்று - ளகார ஈற்றுப்பெயர், ணகார ஈற்றின் இயல்பிற்றாய் வன்கணம் வந்துழி டகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) முட்குறை சிறை தலை புறம் என வரும். (101)

## இளம்பூரணம்

### 398. மென்கணம் வருவழி ளகாரம் ணகாரமாதல்

**மெல்லெழுத்து இயையின் ணகாரம் ஆகும்.**

இச்.....எனின், மேலதற்கு மென்கணத்து முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) ளகார ஈறு, மெல்லெழுத்து வருமொழியாய் வந்தியையின், ணகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) முண்ஞெரி நுனி முறி - என வரும்.

இதனை வேற்றுமையிறுதிக்கண் அல்வழியது எடுத்துக் கோடற்கண் சிங்க நோக்காக வைத்தலின்[1], அல்வழிக்கும் இம்முடிபு கொள்க.

(உ-ம்.) முண்ஞெரிந்தது நீண்டது மாண்டது - என வரும். (102)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***398.*** *1)* இவ்வாறே *368*ஆம் சூத்திரவுரையிலும் குறிப்பிட்டார். நச்சினார்க்கினியரும் அதனை வழி மொழிந்தார்.

**நச்சினார்க்கினியம்**

### *397. மென்கணம் வருவழி இருவழியும் ளகரம் ணகரமாதல்*

**மெல்லெழுத்து இயையின் ணகாரம் ஆகும்.**

இது மேலதற்கு மென்கணத்து முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) மெல்லெழுத்து.....ஆகும் - ளகார ஈறு, மெல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வந்தியையின், ணகாரமாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) முண்ஞெரி நுனி மரம் என வரும்.

இதனை வேற்றுமையிறுதிக்கண் அல்வழியது எடுத்துக் கோடற்கண் சிங்கநோக்காக வைத்தலின் (*367*), அல்வழிக்கும் இம்முடிபு கொள்க.

முண்ஞெரிந்தது நீண்டது மாண்டது என வரும். (*102*)

**இளம்பூரணம்**

### *399. இவ்வீற்றுப்பெயரது அல்வழி முடிபு*

**அல்வழி எல்லாம் உறழ்என மொழிப.**

இச்....எனின், மேலதற்கு அல்வழி முடிபு கூறு......ற்று.

(இ-ள்.) ளகாரஈற்று அல்வழிகள் எல்லாம், திரிந்தும் திரியாதும் உறழ்ந்து முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) முள்கடிது முட்கடிது சிறிது தீது பெரிது - என வரும்.

'எல்லாம்' என்றதனான் குணவேற்றுமைக்கண்ணும் இவ்வுறழ்ச்சி கொள்க.

(உ-ம்.) முள்குறுமை முட்குறுமை சிறுமை தீமை பெருமை - எனவும், கோள் கடுமை கோட்கடுமை - எனவும் வரும்.

இன்னும் அதனானே, உருபு வாராது உருபின் பொருள்பட வந்தவற்றின் முடிபும் கொள்க.

(உ-ம்.) அதோட் கொண்டான் - இதோட் கொண்டான்- உதோட் கொண்டான்[1] - சென்றான் தந்தான் போயினான் - எனவரும். *(103)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***399.*** 1) அதோள் முதலியன அவ்விடம் முதலாகப் பொருள்படும். சுட்டுமுத லாகிய இகர இறுதியும் (160) என்றதனான், இவை அதோளி முதலாகவும் அப்பொருளில் வரும் என முன்னர் ஓதினார்.

### நச்சினார்க்கினியம்

***398. இவ்வீறு திரியாதும் திரிந்தும் உறழ்ந்துவரும் அல்வழி முடிபு***

அல்வழி எல்லாம் உறழ்என மொழிப.

இது மேலதற்கு அல்வழிமுடிபு கூறுகின்றது.

(இ-ள்.) அல்வழி....மொழிப - ளகாரஈறு, அல்வழிக் கண் எல்லாம், திரியாதும் டகாரமாய்த் திரிந்தும் உறழ்ந்து முடியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) முள்கடிது முட்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

'எல்லாம்' என்றதனான், குணவேற்றுமைக்கண்ணும் இவ்வுறழ்ச்சி கொள்க.[1]

முள்குறுமை முட்குறுமை சிறுமை தீமை பெருமை எனவும், கோள்கடுமை கோட்கடுமை - வாள்கடுமை வாட்கடுமை - எனவும் ஒட்டுக.

இதனானே, அதோட் கொண்டான் இதோட் கொண்டான் உதோட் கொண்டான் எதோட் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என, உருபுவாராது உருபின் பொருள்பட வந்தனவும்[2] கொள்க. (103)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*398.* 1. குணவேற்றுமைக்கண்ணும் அவ்வம் முடிபு கோடல் 328, 346ஆம் சூத்திரவுரையுள் காண்க.

2. உருபின் பொருள்பட வந்தன 159, 236ஆம் சூத்திர விதியுள்ளும் காண்க.

## இளம்பூரணம்

## *400. தகரம் வருவழி ளகரம் ஆய்தமாகவும் திரியப் பெறுதல்*

**ஆய்தம் நிலையலும் வரைநிலை இன்றே**
**தகரம் வரூஉம் காலை யான.**

இச்.....எனின், மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்....ற்று.

(இ-ள்.) ளகாரம் டகாரமாயே திரியாது ஆய்தமாய்த் திரிந்து நிற்றலும் வரையும் நிலைமை இன்று, தகர முதல் மொழி வருங்காலத்து எ-று.

(உ-ம்.) முஃடீது முட்டீது - என வரும். (104)

## நச்சினார்க்கினியம்

### *399. தகரம் வருவழி ஆய்தமாகவும் திரிந்து நிற்கும் முடிபு*

**ஆய்தம் நிலையலும் வரைநிலை இன்றே**
**தகரம் வரூஉங் காலை யான.**

இது தகரத்திற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தது, உறழ்ச்சியேயன்றி ஆய்தமாகத் திரிந்தும் உறழ்க என்றலின்.

*(இ-ள்.)* தகரம் வரூஉம் காலையான - தகரம் முதல் மொழியாய் வருங்காலத்து; ஆய்தம்....இன்று - ளகாரம் டகாரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிந்து நிற்றலும் நீக்கும் நிலைமை இன்று எ-று.

*(உ-ம்.)* முஃடீது[1] முட்டீது என வரும். *(104)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***399.*** 1. முள்+தீது; வருமொழித் தகரம் திரிதல் 150ஆம் சூத்திரவிதியாற் கொள்க.

### சாத்திரியார் உரைக்குறிப்பு

***400.*** **ஆய்தம் நிலையலும்...... காலை யான.**

இச்சூத்திரத்தில் தகரம் வருமொழி முதலாய் இருக்க நிலைமொழி யீற்றிலுள்ள ளகரம் ஆய்தமாகவும் மாறும் எனவும், 'ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும்' *(151)* என்றவிடத்து நிலைமொழியீற்றிலுள்ள ளகரவொற்றின் பின்னர் வருமொழி முதலாகிய தகரம் டகரமாக மாறும் எனவும் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் ஒரு சூத்திரம் முதலில் செய்கை செய்யப்படின், மற்றொரு சூத்திரம் செய்கை செய்யப்படுதற்கு இடனில்லாது போம். ஆகலின் இரண்டு சூத்திரமும் ஒரே காலத்துச் செய்கை செய்யப்பட்டு, தகரத்தைப் பார்த்து ளகரம் ஆய்தமாகவும், ஆய்தமாக மாறும்

ளகரத்தைப் பார்த்துத் தகரம் டகரமாகவும் மாறுகின்றன எனக்கொள்ளல் வேண்டும். 'ஸ்தாநீவற்பாவம்' கொண்டு, மாறியவிடத்தும் அவ்வெழுத்தே இருப்பது போலக் கொண்டு செய்கை செய்தலும் ஆசிரியர்க்கு உடன்பாடு என்றலும் ஒன்று.

***400.*** [சாத்திரியார் நுண்ணிதாகக் கண்ட ஸ்தாநீவற் பாவம் என்னும் வடமொழியிலக்கணம் உரைகாரரால் திரிந்ததன் திரிபு அது என்னும் நயமாகக் கொள்ளப்பட்டது எனத் தோன்றுகிறது.]

**இளம்பூரணம்**

***401. தனிநெடில் இறுதி ளகரம் இயல்பாதலும், அல்வழிக்கண் வேற்றுமை முடிபு பெறுதலும்***

**நெடியதன் இறுதி இயல்புஆ குநவும்**
**வேற்றுமை அல்வழி வேற்றுமை நிலையலும்**
**போற்றல் வேண்டும் மொழியுமார் உளவே.**

இச்....எனில், மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்.....ற்று.

*(இ-ள்.)* ளகாரம் நெடியதன் இறுதி, திரியாது இயல்பாய் முடிவனவற்றையும், வேற்றுமை அல்லாத அல்வழியிடத்து வேற்றுமையின் இயல்புடையவாய்த் திரிந்து முடிதலையும், போற்றுதல் வேண்டும் மொழிகளும் உள எ-று.

*(உ-ம்.)* வாள்கடிது கோள் கடிது சிறிது தீது பெரிது - எனவும், தேட்கடிது நாட்கடிது சிறிது தீது பெரிது - எனவும் வரும்.

போற்றல் வேண்டும் என்றதனான், உதளங்காய் செதிள் தோல் பூ - என அம்முப் பெற்று முடிவன கொள்க. *(105)*

## நச்சினார்க்கினியம்

### 400. தனிநெடிலிறுதி ளகரம் இயல்பாதலும், குற்றொற்று வேற்றுமைமுடிபு பெறுதலும்

நெடியதன் இறுதி இயல்புஆ குநவும்
வேற்றுமை அல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டும் மொழியுமார் உளவே.

இது மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* நெடியதன்.......ஆகுநவும் - அவ்வீற்று நெடியதன் இறுதி திரியாது இயல்பாய் முடிவனவற்றையும்; வேற்றுமை....நிலையலும் - வேற்றுமை அல்லாதவிடத்து வேற்றுமையின் இயல்புடையவாய்த் திரிந்து முடிதலையும்; போற்றல்....உள - போற்றுதல் வேண்டும் சொற்களும் உள எ-று.

*(உ-ம்.)* கோள்கடிது வாள்கடிது சிறிது தீது பெரிது எனவும், 'புட்டேம்பப் புயன்மாறி' (பட்டினப். 4) எனவும் வரும்.

'போற்றல் வேண்டும்' என்றதனான், உதளங்காய் செதிள் தோல் பூ என அம்முப்பெறுதலும் கொள்க.

உதள் என்பது யாட்டினை உணர்த்துங்கால், முற்கூறிய முடிபுகள் இருவழிக்கும் ஏற்றவாறே முடிக்க.

உதட்கோடு உதள்கடிது உதணன்று[1] என ஒட்டுக. 'மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்' என்றார் மரபியலில் (47). (105)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***400.*** 1. இவற்றை முறையே 386ஆம் சூத்திரத்தானும், 398ஆம் சூத்திரத்தானும், 150, 160ஆம் சூத்திரங்களானும் முடிக்க. 160ஆம் சூத்திரத்துள் இலேசு கொள்க.

உதள் ஆண்பாலையுணர்த்தும் மரபுப்பெயர் (மா.2,48)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***400.*** **நெடியதன் இறுதி.....மொழியுமா ருளவே.**

'புட்டேம்பப் புயன்மாறி' என்பது தகரம் வருதலினால் எய்திய திரிபாகலின் அதனைக்காட்டுதல் நிரம்பாதென்க.

உதளங்காய் எனச்சாரியை பெறுதலும் கொள்க என்பார் நச்சினார்க்கினியர். சாரியை பெறுதல் 'பெயரும் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப' (132) என்னும் சூத்திரத்தான் எய்து மாகலான், ஈண்டு அமைத்தல் வேண்டா என்க.

***400.*** [இவ்வாறு நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டியதனை நிரம்பாது என மறுக்கும் இவர் 396 398ஆம் சூத்திரங்களில், முள்+தலை முள்+தீது என இருவழியும், தகர வர, முடியும் நிலையை எடுத்துக்காட்டினார். ஈண்டும் அவ்வாறே கோடற்கண் இழுக்கென்னை?

சாரியை பெறுதல் 132ஆம் சூத்திரப் பொதுவிதியான் எய்துமாயின், மரப்பெயர்க்கிளவியை ஆசிரியர் விதந்து சூத்திரித்தமை எல்லாம் மிகையாக முடியுமன்றோ? ஆகலான் அச்சாரியைப்பேறு சில பெயர்களிடத்தே விதந்து கிளக்கப் பெறவே வேண்டுமென்க.]

**இளம்பூரணம்**

***402. இவ்வீற்றுத் தொழிற்பெயர் (பிற மெய்யீற்றுத் தொழிற்பெயர் இயலதாய்) உகரம் பெறுதல்***

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இச்....எனின், இவ்வீற்றுத் தொழிற்பெயர்க்கு, வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* ளகார ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம், வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பினவாய், வன்கணம் வந்தவழி வல்லெழுத்தும் உகரமும் பெற்றும், மென்கணமும் இடைக்கணத்து வகரமும் வந்தவழி உகரம் பெற்றும் முடியும் எ-று.

*(உ-ம்.)* துள்ளுக் [1] கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், துள்ளுக் கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும்.

'எல்லாம்' என்றதனான், தொழிற்பெயர்கள் இருவழியும் இவ்வாறன்றிப் பிறவாறு முடிவனவும் கொள்க.

*(உ-ம்.)* கோள் [2] கடிது கோட்கடிது - வாள்கடிது வாட்கடிது - சிறிது தீது பெரிது - எனவும். கோள் கடுமை கோட்கடுமை - வாள் கடுமை வாட்கடுமை - சிறுமை தீமை பெருமை - எனவும் வரும்.

ஈண்டு, வாள் என்றது, கொல்லுதலை [3]. *(106)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***402.*** *1)* துள்ளு - துள்ளுதல்; ளகார ஈற்று முதனிலைத் தொழிற்பெயர்.

*2)* கோள் - கொள்ளுதல். உரையாசிரியர் முதனிலை திரிந்த தொழிற்பெயரையும் இலேசினாற் கொண்டார். அது பொருந்தாது என்ப பின்னுரையாளர்.

*3)* வாள் - சொல்லுதல். இப்பொருளே ஏற்றது என்ப. 'வாய் வாளாமை' என்புழி வாய்பேசாதிருத்தல் குறிக்கப் படுதல் காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *401. இவ்வீற்றுத் தொழிற்பெயர் முடிபு*

**தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல.**

இஃது இவ்வீற்றுத் தொழிற்பெயர்க்கு இருவழியும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* தொழிற்பெயர்....இயல - ளகார ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல, இருவழியும், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* துள்ளுக்[1] கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், துள்ளுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

'எல்லாம்' என்றதனானே, இருவழியும் தொழிற் பெயர்கள் உகரமும் வல்லெழுத்தும் பெறாது திரிந்தும் திரியாதும் முடிவனவும் கொள்க.

கோள்[2] கடிது கோட் கடிது, கோள்கடுமை கோட் கடுமை-என்பன போல்வன பிறவும் வரும்.

இனி, வாள்கடிது வாட்கடிது சிறிது தீது பெரிது எனவும் வாள்கடுமை வாட்கடுமை எனவும் காட்டுக. வாள் சொல்லுதல்[3]. *(106)*

**நச்சினாக்கினியம் உரைக்குறிப்பு**

***401.*** *1, 2, 3.* இளம்பூரணர் உரைக்குறிப்பு நோக்குக.

'கெடுவாக வையாது' ***(குறள் 117)*** என்புழிக் கெடு என்பது புடைபெயர்ச்சியை யுணர்த்தும் தல் விகுதி கெட்டு

நின்றது. கேடு என்பது அவ்வாறாய் முதல் நீண்டு நின்றதெனக் கொள்க. திரை-நிரை-அலை-தளிர்- என்றாற்போல்வன விகுதி குன்றி முதனிலை மாத்திரமாய் நிற்றல் பற்றி இவற்றை முதனிலை வினைப்பெயரென வழங்குப - என்பர் சிவஞானமுனிவர். சூ.வி.

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**401. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெயர் இயல.**

'எல்லாம்' என்றதனான், கோள்கடிது கோட்கடிது என உகரமும் வல்லெழுத்தும் பெறாது ளகரமெய் திரிந்து வந்தன என்றனர் உரையாளர். கோள் என்பது கொள் என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயராகலின், இவ்விதி பெற்றிலது. இவ்விதி முதனிலைத் தொழிற்பெயர்களுக்கே சொல்லியது என்க.

வாள்கடிது வாட்கடிது என்று வரும் என்றும், வாள் என்பது கொல்லுதல் என்றும் எழுதினர் உரையாளர். வாள் என்பது தொழிற்பெயரன்று; கொல்லுதல் என்னும் பொருள் அதற்கு இலக்கணையான் வந்ததாகும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**401. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.**

உரையாசிரியன்மார், கோள்கடிது கோட்கடிது - வாள் கடிது வாட்கடிது - என உகரம் பெறாது உறழ்ந்து வருவனவும் கொள்க என்பர். கோள் என்பது கொள் என்னும் முதனிலைத் தொழிற்பெயர் திரிந்து பெயர்ப்பொருட்டாய் நிற்கும் சொல்லாதலானும், வாள் என்பது பெயருரிச் சொல்லாக நிற்றலானும் அவர்கருத்துப் பொருந்தா தென்க.

வாள் என்னும் சொல்லின் அடியாக வினைமுற்றும் இருவகையெச்சமும் பிறவாமையான் அதனை உரிச்சொல்

எனக்கோடலே சாலுமென்க. இச்சொல் செயலறவைக் குறித்து, வாளாவிருந்தான் - வாளா கிடந்தான் - வாய் வாளாதே- என எதிர்மறையே குறித்துவருதலன்றி யாண்டும் விதி வினையாக வாராமை யறிக. 'வாள்' என்பது சொல் எனும் பொருள்பட நிற்கும் உரிச்சொல் என்றலே நேரிது.

***401.*** [உரையாசிரியன்மார், விகுதி பெற்ற தொழிற் பெயரையும் முதனிலைத் தொழிற்பெயரை ஓதும் அவ்வவ் ஈற்றுள் அடக்கிக் காட்டுதலைத் தம் கொள்கையாகக் கடைப்பிடித்து வருதலை நெடுகக் காண்கிறோம். முதனிலைத் தொழிற்பெயராகப் பயில்வன சிலவே யாதலின், வழக்கினுள் பயிலும் ஏனையவற்றையும் இலேசினான் தழுவிக் கொண்டனர், புறனடையான் முடித்துக் காட்டல் சேய்மைத்தாகலின் என்க.]

## இளம்பூரணம்

### *403. 'இருள்' அத்தும் இன்னும் பெற்று முடிதல்*

**இருள்என் கிளவி வெயில்இயல் நிலையும்.**

இச்....எனின், இதுவும் இவ்வீற்றுள் ஒன்றற்கு, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....ற்று.

*(இ-ள்.)* இருள் என்னும் சொல், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், வெயில் என்னும் சொல்லின் இயல்பிலே நின்று, அத்தும் இன்னும் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* இருளத்துக்கொண்டான் இருளிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் - என வரும். *(107)*

## நச்சினார்க்கினியம்

### *402. 'இருள்' அத்தும் இன்னும் பெறுதல்*

**இருள்என் கிளவி வெயில்இயல் நிலையும்.**

இது திரிபுவிலக்கி அத்தும் இன்னும் வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்.) இருள்....நிலையும் - இருள் என்னும் சொல், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், வெயில் என்னும் சொல் போல; (317), அத்தும் இன்னும் பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) இருளத்துக் கொண்டான்[1] இருளிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

சாரியை வரையாது கூறினமையின், இயல்புகணத்தும் ஒட்டுக.

இருளத்து ஞான்றான் நீண்டான்[2] மாண்டான், இருளின் ஞான்றான் நீண்டான் மாண்டான் என வரும். (107)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***402.*** 1. வெயிலத்து என முடிந்தாற்போல, இருளத்து என்புழியும் அத்துமிசை ஒற்றென ளகரம் கெடாது உயிரேறி முடிந்தது என்க.

2. இருளின்கண் தூக்கிலிட்டுக் கொண்டான், ஓடி மறைந்தான், மாண்டுபோனான் - எனப்பொருள் கொள்க. மாண்டான் - மாட்சிமைப்பட்டான் எனினும் ஆம்.

**இளம்பூரணம்**

***404. புள்ளும் வள்ளும் (இருவழியும்) உகரம் பெறுதல்***

**புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் இயல.**

இச்....எனின், இதுவும் இவ்வீற்றுள் சிலவற்றிற்கு, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்.....நுதலிற்று.

*(இ-ள்.)* புள் என்னும் சொல்லும் வள் என்னும் சொல்லும்[1], அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், ஞகாரஈற்றுத் தொழிற்பெயர் இயல்பினவாய், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், மென்கணத்தும் இடைக் கணத்து வகரத்தும் உகரம் பெற்றும் முடியும் எ-று.

*(உ-ம்.)* புள்ளுக்கடிது வள்ளுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது - எனவும், புள்ளுக் கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை - எனவும் வரும்.

இதனைத் 'தொழிற்பெயர் எல்லாம்' *(106)* என்றதன் பின் வையாத முறையன்றிய கூற்றினான், இருவழியும் வேற்றுமைத் திரிபு எய்தி முடிவனவும் கொள்க.

*(உ-ம்.)* புட்கடிது வட்கடிது சிறிது தீது பெரிது - எனவும், புண்ஞான்றது வண்ஞான்றது நீண்டது மாண்டது - எனவும், புள்வலிது வள்வலிது - எனவும்; புட்கடுமை வட்கடுமை சிறுமை தீமை பெருமை - எனவும், புண்ஞாற்சி வண்ஞாற்சி நீட்சி மாட்சி எனவும், புள்வலிமை வள்வலிமை-எனவும் வரும்.

இன்னும் அதனானே, பள்[2] என்பதன்கண்ணும் கள்[3] என்பதன்கண்ணும், இருவழியும் இவ்விரு முடிபு பெற்றமையும் கொள்க.

*(உ-ம்.)* பள்ளுக்கடிது கள்ளுக்கடிது - பள்ளுக்கடுமை கள்ளுக்கடுமை - எனவும், பட்கடிது கட்கடிது - பட்கடுமை கட்கடுமை - எனவும் ஒட்டுக. *(108)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***404.*** *1)* வள் - வார், கடிவாளம்

*2)* பள் - பண்விசேடம் (பள்ளச்சாதி என்பதும் பொருளாம்)

*3)* கள் - கள்ளுதல்.

## நச்சினார்க்கினியம்

### 403. புள், வள் - இரண்டும் இருவழியும் உகரம் பெறுதல்

**புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் இயல.**

இதுவும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, திரிபும் உறழ்வும் ([illegible]) விலக்கித் தொழிற்பெயர்விதி வகுத்தலின்.

*(இ-ள்.)* **புள்ளும்.....இயல** - புள் என்னும் சொல்லும் வள் என்னும் சொல்லும்[1], ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல, இருவழிக்கண்ணும், வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* புள்ளுக்கடிது வள்ளுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், புள்ளுக்கடுமை வள்ளுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

இதனைத் 'தொழிற்பெய ரெல்லாம்' *(401)* என்றதன்பின் வையாததனான், இருவழியும் வேற்றுமைத் திரிபு எய்தி முடிவனவும் கொள்க.

புட்கடிது வட்கடிது சிறிது தீது பெரிது எனவும், புட்கடுமை வட்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், புண் ஞான்றது நீண்டது மாண்டது எனவும், புண்ஞாற்சி நீட்சி மாட்சி எனவும் வரும்.

புள்ளுவலிது புள்வலிது - புள்ளுவன்மை புள்வன்மை - என வகரத்தின் முன்னர் உகரம் பெற்றும் பெறாதும் வருதலின், 'நின்ற சொல்முன் இயல்பா கும்மே' *(144)* என்பதனான் முடியாமை உணர்க.

இது வள்ளிற்கும் ஒக்கும். *(108)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***403.*** இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

### *405. 'மக்கள்' இறுதி ளகரம் இயல்பாதலன்றி டகரமாய்த் திரிந்தும் முடிதல்*

**மக்கள் என்னும் பெயர்ச்சொல் இறுதி**
**தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே.**

இச்....எனின், மக்கள் என்னும் உயர்திணைப் பெயர்க்கு, 'உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்' (தொகை.11) என்பதனுள் எய்திய இயல்பு விலக்கிப் பிறிதுவிதி வகுத்....ற்று.

(இ-ள்.) மக்கள் என்னும் பெயர்ச்சொல்லின் இறுதி, இயல்பே அன்றி, தக்க இடம் அறிந்து வல்லொற்றாய்த் திரிந்து முடிதலும் உரித்து எ-று.

'தக்கவழி' என்றதனான், அம்மக்கள் உடம்பு உயர் நீங்கிய காலத்தது இம்முடிபு எனக் கொள்க.

(உ-ம்.) மக்கட் கை செவி தலை புறம்-என வரும்.(109)

## நச்சினார்க்கினியம்

### *404. 'மக்கள்' ஈற்று ளகரம் டகரமாகும் இடன்*

**மக்கள் என்னும் பெயர்ச்சொல் இறுதி**
**தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, 'உயிரீ றாகிய உயர்திணைப் பெயர்'(153) என்பதனுள் கூறிய இயல்பு விலக்கித் திரிபு வகுத்தலின்.

(இ-ள்.) மக்கள்....உரித்து - மக்கள் என்னும் பெயர்ச் சொல் இறுதி இயல்பேயன்றி, தக்க இடமறிந்து வல்லொற்றாத் திரிந்து முடிதலும் உரித்து எ-று.

'தக்கவழி' என்றார், பெரும்பான்மை மக்களுடம்பு உயிர் நீங்கிக் கிடந்த காலத்தின் அஃது இம்முடிபு பெறும் என்றற்கு.

(உ-ம்.) மக்கட்கை செவி தலை புறம் என வரும்.

இக்கிடந்தது மக்கட்டலை **என்பதனா**ன், அவ்வாறாதல் கொள்க.

மக்கள் கை செவி தலை புறம் எனத் திரியாது நின்றது உயிருண்மை பெற்று.

இனிச் சிறுபான்மை மக்கட்பண்பு மக்கட்சுட்டு (சொல்.1) எனவும் வரும். **([illegible]9)**

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***404.*** **மக்கள் என்னும்..... வலித்தலும் உரித்தே.**

(எ-டு.) மக்கட்குணம் - மக்கட்டிறம் - மக்கட்பண்பு - எனவரும். இவை வேற்றுமை. மக்கட்பேறு - மக்கட் செல்வம்-மக்கட்சுட்டு-எனவும் வரும். இவை இருபெய ரொட்டுப் பண்புத்தொகையாதலின், அல்வழி. மக்கள் கருதுவர்-மக்கள் சூழ்வர்- எனவரும் இவை இயல்பு. வேற்றுமைத்தொகைக்கண் பயின்றுவரும் என்பது தோன்றத் 'தக்கவழி யறிதல்' என்றார்.

மக்கள் என்னும் பெயர் அஃறிணைக்குரியதன் வி[illegible] பெற்று உயர்திணைப்பெயராய் நிற்பதொன்றாகலின், மக்கட் பண்பினைச் சுட்டி வருங்கால் திரிந்தும், பிறவாறு வருங்கால் இயல்பாயும் நிகழுமெனக் கோடலே ஓராற்றான் அமைவது. மக்கள் உயிர்நீங்கிக் கிடக்கும் நிலையில் இச்சொல் திரிபுறும் என்று உரையாளர் கூறுவது பொருந்துமாறு இல்லை.

## இளம்பூரணம்

## 406. இவ்வியற்குப் புறனடை

**உணரக் கூறிய புணரியல் மருங்கின்**
**கண்டுசெயற்கு உரியவை கண்ணினர் கொளலே.**

இச்.....எனின், இவ்வோத்திற்குப் புறனடை உணர்த்...ற்று.

(இ-ள்.) உணரக் கூறப்பட்ட புள்ளியீறு வருமொழியொடு புணரும் இயல்பிடத்து, மேல்முடித்த முடிபுகளை அன்றி, வழக்கினுள் கண்டு முடித்தற்குரிய பிற முடிபுகளைக் கருதிக்கொண்டு முடிக்க எ-று.

### னகரஈறு

(உ-ம்.) விழன்[1] குளம் செறு தரை பழனம் - என இவை னகார ஈற்று வேற்றுமைக்கண் திரியாது இயல்பாய் முடிந்தன. பொன்னப்பத்தம்[2] என்பது அவ்வீறு அக்குப்பெற்று முடிந்தது.

### ரகர ஈறு

நீர்குறிது சிறிது தீது பெரிது - என்பன ரகார ஈற்று அல்வழி முடிபு.

வேர்குறிது வேர்க்குறிது - என்பன அவ்வீற்று அல்வழி உறழ்ச்சி.

அம்பர்க்கொண்டான்[3] சென்றான் தந்தான் போயினான் - என்பன, அவ்வீற்றுள் உருபுவாராது உருபின் பொருள்பட வந்தவற்றின் முடிபு.

தகர்க்குட்டி என்பது அவ்வீற்று இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகிய அல்வழி முடிபு.

வடசார்க் கூரை தென்சார்க் கூரை - என்பன, அவ்வீற்று இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ முடிபு[4].

### லகர ஈறு

உசிலங்கோடு எலியாலங்கோடு - என்பன லகார ஈற்று அம்முப்பேறு.

கல்லம்பாறை[5] என்பது, அவ்வீற்று அல்வழி அம்முப்பேறு.

அழலத்துக் கொண்டான்[6] என்பது, அவ்வீற்று அத்துப்பேறு.

அழுக்கற்போர்[7] என்பது, அவ்வீற்று அல்வழித் திரிபு.

### ழகர ஈறு

யாழ் குறிது சிறிது தீது பெரிது - என்பன ழகர ஈற்று அல்வழி முடிபு.

வீழ்குறிது வீழ்க்குறிது - என்பன அவ்வீற்று அல்வழி உறழ்ச்சி.

தாழப்பாவை[8] என்பது அவ்வீற்று அல்வழி அக்குப்பேறு.

### மகர ஈறு

இனி, 'உணரக் கூறிய' என்றதனான், குளத்தின் புறம் மரத்தின் புறம் - என உருபிற்கு எய்திய அத்தோடு இன் பெறுதலும் கொள்க.

### ளகர ஈறு

இனிக் 'கண்ணினர்' என்றதனான், ஒருநாளைக்குழவி இருநாளைக்குழவி - என ளகாரஈறு ஐ என்னும் சாரியையும் வல்லெழுத்தும் பெற்று முடிந்தன கொள்க.

பிறவும் இவ்வோத்தின் வேறுபட வருவன எல்லாம் இதனகத்து முடித்துக் கொள்க. *(110)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*406. 1) 'விழன்' விழல் என்று பொருள்படும்-நச். உரையுள் காண்க.*

*2) பொன்னாலாகிய கட்டு (பொற்பூண் போல) என்று பொருள்படக் கூடும்.*

*3) அம்பர் - அவ்விடம்; இம்பர் - இவ்விடம்; உம்பர்- மேலிடம்; எம்பர்-எவ்விடம்.*

*4) வடக்கு தெற்கு என்பவற்றின் மரூஉப் போலும் வடசார் தென்சார் என்பன.*

*5) கற்பாறை*

*6) அழற்கண் கொண்டான் (வேள்வித்தீ முன்னர் மணங்கொண்டான்.)*

*7) அழுக்கு 'அழுக்காறு' எனப் பொருள்படுதலின், இத்தொடர் அழுக்காற்றான் விளைந்த போர் எனப் பொருள்படக் கூடும்.*

*8) நிலைமொழி தாழ் எனக்கொள்ளவேண்டும். பொருள் காண்டல் அரிதாயுள்ளது. தாழ் - விரலணி வகை; 'சிறுதாழ் செறித்த மெல்விரல், (நற். 120) என்பவாதலின். இத்தாழணியில் அமைந்துள்ள பாவை வடிவம் என்று பொருள் கொள்ளலாம் போலும்.*

*இப்பொருளெல்லாம் ஊகத்தின் அடிப்படையிற் கூறியனவாகக் கொள்க. மேற்கோள் காட்டி வேறு பொருளுரைப்பின் சிறக்கும்.*

### நச்சினார்க்கினியம்

### *405. இவ்வோத்துப் புறனடை*

**உணரக் கூறிய புணரியல் மருங்கின்**
**கண்டுசெயற்கு உரியவை கண்ணினர் கொளவே.**

இஃது இவ்வோத்தின்கண் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாகக் கொண்டு, சாரியை பெறுவனவற்றிற்குச் சாரியையும் எழுத்துப் பெறுவனவற்றிற்கு எழுத்தும் கொடுத்து முடித்துக் கொள்க என்கின்றது.

(இ-ள்.) உணரக்....மருங்கின் - உணரக் கூறப்பட்ட புள்ளியீறு வருமொழியொடு புணரும் இயல்பிடத்து; கண்டு...கொளல் - மேல் முடித்த முடிபன்றி, வழக்கினுள் கண்டு முடித்தற்கு உரியவை தோன்றியவழி, அவற்றையும் கருதிக் கொண்டு ஏற்றவாறே முடிக்க எ-று.

(உ-ம்.) மண்ணப் பத்தம்[1] என அல்வழிக்கண் ணகர ஈறு அக்குப்பெற்றது; மண்ணங்கட்டி என அம்முப் பெற்றது.

பொன்னப்பத்தம்[2] என னகர ஈறு அக்குப் பெற்றது; பொன்னங்கட்டி[3] என அம்முப்பெற்றது.

கானங்கோழி[4] என வேற்றுமைக்கண் அம்முப் பெற்றது.

மண்ணாங்கட்டி கானாங்கோழி என்பன மரூஉ.

வேயின்றலை என யகர ஈற்று உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி வல்லெழுத்துக் கெடுக்க.

நீர்குறிது என ரகரஈறு அல்வழிக்கண் இயல்பாயிற்று.

வேர்குறிது வேர்க்குறிது: இது ரகர ஈறு அல்வழி உறழ்ச்சி.

வடசார்க் கூரை மேல்சார்க் கூரை: இவை வல்லெழுத்து மிக்க மரூஉ முடிபு.[5]

அம்பர்க்கொண்டான் இம்பர்க் கொண்டான் உம்பர்க் கொண்டான் எம்பர்க்கொண்டான் என இவ்வீறு ஏழனுருபின் பொருள்பட[6] வந்தன வல்லொற்றுப் பெற்றன.

தகர்க்குட்டி புகர்ப்போத்து என்பன பண்புத்தொகை கருதியவேல் ஈண்டு முடிக்க; வேற்றுமையாயின் முன்னர் முடியும் (362).

விழல் என்னும் லகரஈறு வேற்றுமைக்கண் றகர மாகாது னகரமாய் முடிதல் கொள்க. விழன்காடு செறு தாள் புறம் எனவரும்.

கல்லம்பாறை[7] உசிலங்கோடு[8] எலியாலங்காய்[9] புடோலங்காய்[10] என அவ்வீறு அம்முப்பெற்றது.

கல்லாம்பாறை[11] என்பது மரூஉ.

அழலத்துக்கொண்டான்[12] என அவ்வீறு அத்துப் பெற்றது.

அழுக்கற்போர்[13] புழுக்கற்சோறு என்பன அவ்வீற்று அல்வழித்திரிபு.

யாழ்குறிது என்பது ழகரஈற்று அல்வழியியல்பு.

வீழ்குறிது வீழ்க்குறிது என்பன அவ்வீற்று அல்வழி யுறழ்ச்சி.

தாழப்பாவை[14] என்பது அவ்வீற்று அல்வழி அக்குப் பெற்றது.

யாழின் கோடு செய்கை தலை புறம் என, அவ்வீற்று உருபிற்குச் சென்ற சாரியை (194) பொருட்கண் சென்றுழி வல்லெழுத்து வீழ்க்க.

முன்னாளைவாழ்வு முன்னாளைப்பரிசு ஒருநாளைக் குழவி ஒருதிங்களைக்குழவி என்றாற்போல்வன ளகாரஈறு ஐகாரமும் அதனொடு வல்லெழுத்தும் பெறுதல் கொள்க.

பிறவும் இவ்வோத்தின் வேறுபட வருவன எல்லாம் கொணர்ந்து இதனான் முடிக்க.

குளத்தின் புறம் மரத்தின் புறம் என உருபிற்கு எய்திய அத்தோடு இன்பெறுதலும் கொள்க.

இனிக் 'கடிசொல் இல்லை' (சொல். 452 நச்.) என்பதனான், வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் வந்து திரிந்து முடியும் சொற்களும் உள. அவற்றைக் 'கண்ணினர் கொளலே' என்பதனான், மண்ணுக்குப் போனான் - பொன்னுக்கு விற்றான் - பொருளுக்குப் போனான் - நெல்லுக்கு விற்றான் - கொள்ளுக்குக் கொண்டான் - பதினேழு - என்றாற் போல வழக்கின்கண் உகரம் பெறு வளவும், 'விண்ணுக்குமேல் மண்ணுக்கு நாப்பண்' (திருக்கோவை. 162)

பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னம் தோற்றிலவால் - நெல்லுக்கு
நூறோஒஒநூ றென்பாள் நுடங்கிடைக்கும் மென்முலைக்கும்
மாறோமால் அன்றளந்த மண்

என்றாற்போலச் செய்யுட்கண் உகரம் பெறுவனவும்[15], பிறவும்[16] முடிக்க.

பற்கு நெற்கு என்பன முதலியவும் கொள்க. இவை உருபின் பொருள்பட வாராது உருபின்கண் வந்தனவேனும் ஈண்டுக் காட்டினாம், ஆண்டுப் 'புள்ளி யிறுதியும்' (202) என்னும் உருபியற் சூத்திரத்து இலேசுகோடற்கு இடனின்று என்று கருதி. இனி, அச்சூத்திரத்துத் 'தேருங்காலை' என்றதனான் முடித்தலும் ஒன்று. (110)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***405.*** 1. மண் பூச்சால் இடப்படும் கட்டு, குதிர்வாயை மண்பூசி அடைப்பது போல என்க.

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

3. பொன்னாகிய கட்டி என இருபெயரொட்டு.

*4. கானங்கோழி: குறுந். 242.*

*5,6,7. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.*

*8,9. உசில், எலியால் - என்பன நி[illegible]மொழிகள்.*

*10. புடோல் - நிலைமொழி*

*11. கல்லம்பாறை என்பதன் மரூஉ.*

*12,13,14. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.*

*15.* பொருட்பெயர் உகரச் சாரியை பெறுதலை ஆசிரியர் 'எண்ணு' *(317)* என உடம்பொடு புணர்த்துக் கூறினார்.

*16.* பிறவும் என்றது, *337, 362*ஆம் சூத்திர முதலியவற்றின் உரையில் "இவ்வோத்துப் புறனடையான் முடித்தும்" எனக் கூறிய முடிபுகளை.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***406.*** **உணரக் கூறிய.....கண்ணினர் கொளலே.**

ஈண்டு ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்து வழங்கிய இலக்கியங்களிற் காணின் அவற்றைக் கொள்ள வேண்டுமே யன்றிப் பின்னருள்ள இலக்கியங்களிற் கண்டவற்றை யெல்லாம் இச்சூத்திரத்தாற் கொள்ள வேண்டிய நியதி இல்லை.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***405.*** **உணரக் கூடிய......கண்ணினர் கொளலே.**

'உணரக் கூறிய' என்றது, இவை "இவ்வேதுவான் இவ்வாறாகப் புணரும்" என உணரும் வண்ணம் கூறிய இலக்கண முறையை; நூற்பாக்களை அன்று.

# ஒத்த நூற்பாக்கள்

## புள்ளி மயங்கியல்

### *சூத்திரம்-1*

ஞணநம லவளன - ஒற்றுஇறு தொழிற்பெயர்
ஏவல் வினை நனி ய-அல் மெய்வரின்
உ-உறும்; ஏவல் உறா, சில சில்வழி. நன்.207

ஞணநம லவளன - ஒற்றுஇறு தொழிற்பெயர்
ய-அல் மெய்வரின் உ-உறும்; நவ்வுக்கு
அவ்வும் ஆகும் வேற்றுமைக்கு என்ப,
செவ்விதின் அவ்வியல் தெரியுங் காலே. இ.வி.81

ஞஃகான் இறுதித் தொழிற்பெயர் உகரம்
பெறுதலும் மிகுதலும் பெற்றித்து ஆகும். மு.வீ.பு : 138

### *சூத்திரம்-2*

ஞநமவ - வரினும் உகரமொடு நிலையும். மு.வீ.பு : 139

### *சூத்திரம்-4*

ந-இறு தொழிற்பெயர்க்கு அவ்வும்ஆம் வேற்றுமை. நன்.208
வேற்றுமைக்கண் அகரத்தொடு சிவணும். மு.வீ.பு: 141

### *சூத்திரம்-5*

வெரிந்ஈறு அழிந்து மெல்லினம் மிகும் என்ப. மு.வீ.பு: 142

### *சூத்திரம்-6*

வல்லினம் மிகுதலும் மற்றதன் இயல்பே. மு.வீ.பு: 143.

### *சூத்திரம்-7*

ண(ன) வல்லினம் வரட்ட(ற)வும்.....ஆகும்மே நன். 209,
ண(ன)முன் வேற்றுமைப் பொருட்கு.... இ.வி. 119
வலிவரின் ட(ற) ஆம். மு.வீ.பு: 144

## சூத்திரம்-8

ஆணும் பெண்ணும் மிகாது இயல்பாகும். மு.வீ.பு: 145

## சூத்திரம்-9

ஆண்மர மாயின் அம்மொடு சிவணும். மு.வீ.பு: 147

## சூத்திரம்-10

தொழிற்பெயர் வரின் விண் அத்தொடு சிவணும். மு.வீ.பு: 148

## சூத்திரம்-11 மு.வீ.பு: 149

## சூத்திரம்-12

இயல்பாம் சினைப்பெயர் எல்லாம் என்ப. மு.வீ.பு: 150

## சூத்திரம்-13

.......... உணவுஎண் (சாண் பிற) நன். 211,
ட-ஆகலுமாம் அல்வழி யும்மே. இ.வி. 121

அல்வழி உணவுஎண் டகாரம் ஆகும். மு.வீ.பு: 151

## சூத்திரம்-14

இயல்பு ஆதலும் திரிதலும் முரண் இயல்பே. மு.வீ.பு: 146

## சூத்திரம்-15

வன்மை வந்தால் பின்பு பத்தாம் உடல் வன்மையின்
வருக்கத்
தன்மை ஒற்று ஆகும். வீ.சோ. 19

மகரம்தான் வன்மை வரின் வர்க்கத்து ஒற்றாகும். நேமி. 18

ம-ஈறு ஒற்றழிந்து உயிரீறு ஒப்பவும்
வன்மைக்கு இனமாத் திரிபவும் ஆம்பிற. நன். 129

ம-ஈறு.......திரிபவும் ஆம்பிற. இ.வி.129

## சூத்திரம்-16

அஆ வரின் ஈற்றயல் நீளலும் ஆம். மு.வீ.பு: 153

## சூத்திரம்-17

வேற்றுமை ம-போய் வலிமெலி உறழ்வும்
........உளவே நன்.220,இ.வி.130

மெல்லினம் உறழ் சிலமொழிகளும் உளவே. மு.வீ.பு: 154

## சூத்திரம்-18

இல்லம் மரம்எனின் மெல்லெழுத்து மிகுமே. மு.வீ.பு: 155

## சூத்திரம்-19

வேற்றுமை அல்வழி மெல்லெழுத் தாகும். மு.வீ.பு: 156

## சூத்திரம்-20

(சாவ)அகம் என்புழிச் சார்ந்த (இறுதி)இடைப்
போவது உயிர்மெய் என்றே போற்று. நேமி. 23

அகம்முனர்ச் செவிகை வரின் நன்.222,
இடையன கெடும். இ.வி.131, மு.வீ.பு:157

## சூத்திரம்-21

இலம்-முன் படு-வரின் இயல்பா கும்மே. மு.வீ.பு: 158

## சூத்திரம்-22

எண்வரின் ஆயிரம் அத்தொடு சிவணும். மு.வீ.பு: 159

## சூத்திரம்-24

அளவொ[illegible]யும் வரின்மிகும் என்ப. மு.வீ.பு: 160

## சூத்திரம்-33

ஈமும்,
கம்மும் உருமும் தொழிற்பெயர் மானும். நன்.223, இ.வி.132

ஈம்கம் உரும் - உகரத்தொடு நிலையும். மு.வீ.பு: 161

## சூத்திரம்-34

ஈமும் கம்மும்......
முதலன வேற்றுமைக்கு அவ்வும் ஆகும். நன். 223,இ.வி.:132
அவற்றுள், ஈம்கம் அக்கையும் ஏற்கும் என்ப. மு.வீ.பு: 162

### சூத்திரம்-35

.........வஃகான் மிசையும் ம-குறுகும். நன்.96

வகார............குறுகும். இ.வி.22

மகரம்.........வ-மேல் குறுகும். மு.வீ.1 : 38

### சூத்திரம்-36

அத்தும் ஆனும் நாளொடு சிவணும். மு.வீ.பு: 163

### சூத்திரம்-37

(ண)ன வல்லினம் வர(ட்ட)றவும், பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக்கு. நன். 209,இ.வி.119

னகரம் வேற்றுமைக்கண் றகரம்ஆகும். மு.வீ.பு: 164

### சூத்திரம்-38

மன்னும் சின்னும் ஆனும் ஈனும்
அன்ன இயல்பின ஆமென மொழிப. மு.வீ.பு: 165

### சூத்திரம்-39

சுட்டுமுதல் வயினும் வினாமுதல் வயினும்
அப்பண்பினஆம் ஆயுங் காலே. மு.வீ.பு: 166

### சூத்திரம்-40

குயின் (ஊன்) வேற்றுமைக் கண்ணும் இயல்பே. நன். 116

குயின்என் கிளவி இயற்கை ஆகும். இ.வி.126

இருவழியினும் குயின் இயல்பா கும்மே. மு.வீ.பு: 169

### சூத்திரம்-41, 42

எகின்-மர மாயின் அம்மொடு சிவணும். மு.வீ.பு: 167

மரம்அல் எகின்மொழி இயல்பும், அகரம்
மருவ வலிமெலி மிகலும் ஆகும். நன்.215,இ.வி.125

மரம்அல் எகின்மொழி வலிமெலி மிகுதலும்
அகரச் சாரியை அடையவும் பெறுமே. மு.வீ.பு: 168

## சூத்திரம்-43

ணஃகான் கிளைப்பெயர் இயல்பும், அஃகான்
அடைவும், ஆகும் வேற்றுமைப் பொருட்கே. **நன்.222,இ.வி.122**

கிளைப்பெயர் எல்லாம் மிகாது இயல்பாகும். **மு.வீ.பு: 170**

## சூத்திரம்-44

மீன் றவ்வொடு பொரூஉம் வேற்றுமை
வழியே. **நன்.223,இ.வி.123**

மீன் வல்லெழுத்து உறழ்வும் பெறும் என்ப. **மு.வீ.பு: 171**

## சூத்திரம்-45-49

தேன்மொழி மெய்வரின் இயல்பும், மென்மை
மேவின் இறுதி அழிவும், வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமாம் இருவழி. **நன். 214**

தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேல்நிலை ஒத்தலும், ஈறுபோய் வலிமெலி
மிகுதலும், மெலிவரின் இறுதியோ டுறழ்தலும்
...................................உரித்தே. **இ.வி.124**

தேன்மொழி மெய்வரின் இயல்பும்,......இருவழி. **மு.வீ.பு: 172**

இறால்வரின் இயல்பாதலும்...............
ஈறழிந்து இரண்டு தகரமெய் ஒற்றலும்..... **மு.வீ.பு: 173**

## சூத்திரம்-50

மின்பின் பன்கன் தொழிற்பெயர் அனைய.
**நன்.217,இ.வி.127,மு.வீ.பு:174**

## சூத்திரம்-51

கன் அ-ஏற்று மென்மையோடு உறழும். **நன்.217, மு.வீ.பு:174**

வேற்றுமை யாயின் கன் அ-ஏற்று
வல்லெழுத்துப் பெறுதல் வரைநிலை யின்றே
பொருளொடு புணருங் காலை யான. **இ. வி. 172**

## சூத்திரம்-52

தந்தை வரின்பொதுப் பெயர்மொழி யிறுதியும்
வருமொழி ஆதியும் மடியும் என்ப. மு.வீ.பு: 175

## சூத்திரம்-53

ஆதனும் பூதனும் அவ்வியல்பு ஆதலும்,
அவற்றொடு தகரம் ஆவியும் கெடுதலும்,
எனஇரு விதிகளும் ஏற்கும் என்ப. மு.வீ.பு: 176

## சூத்திரம்-55

அவ்வியற் பெயர்சிறப்பு அடுக்குங் காலை
இவ்விரு விதிகளும் ஏலாது அம்முப் பெறும். மு.வீ.பு: 177

## சூத்திரம்-56

கோனும் பேனும் தானும் இயல்பே. மு.வீ.பு: 179

## சூத்திரம்-57

தான் முதல் குறுகலும், யான் என் ஆகலும்,
ஆகும் அல்வழி அல்லாக் காலை. மு.வீ.பு: 180

## சூத்திரம்-58

குறுகலும் திரிதலும் அல்வழிக்கு இல்லை. மு.வீ.பு: 181

## சூத்திரம்-59

அழன்என் இறுதி கெடும் வேற்றுமைக்கே. இ.வி.128

அழன்என் இறுதி கெட வலி ஆண்டை மிகுமே. மு.வீ.பு:178

## சூத்திரம்-60

முன்னொடு சிவணில் இல்முதலில் ஓர் ற-உறும். மு.வீ.பு: 182

## சூத்திரம்-61

பொருளெனப் பெயர்பெறும் பொன்ஈறு கெடஒரு
லகார மகாரமும் தோன்றும் என்ப. மு.வீ.பு: 183

## சூத்திரம்-62

.........ய..........................
ஈறா வரில் வன்மை பின்பில் வர்க்கத்தொற்று
இடைப்படுமே. **வீ.சோ.14**

............................................ய(ரழக்கள்)
நிற்கப்பின் வல்லெழுத்து நேருமேல் - ஒற்றாம்
பிணைந்த வருக்கம் பெயர்த்து. **நேமி. 15**

யரழ முன்னர்க் கசதப..........
.............வேற்றுமை
மிகலும் இனத்தோடு உறழ்தலும் விதிமேல். **நன்.224,இ.வி.133**

## சூத்திரம்-63

பொதுப்பெயர்..............................
.......................ஆவி யரமுன்
வன்மை மிகா சில விகாரமாம் உயர்திணை **நன். 159**

இயல்பாம் தாய் வேற்றுமைவழி என்ப. **மு.வீ.பு: 185**

## சூத்திரம்-64

மிகும் மகன் தாய்ப்பினர் மேவுங் காலை. **மு.வீ.பு: 186**

## சூத்திரம்-65, 66

யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பும்-மிகலும்-ஆகும். வேற்றுமை
மிகலும் இனத்தோடு உறழ்தலும் விதிமேல். **நன்.224,இ.வி.133**

மெல்லினம் உறழ்தரு மொழிகளும் உளவே. **மு.வீ.பு: 187**

வேற்றுமை அல்வழி யகராஈறு இயல்பே. **மு.வீ.பு: 184**

## சூத்திரம்-67

............ர..................
ஈறா வரில் வன்மைப் பின்பில் வர்க்கத்தொற்று
இடைப்படுமே. **வீ.சோ. 14**

(ய)ர(ழக்கள்)
நிற்கப்பின் வல்லெழுத்து நேருமேல் - ஒற்றாம்
பிணைந்த வருக்கம் பெயர்த்து. **நேமி. 15**

யரழ முன்னர்க்........ விதிமேல். **நன்.224,இ.வி.125**

## சூத்திரம்-68

வெதிர்ஆர் பீர்சார் மெல்லெழுத்து மிகுமே. **மு.வீ.பு:188**

## சூத்திரம்-69

காழ்வரின் சார்மிகும் கருதுங்காலே. **மு.வீ.பு: 190**

## சூத்திரம்-70

அவற்றுள்,
பீரென் கிளவி அம்மொடு சிவணும். **மு.வீ.பு: 189**

## சூத்திரம்-71, 72, 73

பன்மூன்றதாம் உடல் நப்பின் வருமெனின் ஈற்றெழுத்தாம்;
பன்னேழதாம், வன்மை பின்வரின்; ஆயிடைத் தவ்வும்
அஃதாம்.

ஈறாம் லகாரம் ம(த)வந் தெதிர்ந்திடில். **வீ.சோ. 17,22**

ல(ள) வேற்றுமையில் ற (ட) வும், அல்வழி
அவற்றோடு உறழ்வும் வலிவரின் ஆம்: மெலி
மேவின் னணவும், இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப. **நன். 227, இ.வி. 137**

லகாரம் வேற்றுமைக்கண் றகாரம் ஆகும்.
மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்.
அல்வழி எல்லாம் உறழும் என்ப. **மு.வீ. 191, 192, 195**

## சூத்திரம்-74

குறில்வழி ல(ள) த-அணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே. **நன்.228, இ.வி.138**

தகரம் வருவழித் தனிநிலை ஆகும். **மு.வீ.பு: 194**

## சூத்திரம்-75

குறில் செறியால (ள) அல்வழி (வந்த
தகரம் திரிந்தபின் கேடும்)..............
.................................வலிவரின்
இயல்பும் (திரிபும் ஆவன) உளபிற. **நன்.229,இ.வி.139**

நெட்டெழுத்து இம்பர் இயல்பா கும்மே. **மு.வீ.பு: 193**

## சூத்திரம்-76

நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்வழி யானும் றகரம் ஆகும். **நன்.232,மு.வீ.பு: 196**

நெல்லும்...................இயல. **இ.வி. 140**

## சூத்திரம்-77

இல்-என் இன்மைச் சொற்கு ஐ-அடைய
வன்மை விகற்பமும் ஆகாரத்தொடு
வன்மை ஆகலும் இயல்பும் ஆகும். **நன். 233, இ.வி. 142**

இன்மை உணர்த்தும் இல்-என் கிளவிக்கு
ஐகான் வருவழி இயல்பொடு மிகலும்
ஆகாரம் வருவழி மிகலுமாம் வேற்றுமை. **மு.வீ.பு: 197**

## சூத்திரம்-78, 79

வல்லே தொழிற்பெயர் அற்று இரு வழியும்; **நன். 231,**
பலகைநாய் வரினும் வேற்றுமைக்கு அவ்வும் ஆம். **இ.வி.141**

வல் உகரத்தொடு வரும்என மொழிப.
பலகையும் நாயும் வரூஉங் காலை
அகரச் சாரியை அடையும் என்ப. **மு.வீ.பு: 198, 199**

## சூத்திரம்-80

ஆலும் வேலும் அம்மொடு சிவணும்.
பூலும் அம்மொடு போவது இயல்பே. **மு.வீ.பு: 200, 201**

## சூத்திரம்-81 மு.வீ.பு: 202

## சூத்திரம்-82

அத்தும் இன்னும் அடையும் வெயிலே. மு.வீ.பு: 203

## சூத்திரம்-83

வ-இறு சுட்டிற்கு 'அற்று' உறல் வழியே. **நன்.250,இ.வி.155, மு. வீ. பு: 204**

## சூத்திரம்-84

ஆய்தம் ஆகும் அல்வழி யான. மு.வீ.பு: 205

## சூத்திரம்-85

மெல்லெழுத்து இயையின் மெல்லெழுத் தாகும். மு.வீ.பு: 206

## சூத்திரம்-86

சுட்டு வகரம் மூவினம் உற முறையே
ஆய்தமும் மென்மையும் இயல்பும் ஆகும். **நன். 235**

சுட்டு வகரம்...........இயல்புமாம் அல்வழி. **இ.வி.144**

இடையும் உயிரும் வரின்இயல்பு ஆகும். மு.வீ.பு: 207

## சூத்திரம்-87

தெவ்-என் மொழியே தொழிற்பெயர் அற்றே;
ம-வரின் வஃகான் மவ்வும் ஆகும். **நன்.236, இ.வி. 145**

## சூத்திரம்-88 மு.வீ.பு: 208

...................................(யவ்வோடு ர)ழ
ஈறா வரில் வன்மை பின்பில் வருக்கத்தொற்று
இடைப்படுமே. **வீ.சோ.14**

....................ழ.............
நிற்கப்பின் வல்லெழுத்து நேருமேல் - ஒற்றாம்
பிணைந்த வருக்கம் பெயர்த்து. **நேமி. 15**

யரழ முன்னர்க் கசதப (அல்வழி)
...........................வேற்றுமை
மிகலும் இனத்தோடு உறழ்தலும் விதிமேல். **நன்.224,இ.வி.133**

## சூத்திரம்-89, 90

தமிழ் அ-உறவும் பெறும் வேற்றுமைக்கே;
தாழும் கோல்வந் துறுமேல் அற்றே. நன். 225, இ.வி.134

தாழ்முன் கோல்வரின் அக்கொடு சிவணும்.
தமிழும் அவற்றோ ரற்றா கும்மே. மு.வீ.பு: 212, 213

## சூத்திரம்-91

குமிழ்என் கிளவி அம்மொடு சிவணும். மு.வீ.பு: 214

## சூத்திரம்-92

பாழ்என் கிளவி மெல்லெழுத் துறமும். மு.வீ.பு: 215

## சூத்திரம்-93

ஏழ்என் கிளவி ஆறியல் நிலையும். இ.வி.136

ஏழ்என் கிளவி அன்னொடு சிவணும். மு.வீ.பு: 216

## சூத்திரம்-94

எண்நிறை அளவும் வரூஉங் காலை
குறுகலும் உகரம் வருதலும் உரிய. மு.வீ.பு: 217

## சூத்திரம்-96

ஆயிரம் வரின் கெடும் உகரச் சாரியை. மு.வீ.பு: 218

## சூத்திரம்-100

கீழின்முன் வன்மை விகற்பமும் ஆகும்.
நன்.226,இ.வி.136,மு.வீ.பு: 219

## சூத்திரம்-101, 102, 103

எண்ணிரண்டாம் ஒற்று வன்மை வந்தால் பின்பு
இயைந்த ஐந்தா
நண்ணிய ஒற்றாம்; நகரம் வரின் முன்மெய்
ண-அதுவாம்;
நண்ணிய ம-வந்திடினும் அஃதே. வீ.சோ.16
வன்மை வரினே ளணலன மாண்டற ஆம். நேமி. 17

லள வேற்றுமையில் றடவும், அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரின் ஆம். மெலி
மேவின் னணவும்.....என்ப. **நன்.227,இ.வி.137**

## *சூத்திரம்-104*

எண்ணிரண்டாம் ஒற்றுப் பன்மூன்று மெய் நின்று
இவற்றின் பின்னே
எண்ணிய த-வரின் தடற-ஆம்; அவை
ஆய்தமுமாம். **வீ.சோ.28**

குறில்வழி லள த-அணையின்......அல்வழியானே.
**நன்.228,இ.வி.138**

தகரம் வருவழித் தனிநிலை ஆகும். **மு.வீ.பு: 223**

## *சூத்திரம்-105*

இயல்பாம் நெடுமைமுன் என்மனார் புலவர். **மு.வீ.பு:224**

## *சூத்திரம்-106* மு.வீ.பு: 225

## *சூத்திரம்-107*

இன்னும் அத்தும் இருளொடு சிவணும். **மு.வீ.பு: 226**

## *சூத்திரம்-108*

புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் மானும். **நன்.234,இ.வி.143**

வள்ளும் புள்ளும் உகரமொடு சிவணும். **மு.வீ.பு: 227**



## ஒன்பதாவது

# குற்றியலுகரப் புணரியல்

## இளம்பூரணம்

### *407. குற்றியலுகரம் இடம்நோக்கி அறுவகைப்படுதல்*

**ஈரெழுத்து ஒருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்**
**ஆய்தத் தொடர்மொழி வன்தொடர் மென்தொடர்**
**ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்.**

இவ்வதிகாரத்துள் இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், குற்றியலுகர ஈறு வருமொழியொடு புணரும் இயல்பு உணர்த்தினமையின், குற்றியலுகரப் புணரியல் எனப்பட்டது.

இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், இக் குற்றியலுகரம் வருமிடத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

*(இ-ள்.)* இரண்டெழுத்தாலாகிய ஒருமொழியும், உயிர்த்தொடர்மொழியும், இடைத்தொடர்மொழியும், ஆய்தத்தொடர்மொழியும், வன்தொடர்மொழியும், மென் தொடர்மொழியும் ஆகிய அவ்ஆறு என்று சொல்லப்படும், உகரம்[1] குறுகிவரும் இடன் எ-று.

*(உ-ம்.)* நாகு வரகு தெள்கு எஃகு கொக்கு குரங்கு- எனவரும். *(1)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***407.*** 1) குற்றியலுகரத்தை இவ்வியலுள் ஆசிரியர் 3,5,27ஆம் சூத்திரங்களுள் உகரம் - உகரக்கிளவி - என்றே வழங்கியிருத்தல் காண்க.

"குற்றுகரம் ஒற்றுப் போன்று ஒடுங்கி நில்லாது; என்னை? தன்னான் ஊரப்பட்ட ஒற்றும் தானுமாகி, அரை மாத்திரைத்தாகியும், ஒடுங்கியிசையாது அகன்றிசைக்கும்; அதனான் ஒற்று என்றலுமாகாது; பின்னும் ஒரு மாத்திரைத்து ஆகாமையின் குற்றெழுத்தெனலும் ஆகாது. மற்று, அதனை ஒற்றென அடக்கார்; குற்றெழுத்தென ஏற்று அலகு கொள்ளார். இனி அதனைச் செயற்பாலதோர் அசை யாக்குதலே தக்கதென்பது நோக்கி, நேர்பசை நிரைபசை என வேண்டினான் என்பது." (செய். 4 பேரா.)

## குற்றியலுகரப் புணரியல்

## நச்சினார்க்கினியம்

### 406. குற்றியலுகரத்தின் பெயரும் முறையும் தொகையும்

**ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்**
**ஆய்தத் தொடர்மொழி வன்தொடர் மென்தொடர்**
**ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்**

என்பது சூத்திரம். இவ்வோத்து, குற்றியலுகரம் என்று கூறப்பட்ட எழுத்துப் பொருட்பெயரோடும் எண்ணுப் பெயர் முதலியவற்றோடும் புணரும் முறைமை உணர்த்தி னமையின், குற்றியலுகரப் புணரியல் என்னும் பெயர்த் தாயிற்று. இது 'மெய்யே உயிரென் றாயீ ரியல' (103) என்றவற்றுள், உயிரினது விகாரமாய் நின்ற குற்றுகரத்தை[1] இருவழிக்கண்ணும் புணர்க்கின்றமையின், மேலை ஓத்தினோடு இயைபுடைத்தாயிற்று.

இத்தலைச்சூத்திரம் மொழிமரபினகத்து இருவழிய(36) (நெட்டெழுத்துஇம்பர், தொடர்மொழி ஈறு) என்ற குற்றுகரம் இதனகத்து இனைத்து மொழியிறுதி வருமென்று, அவற்றிற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்து கின்றது. அப்பெயர் பெயர், அம்முறை முறை, அத்தொகை தொகை. 'தொடர்மொழி யீற்று' (36) வருமென்று ஆண்டுக் கூறியதனை ஈண்டு ஐந்துவகைப்படுத்தி, அதனொடு நெட்டெழுத் திம்பரும் என்றது ஒன்றே யாதலின் அதனையும் கூட்டி அறுவகைத்து என்றார்.

*(இ-ள்.)* ஈரெழுத்தொருமொழி - இரண்டு எழுத்தானாகிய ஒருமொழியும்; உயிர்த்தொடர்......மூன்றே - உயிர்மேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், இடையொற்றுமேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், ஆய்தமாகிய எழுத்துமேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், வல்லொற்றுமேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், மெல்லொற்றுமேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும் ஆகிய அவ்வாறு சொல்லுமே; உகரம்[2] குறுகு இடன் - குற்றியலுகரம் குறுகி வரும் இடன்[3] எ-று.

*(உ-ம்.)* நாகு வரகு தெள்கு எஃகு கொக்கு குரங்கு எனவரும்.

இதனை ஏழ் என்று கொள்வார்க்குப் பிண்ணாக்கு சுண்ணாம்பு ஆமணக்கு முதலியன முடியாமை உணர்க[4]. *(1)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***406.*** 1. குற்றியலுகரத்தை உகரமாகிய உயிரெழுத்தினது விகாரமாகக் கொள்ளாது தனியான வேறெழுத்தாகக் கொள்வர் மொழியியல் நூலார். ஏனைய சார்பெழுத்துக்களான குற்றியலிகரமும் ஆய்தமும் அன்ன. முதலெழுத்தின் விகாரம் முதலெழுத்தாவதல்லது சார்பெழுத்தாகாது என்ப.

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

3. குற்றியலுகரம் 'இடைப்படிற் குறுகும்' (37) என முன்னர் மொழிமரபிற் கூறிய இயற்கைத்தாய்க் குறுகி ஒலிக்கும் இடன் இவ்ஆறாம் என்று சாத்திரியார் கூறுவார். அவர் கருத்துப்படி, குற்றியலுகரம் கால்மாத்திரையாகக் குறுகும் என்பது. அது 'வல்லொற்றுத் தொடர்மொழி' (409) ஒன்றற்கே பொருந்துமென அவருரையாலும் பெறப்படுதல் காண்க. நச். கருத்துப்படி, குற்றியலுகரம் குறுகி ஒலித்தலாவது, முற்றுகரத்தின் குறுகி ஒலித்தல்.

4. "ஆசிரியர் ஈற்றயலில் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டாற்போல ஈற்றயலில் நின்ற அசையை இடமாகக் கொண்டு, அவற்றுள் அது இது முதலிய முற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசை யொன்றனையும் ஒழித்து, ஏனை ஏழு அசையினையும் 'நெடிலே குறில்இணை குறில்நெடில் என்றிவை, ஒற்றொடு வருதலொடு குற்றொற்று இறுதியென்று, ஏழ்குற் றுகரக்கு இடனென மொழிப' என்பதொரு சூத்திரம் பற்றி ஏழிடம் எனக்கோடும் என்பார்க்கு, பிண்ணாக்கு சுண்ணாம்பு பட்டாங்கு விளையாட்டு இறும்பூது முதலியனவும், ஆய்தம் தொடர்ந்தனவும், நெட்டொற்றிறுதி நெடிலிறுதிக் குற்றுகரம் முதலியனவும் குற்றொற்றிறுதிக் குற்றுகரமுமாய் அடங்கு மேனும். போவது வருவது ஒன்பது முதலியன அடங்காமை அறிக. நெடில் முதலியன ஈற்றயலில் நிற்றல் வேண்டுமென யாப்புறவின்மையின், முதற்கண் நிற்பினும் ஈற்றுகரம் அவற்றிறுதியாதல் அமையுமெனக் கொண்டு, போவது முதலியனவும் நெடிலிறுதி முதலியனவாய் அடங்கும் என்பார்க்கும், அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனாற் போந்த பயனின்று என்பது." -முதற்சூத்திர விருத்தி

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

உயிர், மெய் ஆகிய முதலெழுத்துக்களுக்கு எழுத்து எனக் குறியிட்டதன் பின்னர்க் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்பனவற்றிற்கும் அக்குறியிட்டது போல, உயிர்மயங்கியல் புள்ளிமயங்கியல் இவற்றிற்குப்பின் குற்றியலுகரப் புணரியலைக் கூறினார் ஆசிரியர்.

**407.** ஈரெழுத் தொருமொழி......உகரம் குறுகிடன்.

'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' (37) என்றவிடத்துக் கூறப்பட்ட இடன் இத்துணை வகைப்படும் என்பது ஈண்டுக் கூறப்பட்டது. உகரம் என்பது குற்றிய லுகரத்தைக் குறிக்கும். நச்சினார்க்கினியர் அவ்வாறே

கொண்டனர். அவர் கொள்கைக்கே 'வல்லொற்றுத் தொடர் மொழி' (410) என்றவிடத்துத் 'தொல்லை யியற்கை நிலையலும் உரித்தே' என்ற தொடர் பொருந்தும்.

**407.** [குற்றியலுகரம், முதலெழுத்தாம் குற்றெழுத்து உகரத்தின் வேறுபட்ட சார்பெழுத்து. அது மெய்யெழுத்தின் தன்மைத்தாய்ப் புள்ளி பெறும்; அரைமாத்திரையே பெரும்பாலும் ஒலிக்கும்.

'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' எனப் புணர்மொழிக்கண் குற்றுகரம் கால் மாத்திரையாய் ஒலிக்கும் இடன் சிறுபான்மைத்தே. ஆகலின், தனிமொழிக்கண் குற்றுகரம் தனது இயல்பான அரைமாத்திரையாக ஒலிக்கும் இடன் ஆறுவகைப்படும் என்கிறது இச்சூத்திரம். கால் மாத்திரையாகக் குறுகி ஒலிக்குமிடன் 'வல்லொற்றுத் தொடர்மொழி'க் குற்றுகரமே யாதலின், அவ்வாறு குறுகியொலிக்கும் குற்றுகரம் வருமிடன் ஆறு என்றல் நிரம்பாதென்க.

குற்றுகரம் குறுகி யொலித்தலாவது, அது தன்னியல் பாகிய அரைமாத்திரையளவாக, (முற்றுகரத்தின்) குறுகி ஒலித்தல். குற்றுகரம் குறுகி (அணுகி) வருமிடன் என்று பொருள் கொண்டார் சிவஞானமுனிவர்; 'குறுகுதல்' அணுகுதற் பொருட்டாதலைச் சிலப்பதிகாரத்தினின்று மேற்கோட்டி நிறுவினார். ஆசிரியர் தொல்காப்பியனாரும் ஈரிடங்களில் 'குறுகுதல்' சொல்லை அணுகுதற் பொருளில் ஆண்டுள்ளமை காண்க.

1. 'பரத்தையின் அகற்சியின் பரிந்தோட் குறுகி' (அகத்.44)

2. 'உயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகி '(கற். 57)]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

குற்றியலுகரங்கள் மெய்யெழுத்தின் விகாரம் ஆதலானும், புள்ளி பெறும் ஒப்புமையானும், புள்ளி மயங்கியலோடு இவ்வியல் இயைபுடைத்தாயிற்று. நச்சினார்க்கினியர், "உயிரினது விகாரமாய் நின்ற குற்றுகரத்தை இருவழிக்கண்ணும் புணர்க்கின்றமையின், மேலை ஒத்தினோடு இயைபுடைத்தாயிற்று" என்றமை பொருந்து மாறில்லை. (இருமொழி: அச்சுப்பிழை)

வல்லெழுத்துக் குறுகுமிடம் ஆறு. ஆகவே, குறுகாத இடம், தனிக்குறிலைச் சார்ந்து வரும் இடன் ஒன்றே என்பது போதரும்.

நடு படு அது பொறு என்பன போலத் தனிக்குறிலை யடுத்து வரும் வல்லெழுத்து உகரங்கள் குறுகாதன. அச்சொற்களில் உகரவொலி நன்கு கேட்கப்படுதலின், ஆண்டு அவ்வுகரம் முற்றியலுகரம் எனப்பட்டது. ஏனையவிடத்து வல்லொற்றுக்கள் நெட்டெழுத்தினை அடுத்து வருதலானும், இரண்டு மூன்று எழுத்துக்களின் பின் வருதலானும், ஆண்டு அவற்றினை ஒலிக்க வந்த உகரவுயிரின் ஒலிக்கு முயற்சி குறைதலின், அது நன்கு கேட்கப்படுதலில்லை. அதனானே குற்றியலுகரம் எனப்பட்டது.

இவ்வாசிரியர் குற்றியலுகரத்தை ஓரெழுத்தாக எண்ணி, ஈண்டு அதுவரும் இடம் ஆறு என்றார். பிற்காலத்தவர் இவ்வாறு கொள்ளாமல் வெவ்வேறு வகையாகக் கொண்டு எண்ணுவர்ராயினர்;

> 'நெடிலே குறிலிணை குறில்நெடில் என்றிவை
> ஒற்றொடு வருதல[illegible]ற் றிறுதியென்று
> ஏழ்குற் றுகரக்கு இடனென மொழிப'

எனக் குற்றுகரம் எழுவகையான் வரும் என்று, நாற்பத்தி ரண்டு எனக் குற்றுகரத்துக்குத் தொகை கொண்டனர்.

நன்னூலார், தொல்காப்பியனார் கூறியாங்கு ஆறு இடமே கொண்டா ராயினும், குற்றுகரம் முப்பத்தாறு என்று தொகை கூறினார். குற்றியலுகரங்களை எழுவகையாகக் கொள்வாருக்கு, போவது - வருவது - ஒன்பது - முதலியன அமைதியாகா என்று நன்னூல் விருத்திகாரர் கூறினார். நன்னூலார் கொண்ட கருத்துப் பொருந்தாமை இலக்கண விளக்க நூலாரால் மறுக்கப்படும். ஆகலின் குற்றியலுகரம் இடன் நோக்கி ஆறாகும் என்றலே அமைதியாகும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

தனித்துவரல் மரபினையுடைய உயிரீறு புள்ளி யீறுகளின் புணர்ச்சி விதிகளைக் கூறி, 'சார்ந்துவரல் மரபின' எனப்பட்டவற்றுள் மொழிக்கு ஈறாக நிற்பதற்குரியது குற்றியலுகரம் மட்டுமே யாதலின், அஃது ஈறாக நின்று நாற்கணங்களொடும் புணருமாறு கூறுதலின், இவ்வியல் குற்றியலுகரப் புணரியல் என்னும் பெயர்த்தாயிற்று.

***406.*** **ஈரெழுத் தொருமொழி.......உகரம் குறுகிடன்.**

குற்றியலுகரம் என்னும் பெயர் மாத்திரையானே, அதற்குரிய இயல்பு பெறப்படும் ஆதலின் 'குறுகும்' என்றது வரும் என்னும் பொருட்டாய் நின்றது. அன்றேல், முற்றுகரமே இவற்றின் சார்பால் குறுகிநிற்கும் எனப் பொருள் கொள்ளின், குற்றியலுகரம் என்பது முதலெழுத்தின் விகாரமே எனப்பட்டு மாறுகொள்ளக் கூறலாய் முடியும் என்க.

[அகத்தோத்து இம்மூன்றனுள், முதலிரண்டனையும் 'மயங்கியல்' என்றும் மூன்றாவதனைப் 'புணரியல்' என்றும் ஆசிரியர் வழங்கியமை கருதி, மயக்கம் வேறு புணர்ச்சி வேறு என்று நுண்ணியதாகப் புலப்படுத்தினார் இவ்வுரைகாரர். ஆயின், ஆசிரியர் இம்மயங்கியலையும் புணரியலையும் வேறாகக் கருதிற்றிலர் என்பது,

'உணரக் கூறிய புணரியல் மருங்கின்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே ' (405)

எனப் புள்ளிமயங்கியலுள் புறனடைச் சூத்திரம் ஓதிய வாற்றான் உணரப்படும். ஆண்டு வரும் 'புணரியல்' என்னும் ஆட்சியைக் காண்க.

ஒத்துப் புறனடை உயிர்மயங்கியலுள்ளும் குற்றிய லுகரம் புணரியலுள்ளும் காணப்பட்டில. அதிகாரப் புறனடையே குற்றியலுகரப் புணரியலுள் இறுதிச் சூத்திரமாக (483) அமைகிறது. மயங்கியல் இரண்டனையும் புணரியல் ஒன்றனையும் இச்சூத்திரம் சிங்க நோக்காக நோக்கிப் புறனடை விதிக்கின்றது என்று கூறல் அமையும் போலும்.]

**406.** [முதற்சூத்திர விருத்தியுள் சிவஞானமுனிவர் குறுகும் என்பதற்கு அணுகும் என்று பொருள் கொண்டார். (இச்சொல் தொல்காப்பியத்துள்ளும் இப்பொருளில் நிகழ்கிறது.) முற்றுகரம் இடமும் பற்றுக்கோடும் காரணமாகக் குறுகும் என்பார் கருத்தை முனிவர் மறுத்துரைப்பார்.. அவர் கருத்துக்கேற்ப, குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தம் போல வேறெழுத்தாவனவே யன்றி, ஒரு மாத்திரையாய் நின்ற இகர உகரங்களே ஒரு காரணம் பற்றி அரைமாத்திரையாய் நின்றன அல்ல. முனிவர் கருத்தினையே இவ்வுரைகாரர் வலியுறுத்துதல் காண்க.]

## இளம்பூரணம்

***408. ஈரொற்றுத் தொடர்மொழி வன்றொடரும் மென்தொடரும் ஆதல்***

அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடர் ஆகா.

இச்.....எனின், அவ்வாறனுள் ஓர் ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* அவற்றுள், ஈரொற்றுத் தொடர்மொழி இடைத் தொடர் ஆகா; வன்தொடர்மொழியும் மென்தொடர் மொழியும் ஆம் எ-று.

*(உ-ம்.)* ஈர்க்கு மொய்ம்பு - என வரும். (2)

**நச்சினார்க்கினியம்**

## *407. ஈரொற்றுத் தொடர்மொழி வன்தொடரும் மென்தொடரும் ஆதல்*

**அவற்றுள்,**
**ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடர் ஆகா.**

இஃது அவ்வாறனுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

*(இ-ள்.)* அவற்றுள்.....ஆகா - அவ்வாறனுள், இரண் டொற்று இடைக்கண் தொடர்ந்து நிற்கும் சொல்லிற்கு இடையின ஒற்று முதல்நின்றால், மேல் இடையினம் தொடர்ந்து நில்லா, வல்லினமும் மெல்லினமும் தொடர்ந்து நிற்கும்[1] எ-று.

*(உ-ம்.)* ஆர்க்கு ஈர்க்கு, நொய்ம்பு மொய்ம்பு என வரும். (2)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***407.*** 'யரழ என்னு மூன்றும் ஒற்றக், கசதப ஙஞநம ஈரொற் றாகும்' *(48)* என்னும் ஈரொற்றுடனிலை விதியை மனத்திற்கொண்டு வல்லினமும் மெல்லினமும் தொடர்ந்து நிற்கும் என விரிவுரையாகப் பதவுரையிற் குறித்தார் நச்சினார்க்கினியர்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***408.*** **அவற்றுள்,**
**ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடர் ஆகா.**

நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்கு "அவ்வாறனுள் இரண்டு ஒற்று இடைக்கண் தொடர்ந்து நிற்கும் சொல்லிற்கு இடையினவொற்று முதல்நின்றால் மேல் இடையினம் தொடர்ந்து நில்லா, வல்லினமும் மெல்லினமும் தொடர்ந்து நிற்கும்" எனப்பொருள் கூறினர். இப்பொருள் 'யரழ என்னும் மூன்றும் ஒற்றக், கசதப ஙசதப ஈரொற்று ஆகும்' *(48)* என்ற சூத்திரத்தான் உணர்த்தப்பட்டமையான், இவ்வாறு அவர் கூறுதல் பொருந்தாது.

***408.*** [ஈரொற்றுடனிலையாக வருதலை, "இடையின மெய்யினை யடுத்து வல்லின மெய்யோ, அன்றி மெல்லின மெய்யோ தொடருமன்றி மற்றோர் இடையினமெய் தொடராது" என்று நச்சினார்க்கினியர் விளங்கவுரை வகுத்தாரேயன்றி, 'யரழ என்னும் மூன்றும்' என்னும் மொழிமரபுச் சூத்திரச் செய்தியையுட்கொண்டிலர் என்று கருதுவது பொருந்தாது. பதவுரை சொற்பொருளுரையைக் கடந்து சற்றே விளக்கவுரையாகவும் அமைதலை நச்சினார்க்கினியர் உரையுள் காணலாம். இதன்கண் குற்றங் காணும் இவ்வுரைகாரர் கூற்றுப் பொருந்தாது என்க.]

**இளம்பூரணம்**

***409.*** ***அறுவகைக் குற்றுகரமும் இருவகைப் புணர்ச்சிக்***
***கண்ணும் நிறைந்தே நிற்றல்***

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா இறுதியும் உகரம் நிறையும்.**

இச்.....எனின், எய்தியது ஒருமருங்கு மறுத்.....ற்று.

(இ-ள்.) அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஆறு ஈற்றுக் குற்றியலுகரமும் நிறைந்தே நிற்கும்[1] எ-று.

(உ-ம்.) நாகு கடிது நாகு கடுமை; வரகு கடிது வரகு கடுமை - என வரும். (3)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***409.*** *1)* ஒரு மாத்திரை பெற்று நிற்கும் எனப் பொருள் காண்கிறார் ரெட்டியார்.

நச்சினார்க்கினியர், குறுகாது அரை மாத்திரை பெற்று நிற்பதாக உரை கூறுவார்.

உரைகாரர்கள்தம் உரைக்குறிப்புக்களை நோக்குக.

"ஆசிரியர் 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்னும் சூத்திரத்தான் குற்றியலுகரமும் புள்ளிபெற்று நிற்கும் என, முற்றுகரத்தோடு இதனிடை வரிவடிவினும் வேற்றுமை தோன்றக் கூறி, உம்மையான் குற்றியலிகரமும் புள்ளி பெற்று நிற்கும் என்று ஓதினமையானும்,

'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்' எனவும், 'குற்றி லுகரம் வல்லாறு ஊர்ந்தே' நிற்றல் வேண்டும் எனவும் கூறியதன்றி, இவை பற்றி மாத்திரை குறுகும் என்னாமை யானும்,

'புணரியல் நிலையிடைக் குறுகலு முரித்தே' ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்' என்புழியும், 'யகரம் வருவழி இகரம் குறுகும்' என்புழியும், 'கொங்கலர் பூம்பொழில் குறுகினர் சென்றுழி' (சிலம். 10 : 220), 'தீவினை முதிர்வலைச் சென்றுபட் டிருந்த, கோவலன் தன்னைக் குறுகின னாகி' (ஷெ16 : 157), 'கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி'

(ஷ 20 : 47), 'நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் நண்ணென்னும்' (குறள் 1104), 'ஆறும், குறுகார் அறிவுடை யார்' என்புழிப் போலக் குறுகுதல் அணுகுதல் எனவே பொருள்படும் ஆகலானும்,

அவ்வாறன்றிக் குறைதலே பொருளாயினும், குற்றுயிர்-குற்றெழுத்து - என்றாற்போல, தம்மின் மிக்கிசைக்கும் எழுத்துக்களை நோக்கிக் குறுகும் என்றார் எனவே படும் ஆகலானும்,

அங்ஙனம் கொள்ளாக்கால், 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' என்புழிப் புணர்ச்சிக்கண் முற்றுகரமாய் நிற்கும் எனப் பொருள்பட்டு இச்சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியும் ஆகலானும்,

குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் போல வேறெழுத்தே ஆவனஅன்றி, ஒரு மாத்திரையாய் நின்ற இகர உகரங்களே, மகரக்குறுக்கம் முதலியன போல, ஒரு காரணம் பற்றி அரைமாத்திரையாய் நின்றன அல்ல என்பது தெற்றென வுணர்க."

-சிவஞான. சூ. வி.

இவ்வாற்றான், குற்றியலுகரம் முற்றுகரத்தின் குறுக்கம் அன்று என்பதும், அது தனியெழுத்து என்பதும், அஃது அணுகி நிகழுமிடன் ஈரெழுத்தொரு மொழி முதலாய ஆறு என்பதும், புணரியல் நிலைக்கண் நிலைமொழியீறாக அது வருமிடத்தும் தன் அரைமாத்திரையளவே இசைக்கும் என்பதும், புணர்மொழிக்கண் அஃது ஒரு மாத்திரையள விற்றாக இசைத்தல் ஆசிரியர் கருத்தன்று என்பதும் பெறப்படும். முதலெழுத்தாகிய உகரம் இடமும் சார்பும் பற்றிக் குறுகி அரைமாத்திரையாக ஒலிக்கும் என்ற உரையாசிரியன்மார் கருத்தினை முனிவர் மறுத்துரைப்பது அவர்தம் முதற்சூத்திரவிருத்தியுள் அடுத்து இடம்பெறும்.

## நச்சினார்க்கினியம்

### 408. ஆறு ஈற்றினும் இருவழியும் உகரம் அரைமாத்திரையே பெறுதல்

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா இறுதியும் உகரம் நிலையும்.**

இஃது 'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' (37) என்றதனான் புணர்மொழிக்கண் அரைமாத்திரையினும் குறுகும் என எய்தியதனை விலக்கி, 'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே' (12) என்று விதியே பெறும் என்கின்றது.

(இ-ள்.) அல்லது......கண்ணும் - அல்வழியைச் சொல்லுமிடத்தும், வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும்; எல்லா......நிலையும் - ஆறு ஈற்றின்கண்ணும் உகரம் தன் அரைமாத்திரையைப் பெற்று நிற்கும் எ-று.

வருமொழியான் அல்லது அல்வழியும் வேற்றுமையும் விளங்காமையின், 'அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்' எனவே, இருமொழிப்புணர்ச்சி என்பது பெற்றாம். இவ்விருமொழிக்கண் பழைய அரைமாத்திரை பெற்றே நிற்கும் என்றார்.

அன்றி, இருமொழிப் புணர்ச்சிக்கண் ஒரு மாத்திரை பெறும் என்றார்க்கு, பன்மொழிப் புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணம்[1] குற்றுகரத்தான் நேர்புஅசை நிரைபுஅசை கோடலும், அவற்றான் அறுபது வஞ்சிச்சீர் கோடலும், பத்தொன்பதினாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றொரு தொடைகோடலும் இன்றாய், முற்றியலுகரமாகவே கொள்ளவேண்டுதலின் மாறுகொளக் கூறல் என்னும் குற்றம் தங்கும் என்றுணர்க.

(உ-ம்.) நாகுகடிது வரகு கடிது நாகு கடுமை வரகு கடுமை என வரும். இவை தம் அரைமாத்திரை பெற்றன. ஏனையவற்றோடும் ஒட்டுக.

இனி இது 'மால்யாறுபோந்து கால்சுரந்துபாய்ந்து' எனத்தொடர்மொழிக்கண்ணும் அரைமாத்திரை எண்ணாக் கால், வஞ்சிச்சீர் இன்றாமாறு உணர்க.? (3)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***408.*** 1. நிலைமொழி வருமொழிப் புணர்நிலையும், அவ்வருமொழியே நிலைமொழியாய் அடுத்துவரும் சொல்லொடு புணர்நிலையும் என இவ்வாறு தொடர்ந்து வரும் பன்மொழிப் புணர்ச்சிகளைக்கொண்டது செய்யுள் என்றவாறு.

2. நேர்பு நிரைபு அசைகளை முற்றுகரத்தானும் கொள்ளலாம் என்று மறுத்து, உரையாசிரியர் உரையே பொருந்தும் என்பர் ரெட்டியார். 'மால்யாறு போந்து கால்சுரந்து பாய்ந்து : நேர்பு நிரைபு அசைகளை முற்றுகரமாகக் கொண்டாலும் வஞ்சிச்சீராதல் கூடும் என்பது ரெட்டியார் கருத்து.

இச்சூத்திரத்தில் 'நிலையும்' என்பதை 'நிறையும்' என்று பாடங்கொள்பவர் இளம்பூரணர். பேராசிரியர் செய்யுளியலுள் ஞாயிறு முதலியன முற்றியலுகரம் போலக் கொள்ளப்படுமன்றிக் குற்றியலுகரம் முற்றியலுகரம் ஆகாது என்றும், அங்ஙனம் கொள்ளின் குற்றியலுகரப் புணரியலில் 'நிறையும்' என்று ஆசிரியர் பாடங்கொண்டதற்கு ஒரு பயனின்றாம் என்றும், (செய். 4, 5, 12) கூறியதை நோக்கும் போது, ஈண்டும் பேராசிரியர்க்கு நிறைவது போல வைத்துப் புணர்க்கப்படும் என்பதே கருத்தாதல் பெறப்படும். ஏனெனில், குற்றியலுகரம் மாத்திரை குறைந்தமை பற்றி, மெய்யாக வைத்துப் புணர்க்கப்படுமோ உயிராக வைத்துப் புணர்க்கப்படுமோ என மாணாக்கருக்கு ஐயம் வரும்; அதனை நீக்க உயிர்போல நிறைவதாக வைத்துப் புணர்க்கப் படும் என்பது பொருத்தமாதலின். கணே.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***409.*** அல்லது கிளப்பினும்..........உகரம் நிறையும்.

இச்சூத்திர உரையில் உகரம் என்றதைக் குற்றியலுகர மாகவும் 'ஈரெழுத்தொருமொழி' (407) என்ற சூத்திரத்தில் அதனைமுற்றியலுகரமாகவும் இளம்பூரணர் கருதியது பொருத்தமின்று. 'அன்றியும் முற்றியலுகரமும்' குற்றிய லுகரமும் மாத்திரையின் மாத்திரம் வேறுபட்டன அல்ல; பிறப்பிடத்திலும் வேறுபட்டன அவை என்பதைப் பிறப்பியற் சூத்திரங்களால் ஆசிரியர் உணர்த்தியது நோக்கத்தக்கது.

இச்சூத்திரம் எற்றுக்கு எனின், 'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' (37) என்றவிடத்துப் புணர்ச்சியின்கண் குறுகும் என்றும், அவ்விடங்கள் 'ஈரெழுத் தொருமொழி' (407) என்ற சூத்திரத்தின்கண் ஆறு என்றும் கூறியிருக்கின்ற மையின், எல்லாவிடங்களிலும் குற்றியலுகரம் குறுகுமோ என்ற ஐயம் வர, 'எல்லாவழியும் நிறையும்' என ஈண்டுப் பொதுவாகக் கூறிப், பின்னர்க் குறுகும் இடங்களை உணர்த்தற்கு என்க.

***409.*** [இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் பாடமாகிய 'நிறையும்' என்பதனை இவ்வுரைகாரர் ஏற்று, நச்சினார்க்கினியர் உரையைத் தழுவிக் குற்றியலுகரம் கால் மாத்திரையாகக் குறைதலின்றித் தன் இயல்பாகிய அரை மாத்திரையளவில் நிறைந்து நிற்கும் என்கிறார்.]

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***408.*** அல்லது கிளப்பினும்......உகரம் நிறையும்.

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் 'உகரம் நிலையும்' என்று பாடம்கொண்டு, இருமொழிக்கண் பழைய அரை மாத்திரை பெற்றே நிற்கும் - என்றார். அவர், "இருமொழிப் புணர்ச்சிக்கண் ஒருமாத்திரை பெறும் என்றார்க்குப் பன்மொழிப் புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணம் குற்றுகரத் தான் நேர்பசை நிரைபசை கோடலும், அவற்றான் அறுபது வஞ்சிச்சீர் கோடலும், 19,291 தொடை கோடலும் இன்றாய்...." என்று இளம்பூரணரை மறுத்துக் கூறினார். ஆசிரியர்

'இருவகை உகரமொடு இயைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப'

என்று கூறியிருத்தலின், முற்றுகரத்தானும் நேர்பசை நிரைபசை நேருமன்றே? அதனான் வஞ்சியுரிச்சீர் அறுபதும் அமைவுறுமே. ஆகலின், அவர் மறுத்துக் கூறியது பொருந்துதல் இல்லை. செய்யுளியல் 101ஆம் சூத்திரத்தைப் பாடவேறுபாடு கொண்டு உரையாசிரியன்மார் ஒவ்வொரு வரும் தத்தமக்குத் தோன்றியவாறே உரை கூறினர். நச்சினார்க்கினியர் கூறிய தொடைவிகற்பமும் பொருந்தாது என்பது தெளியப்படும். படவே, அவர் இளம்பூரணரை மறுத்துக் கூறியதும் நிலைபெறுதலின்று. இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கூறிய பொருளே மெய்ப்பொருள் ஆகும்.

இன்னும் நச்சினார்க்கினியர், "மால்யாறுபோந்து கால்சுரந்து பாய்ந்து எனத் தொடர்மொழிக்கண்ணும் அரைமாத்திரை பெற்றது என்னாக்கால், வஞ்சிச்சீர் இன்றாமாறு உணர்க" என்றார். இதிலுள்ள உகரங்கள் ஒருமாத்திரை பெற்றன எனினும், அவை நேர்பு நிரைபு அசைகளே ஆகுமாதலின், வஞ்சிச் சீராதற்குத் தடை என்?

**408.** [அல்வழி வேற்றுமை என்னும் இரண்டினும், நிலைமொழியிறுதிக் குற்றுகரம் ஒரு மாத்திரையாக நிறையும் என்ற இளம்பூரணருரையை இவ்வுரைகாரர் தழுவினார். அவ்வாறு முற்றுகரமாக நிறையுமேல், இவ்வியல் 'குற்றியலுகரப் புணரியல்' ஆமாறு யாங்கனம்? 'குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே' (433) 'கூறிய இயற்கை குற்றியலுகரம்' (437) 'ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்' (469) என்று விதிக்கப்பட்டவை எவ்வாறமையும்? இன்ன ஐயங்கள் எழுகின்றன. குற்றியலுகரம் என்ற ஒன்று இருப்பதனாற்றான் அதனோடு ஒருபுடை இணைத்து முற்றிய லுகரமும் நேர்பசை நிரைபசை ஆயிற்று. குற்றியலுகரம் இன்றேல் முற்றியலுகரத்துக்கு நேர்பு நிரைபு அசை என்று பெயர்கொள்ள வாய்ப்பே இலது. ஆதலின் நேர்பசை நிரைபசைக்குக் குற்றியலுகரமே அடிப்படை எனப்பட்டது.

குற்றியலுகரமெல்லாம் தொடர்மொழிக்கண் முற்றிய உகரமாயின், யாவும் குற்றெழுத்துப் போலவே கணக்கிடப் படும்; நேர்பசை நிரைபசை கோடற்கு வாய்ப்பே இராது என்பதே நச்சினார்க்கினியர் கருத்து.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**408. அல்லது கிளப்பினும்........உகரம் நிலையும்.**

(இ-ள்.) அல்வழிப் புணர்ச்சியைக் கூறுமிடத்தும், வேற்றுமைப் புணர்ச்சியைக் கூறுமிடத்தும், பெயரும் தொழிலுமாக அடங்கிவரும் எல்லாச் சொற்களின் இறுதியும் குற்றியலுகரம் நிலைபெற்றுப் புணரும்.

(எ-டு.) தேசு முரசு உல்கு கஃசு கச்சு நெஞ்சு என நிறுத்தி, இனிது - இனிமை - எனக்கூட்டி இருவழியும் பெயராக நின்று புணருமாறும், கூறென்றான் பருகென்றான் நோக்கென்றான் அஃகென்றான் நல்கென்றான் உண்டென் றான் - எனத் தொழிற்சொல்லாக நின்று புணருமாம் கண்டு கொள்க.

ஆசிரியர், நிறுத்த சொல்லையும் குறித்துவரு கிளவியையும் ஈறுபற்றி ஓதுங்கால், 'உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்' 'மெய்யிறு சொல்முன் உயிர்வரு வழியும்' எனத் தனித்து வரல் மரபினையுடைய உயிரையும் மெய்யையுமே சுட்டிக் கூறினார் ஆகலின், சார்ந்துவரல் மரபினதாகிய குற்றியலுகரம் ஆண்டு அடங்கிற்றில்லை என்க.

**408.** [குற்றியலுகரம் நிறுத்த சொல்லின் இறுதியாக நிற்றலை முன்னர் (107) விதந்தோதாமையின், இச்சூத்திரத்தே அதனைக் குறிப்பிட்டதாக இவர் கருதுகிறார். குற்றியலுகரம் உயிரேற இடங்கொடுத்தலின் மெய்யீற்றுள் அடங்கும் என்றும் அது மெய்யெழுத்தின் விகாரமே என்றும் கூறுப இருசாரார்.]

## இளம்பூரணம்

### *410. வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றியலுகரம் அரைமாத்திரையே பெறுமிடம்*

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி**
**தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே.**

இச்.......எனின், எய்தியது ஒருமருங்கு மறுத்......ற்று.

(இ-ள்.) அவ் ஆறு ஈற்றினுள்ளும் வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வருமிடத்து, முன்கூறின (37) இயற்கை நிற்றலும் உரித்து எ-று.

(உ-ம்.) கொக்குக் கடிது கொக்குக் கடுமை - என வரும். (4)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

*1)* புணர்மொழிக்கண் வரும் குற்றியலுகரம் முன்னைய அரைமாத்திரையே பெற்று நிற்கும் (சூ. 12)

'இடைப்படிற் குறுகும்' (37) என்ற நீர்மைத்தாய் கால் மாத்திரையாய்க் குற்றியலுகரம் ஒலிக்கும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

உரைகாரர்கள்தம் உரைக்குறிப்புக்களை நோக்குக.

## நச்சினார்க்கினியம்

### *409. குற்றுகரம் அரைமாத்திரையினும் குறுகிநிற்கும் இடன்*

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்**
**தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே.**

இது முன்னின்ற சூத்திரத்தான் அரைமாத்திரை பெறும் என்றதனை விலக்கி, 'இடைப்படின் குறுகும் இடனும்' (37)

என்றதனான் அரைமாத்திரையினும் குறுகும் என்று ஆண்டு விதித்தது, ஈண்டு வல்லொற்றுத் தொடர்மொழிக்கண்ணே வரும் என்கின்றது.

*(இ-ள்.)* வல்லொற்றுத் தொடர்மொழி -வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரம்; வல்லெழுத்து வருவழி - வல்லெழுத்து முதல்மொழி வருமொழியாய் வருமிடத்து; தொல்லை.....உரித்து - 'இடைப்படின் குறுகும்' என்றதனாற் கூறிய 'அரைமாத்திரையினும்' குறுகிநிற்கும் என்ற இயல்பிலே நிற்றலும் உரித்து எ-று.

உம்மை எதிர்மறை.

*(உ-ம்.)* கொக்குக் கடிது-கொக்குக் கடுமை-என அரை மாத்திரையின் குறைந்தவாறு, குரங்கு கடிது-முதலிய வற்றொடு படுத்துச் செவிகருவியாக உணர்க.

முன்நின்ற சூத்திரத்து உகரம் நிறையும் என்று பாடமோதி, அதற்கு உகரம் அரைமாத்திரையின் சிறிது மிக்கு நிற்கும் என்று பொருள்கூறி, இச்சூத்திரத்திற்குப் பழைய அரைமாத்திரை பெற்றுநிற்கும் என்று கூறுவாருமுளர்.[1] *(4)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***409.*** 1) கூறுமவர் இளம்பூரணர். அரைமாத்திரையின் சிறிது மிக்கு நிற்கும் என்பது அவருரைச்செய்தியின்று. சிறிது மிக்கு நிற்றல் என்பது பொருந்தாது என்பர் **கணேசய்யர்.**

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***410.*** **வல்லொற்றுத் தொடர்மொழி.....நிலையலும் உரித்தே.**

*(இ-ள்.)* வல்லொற்றுத் தொடர்மொழியின் இறுதிக் குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து முன்னை இயல்பின்கண் நிற்றலும் உரித்தே.

அவ்வியற்கை 'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' (37) என்றவிடத்துக் கூறப்பட்டதேயாம்.

(உ-ம்.) கொக்குக்கடிது கொக்குக்கடுமை - ஈண்டுக் குகரத்திற்குக் கால்மாத்திரை எனக் கொள்ளல் வேண்டும்.

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**409. வல்லொற்றுத் தொடர்மொழி....நிலையலு மூரித்தே.**

இச்சூத்திரத்தில் 'தொல்லை யியற்கை' என்பதற்கு நச்சினார்க்கினியர், "'இடைப்படிற் குறுகும்' என்பனாற் கூறிய அரைமாத்திரையினும் குறுகி நிற்கும் என்ற இயல்பிலே" என்று பொருள் கூறினார். 'தொல்லை யியற்கை' என்பதற்கு மேற்கூறிய இயல்பு என்பதுவே ஆசிரியர் கருத்தாயின், மேற்கிளந்தன்ன என்றாவது 'முற்கிளந்தன்ன' என்றாவது கூறுவாரே யன்றி, 'தொல்லை யியற்கை' என்பாரல்லர். அன்றியும் தொல்லை என்பது பழமை என்னும் பொருள் தருமேயன்றி மேற்கூறிய என்னும் பொருளைத் தாராது. இவற்றான், 'தொல்லை யியற்கை' என்பது பழைய தன்மை என்று பொருள்தந்து, வன்தொடர்க் குற்றுகரம் வல்லெழுத்து முதன்மொழி வரும்வழி அரைமாத்திரை[illegible] நிற்கும் இயல்பினையே உணர்த்திற்று என்பது தெளியப்படும். உம்மையான், மேலைச்சூத்திரத்தின்படி ஒரு மாத்திரை யாதலுமுண்டு. மேல் மொழிமரபில்,

> 'இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
> கடப்பா டறிந்த புணரிய லான'

என்று கூறியது இச்சூத்திப் பொருளைக் குறித்ததே.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**409. வல்லொற்றுத் தொடர்மொழி....நிலையலு மூரித்தே.**

(இ-ள்.) வல்லொற்றுத் தொடர்ந்த குற்றியலுகரம் வருமொழி வல்லெழுத்து வந்து புணருமிடத்து, 'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே' (12) என்ற இலக்கணத்ததாய் நிலைபெறுதலும் உரித்தாகும். உம்மை எதிர்மறை; அதனான், தனக்குரிய அரைமாத்திரையினும் குறுகி நிற்றலும் உரித்தாம் என்றவாறு.

வரும் வல்லெழுத்து நிலைமொழிக்கண் உள்ள எழுத்தாகவே வரின் என்பது குறிப்பாக விளங்க, 'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து' என்றார். பிற வல்லெழுத்து வரின் கூறுவோனது முயற்சிக்கேற்பக் குறுகியும் குறுகாதும் வருமென்க.

அரைமாத்திரையினும் குறுகிநிற்குமாறு: கொக்குக் குறிது-கச்சுச்சுருக்கம் - பத்துத்துடி - செப்புப்புதிது - எனவரும். இவற்றை விட்டிசையாது கூறி மாத்திரை குறைந்து நிற்றலை அறிக.

கொக்குக் கடிது - கச்சுச் சிறிது - என்பதை கூறுவோன் முயற்சியை ஒட்டிக் குறுகியும் குறுகாதும் நிற்கும்.

கொக்குச் சிறிது - கச்சுப் பெரிது - என, வரும் வல்லெழுத்துப் பிறிதாயின் குறுகாது.

### இளம்பூரணம்

### 411. குற்றியலிகரம் புணர்மொழியுள் வருமாறு.

**யகரம் வருவழி இகரம் குறுகும்**
**உகரக் கிளவி துவரத் தோன்றாது.**[1]

இச்....எனின், குற்றியலிகரம் புணர்மொழியுள் வருமாறு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) யகரமுதல்மொழி வருமிடத்து, நிலைமொழி உகரம்[2] முற்றுத் தோன்றாது: ஆண்டு ஓர் இகரம் வந்து குறுகும் எ-று.

*(உ-ம்.)* நாகியாது வரகியாது தெள்கியாது எஃகியாது கொக்கியாது குரங்கியாது - என வரும்.

இதனானே, ஆகார ஈறு அகரம் பெற்றாற்போல், ஆறீற்றுக் குற்றியலுகரமும் இகரம்பெற்று[3], யகர முதல் மொழியொடு புணருமாறு கூறிற்றாயிற்று. (5)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*411. 1)* இச்சொல்லாட்சியை 129ஆம் சூத்திரத்திலும் காண்க. ஆண்டு அது கெடுதல் பொருட்டு.

*2)* உகரம் குற்றியலுகரம்.

*3)* அவ்வீற்று ஆகாரமும், வரும் அகரமும் ஒன்றுபட்டு இரண்டு மாத்திரையாகவே ஒலித்தாற்போல, ஈற்றுக் குற்றுகரமும் வரும் இகரத்தோடு ஒன்றுபட்டு இகரஒலியே மேற்பட்டுத் தோன்றத் தான் ஒலியாது நிற்கும் என்றவாறு.

யாண்டும் குற்றியலுகரம் வருமுயிர்க்கு இடங் கொடுப்பத் தான் கெடுதலும் அவ்வுயிராகத் தான் திரிதலும் இல்லை என்பது ஆசிரியர் துணிவு.

## நச்சினார்க்கினியம்

### *410. குற்றியலிகரம் புணர்மொழிக்கண்ணும் வருமாறு*

**யகரம் வருவழி இகரம் குறுகும்**
**உகரக் கிளவி துவரத் தோன்றாது.**

இது குற்றியலிகரம் புணர்மொழியகத்து வருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* யகரம் வருவழி உகரக்கிளவி துவரத் தோன்றாது-யகர முதல்மொழி வருமொழியாய் வருமிடத்து, நிலைமொழிக் குற்றுகர எழுத்து முற்றத்தோன்றாது; இகரம் குறுகும் - ஆண்டு ஓர் இகரம் வந்து அரைமாத்திரை பெற்று நிற்கும் எ-று.

(உ-ம்.) நாகியாது வரகியாது தெள்கியாது எஃகியாது கொக்கியாது குரங்கியாது என வரும்.

'துவர' என்றார், ஆறு ஈற்றின்கண்ணும் உகரம் கெடும் என்றற்கு. (5)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***410.*** 1. குற்றுகர ஒலியாதலின் கெடும் என்னாது 'தோன்றாது' என்றார் என்று நயமாகக் கூறுவர் பாலசுந்தரம் அவர்கள்.

இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***411.*** **யகரம் வருவழி.......துவரத் தோன்றாது.**

(இ-ள்.) வருமொழி முதல் யகரமாயிருக்க, நிலை மொழியிறுதியாகிய உகரம் முற்றிலும் கெட, அவ்விடத்திற் குற்றியலிகரம் வந்து குறுகும்.

'புணரியல் நிலையிடைக் குறுகலு முரித்தே' (35) என்ற விடத்து, "அக்குற்றியலிகரம் புணரியலுள் ஒருமொழிக் கணன்றி இருமொழி தம்மிற் புணர்தலியன்ற நிலைமைக் கண்ணும் குறுகுதலும் உரித்து" எனக்கூறிய நச்சினார்க் கினியர், ஈண்டு ஓர் இகரம் வந்து அரைமாத்திரை பெற்று நிற்கும் எனக் கூறுதல் பொருந்தாது எனத் தோற்றுகிறது. அச்சூத்திரத்துள்ள 'குறுகலும் உரித்து' என்றதையும் இச்சூத்திரத்திலுள்ள 'குறுகும்' என்றதையும் நோக்கின், குற்றியலிகரம் சிறுபான்மை கால்மாத்திரை பெறும் என நச்சினார்க்கினியர் கூறியிருப்பின் நலம்.

***411.*** [புணர்மொழிக்கண்ணும் குற்றியலிகரம் வந்து தன் இயல்பாகிய அரைமாத்திரையாக, (முற்றியலிகரத்தின்) குறுகி யொலிக்கும் என்று 35ஆம் சூத்திரத்திற்கு உரைசெய்த நச்சினார்க்கினியர் கருத்தை இவர் பிறழ வுணர்ந்து

கொண்டமையான், இச்சூத்திரத்திற்கு அவர் "ஓர் இகரம் வந்து அரைமாத்திரை பெற்று நிற்கும்" என்று உரை கூறியமையைப் 'பொருந்தாது' என்கிறார். குற்றியலிகரமும் (குற்றுகரம் போலச்) சிறுபான்மை புணர்மொழிக்கண் குறுகிக் கால் மாத்திரையாக ஒலிக்கும் என்பது இவர் கருத்து.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***410.*** **யகரம் வரும்வழி......துவரத் தோன்றாது.**

'நாகுயாது' என்னும் தொடர்மொழியில் கு, ஆண்டு நிறைந்து ஒலித்து முற்றியலுகரம் ஆதலின், அஃது இகரம் வரும்வழிக் கெடும் எனல் வேண்டிற்று. நாகு என்பது தனிமொழியாய் நிற்குமிடத்துக் குற்றுகரமே யாயினும், புணர்மொழிக்கண் முற்றுகரமாகும் என்பது மேல் 'அல்லது கிளப்பினும்' என்னும் சூத்திரத்தாற் கூறப்பட்டதனால், அஃது ஈண்டு முற்றியலுகரமே. 'அல்லது கிளப்பினும்' என்னும் சூத்திரத்தான், அறுவகைக் குற்றுகரமொழிகளின் கண்ணும் வல்லுகரம் ஒரு மாத்திரை பெற்று முற்றுகரமாதல் போந்ததனான், அவற்றுள் வன்தொடர் மொழிக்கண்ணுள்ள முற்றுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்துக் குறுகும் என்று மேற்சூத்திரத்தான் விதித்து, அவ்வறுவகை மொழிக்கண்ணுள்ள முற்றுகரங்களும் இகரம் வந்தவிடத்து முழுதும் கெடுதலை இச்சூத்திரத்தான் விதித்தார். மேல் 'அல்லது கிளப்பினும்' என்னும் சூத்திரத்தான் புணர் மொழிக்கண் ஒருமாத்திரை ஒலித்த உகரம் இவ்விடத்துக் கெடும் என்றே இச்சூத்திரத்தாற் கூறினார். இதனானும் 'அல்லது கிளப்பினும்' என்னும் சூத்திரத்திற்கு இளம்பூரணர் கூறியவாறு பொருள் கொள்ளுதல் அமைதியாதல் வலியுறும்.

***410.*** ['உகரம் கெடும்' எனின் மொழிப் பொருள் திரியு மாதலின், 'உகரக் கிளவி துவரத் தோன்றாது' என்றார் என்னும் பாலசுந்தரம் அவர்களது கொள்கை நிறுத்த சொல்லின் ஈறு குற்றியலுகரம் என்பதே. சூத்திரத்தில் இகரம் உகரம் எனப்பட்டவை குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பது அதிகாரத்தாற் பெறப்பட்டது என்பார் அவ்வுரையாளர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**410.** **யகரம் வருவழி......துவரத் தோன்றாது.**

(இ-ள்.) குறித்துவரு கிளவியின் முதலாக யகரம் வருவழி ஆண்டுக் குற்றியலிகரம் வந்து தனது அரை மாத்திரையினும் குறுகி நிற்கும். அவ்வழி, நிறுத்த சொல்லின் ஈறாகிய குற்றியலுகர எழுத்தொலி முற்றாகத் தோன்றாது.

குற்றியலுகர ஈற்றின்முன் யகரம் வந்து புணருங்கால், ஆண்டு யகரத்தொடு ஒலியொற்றுமையுடைய குற்றியலிகரம் ஆசாக வருதலும், அஃது அரைமாத்திரையேயுடைய சார் பெழுத்தாகலின் குற்றியலுகரத்தின்மேல் ஏறி முடிதற்கு ஆகாமையும் நோக்கி, குற்றியலுகரம் தான் ஊர்ந்து நின்ற மெய்யை நிறுத்தித் தன்னோசை தோன்றாது என்றார். உகரம் கெடும் எனின் மொழிப்பொருள் திரியுமாதலின் 'உகரக் கிளவி துவரத் தோன்றாது' என்றார்.

குற்றியலுகரம் யகரமெய்யொடு புணரும் புணர் மொழிக்கண் குற்றியலிகரம் அதற்கு மாற்றெழுத்தாக வருமென்க. இதனை 'முடிந்தது காட்டல்' என்னும் உத்[illegible] ஆசிரியர் கொள்ளவைத்த சதுரப்பாட்டினையும் அறிந்துகொள்க.

இம்மொழியியல் நுண்மையைத் தேறாத பின்னூலோர் குற்றியலுகரமே இகரமாகத் திரியும் என்ப. அதன் திரிபெனின், அது குற்றியலுகரத்தின் புணர்ச்சிவிகார மாவதுஅல்லது பிறிதொரு சார்பெழுத்தாக எண்ணுதற்கு ஏலாமையை அவர் எண்ணிலர்.

மொழிமரபினுள் 'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' (35) என எதிர்மறையும்மை கொடுத்துவிட்ட மையின் ஈண்டு வாளா கூறினார். அதனான் குறுகாது நிற்கும் என்பது பெறப்படும்.

(எ-டு.) ஆடு+யாது = ஆடியாது; கவடு+யாது= கவடியாது; தொண்டு+யாது=தொண்டியாது - என வருபவை

குறுகும். தெள்கு+யாது=தெள்கியாது; வரகு+யாது=வரகியாது- என வருபவை குறுகா.

இச்சூத்திரம் 'வல்லொற்றுத் தொடர்மொழி' (409) என்னும் சூத்திரத்திற்கு முன்னர் இருத்தல் வேண்டும். அதுவே மொழிமரபினுள் நிறுத்த முறைக்கு ஒத்ததாகும்.

***410.*** [*புணரியல் நிலையிடைக் குற்றியலிகரம் கால் மாத்திரை பெறும் என்று சுப்பிரமணிய சாத்திரியார் கொண்ட கருத்தினை இவரும் சுட்டினார்; 'குறுகலும் உரித்தே' (35)* **என்னும் எதிர்மறையும்மையால் குறுகாமையே பெரும் பான்மைத்து என்று குறிப்பிட்டு, இருதிறத்தவற்றிற்கும் உதாரணம் ஓதினார்.**

மொழிமரபினுள் நிறுத்தமுறைக் கேற்ப, இச்சூத்திரம் 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்பதற்கு முன்னர் வைக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்பர் இவ்வுரைகாரர். *குற்றியலுகரம் அதிகாரப்படுதலின் ஆண்டுவைப்பினும் முறைப்படாமை காண்க.*]

## இளம்பூரணம்

### *412. ஈரெழுத்துமொழியும் உயிர்த்தொடர்மொழியும் வேற்றுமைக்கண் (ட, ற) ஒற்று இரட்டி முடியுமாறு*

> **ஈரெழுத்து மொழியும் உயர்த்தொடர் மொழியும்**
> **வேற்றுமை யாயின் ஒற்றுஇடை இனம்மிகத்**
> **தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி.**

இச்..... எனின், ஆறீற்றினுள்ளும் முன்நின்ற இரண்டற்கும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) ஈரெழுத்தொருமொழிக் குற்றியலுகர ஈறும் உயிர்த்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாயின், இனமாகிய ஒற்று[1] இடையிலே மிக, வல்லெழுத்து மிகுதி தோற்றி முடிதல் வேண்டும் எ-று.

(உ-ம்.) யாட்டுக்கால் செவி தலை புறம் - எனவும், முயிற்றுக்கால்[2] சினை தலை புறம் - எனவும் வரும்.

'தோற்றம்' என்றதனான், இவ்விரண்டற்கும் இயல்பு-கணத்து முடிபும் கொள்க.

(உ-ம்.) யாட்டு ஞாற்சி முயிற்று[3] ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வலிமை அடைவு ஆட்டம் - எனவரும். (6)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**412.** 1) குற்றியலுகரம் ஏறிய இனமாகிய வல்லின ஒற்று.

2) முயிறு - முசிறு எனப்படும் செந்நிறக் கொடிய எறும்பு.

3) முயிறுகள் செல்லும் நீண்ட வரிசை.

## நச்சினார்க்கினியம்

### 411. ஈரெழுத்துமொழி உயிர்த்தொடர்மொழிக் குற்றுகரங்கள் வேற்றுமைக்கண் டறஒற்று இரட்டுதல்

**ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்**
**வேற்றுமை யாயின் ஒற்றுஇடை இனம்மிகத்**
**தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி.**

இது முற்கூறிய ஆறனுள் முன்னர் நின்ற இரண்டற்கும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) ஈரெழுத்து....மொழியும் - ஈரெழுத்தொரு மொழிக் குற்றுகர ஈற்றிற்கும் உயிர்த்தொடர்மொழிக் குற்றுகர ஈற்றிற்கும்; வேற்றுமையாயின் - வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின்; இனஒற்று இடைமிக - இனமாக ஒற்று இடையிலே மிக[1], வல்லெழுத்து மிகுதி தோற்றம் வேண்டும்-வல்லெழுத்து மிகுதி தோன்றி முடிதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

*(உ-ம்.)* யாட்டுக்கால் செவி தலை புறம் எனவும், முயிற்றுக்கால் சினை தலை புறம் எனவும் வரும். கயிற்றுப் புறம் வயிற்றுத்தீ என்பனவும் ஆம்.

'தோற்றம்' என்றதனான், ஏனைக்கணத்தும் இம்முடிபு கொள்க.

யாட்டு ஞாற்சி நிணம் மணி வால் அதள் எனவும், முயிற்று ஞாற்சி[2] முட்டை வலிமை அடை ஆட்டம் எனவும் வரும். *(6)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***411.*** 1, 2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**இளம்பூரணம்**

### *413. அவ்விரண்டனுள்ளும் ஒற்று இரட்டா மொழியும் உண்மை*

**ஒற்றுஇடை இனம்மிகா மொழியுமார் உளவே**
**அத்திறத்து இல்லை வல்லெழுத்து மிகவே.**

இச்....எனின், எய்தியது ஒருமருங்கு மறுத்.......ற்று.

*(இ-ள்.)* இனஒற்று இடைமிக்கு முடியாத மொழிகளும் உள; வல்லெழுத்து மிக்கு முடிதல் அக்கூற்றுள் இல்லை எ-று.

*(உ-ம்.)* நாகுகால் [1], சினை, தலை புறம் - எனவும், வரகுகதிர் சினை தலை புறம் - எனவும் வரும்.

'அத்திறம்' என்றதனான், உருபிற்கு எய்திய சாரியை பொருட்கு எய்தியவழி, இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

*(உ-ம்.)* யாட்டின்கால் முயிற்றின் கால் - நாகின் கால் வரகின் கால் - என வரும். *(7)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*4/3.* 1) நாகு பெண் விலங்கினைக் குறிக்கும் மரபுப் பெயர். ஈண்டுப் பசுவைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

## நச்சினார்க்கினியம்

### *4/2. அவற்றுள் ஒற்று இடை மிகாதனவும் உளஆதல்*

**ஒற்றுஇடை இனம்மிகா மொழியுமார் உளவே**
**அத்திறத்து இல்லை வல்லெழுத்து மிகலே.**

இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

*(இ-ள்.)* ஒற்று.....உள - முற்கூறிய இரண்டனுள், இனவொற்று இடைமிக்கு முடியாத மொழிகளும் உள; வல்லெழுத்து மிகல் அத்திறத்து இல்லை - வல்லொற்று மிக்கு முடிதல் அக்கூற்றுள் இல்லை.

*(உ-ம்.)* நாகு[1] கால் செவி தலை புறம் எனவும், வரகு கதிர் சினை தாள் பதர் எனவும் வரும்.

'அத்திறம்' என்றதனான், உருபிற்குச் சென்று சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

யாட்டின்கால் முயிற்றின்கால் நாகின்கால் வரகின்கதிர் என வரும்.

இன்னும் அதனான், ஏனைக்கணத்தும் ஒற்று இடை மிகாமை கொள்க.

நாகு ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை என ஒட்டுக. (7)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*4/2.* 1. பெண்பால் விலங்கினைக் குறிக்கும் மரபுப் பெயர் *(மர. 3, 63)*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**4/2. ஒற்றிடை யினமிகா......வல்லெழுத்து மிகவே.**

'அத்திறம்' என்றதனான், யாட்டின்கால் முயிற்றின்கால் என உருபிற்குச் சென்று சாரியை பொருட்கண் வரும் என்றனர் உரையாளர். ஆசிரியர், மேல் உருபியலில் 'குற்றிய லுகரத் திறுதி (23) என்னும் சூத்திரத்தான் குற்றுகரவீறுகளுக்கு முன் உருபு வருமிடத்து இன்சாரியை வரும் என்று விதித்து,

'நெட்டெழுத் திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான'

என்று, இடையே ஒற்று மிகும் ஈரெழுத்துக் குற்றுகர மொழியை விலக்கினாராகலின், யாடு என்பது போன்ற சொற்களுக்கு முன் உருபுவரினும் இன்சாரியை வாராது; ஆதலின், யாட்டின்கால் என்று வருதற்கு விதியின்று.

**4/2.** [உரையாளர் யாட்டின்கால் முயிற்றின்கால் எனக் காட்டிய உதாரணங்களுள், யாட்டின்கால் என்னும் முடிபு ஆசிரியர் கருத்துக்கு முரணானது என்றார் இவ்வுரைகாரர். நெடிற் றொடர்க் குற்றுகரம் டறவொற்று இரட்டிவருமிடத்து இன்சாரியை ஏலாது என்பதனை நூற்பாவிதி கொண்டே புலப்படுத்தினார். ஆயின் அவ்வழக்குண்மை கண்டு உரையாசிரியர் யாட்டின்கரல் என எடுத்துக்காட்டினர். ஆசிரியர் உடம்பொடு புணர்த்தலாக. '**மோத்**தையும் தகரும் உதளும் அப்பரும், யாத்த என்ப **யாட்டின்** கண்ணே' (மர.48) என்று ஓதியமை காண்க. 'அத்திறம்' என்ற மிகையான், ஒற்றிடையின் மிகும் ஈரெழுத்தொருமொழிக் குற்றுகரம் இன்சாரியை பெற்று வேற்றுமைப் பொருள்பட முடிதலை அடக்கினர் உரையாசிரியன்மார்.]

**இளம்பூரணம்**

**4/4. இடையொற்றுத்தொடரும் ஆய்தத்தொடரும்
இயல்பாய் முடிதல்**

**இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்
நடைஆ யியல என்மனார் புலவர்.**

இச்...எனின், இடைநின்ற இரண்டு ஈற்றிற்கும் முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* இடையொற்றுத் தொடர்மொழிக் குற்றிய லுகர ஈறும் ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும் நடக்குமிடத்து, மேற்கூறிய இயல்பு முடிபினை யுடைய என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* தெள்குகால் சிறை தலை புறம் - எனவும், எஃகு கால் சிறை தலை புறம் - எனவும் வரும். *(8)*

## நச்சினார்க்கினியம்

## 413. இடையொற்று ஆய்தத்தொடர்க் குற்றுகர ஈறுகள் இயல்பாய் முடிதல்

**இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்**
**நடைஆ யியல என்மனார் புலவர்.**

இஃது இடைநின்ற இரண்டிற்கும் முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* இடையொற்றுத்....தொடரும் - இடை யொற்றுத் தொடர்மொழிக் குற்றுகர ஈறும் ஆய்தத்தொடர் மொழிக் குற்றுகர ஈறும்; நடை....புலவர் - நடைபெற நடக்குமிடத்து, முற்கூறிய அவ்வியல்பு முடிபினையுடைய என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* தெள்குகால் சிறை தலை புறம் எனவும், எஃகு கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். *(8)*

## இளம்பூரணம்

## 415. வன்தொடர்மொழியும் மென்தொடர்மொழியும் முடியுமாறு

**வன்தொடர் மொழியும் மென்தொடர் மொழியும்**
**வந்த வல்லெழுத்து ஒற்றிடை மிகுமே**
**மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்று எல்லாம்**
**வல்லொற்று இறுதிக் கிளைஒற்று ஆகும்.**

இச்....எனின், பின்நின்ற இரண்டு ஈற்றிற்கும் முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) வன்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், மென்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், வருமொழியாய் வந்த வல்லொற்று இடையிலே மிக்கு முடியும்; அவ்விரண்டு ஈற்றினுள் மெல்லொற்றுத் தொடர்மொழிக்கண் நின்ற மெல்லொற்று எல்லாம், இறுதி வல்லொற்றும் கிளை வல்லொற்றுமாய்[1] முடியும் எ-று.

(உ-ம்.) கொக்குக்கால் சிறகு தலை புறம் - எனவும், குரங்குக்கால் செவி தலை புறம் - எனவும்,

குரக்குக்கால் செவி தலை புறம் - எனவும்,

எட்டுக்குட்டி செவி தலை புறம் - எனவும் வரும்.

'வந்த' என்றதனான், இவ்விரண்டு ஈற்றிற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கு எய்தியவழி, இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

(உ-ம்.) கொக்கின் கால் குரங்கின்கால் - என வரும்.

'எல்லாம்' என்றதனான், பரம்பிற் பாரி என்றாற் போல்வன மெல்லொற்றுத் திரியாமையும் கொள்க.

'ஒற்று' என்ற மிகுதியான், இயல்புகணத்துக்கண்ணும், குரக்கு ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வலிமை, அடைவு ஆட்டம் - என மெல்லொற்றுத் திரிதலும் கொள்க.

சிலப்பதிகாரமும் அது. (9)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***415.*** *1)* இடைக்கண் நின்ற மெல்லொற்றுக்கு இனமான வல்லொற்று; என்றது ணகரத்திற்கு டகரமும், னகரத்திற்கு றகரமும் கிளை வல்லொற்றாம்.

## நச்சினார்க்கினியம்

### 414. வன்தொடர் மென்தொடர்க் குற்றுகர ஈறுகள் வலி மிகலும், மென்தொடர்க் குற்றுகரச் சொல்லின் மெலி வலியாகத் திரிதலும்

**வன்தொடர் மொழியும் மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத்து ஒற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்று எல்லாம்
வல்லொற்று இறுதிக் கிளைஒற்று ஆகும்.**

இது பின் நின்ற இரண்டற்கும் முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) வன்தொடர்....மிகும் - வன்தொடர்மொழிக் குற்றுகர ஈறும் மென்தொடர்மொழிக் குற்றுகர ஈறும், வருமொழியாய் வந்த வல்லெழுத்தினது ஒற்று இடையிலே மிக்கு முடியும்; மெல்லொற்றுத்..................எல்லாம் - அவ்விரண்டனுள், மெல்லொற்றுத் தொடர்மொழிக்கண் நின்ற மெல்லொற்றெல்லாம்; இறுதி வல்லொற்று கிளை ஒற்று ஆகும் -இறுதிக்கண் நின்ற வல்லொற்றும் கிளை யாகிய வல்லொற்றுமாய் முடியும் **எ-று.**

இறுதி வல்லொற்று வருதலாவது குற்றுகரம் ஏறி நின்ற வல்லொற்றுத்தானே முன்னர் வந்து நிற்றலாம். கிளை வல்லொற்று வருதலாவது ணகாரத்திற்கு டகாரமும், னகாரத்திற்கு றகாரமும், புணர்ச்சியும் பிறப்பும் நோக்கிக் கிளையாம் ஆதலின், அவை முன்னர் வந்து நிற்றலாம்.

(உ-ம்.) கொக்குக்கால் சிறகு தலை புறம், குரங்குக்கால் செவி தலை புறம் - குரக்குக்கால் செவி தலை புறம், எட்குக்குட்டி செவி தலை புறம், எற்புக்காடு கரம் தலை புறம் என வரும். அற்புத்தளை என்பது அன்பினாற் செய்த தளை என வேற்றுமையும், அன்பாகிய தளை என அல்வழியும் ஆம்.[2]

'வந்த' என்றதனான், இவ்விரண்டற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க.

கொக்கின்கால் குரங்கின்கால் என வரும்.

'எல்லாம்' என்றதனான், பரம்பிற்பாரி குறும்பிற் சான்றோர்-என மெல்லொற்றுத் திரியாமையும் கொள்க.

'ஒற்று' என்ற மிகுதியான் இயல்புகணத்துக்கண்ணும், குரக்குஞாற்சி நிணம் முகம் விரல் உகிர் என, மெல்லொற்றுத் திரிந்து வருமாறு கொள்க. சிலப்பதிகாரம் என்பதும் அது.

வன்தொடர்மொழி இயல்புகணத்துக்கண் வருதல் 'ஞநம யவ' (144) என்பதனான் முடியும். (9)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***414.*** 1. இதனை முன்னிரண்டடியும் ஒரு சூத்திரமாகவும், பின்னடிகள் ஒரு சூத்திரமாகவும் கொள்ளலாம் என்ப சாத்திரியார்.: 'வாக்கியபேதம்' என்னும் குற்றம் நீங்கிச் சூத்திர[illegible]பொருள் நுதலிற்றாதல் வேண்டும் என்பது அவர் கருத்து.

2. ணகரம் டகரமாகத் திரிதலும் (எட்குக்குட்டி), னகரம் றகரமாகத் திரிதலும் (அற்புத்தளை), பன்னீராண்டு 'பன்னீராட்டை' எனவும் அன்றைய நாள் 'அற்றைய நாள்' எனவும் ணகரமும் னகரமும் திரிந்து வருவன நோக்கிப் பிற்காலத்தே கொண்ட திரிபன்றி ஆசிரியர் கருதியவல்ல என்று கூறுவார் ரெட்டியார். அவர்தம் ஆராய்ச்சிக் குறிப்பினைக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***415.*** வன்தொடர் மொழியும்......கிளையொற் றாகும்.

மென்தொடர்மொழி வல்லொற்றை இறுதியிற் கொண்ட கிளைப்பெயராயின், அவற்றின் மெல்லொற்றெல்லாம் கிளை வல்லொற்று ஆகும். கிளை என்றது இரட்டிக்கப்பட்ட ஒன்றற்குச் 'சினை' பொருளாகவும், மற்றதற்கு இனம் பொருளாகவும் கொள்ளப்பட்டது. ஈண்டுக் 'கிளை' என்பதற்குக் கிளைப்பெயர் எனக்கொண்ட காரணம், ஒற்றுநிலை திரியாது (419) என்ற சூத்திரத்தில் 'அக்கிளை மொழியும்' என்ற தொடராகும்.

இச்சூத்திரம் வருமொழி முதலில் வல்லெழுத்து வந்து இடையிற் சாரியை வாராதவிடத்தே மெல்லொற்றின் திரிபைக் கூறுகின்றமையானும், பாம்பிற் பாரி போன்ற இடங்களில் இடையில் இன்சாரியை வந்திருத்தலானும் உரையாளர்தம் கொள்கை ஆராயற்பாலது.

('எல்லாம்' என்ற மிகையானே 'பரம்பிற் பாரி' என்றாற் போல்வன மெல்லொற்றுத் திரியாமையுங் கொள்க - என்றனர் உரைகாரர்.)

**415.** [சாத்திரியார் குறிப்புரையுள், 'கிளை' என்பதன் விளக்கம்: கிளை - கிளை வல்லொற்று. அது **'குரங்கு'** போன்ற சொற்களுக்கு இறுதிச் சினை (யெழுத்தாகிய) ககரம் போன்ற வல்லொற்று; 'எண்கு' போன்ற சொற்களுக்கு இடையே யுள்ள மெல்லொற்றுக்கு இனமாகிய டகரம் போன்ற வல்லொற்று.

நிலைமொழி யீற்றின்கண் சாரியை புணரின் அது வருமொழியொடு புணர்வழி, அம்மென்தொடர்க் குற்றுகர மொழியுள் மெல்லெழுத்துத் திரிபுறாது என்பதனை 'எல்லாம்' என்ற மிகையானே உரையாளர் கொண்டனர். சாரியைப்பேறு நிகழுமிடத்தே மெல்லொற்று வலித்தல் செய்யாது என்னும் அரிய செய்தியை உரையாளர் இலேசாற் புலப்படுத்தியுள்ளமை மிகவும் பொருந்துமென்க.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*414.* வன்தொடர் மொழியும் மென்தொடர் மொழியும்

..... ..... ......

**வல்லொற் றிறுதி கிளையொற் றாகும்.**

உரையாளர் இறுதி வல்லொற்று என்றும், கிளை வல்லொற்று என்றும் இரண்டாகக் கொண்டு பொருள் கூறுதல் வேண்டுவதில்லை; கிளையொற்று ஆகும் என்றலே சாலுமன்றே? சூத்திரத்தில் 'வல்லொற் றிறுதி' என்பது மிகையாகுமே. இனி, இவ்வாசிரியர் க ச ட த ப ற-க்களுக்கு ங ஞ ண ந ம ன-க்களை இனவெழுத்து என்று யாண்டும் கூறிற்றிலர்; அவ்வெழுத்து மிகுதலையே 'இனவொற்று மிகும்' என்று கூறியுள்ளார்.

> நூறென் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு
> ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே *(472)*

என்றவிடத்தில், இனவொற்று என்றது அவ்வல்லொற்றி னையே (ற்) குறித்து வருதல் நன்கறியப்படும்.

'ஆயிரு தொடடைக்கும் கிளையெழுத் துரிய' என்னும் செய்யுளியல் சூத்திரத்தில் *(90)* 'கிளையெழுத்து' என்பதற்கு இளம்பூரணர் வருக்கவெழுத்து என்று உரை கூறினார். 'கிளையொற்று' என்பது அவ்வருக்க எழுத்தாதல் அறியப்படும்.

மெல்லொற்றுக் கிளையொற்றாகும் என்பதற்கு, மெல்லொற்றுத்தொடர்மொழிக்கண் நின்ற மெல்லொற் றெல்லாம் இறுதியில் நிற்கும் வல்லொற்றின் இனவொற்று ஆகும் என்பது பொருள். அஃதாவது இறுதியில் நிற்கும் வல்லொற்றாய்த் திரியும் என்பதாம்.

(உ-ம்.) குரங்கு+கால்=குரக்குக்கால் -
மெல்லொற்று ஈற்று வல்லொற்றாய்த் திரிந்தது

நஞ்சு+பொய்கை=நச்சுப்பொய்கை- ,,
ஓர்யாண்டு+குழவி=ஓர்யாட்டைக்குழவி- ,,
மருந்து+பை=மருத்துப்பை- ,,
அம்பு+நுனை=அப்புநுனை- ,,
கன்று+திரள்=கற்றுத்திரள்- ,,

இவற்றால், எட்குக்குட்டி எற்புக்காடு என்பன போல்பவை இச்சூத்திரத்தான் அமையாமை தெளிவாகும். என்னையெனின், எட்கு என்பதில் டகாரம் ஈற்று வல்லெழுத்து அன்று; எற்பு என்பதில் றகாரம் ஈற்று வல்லெழுத்து அன்று. இச்சூத்திரத்தின் நேர்பொருளான் எட்குக்குட்டி போல்வன அமையாமையின், உரையாளர், 'வல்லொற்று இறுதிக் கிளையொற்றாகும்' என்பதற்கு இறுதி வல்லொற்றும் கிளைவல்லொற்றுமாய் முடியும் என்று பொருள் கூறினர். இச்சூத்திரத்திற்கு அப்பொருள் நேரிதாகா மையின், எட்குக்குட்டி முதலியன தொல்காப்பியனார் கூறிய இலக்கணத்திற் பிறழ்ந்தனவாம்.

யாண்டு, கன்று என்பன போன்றவற்றிலுள்ள ணகர னகரங்கள் முறையே டகர றகரங்களாய்த் திரிந்தமைகண்டு, ணகர னகரங்கள் பிற வல்லெழுத்துக்களோடு கூடிநின்ற வழியும் அவ்வாறு திரியும் என்று கருதி, எட்குக்குட்டி - எற்புக் காடு- என்று பிற்காலத்தில் வழங்கினராவர். அவற்றை இந்நூலில் இச்சூத்திரத்தால் உரையாளர் அமைத்துள்ளனர்.

இனி, உரையாளர், உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கும் வரும் என்று கூறி, கொக்கின்கால் குரங்கின் கால்-என்பவற்றைக் காட்டினர். இப்பொருட்புணர்ச்சிக்கண் 'இன்'சாரியை வருதல் ஆசிரியர்க்குக் கருத்தாயின், 'எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும்' என எண்ணுப் பெயர்களுக்குச் சாரியைப்பேறு மாட்டெறிந்தாற்போல ஏனைப் பெயர் களுக்கும் உருபியலோடு மாட்டெறிவர். அவ்வாறு மாட்டெறியாமையானும், 'வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்' என்று இன்சாரியை பெறுவன

இரண்டு சொற்களை மட்டுமே கிளந்தோதினாராகலானும், இன்சாரியை வரின், 'அல்லது கிளப்பினும்...'(408) 'வல்லொற்றுத்தொடர்மொழி....'(409) 'தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி'(411) என்றெல்லாம் கூறிய சூத்திரங் களின் விதி அமையாதாக லானும் அவர்கள் உரைத்தது அமைதியின்று. கொக்குக்கால் குரங்குக்கால் என்றே வரும்.

**414.** [எட்குக்குட்டி எற்புக்காடு என்பன இச்சூத்திர விதியான் முடிக்கலாகாமையைக் குறிப்பிட்டார் இவ்வுரை காரர்; ணகர னகரங்கள் முறையே டகர றகரங்களாகத் திரிந்து வருதல் கண்டு, அவை பிறவல்லெழுத்துக்களோடு கூடி நின்றவிடத்தும் அவ்வாறு திரியும் எனக்கருதிய பிற்கால வழக்கே அது என்று துணிகிறார்.

உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கும் வருமென்று உரையாளர் குரங்கின் கால் - கொக்கின்கால் - என்பவற்றைக் காட்டியமை ஆசிரியர் கருத்தன்று என்று மறுத்தார் இவ்வுரையாளர்; இன்சாரியை பெறுவன வண்டும் பெண்டும் என்னும் இரண்டு பெயர்களே முதலாகச் சில ஏதுக் காட்டினார். 'குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்' (மர. 69) என்று ஆசிரியர் உடம்பொடு புணர்த்துச் சூத்திரித்துள்ளமை இவர் நோக்கிலர். அவ்வடிக்கண், ஈரெழுத்தொருமொழிக் குற்றுகரம் றகரம் இரட்டித்தவிடத்து இன்சாரியை பெற்றுள்ள மையும் அறியத்தக்கது. 'பூப்பின் புறப்பாடு' (கற்.46) என்ற உடம்பொடு புணர்ப்பு, வன்றொடர்க் குற்றுகர ஈறு இன்சாரியை பெறுதலை உணர்த்தும்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**414.** வன்தொடர் மொழியும்.....ஒற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி......கிளையொற் றாகும்.

இச்சூத்திரத்துள் முன் இரண்டடிகள் ஒரு சூத்திர மாகவும், பின் இரண்டடிகள் ஒரு சூத்திரமாகவும் இருத்தல் வேண்டும். உரையாளர்தம் வழக்கு நோக்கி ஒன்றாக வைத்து உரை கூறப்பட்டன.

பிறப்பு முறையான் ஒத்து வளிவகையான் வேறு படுதலின், வல்லினமும் மெல்லினமும் ஒன்று ஒன்றற்குக் கிளையாயின.

## இளம்பூரணம்

### *416. அவ்விரு தொடர்மொழிக்கண்ணும் மரப்பெயர் அம்முச் சாரியை பெறுதல்*

**மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை**

*இச்....எனின், அவ்விரண்டு ஈற்றிற்கும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்....ற்று.*

*(இ-ள்.)* வன்தொடரின்கண்ணும் மென்தொடரின் கண்ணும், மரப்பெயராகிய சொல்லிற்கு வரும் சாரியை அம்முச்சாரியை எ-று.

*(உ-ம்.)* தேக்கங்கோடு செதிள் தோல் பூ - எனவும், வேப்பங்கோடு செதிள் தோல் பூ - எனவும் வரும். *(10)*

## நச்சினார்க்கினியம்

### *415. குற்றுகர ஈற்று மரப்பெயர் அம்முச்சாரியை பெறுதல்*

**மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது, வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தலின்.

*(இ-ள்.)* மரப்பெயர்க்......சாரியை - குற்றியலுகர ஈற்று மரப்பெயர்க்கு வரும் சாரியை அம்முச்சாரியை எ-று.

*(உ-ம்.)* தேக்கங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

கமுகங்காய் தெங்கங்காய்[1] கீழ்கம்புல் கம்பம்புலம் பயற்றங்காய் என்றாற்போலும் புல்லினையும் மரமென

அடக்கி, மாறுகொளக் கூறல் எனத் தழீஇக்கொண்ட சிதைவு என்பதாம் இச்சூத்திரம் என்றுணர்க. (10)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*415.* 1. இளம்பூரணர் இவற்றை 'ஒற்றுநிலை திரியாது' *(418)* என்னும் சூத்திரத்து இலேசினாற் கொண்டார், கமுகு தெங்கு புறக்காழனவாகிய புல்லினமே என்பது பற்றி. பேராசிரியர் கருத்தினை நச்சினார்க்கினியர் தழுவினார்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*416.* மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை.

இச்சூத்திரம் வன்தொடர் மென்தொடராயிருக்கும் மரக்கிளவியைப் பற்றிக் கூறும் என்பது இளம்பூரணர் கொள்கை. எவ்வகைப்பட்ட குற்றுகரத் தொடரைப் பற்றியும் கூறும் என்பது நச்சினார்க்கினியர் கொள்கை.

[ஈண்டு மரம் புல்லிற்கும் உபலக்கணமாம் என்பது சாத்திரியார் கருத்து.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*415.* மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை.

இந்நூற்பா, மரமல்லனவற்றை மாறுகொளக் கூறல் எனத் தழீஇக் கொண்ட சிதைவு என்பர் பேராசிரியர்.

**இளம்பூரணம்**

***417.* மென்தொடர் வன்தொடராகத் திரியா**
***மரப்பெயரும் உண்மை***

மெல்லொற்று வலியா மரப்பெயரும் உளவே.

இச்....எனின், மென்தொடர்மொழிக்கு எய்தியது ஒருமருங்கு மறுத்....ற்று.

*(இ-ள்.) மெல்லொற்று வல்லொற்றாய்த் திரியாது முடியும் மரப்பெயரும் உள எ-று.*

*(உ-ம்.)* குருந்தங் கோடு செதிள் தோல் பூ - எனவும், புன்கங்கோடு செதிள் தோல் பூ - எனவும் வரும்.

மற்று இது, நிலைமொழித்தொழிலை நிலைமொழித் தொழில் விலக்கும்[1] ஆதலின், சாரியை வகுப்பவே முடியும் பிற எனின், இது நிலைமொழியின் உட்டொழில்[2] ஆகலின், அவ்வாறு விலக்குண்ணாது என்பது கருத்து. *(11)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**4 / 7.** 1) எடுத்துக்காட்டாக, குறியதன் முன்னர் ஆகாரக் கிளவியாகிய 'நிலா' தான் பெற்ற அகரச்சாரியையினை (227), 'அத்து' வகுப்பவே (229) வீழ்த்தது.

ஈம் - கம் - என்பன தாம் பெற்று நின்ற உகரச்சாரியையினை (329) 'அக்கு' வருப்பவே (330) வீழ்த்தன.

2) நிலைமொழிக்கு 'அம்' சாரியை வகுப்பவே, அதன் மெல்லொற்று வலித்தல் செய்யாது இயல்பாக நிற்றல் வேண்டும் என்று கொள்ளுதல் பொருந்தாது என்றார். சாரியைப் பேறு இத்திரிபினை விலக்காது. என்னையெனில், நிலைமொழிச் சாரியைப்பேறு முன்னெய்தி நின்ற நிலைமொழிச் சாரியையை விலக்குதலை 218 219ஆம் சூத்திரங்களிலும், 226 228ஆம் சூத்திரங்களிலும், அவ்வாறு விலக்காமையை 269 270ஆம் சூத்திரங்களிலும் காணலாம். சாரியை சொல்லிறுதிக்கண் புறத்துறுப்பாய் இயைதலின் அது சொல்லின் உட்டொழிலனது. சொல்லின் புறத்தே இயையும் சாரியைப்பேற்றால் முன்னரும் புறத்தே இயைந்திருந்த சாரியை பெரும்பான்மையும் விலக்குண்ணும்; சிறுபான்மை விலக்குண்ணாமையும் கூடும்.

ஆயின் நிலைமொழித் தொழிலாம் சாரியைப்பேறு, நிலைமொழிக்கண் இடையேயுள்ள மெல்லொற்று வலித்தலை விலக்குதல் இயலாது, அஃது அச்சொல்லின் அகத்தே நிகழும் உட்டொழிலாகலின் என்றார் உரையாசிரியர்; ஆதலின், சாரியைப்பேறு விதித்தமையால் நிலைமொழியாம் மரப்பெயர் மெல்லொற்று வலியாது இயல்பாயிற்று என்றல் பொருந்தாது என்பதை விளக்குகிறார்.

## நச்சினார்க்கினியம்

### *416. சில மரப்பெயரது மெல்லொற்று வலியாமை*

**மெல்லெழுத்து வலியா மரப்பெயரும் உளவே.**

இது மென்தொடர்மொழிக்கு எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

*(இ-ள்.)* மெல்லொற்று....உள - மெல்லொற்று வல்லொற்றாகத் திரியாது மெல்லொற்றாய் முடியும் மரப்பெயரும் உள எ-று.

*(உ-ம்.)* புன்கங்கோடு செதிள் தோல் பூ எனவும், குருந்தங்கோடு செதிள் தோல் பூ எனவும் வரும்.

வலியா மரப்பெயரும் உள எனவே, வலிக்கும் மரப்பெயருமுள என்று கொள்க.

வேப்பங்கோடு கடப்பங்காய், ஈச்சங் குலை[1] என வரும். *(11)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***416.*** 1. ஈந்து ஈஞ்சு எனவரும். ஈஞ்சு + குலை= ஈச்சங்குலை. புல்லினத்தையும் தழுவியுரைத்தார் நச்சினார்க்கினியர்.

## இளம்பூரணம்

### *418. ஈரெழுத்துமொழியும் வன்தொடர்மொழியும் அம்முச்சாரியையும் பெறுதல்*

**ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்**
**அம்இடை வருதற்கு உரியவும் உளவே**
**அம்மரபு ஒழுகும் மொழிவயி னான.**

*இச்....எனின், ஈரெழுத்தொருமொழிக்கும் வன்தொடர் மொழிக்கும் எய்தாதது எய்துவித்தது.*

*(இ-ள்.) ஈரெழுத்தொருமொழிக் குற்றியலுகரமும், வன்தொடர்மொழிக் குற்றியலுகரமும், முன் முடித்துப் போந்த முடிபுகள் அன்றி, அம்முச்சாரியை இடைவந்து முடிதற்கு உரியனவும் உள; யாண்டு எனின், அவ்விலக்கணம் நடக்கும் மொழியிடத்து.*

*(உ-ம்.) ஏறங்கோள்[1] வட்டம்போர்[2] - எனவரும் எ-று.*

*உள என்றதனான், தெங்கங்காய் பயற்றங்காய்[3] - என வன்தொடர் அல்லனவற்றிற்கு அம்முப்பேறு கொள்க.*

*'அம்மரபொழுகும்' என்றதனான், அரசக்கன்னி[4] முரசக்கடிப்பு - என அக்குப்பேறும் கொள்க.*

*இன்னும் அதனானே, இருட்டத்துக் கொண்டான் - என்னும் அத்துப்பேறும் கொள்க.*

*இன்னும் அதனானே, மயிலாப்பிற் கொற்றன்5-பரம்பிற் பாரி - என இன்பேறும் கொள்க.*

*இன்னும் அதனானே, கரியதன்கோடு - என அன்பேறும் கொள்க.* *(12)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*418.* 1) 'ஏறங்கோள் முழங்க ஆயர் எடுத்துக்கொண்டு ஏகி மூதூர்' (சீவக. 489) ஏறுகோட்பறை

2) வட்டுக்கொண்டு சூதாட்டத்தால் பொருதல்.

3) மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை (416) என்னும் சூத்திரத்தான், புல்லினையும் மரமெனத் தழீஇக் கொண்ட மாறுகொளக் கூறல் என்னும் சிதைவால் தெங்கு பயறு என்பனவும் அம்முப் பெற்றன.

4) அரசு+அக்கு+கன்னி > அரசு+அ+கன்னி = அரசக் கன்னி (சூ.129)

5) மயிலாப்பூரின் தேவாரத் திருப்பெயர் மயிலாப்பு என்பது. இன்சாரியை னகரம் றகரமாதல் 124 சூத்திர மிகையாற் கொள்ளப்பட்டது.

**நச்சினார்க்கினியம்**

### *417. அம்முச்சாரியை பெறும் குற்றுகர ஈறுகள்*

**ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்**
**அம்இடை வரற்கும் உரியவை உளவே**
**அம்மரபுஒழுகும் மொழிவயி னான.**

இஃது ஈரெழுத்தொரு மொழிக்கும் வன்தொடர் மொழிக்கும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, முன்னர் எய்தியதனை விலக்கி அம்மு வருத்தலின்.

(இ-ள்.) ஈரெழுத்து.....தொடரும் - ஈரெழுத்தொரு மொழிக்குற்றியலுகர ஈறும் வன்தொடர்மொழிக் குற்றிய லுகர ஈறும்; அம்.....உள - முன் முடித்துப்போந்த முடிபு களன்றி, அம்முச்சாரியை இடையே வந்து முடிதற்கு உரியனவும் உள; அம்மரபு....வயினான - யாண்டெனின், அவ்விலக்கணம் நடக்கும் மொழியிடத்து எ-று.

*(உ-ம்.)* ஏறங்கோள் *(சீவக. 491)*[1] சூதம்போர்[3], வட்டம்போர்[2] புற்றம்பழஞ்சோறு[4] என வரும்.

உம்மை எதிர்மறை ஆகலின், அம்முப் பெறாதன நாகுகால் *(412)* கொக்குக்கால் *(414)* என முன்னர்க் காட்டினவே யாம்.

'அம்மரபொழுகும்' என்றதனான், அரசக்கன்னி முரசக் கடிப்பு என அக்கும் வல்லெழுத்தும் கொடுத்தும், அரச வாழ்க்கை முரச வாழ்க்கை என அக்குக் கொடுத்தும் முடிக்க.

இன்னும் அதனானே, இருட்டத்துக்கொண்டான் விளக்கத்துக்கொண்டான் என அத்தும் வல்லெழுத்தும் கொடுத்தும், மயிலாப்பிற்[5] கொற்றன் பரம்பிற் பாரி என இன் கொடுத்தும், கரியதன்கோடு நெடியதன்கோடு என அன் கொடுத்தும் முடிக்க. *(12)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*1, 2.* இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

*3.* சூதாட்டதாற் பொரும் போர்.

*4.* புற்றின்கண் நெடுநாட்பட வுள்ள கறையான்திரள் (பெரும். 277 நச். உரை)

*5.* மயிலாப்பூர் 'மயிலாப்பு' எனப் பண்டு வழங்கப் பட்டது.

## இளம்பூரணம்

### *419. மெல்லொற்று வலியாது அக்குப் பெற்று வருதலும் உண்மை*

**ஒற்றுநிலை திரியாது அக்கொடு வரூஉம்**
**அக்கிளை மொழியும் உளஎன மொழிப.**

இச்....எனின், மென்தொடர்மொழியுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்குதலும் எய்தியதன்மேல் சிறப்புவிதியும் கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* ஒற்று முன் நின்ற நிலை திரியாது, அக்குச் சாரியையொடு வரும் அக்கிளையெழுத்து மொழியும்[1] உள என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

*(உ-ம்.)* குன்றக்கூகை மன்றப் பெண்ணை - எனவரும்.

உம்மையான், கொங்கத்துழவு வங்கத்து வாணிகம் - என அத்துப்பெற்றன.

'நிலை' என்றதனான், ஒற்றுநிலை திரியா அதிகாரத்துக் கண் இயைபு வல்லெழுத்து விலக்குக.

'அக்கிளைமொழி' என்றதனான், பார்ப்பனக் கன்னி பார்ப்பனச்சேரி -என, அன்னும் அக்கும் வந்தன கொள்க.[2] *(13)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**419.** 1) குடிப்பெயராயிருக்கும் குற்றுகர ஈற்றுச் சொற்கள் என்று பொருள் கொள்ள வேண்டும் என்பர் ரெட்டியார்.

2) பார்ப்பு + அன் + அக்கு + கன்னி = பார்ப்பனக் கன்னி *(139, 129)*

## நச்சினார்க்கினியம்

### *418. அக்குச் சாரியை பெறும் குற்றுகர ஈறு*

**ஒற்றுநிலை திரியாது அக்கொடு வரூஉம்**
**அக்கிளை மொழியும் உளஎன மொழிப.**

இது மென்தொடர்மொழியுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருக்கின்றது.

(இ-ள்.) ஒற்றுநிலை திரியாது அக்கொடும் வரூஉம் அக்கிளை மொழி உள என மொழிப - ஒற்று முன்நின்ற நிலை திரியாது அக்குச்சாரியையோடும் பிற சாரியையோடும் வரும் அக்கிளையான சொற்கள் உள என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

இதற்கு உம்மையை முன்னர் மாறுக.

(உ-ம்.) குன்றக்கூகை, மன்றப்பெண்ணை என வரும்.

உம்மையான், கொங்கத்துழவு, வங்கத்துவாணிகம் என அத்தும் பெற்றன.

'நிலை' என்றதனான், ஒற்றுநிலை திரியா அதிகாரத்துக் கண் வரும் சாரியைக்கு இயைபுவல்லெழுத்து (414) வீழ்க்க அக்கிளை என்றார், இரண்டு சாரியை தொடர்ந்து முடிவனவும் உள என்றற்கு.

பார்ப்பனக்குழவி சேரி தோட்டம் பிள்ளை என அன்னும் அக்கும் வந்தன. இவற்றிற்கு உடைமை விரிக்க பார்ப்பா னாகிய குழவி என்றால் ஈண்டு முடியாது என்றுணர்க. பார்ப்பனமகன் பார்ப்பனவனிதை என்பனவும் பாப்பான் சாதி உணர்த்தின. (13)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

418. 1. மன்று+அக்கு+பெண்ணை > மன்று+அ+பெண்ணை-மன்றப்பெண்ணை 128, 105ஆம் சூத்திரவிதியான் முடித்து இயைபு வல்லெழுத்துக் கொடுக்க.

2. கொங்கு என்பது போல 'வங்கு' எனக்கொண்டு செய்கை செய்து முடிக்க. வருமுயிர் ஏறக் குற்றுகரம் இடங்கொடுத்தல் 105ஆம் சூத்திரவிதி.

3. 416ஆம் சூத்திரத்தாற் கொண்ட புன்கு குருந்து முதலிய மரப்பெயர்கள் இன்சாரியை பெற்றவழி, 414ஆம் சூத்திர விதியான் வரும் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. புன்கின் கோடு செதிள் தோல் பூ என வரும்.

4. பார்ப்பு + அன் + அக்கு + குழவி > பார்ப்பன் + அ + குழவி = பார்ப்பனக் குழவி. குழவியும் பிள்ளையும் வருமொழியாகியவழி பார்ப்பனுடைய என்று ஆறாம் வேற்றுமையது உடைமைப்பொருள் விரிக்க, இவை உயர்திணைப் பொருளவாதலின்.

5. பார்ப்பான் ஆகிய குழவி எனின், நிலைமொழி குற்றுகரவீறு அன்மையின் இவ்வியற்கண் முடியாது.

6. மகன், வனிதை இவை உயர்திணைப் பெயராதலின், நிலைமொழியும் பார்ப்பா ர் என உயர்திணைப் பெயராதல் வேண்டும், இருபெயரொட்டு ஆதலின். ஆகலின் நிலைமொழியீறு குற்றுகரவீறு அன்மை காண்க.

குழவி, பிள்ளை என்பன உயர்திணைப் பொருளுணர்த்தும் அஃறிணைச் சொல்லாதலின், பார்ப்பு என்னும் நிலைமொழியொடு புணர்ந்து இவ்வியற்கண் முடிக்கப்படுவன ஆயின என்க.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**418. ஒற்றுநிலை திரியாது......உளஎன மொழிப.**

ஈண்டுக் கிளைமொழி என்றவற்றிற்கு உரையாளர் குன்று - மன்று என்னும் சொற்களைக் காட்டியது, அவை கிளைமொழிகள் அன்மையின் பொருந்துவதன்று. மேல், ணகரவீற்றுக் கிளைப்பெயர்க்கு உமண் என்னும் சொல்லையும் னகரவீற்றுக் கிளைப்பெயர்க்கு எயின் என்னும் சொல்லையும் காட்டினார்கள் ஆகலின், ஈண்டும் அத்தகைய கிளைப்பெயர்களையே உதாரணம் காட்டுதல் அமையும். குடிப்பெயராக இருக்கும் குற்றியலுகரவீற்றுச் சொற்களே ஈண்டைக்கு உதாரணமாகும்.

'அக்கிளை மொழியும் உள வென மொழிப' என்றத னான், அவையும் சிறுவரவினவாதல் அறியப்படும். அவை இன்னவை எனத் தெரியவில்லை.

***418.*** [கிளைமொழி என்பதற்கு ஒருசார்ச் சொற்கள் என்று உரையாசிரியன்மார் பொருள்கொண்டனராகத் தெரிகிறது. வன்தொடர்க்கு இனமாகிய மென்தொடர்க் குற்றுகரஈற்றுச் சொற்கள் எனப் பாலசுந்தரம் கொண்ட பொருள் பெரிதும் ஏற்புடையது. 'கிளைப்பெயர்' என ஆசிரியர் ஓதாமையின், ரெட்டியார் கருத்துப் பொருந்தாது என மறுப்பார் அவர்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***418.*** **ஒற்றுநிலை திரியாது அக்கொடும் வரூஉம்**
**அக்கிளை மொழியும் உளவென மொழிப.**

*(இ-ள்.)* மெல்லொற்று வல்லொற்றாகத் திரியாமல் அக்குச்சாரியையொடும் பிற சாரியையொடும் வரும், வன்தொடர்மொழிக்குக் கிளையாகிய மென்தொடர் மொழிகளும் உளவெனக் கூறுவர் புலவர். 'அக்கொடும்' என்பதே பாடம் என்பது உரையாசிரியர் உரையான் பெறப்பட்டது.

'அக்கொடும்' என்னும் உம்மையை அதனொடு பிறவும் என்னும் பொருளதாக்கி, அக்கொடு அன்சாரியை உடன் பெறுதலும் கொள்க.

*(எ-டு.)* பார்ப்பனச்சேரி தோட்டம் என வரும்.

வடுகஅரசர் கடம்பமன்னர் வேடக்குறிச்சி எனப் பிறபெயர்களும் சிறுபான்மை அக்குப்பெறும் என்பர் உரையாளர். அவை வடுகருடைய அரசர் - கடம்பருடைய மன்னர்-வேடரது குறிச்சி - என உடைமைப்பொருள்பட நிற்றலின், ஆறனுருபின் குறையாகிய அகரம் பெற்றது எனல் நேரிதென்க.

'கிளைமொழி' என்றதனன் கிளை (உறவு)ப் பெயர் களையே கொள்ளவேண்டும் என்பார் வேங்கடராகுலு ரெட்டியார். ஆசிரியர் கருத்து அதுவாயின், 'கிளைமொழி' என்னாது 'கிளைப்பெயர்' என்றே ஓதியிருப்பார் என்க.

**418.** ['அக்கிளை மொழியும்' என்னும் உம்மையை 'அக்கொடு' என்பதனொடும் கூட்டியுரைத்தார் நச்சினார்க் கினியர். இவ்வுரைகாரர்தம் உரையுள், 'மென்தொடர் மொழிகளும்' என வரும் உம்மை நின்று வற்றுகிறது. மேலைச் சூத்திரத்து (417) 'வல்லொற்றுத் தொடரும்' என்பதனை அஃது எச்சமாகத் தழுவுதல் இயலாதன்றே ? நச்சினார்க்கினியர் உரைத்தவாறே உம்மையை மாறுதல் செய்தலே பொருந்தும்.]

### இளம்பூரணம்

## *420. குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர் அன்சாரியை பெற்றுப் புணர்தல்*

**எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும்.**

இச்.....எனின், குற்றியலுகர ஈற்று எண்ணுப் பெயரொடு பொருட்பெயர் முடிக்கின்றது.

*(இ-ள்.)* எண்ணுப்பெயராகிய சொற்கள், உருபு புணர்ச்சியின் *(199)* இயல்பின்கண்ணே நின்று, அன் பெற்று முடியும்[1].

*(உ-ம்.)* ஒன்றன் காயம் இரண்டன்காயம் சுக்கு தோரை பயறு - என வரும். *(14)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**420.** *1)* 'எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே'*(விளி. 27)* என உடம்பொடு புணர்த்தலான் இன் சாரியையும் உடன் பட்டார் ஆசிரியர் எனக்கொள்ளலாம். நச்சினார்க்கினியர் இன்சாரியையும் கொண்டார்.

### நச்சினார்க்கினியம்

## 419. குற்றுகரஈற்று எண்ணுப்பெயர் அன்சாரியை பெறுமாறு

**எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும்.**

இது குற்றுகர ஈற்று எண்ணுப்பெயரொடு பொருட் பெயர் முடிக்கின்றது.

*(இ-ள்.)* எண்ணுப்....நிலையும் - எண்ணுப்பெயராகிய சொற்கள் பொருட்பெயரொடு புணருமிடத்து, உருபு புணர்ச்சியின் இயல்பின்கண்ணே நின்று அன் பெற்றுப் புணரும் எ-று.

*(உ-ம்.)* ஒன்றன் காயம் இரண்டன்காயம் சுக்கு தோரை பயறு என ஒட்டுக. ஒன்றனாற் கொண்ட காயம் என விரியும்.

வருமொழி வரையாது கூறினமையின், இயல்பு கணத்துக்கண்ணும் கொள்க.

ஒன்றன் ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை என வரும்.

மேலைச் சூத்திரத்து நிலை என்றதனான் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. *(14)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***419.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

### இளம்பூரணம்

## 421. வண்டும் பெண்டும் இன்சாரியை பெறுதல்

**வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்.**

இச்....எனின், மென்தொடர்மொழியுள் சிலவற்றிற்குப் பிற முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) வண்டு என்னும் சொல்லும், பெண்டு என்னும் சொல்லும் இன்சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

(உ-ம்.) வண்டின் கால் பெண்டின் கால்-என வரும். (15)

**நச்சினார்க்கினியம்**

### 420. வண்டு, பெண்டு - இவற்றின் சாரியைப் பேறு

**வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்.**

இது மென்தொடர்மொழியுள் சிலவற்றிற்குப் பிற முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) வண்டும்.....சிவணும் - வண்டு என்னும் சொல்லும் பெண்டு என்னும் சொல்லும் இன்சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

(உ-ம்.) வண்டின்கால் பெண்டின்கால் என வரும். இதற்கு முற்கூறிய இலேசினான் வல்லெழுத்து வீழ்க்க. (15)

**இளம்பூரணம்**

### 422. 'பெண்டு' அன்னும் பெறுதல்

**[1]பெண்டுஎன் கிளவிக்கு அன்னும் வரையார்.**

இச்...எனின், மேற்கூறிவற்றுள் ஒன்றற்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி கூறு...ற்று.

(இ-ள்.) பெண்டு என் சொல்லிற்கு இன்னே யன்றி, அன்சாரியையும் வரையார் எ-று.

(உ-ம்.) பெண்டன்கை - என வரும். (16)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*422.* 1) 'அவற்றுள்' என்ற தனிச்சொல் சூத்திரத்தில் இடம்பெற்றிருக்கக் கூடும்.

## நச்சினார்க்கினியம்

### 421. 'பெண்டு' அன்னும் பெறுதல்

[1]பெண்டுஎன் கிளவிக்கு அன்னும் வரையார்.

இது மேற்கூறியவற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) பெண்டு....வரையார் - பெண்டு என்னும் சொல்லிற்கு இன்னேயன்றி அன்சாரியை வருதலையும் நீக்கார் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) பெண்டன்கை செவி தலை புறம் என வரும். (16)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*421.* 1. 'அவற்றுள்' என்ற தனிச்சொல் இடம் பெற்றிருக் கூடும்.

## இளம்பூரணம்

### 423. யாதும் அஃது முதலாய சுட்டுப்பெயர் மூன்றும் அன்னொடு சிவணுதல்

யாது என் இறுதியும் சுட்டுமுதல் ஆகிய
ஆய்த இறுதியும் உருபுஇயல் நிலையும்.

இச்....எனின், ஈரெழுத்தொருமொழியுள் ஒன்றற்கும், சுட்டு முதல் ஆய்தத்தொடர்மொழிக்கும் வேறு முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) யாது என்னும் ஈறும், சுட்டெழுத்து முதலாகிய ஆய்தத்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும்[1], உருபு புணர்ச்சியின் இயல்பின்கண்ணே நின்று, அன்பெற்றுச் சுட்டு முதல் மொழிகள் ஆய்தம் கெட்டு முடியும் எ-று.

(உ-ம்.) யாதன்கோடு - அதன்கோடு இதன்கோடு உதன்கோடு - என வரும். (17)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*423.* 1) 201ஆம் சூத்திர விதி.

### நச்சினார்க்கினியம்

## *422. யாது, சுட்டுமுதல் ஆய்தத்தொடர்க் குற்றுகர ஈறுகளின் முடிபு*

**யாதுஎன் இறுதியும் சுட்டுமுதல் ஆகிய**
**ஆய்த இறுதியும்[1] உருபியல் நிலையும்.**

இஃது ஈரெழுத்தொரு மொழிக் குற்றியலுகரத்துள் ஒன்றற்கும் சுட்டு முதலாகிய ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகரத்திற்கும் வேறு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) யாது....இறுதியும் - யாது என்னும் ஈறும், சுட்டெழுத்து முதலாகிய ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும்; உருபியல் நிலையும் - உருபுபுணர்ச்சியின் இயல்பின் கண்ணே நின்று, அன்பெற்றுச் சுட்டு முதல் இறுதி ஆய்தம் கெட்டு முடியும் (200) எ-று.

(உ-ம்.) யாதன்கோடு, அதன்கோடு இதன்கோடு உதன் கோடு செவி தலை புறம் என வரும்.[2]

ஆய்தம் கெடா முன்னே அன்னின் அகரத்தைக் குற்றுகரத்தின்மேல் ஏற்றுக, ஆய்தம் கெட்டால் அது முற்றுகரமாய் நிற்றலின்[3]. (17)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***422.*** *1.* ஈற்றயல் எழுத்தையும் ஆசிரியர் ஈற்றெழுத்தாக ஓதுவார் என்பதனை, சுட்டுமுதல் ஆய்த இறுதி என்ற தொடரால் புலப்படுத்துவார் பிரயோகவிவேக நூலார் உரையின்கண் (கா. 24)

2. நிலைமொழி யீற்றுக் குற்றுகரம் கெடாது நின்று வருமுயிர் ஏற இடங்கொடுத்தது.

அஃது + அன் + கோடு > அஃதன் + கோடு > = அதன் கோடு. 200, 105ஆம் சூத்திரவிதிகளான் முடிக்க.

**இளம்பூரணம்**

## *424. சுட்டுமுதல் உகரம் அல்வழிக்கண் இடை ஆய்தம் கெடாமை*

**முன்உயிர் வருமிடத்து ஆய்தப் புள்ளி**
**மன்னல் வேண்டும் அல்வழி யான.**

இச்.....எனின், மேற்கூறியவற்றுள், சுட்டு முதல் ஈற்று உகரத்திற்கு ஒருவழி அல்வழி முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அவற்றுள் சுட்டு முதல் ஆய்தத்தொடர்மொழி உகரஈறு, தன்முன்னே உயிர் வருமிடத்து, ஆய்தப்புள்ளி முன்பு போலக் கெடாது நிலைபெற்று முடிதல் வேண்டும் அல்வழிக்கண் எ-று.

(உ-ம்.) அஃதடை இஃதடை உஃதடை ஆடை இலை என ஒட்டுக.

முன் என்றதனான், வேற்றுமைக்கண்ணும் உயிர் முதல் மொழி வந்தவிடத்து, அஃதடை, அஃதாட்டம்[1] - என ஆய்தம் கெடாமை கொள்க. (18)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***424.*** 1) அஃதடைவு, அஃதொட்டம் என நச்சினார்க்கினியத்தில் காணப்படுமாறே ஈண்டும் அமைதல் கூடும். அதனையடைதல் - அதனை யொட்டுதல் (பந்தயப் பொருளாக வைத்தல்) - எனப் பொருள் கூறுக.

**நச்சினார்க்கினியம்**

## *423. உயிர் வருவழி, சுட்டுமுதல் ஆய்தத்தொடர்க் குற்றுகரத்தின் அல்வழிமுடிபு*

**முன்உயிர் வரும்இடத்து ஆய்தப் புள்ளி**
**மன்னல் வேண்டும் அல்வழி யான.**

இது முற்கூறியவற்றுள் சுட்டுமுதலாகிய ஆய்த இறுதிக்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) முன்உயிர்....வேண்டும் - சுட்டு முதலாகிய ஆய்தத் தொடர்மொழிக் குற்றுகர ஈற்றின் முன்னே உயிர் முதல்மொழி வருமிடத்து, ஆய்தவொற்று முன்போலக் கெடாது, நிலைபெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன்; அல்வழியான - அல்வழிக்கண் எ-று.

(உ-ம்.) அஃது இஃது உஃது என நிறுத்தி, அடை ஆடை இலை ஈயம் உரம் ஊர்தி எழு ஏணி ஐயம் ஒடுக்கம் ஓக்கம் ஔவியம் - என ஒட்டுக.

'முன்' என்றதனான், வேற்றுமைக்கண்ணும் இவ்விதி கொள்க. அஃதடைவு அஃதொட்டம்[1] என ஒட்டுக. இவற்றிற்கு இரண்டாமுருபு விரிக்க.

இன்னும் இதனானே, ஏனை யிலக்கணம் முடியுமாறு அறிந்து முடிக்க. (18)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***423.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

### *425. ஏனைக் கணம் வருவழி ஆய்தம் கெடுதல்*

**ஏனைமுன் வரினே தான்நிலை யின்றே.**

இச்....எனின், மேலனவற்றிற்குப் பிறகணத்தொடு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* அச்சுட்டு முதல் உகர ஈறு, உயிர்க்கணம் ஒழிந்த பிறகணங்கள் முன்வரின், அவ்வாய்தம்தான் நிலையின்றி முடியும் எ-று.

*(உ-ம்.)* அது கடிது இது கடிது உது கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது - என வரும். *(19)*

## நச்சினார்க்கினியம்

### *424. ஏனைக்கணம் வருவழி அதன்முடிபு*

**ஏனைமுன் வரினே தான்நிலை யின்றே.**

இது மேலவற்றிற்கும் பிறகணத்தோடு அல்வழி முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஏனை.....நிலையின்று - முற்கூறிய ஈறுகளின்[1] முன்னர் உயிர்க்கணம் அல்லன வருமாயின், அவ்வாய்தம் கெட்டு முடியும் எ-று.

*(உ-ம்.)* அது கடிது இது கடிது உதுகடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது[2] வலிது என ஒட்டுக. *(19)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***424.*** 1. ஆய்தத் தொடர்மொழிக் குற்றுகரவீறு ஒன்றேயெனினும், சுட்டிடைச் சொல் மூன்றாதலின் அம் முதல் நோக்கி ஈறுகள் என்றார்.

2. அஃது + யாது = அஃதி யாது எனக் குற்றியலிகரம் தோன்றியவாறு காண்க.

## இளம்பூரணம்

### *426. ஆறு ஈற்றுக் குற்றியலுகரத்திற்கும் அல்வழி முடிபு*

**அல்லது கிளப்பின் எல்லா மொழியும்**
**சொல்லிய பண்பின் இயற்கை ஆகும்.**

இச்....எனின், ஆறு ஈற்றுக் குற்றியலுகரத்திற்கும் அல்வழி முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* அல்வழியைச் சொல்லுமிடத்து, ஆறீற்றுக் குற்றியலுகரமும், மேற்சொல்லிய பண்பினையுடைய இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* நாகுகடிது, வரகுகடிது, தெள்குகடிது, எஃகு கடிது, குரங்குகடிது - சிறிது தீது பெரிது என வரும்.

'எல்லாமொழியும்' என்றதனான், வினைச்சொல்லும் வினைக்குறிப்புச் சொல்லும் இயல்பாய் முடிந்தன கொள்க.

*(உ-ம்.)* கிடந்தது குதிரை, கரிது குதிரை - என வரும்.

'சொல்லிய' என்றதனான், இருபெயரொட்டுப் பண்புத் தொகை முடிபும் கொள்க.

*(உ-ம்.)* கரட்டுக்கானம்[1] குருட்டெருது[2] - என வரும்.

'பண்பின்' என்றதனான், ஐ என்னும் சாரியை பெற்று வரும் அல்வழி முடிபும் கொள்க.

*(உ-ம்.)* அன்றைக் கூத்தர் - பண்டைச் சான்றோர் - ஓர் யாட்டை யானை3 - மற்றையானை - என வரும். *(20)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***426.*** *1)* கரட்டுநிலமாகிய கானம்.
*2)* குருடாகிய எருது
*3)* ஓர் யாண்டைய யானை

**நச்சினார்க்கினியம்**

## *425. குற்றுகர ஈறுகள் அல்வழிக்கண் முடியுமாறு*

**அல்லது கிளப்பின் எல்லா மொழியும்**
**சொல்லிய பண்பின் இயற்கை ஆகும்.**

இஃது ஆறு ஈற்றுக் குற்றுகரத்திற்கும் அல்வழிமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* அல்லது.....ஆகும் - அல்வழியைச் சொல்லு மிடத்து, ஆறு ஈற்றுக் குற்றுகரமும், மேல் ஆசிரியன் கூறிய குணத்தையுடைய இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* நாகுகடிது - வரகுகடிது - தெள்கு கடிது - எஃகு கடிது - குரங்கு கடிது : சிறிது தீது பெரிது என வரும்.

ஏனைக்கணத்துக்கண் 'நின்ற சொல்முன் இயல் பாகும்'*(144)* என்பதனாற் கொள்க.

எல்லா மொழியும் என்றதனான், வினைச்சொல்லும் வினைக்குறிப்புச் சொல்லும் இயல்பாய் முடிதல் கொள்க.

கிடந்தது குதிரை கரிது குதிரை என வரும்.

'சொல்லிய' என்றதனான், இருபெயரொட்டுப் பண்புத்தொகை வன்கணத்துக்கண் இனவொற்று மிக்கு வல்லெழுத்துப் பெற்று முடிதலும், இயல்புகணத்துக்கண் இனவொற்று மிக்கு முடிதலும் கொள்க.

கரட்டுக்கானம் குருட்டுக்கோழி திருட்டுப் புலையன் களிற்றுப்பன்றி வெளிற்றுப்பனை எயிற்றுப்பல் எனவும், வறட்டாடு குருட்டெருது எனவும் வரும்.

'பண்பின்' என்றதனான், மெல்லொற்று வல்லொற்றாய் ஐகாரம் பெற்று முடிவனவும், மெல்லொற்று வல்லொற்றாய்

ஐகாரமும் வல்லெழுத்தும் பெற்று முடிவனவும், மெல் லொற்று வல்லொற்று ஆகாது ஐகாரமும் வல்லெழுத்தும் பெற்று முடிவனவும் கொள்க.

ஓர்யாட்டை யானை-ஐயாட்டையெருது-எனவும், அற்றைக் கூத்தர்-இற்றைக் கூத்தர்-எனவும், மன்றைத்-தூதை மன்றைப் பானை-பண்டைச்சான்றோர்-எனவும் வரும். *(20)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**425.** **அல்லது கிளப்பினும்.....இயற்கை யாகும்.**

*(இ-ள்.)* வன்தொடர் அல்லாத ஏனை ஐந்தீற்றுக் குற்றியலுகரமொழிகள் யாவும் அல்வழியாற் புணருமிடத்து, முதனூலாசிரியராற் சொல்லப்பட்ட முறைமையானே இயல்பாகப் புணரும்.

**இளம்பூரணம்**

***427. வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரம் வன்கணம் வருவழி முடியுமாறு***

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.**

இச்....எனின், இவ்வீற்றுள்ளும் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்....ற்று.

*(இ-ள்.)* வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றிய லுகரம், வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

*(உ-ம்.)* கொக்குக் கடிது சிறிது தீது பெரிது - என வரும். *(21)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**427.** 415 ஆம் சூத்திரத்தே விதித்தது வேற்றுமை முடிபு; ஈண்டு அல்வழி முடிபு என்க.

## நச்சினார்க்கினியம்

### *426. அவற்றுள் வன்றொடர் ஈறு வலி மிகுதல்*

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.**

*இஃது அவ்வாறு ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.*

*(இ-ள்.)* வல்லொற்றுத்...மிகும் - வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரஈறு, வல்லெழுத்து வருவழி, வல்லெழுத்து மிக்குமுடியும்1 எ-று.

*(உ-ம்.)* கொக்குக்கடிது பாக்குக்கடிது பட்டுக்கடிது சிறிது தீது பெரிது என வரும். *(21)*

## நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***426.** 1.* இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

## இளம்பூரணம்

### *428. ஆங்கு முதலிய மூன்றும் யாங்கு என்பதொன்றும் அன்ன ஆதல்*

**சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்**
**யாவினா முதலிய மென்றொடர் மொழியும்**
**ஆயியல் திரியா வல்லெழுத்து இயற்கை.**

இச்....எனின், இதுவும் அவ்வாறீற்றுள் ஒன்றன்கண், ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கு முடிபு கூறு.....ற்று.

*(இ-ள்.)* சுட்டாகிய சினையெழுத்து நீண்ட மென்றொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், யா என்னும் வினா முதலாகிய மென்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், மேற்கூறிய வல்லெழுத்து இயற்கையாகிய அவ்வியல்பின் திரியாதே முடியும் எ-று.

(உ-ம்.) ஆங்குக்கொண்டான் ஈங்குக்கொண்டான் ஊங்குக்கொண்டான், யாங்குக் கொண்டான் - சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'இயற்கை' என்றதனான், இக்குற்றியலுகர ஈற்று வினையெச்ச முடிபு கொள்க.

(உ-ம்.) செத்துக் கிடந்தான், இருந்து கொண்டான் - என வரும். (22)

## நச்சினார்க்கினியம்

### 427. வல்லெழுத்து மிகப்பெறும் மென்தொடர்க் குற்றுகர மொழிகள்

**சுட்டுச்சினை நீடிய மென்தொடர் மொழியும்**
**யாவினா முதலிய மென்தொடர் மொழியும்**
**ஆயியல் திரியா வல்லெழுத்து இயற்கை.**

இதுவும் அவ்வாறு ஈற்றுள் ஒன்றன்கண் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) சுட்டுச்....மொழியும் - சுட்டாகிய சினையெழுத்து நீண்ட மென்தொடர்க் குற்றுகர ஈறும்; யாவினா.... மொழியும் - யா என்னும் வினா முதலாகிய மென்தொடர் மொழிக் குற்றுகர ஈறும்; வல்லெழுத்து இயற்கை ஆயியல் திரியா - வல்லெழுத்துப் பெற்று முடியும் தன்மையாகிய அவ்வியல்பின் திரியாது முடியும் எ-று.

(உ-ம்.) ஆங்குக்கொண்டான் ஈங்குக்கொண்டான் ஊங்குக்கொண்டான் யாங்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

'இயற்கை' என்றதனான், மென்தொடர்மொழிக் குற்றியலுகர ஈற்று வினையெச்சம் இயல்பாயும், வன்தொடர் மொழிக் குற்றியலுகர ஈற்று வினையெச்சம் மிக்கும் முடிவன கொள்க.

இருந்துகொண்டான் - ஆண்டு சென்றான் - தந்து தீர்ந்தான் - வந்து போயினான் - எனவும், செத்துக் கிடந்தான் - செற்றுச் செய்தான் - உய்த்துக்கொண்டான் - நட்டுப் போயினான் - எனவும் வரும். (22)

## இளம்பூரணம்

### 429. அவற்றுள் 'யாங்கு' இயல்பும் ஆதல்

[1]யாவினா மொழியே இயல்பும் ஆகும்.

இச்...எனின், மேலனவற்றுள் ஒன்றன்மேல் சிறப்பு விதி கூறு....ற்று.

(இ-ள்.) அவற்றுள் யாவினா மொழி, மேற்கூறிய விகாரமே அன்றி இயல்பாயும் முடியும் எ-று.

(உ-ம்.) யாங்குகொண்டான்[2] சென்றான் தந்தான் போயினான் என வரும். (23)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

429. 1) 'அவற்றுள்' என்ற தனிச்சொல் சூத்திரத்தில் இடம்பெற்றிருக்கக்கூடும்.

2) எப்படிக் கொண்டான் என்பது பொருள். (நச். உரை)

## நச்சினார்க்கினியம்

### 428. இயல்புமுடிபு பெறும் மென்தொடர் ஈறு

[1]யாவினா மொழியே இயல்பும் ஆகும்.

இது மேலனவற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது, வல்லெழுத்து மிகுதலேயன்றி இயல்பாம் என்றலின்.

*(இ-ள்.) யாவினா....ஆகும்* - அவற்றுள் யா என்னும் வினாவையுடைய சொல், முற்கூறியவாறன்றி, இயல்பாயும் முடியும் எ-று.

*(உ-ம்.)* யாங்கு கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். இஃது எப்படி என்னும் வினாப் பொருளை உணர்த்திற்று.

உம்மையான், மிக்கு முடிதலே வலியுடைத்து. ஏகாரம் பிரிநிலை.[2] *(23)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***428.*** 1. அவற்றுள் என்ற தனிச்சொல் இடம் பெற்றிருக்கக் கூடும்.

2. மேலைச்சூத்திரத்துக் கூறிய இரண்டனுள் ஒன்றனைப் பிரித்து விதி கூறுதலான் என்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***428.*** **யாவினா மொழியே இயல்பு மாகும்.**

*(எ-டு.)* யாங்கு கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். யாண்டு என்பதனொடும் ஒட்டிக் கொள்க. இஃது யாங்ஙனம் எனப் பண்புப்பொருட்டாக வருங்காலையே இயல்பாம், இடப்பொருளாயின் மிகுமென அறிக.

**இளம்பூரணம்**

***430. அந்நான் மொழியும் தம்நிலை திரியா.***

இச்....எனின், மேலனவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறு...ற்று.

*(இ-ள்.)* சுட்டுமுதல் மூன்றும் யா முதல்மொழியும் ஆகிய அந்நான்கு மொழியும், தம்மெல்லொற்று நிலை திரிந்து வல்லொற்று ஆகாது முடியும் எ-று.

'தம்நிலை' என்றதனான், மெல்லொற்றுத் திரியாது வல்லெழுத்து மிக்கு முடிவன பிறவும் கொள்க.

*(உ-ம்.)* அங்குக்கொண்டான் இங்குக் கொண்டான் உங்குக்கொண்டான் எங்குக்கொண்டான் - சென்றான் தந்தான் போயினான் - என வரும்.

யாமொழி என்னாது 'வினா' என்றதனான் (23), பிற இயல்பாய் முடிவனவும் கொள்க.

*(உ-ம்.)* முந்துகொண்டான் பண்டுகொண்டான் இன்று கொண்டான் அன்றுகொண்டான் - என வரும். (24)

**நச்சினார்க்கினியம்**

***429. மெல்லொற்று வலியாக் குற்றுகரச்சுற்று மொழிகள்***

**அந்நால் மொழியும் தம்நிலை திரியா.**

இது மேலனவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

*(இ-ள்.)* அந்நால்.....திரியா - சுட்டு முதல் மூன்றும் யா முதல் மொழியும் ஆகிய அந்நான்கு மொழியும், தம் மெல்லொற்று ஆய தன்மை திரிந்து வல்லொற்றாகாது முடியும் எ-று.

*(உ-ம்.)* முற்காட்டியவே.

'தம்நிலை' என்றதனான், மெல்லொற்றுத் திரியாது வல்லெழுத்து மிக்கு முடிவன பிறவும் கொள்க.

அங்குக் கொண்டான் இங்குக்கொண்டான் உங்குக் கொண்டான் எங்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

இனி, முன்னர் 'யாமொழி' என்னாது 'வினா' என்றதனான், ஏழாவதன் காலப்பொருட்டாகிய பிறவும் இயல்பாய் முடிவனவும் கொள்க.

முந்துகொண்டான் இன்றுகொண்டான் அன்றுகொண்டான் என்றுகொண்டான் என வரும். (24)

## இளம்பூரணம்

### *431. உண்டு எனும் மென்தொடர்மொழி (பகர முதன் மொழி வருவழி) முடியுமாறு*

**உண்டுஎன் கிளவி உண்மை செப்பின்**
**முந்தை இறுதி மெய்யொடும் கெடுதலும்**
**மேல்நிலை ஒற்றே ளகரம் ஆதலும்**
**ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே**
**வல்லெழுத்து வரூஉம் காலை யான.**

இச்.....எனின், மென்தொடர் ஒரு வினைக்குறிப்பு மொழிக்கு வேறு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) உண்டு என்னும் சொல், உண்டு என்னும் தொழிலொழிய உண்மை என்னும் பண்பு உணரநிற்கு மிடத்து, முற்பட்ட ஈற்றுக் குற்றியலுகரம் தான் ஏறிநின்ற மெய்யொடும் கெடுதலும், அதற்கு மேல் நின்ற ணகார ஒற்று ளகாரம் ஆதலும் ஆகிய அம்முறைமையுடைய இரண்டினையும் உரித்து ஆதலும் உடைத்து; (அஃது உரித்தன்றி முன்னர் நின்ற நிலையிலே கேடும் திரிபும் இன்றி நிற்றலும் உடைத்து,) வல்லெழுத்து முதல்மொழி வருங்காலத்து எ-று.

வல்லெழுத்து அதிகாரம் வாராநிற்ப, 'வல்லெழுத்து வரூஉங்காலை' என்றதனான், இவ்விருமுடிபும் உள்ளது, பகர முதல்மொழி வந்தால்; மற்றை மூன்று எழுத்தின்கண்ணும் ஈறுகெடாதே நின்று முடியும் என்று கொள்க.

இன்னும் அதனானே, இயல்புகணத்து இறுதி கெடாதே முடிதல் கொள்க.

(உ-ம்.) உள்பொருள் உண்டுபொருள் - எனவும், உண்டு காணம் உண்டுசாக்காடு உண்டுதாமரை - எனவும், உண்டு ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை - எனவும் வரும்.

உள்பொருள் என்பது பண்புத்தொகை முடிபன்றோ எனின், அஃது ஓசை ஒற்றுமைப்படச் சொல்லும்வழியது. இஃது ஓசை இடையறவுபடச் சொல்லும் வழியது போலும்[1]. (25)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***431.*** 1) உள்ளதாகிய பொருள் என்று பொருள்படு மிடத்து, உள்பொருள் ஒருசொல் நீர்மைத்தாய் ஓசையிடை யறவின்றி ஒலிக்கப்படுதல் வேண்டும். 'உள்பொருள்' வினைமுற்றுத் தொடராயவழி ளகரத்தின்மேல் ஒலியூன்றிப் பிளவுபட ஒலித்தல் வேண்டும்.

இல்லென் கிளவி (373) உரைக்கண்ணும் இக்கருத்து விளக்கப்பட்டது.

## நச்சினார்க்கினியம்

### *430. உண்டு எனும் வினைக்குறிப்பு முடியுமாறு*

**உண்டுஎன் கிளவி உண்மை செப்பின்**
**முந்தை இறுதி மெய்யொடும் கெடுதலும்**
**மேல்நிலை ஒற்றே ளகாரம் ஆதலும்**
**ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே**
**வல்லெழுத்து வரூஉம் காலை யான.**

இது மென்தொடர்மொழியுள் வினைக்குறிப்பாய் நின்றதொரு சொல் பண்பை உணர்த்துங்கால் வேறுமுடிபு பெறுதல் கூறுகின்றது.

(இ-ள்.) உண்டென்....செப்பின் - உண்டு என்னும் சொல், வினைக்குறிப்பை உணர்த்தாது, ஒருபொருள் தோன்றுங்கால் தோன்றி அது கெடுந்துணையும் உண்டாய் நிற்கின்ற தன்மையாகிய பண்பை உணர்த்தி நிற்குமாயின்; முந்தை....கெடுதலும்-முன்னர் நின்ற குற்றுகரம் தான்

ஏறிநின்ற மெய்யொடும் கெடுதலும்; மேனிலை....ஆதலும்- அதற்குமேல் நின்ற ணகார ஒற்று ளகார ஒற்றாதலும்; ஆமுறை.....உடைத்து - அம்முறையினை யுடைய இரண்டு நிலையும் உரித்து, அஃது உரித்தன்றி முன்னர் நின்ற நிலையிலே கேடும் திரிபும் இன்றி நிற்றலும் உடைத்து; வல்லெழுத்து....காலையான-வல்லெழுத்து முதல்மொழி யாய் வருங்காலத்து எ-று.

வல்லெழுத்து அதிகாரத்தான் வாராநிற்ப (426), 'வல்லெழுத்து வரூஉங்காலை' என்றதனான், அவ்விரு முடிபும் உளவாய்ப் பண்பையுணர்த்தும், பகரம் வருமொழிக் கண்ணே வரின் என்பதூஉம், ஏனைக் கசதக்களினும் இயல்பு கணத்தினும் உண்டு என நின்று வினைக்குறிப்பாயும் சிறுபான்மை பண்பாயும் நிற்கும் (சொல். 216, 222 நச்.உரை) என்பதூஉம் கொள்க.

(உ-ம்.) உள்பொருள், உண்டு பொருள் என வரும். இது பொருள் சுட்டாது உண்மைத்தன்மைப் பண்பை ஈண்டு உணர்த்திற்று[1].

இனி, உண்டு காணம் - உண்டு சாக்காடு - உண்டு தாமரை-உண்டு ஞானம் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை என வருவனவெல்லாம் கேடும் திரிபும் இன்றி வினைக் குறிப்பாயும், சிறுபான்மை பண்பாயும் நின்றன. இவற்றின் வேறுபாடு வினையியலுள் வினைக்குறிப்பு ஓதும்வழி (சொல். ௸ நச்.) உணர்க.

உள்பொருள் என்பது பண்புத்தொகை முடிபன்றோ எனின், அஃது ஓசை ஒற்றுமைப்படச் சொல்லும் வழியது போலும். இஃது ஓசை இடையறவுபடச் சொல்லும் வழியது என்க.[2] (25)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***430.*** 1. பொருள் அழிந்தாலும் தான் அழியாது நிலைபெறும் அதன்கண் உள்ளதாகிய இயல்பு. ஆவுண்டு என்புழி, அவ்வுண்மைத்தன்மைப் பண்பு அறியப்படும்.

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**431. உண்டென் கிளவி.....காலை யான.**

"வல்லெழுத்து அதிகாரம் வாராநிற்ப, 'வல்லெழுத்து வருஉங்காலை' என்றதனான், இவ்விருமுடிபும் உள்ளது பகர முதல்மொழி வந்தாற்றான்; மற்றை மூன்று எழுத்தின் கண்ணும் ஈறுகெடாதே நின்று முடியும் என்று கொள்க" என்றனர் உரைகாரர். அஃது ஆசிரியர்க்கு உடன்பாடாயின், 'வல்லெழுத்து' என்பதற்கும் பிரதியாகப் 'பகரம்' என அவர் கூறியிராரா என்பது ஆராய்தற்குரியது.

'உரிமையும்' என்றவிடத்துள்ள உம்மையால் 'உள் பொருள்' என்னும் திரிபு சிறுபான்மை எனக்கொண்டு, உண்மையைக் கூறும் உண்டு என்னும் சொல்லொடு வல்லெழுத்தினை முதலிற் கொண்ட சொல் தொகையாம் போது உண்டு என்றது 'உள்' என மாறாது 'உண்டு' என்றே இருத்தல் கூடும் என இச்சூத்திரம் உணர்த்திற்று எனக் கொள்ளனலாம் எனத் தோற்றுகிறது.

**431.** [அரிதின் கண்ட நுட்பத்தை உரைகாரர் இலேசாற் புலப்படுத்தினர். அதன்கண் இவர் பொருந்தாமை கூறுதல் புரைவதன்று.

உம்மையான் இவர்கொண்ட பொருள் உரைகாரர்க்கு ஏற்புடையதே. 'உள்பொருள்' என்புழி, ஓசை இடையறவு படாது சொல்லின் பண்புத்தொகையாம். ஈண்டு அன்னதன்று, 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றுதலின்' ளகரத்தின் மேல் ஒலியூன்றிப் பிளவுபட உச்சரிக்க வேண்டுதலின் இது பயனிலைத் தொடரேயாம். (373ஆம் சூத்திர உரைக்குறிப்புக் காண்க.)]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**430.** உண்டுஎன் கிளவி உண்மை செப்பின்

.................

வல்லெழுத்து வருஉம் காலை யான.

ஆசிரியர், உள்பொருள் என்பது போல வருதலைக் கண்டு அதற்கு அமைதி கூறினாராவர். உண்மையை நோக்கின், உள் என்பதனின்றே உண்டு என்பது தோன்றியது என்பது புலனாம். உள் என்னும் பண்படியோடு அது என்பது சேர்ந்து உள்ளது என்னும் பெயரும் உளது என்னும் வினையும் அமைந்தன போல, உள் என்பதனோடு 'து' மட்டும் சேர்ந்து உண்டு என்றாகியிருக்கின்றது. அன்று என்பதும் இத்தகையதே. உள்பொருள் என்பது, உள் என்னும் பண்படி தொக்கதனால் பண்புத்தொகை.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***430.*** **உண்டென் கிளவி.....காலை யான.**

இச்சொல் 'உள்' என்னும் பண்படி திரிந்து 'டு' என்னும் இறுதிநிலையொடு கூடியல்லது தனித்து நின்று பொருளுணர்த்தாமையின், இதனைக் குற்றியலுகரவீற்றுச் சொல்லாகவே வைத்து இலக்கணம் கூறினார். மற்று இஃது ஏனைக்கணங்கள் வரின் திரியாமல், வல்லெழுத்து வருங்கால் ஒரோவழித் திரிதலைக் கண்டு, இத்திரிபினை இலக்கண முறைமையாற் கூறினார் என்க.

உம்மையான், உண்டு களிறு - உண்டு சுடர் - உண்டு தெய்வம் - உண்டு புவி - எனவும் வரும். (தகரம் ளகரத்தொடு மயங்காமையின், 'உள்' நிலைமொழியாயிருப்ப எடுத்துக் காட்டு இன்று.)

களிறு சுடர் தெய்வம் புவி என்பன அவற்றின் உண்மைத் தன்மைகளை என்க. உண்மைத்தன்மை அல்லது பொருட்டன்மையாவது, பொருள் அழியினும் தான் அழிவின்றி அப்பொருள்தொறும் நின்றுணர்த்தும் பெற்றிமையாகும்.

உள்பொருள் என்பது உளதாகிய பொருள் என்னும் கருத்தினதாயின், உளதாதற் குறிப்புணர்த்தும் என்க. இதன் எதிர்மறை இல்பொருள் என்பது.

*431.* [இருதிசை பெருந்திசைகளாகிய வடக்கும் தெற்குமே. 'வடவேங்கடம் தென்குமரி' என, இரு பெருந்திசைப் பெயர்களும் எல்லையிடங்களைச் சுட்டி வழங்கப்படுதல் காண்க. குணக்கும் குடக்கும் பண்டு கோணத்திசைகளே. பெருந்திசைகள் நிலைமொழியாக நிற்ப, குறித்து வருகிளவியாகக் குணக்கும் குடக்கும் வந்து, வட குணக்கு வடகுடக்கு எனவும் தென்குணக்கு தென்குடக்கு எனவும் கோணத்திசைப் பெயர்களாக உம்மைத்தொகை யன் மொழியான் வழங்குமாறு காண்க. குணக்கு குடக்கு என்பன, பிற்காலத்தே கிழக்கு மேற்கு எனத் தமிழ்நாட்டு யாறுகள் ஒழுகும் போக்கினான் பெயர் பெற்றன என்ப. 'மலைத்தலைய கடற்காவிரி' (பட்.6) நோக்குக. மேல்கீழ் அடியாக மேற்கும் கிழக்கும் சொல்லாக்கம் பெற்றன என்ப.]

## இளம்பூரணம்

### *432. இருபெருந்திசைப்பெயர் புணர்வழி ஏகாரச் சாரியைப் பேறு*

**இருதிசை புணரின் ஏஇடை வருமே.**

இச்.....எனின், குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்க்கு அல்வழிக்கண் வேறு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* இரண்டு பெருந்திசைகள் தம்மிற் புணரின் ஏ என்னும் சாரியை இடைவந்து புணரும் எ-று.

*(உ-ம்.)* வடக்கே தெற்கு - கிழக்கே மேற்கு[1]-என வரும். *(26)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*432.* 1) வடக்கும் தெற்குமே பெருந்திசைகள் ஆதலின், தெற்கே வடக்கு என இவ்வுதாரணம் இருந்திருக்க வேண்டும் என்ப.

## நச்சினார்க்கினியம்

### *431. இருபெருந்திசை அல்வழிக்கண் முடியுமாறு*

**இருதிசை புணரின் ஏ இடை வருமே.**

இது குற்றுகரஈற்றுத் திசைப்பெயர்க்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* இருதிசை.....வரும் - இரண்டு பெருந்திசையும் தம்மிற் புணரின், ஏ என்னும் சாரியை இடைநின்று புணரும் எ-று.

வருமாறு*:* தெற்கே வடக்கு[1] என வரும். இஃது உம்மைத்தொகை.

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***431.*** 1. வடக்கே தெற்கு என்பதும் கொள்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***431.*** இருதிசை புணரின் ஏயிடை வருமே.

*(எ-டு.)*தெற்கே வடக்கு, வடக்கே தெற்கு, கிழக்கே மேற்கு, மேற்கே கிழக்கு என வரும். இவற்றிற்கு உம்மை விரிக்க.

தொடர்ச்சி முன்பக்கத்தே காண்க.

## இளம்பூரணம்

### *433. அப்பெருந்திசையொடு கோணத்திசை புணருமாறு*

**திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் இறுதியும்**
**கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்**
**ஒற்றுமெய் திரிந்து னகாரம் ஆகும்**
**தெற்கொடு புணரும் காலை யான.**

*இச்....எனின், அப்பெருந்திசையொடு கோணத்திசை புணருமாறு உணர்த்.....ற்று.*

*(இ-ள்.)* அப்பெருந்திசைகளொடு கோணத்திசைகளை வேறாகப் புணர்க்குமிடத்து, அவ்வுகரம் ஏறி நின்ற ஒற்றும் அவ்வீற்று உகரமும்[1] கெட்டு முடிதல் வேண்டும் என்று சொல்லுவர் புலவர்; தெற்கு என்னும் திசையொடு புணருங்காலத்து அதன்கண் நின்ற றகார ஒற்றுத் தன் வடிவு திரிந்து னகாரமாய் முடியும் எ-று.

'திரிந்து' என்றதனான், வடக்கு என்பதன்கண் இடை நின்ற ககர ஒற்றுக் கெடுக்க.

வருமாறு: வடகிழக்கு வடமேற்கு தென்கிழக்கு தென்மேற்கு என வரும்.

'வேறு' என்றதனான், திசைப்பெயரொடு பொருட் பெயர்க்கும் இவ்விதி கொள்க.

*(உ-ம்.)* வடகடல் வடவரை - என வரும்.[2]

மெய் என்றதனான், பொருட்பெயர் புணருமிடத்து இறுதியும் முதலும் திரிந்து முடிவன எல்லாம் கொள்க.

*(உ-ம்.)* கீழ்கூரை மேல்கூரை - என வரும்[3]. *(27)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*433. 1) அவ்ஈற்றுகரம் ஏறிநின்ற ஒற்றும் அவ்வுகரமும் - என இத்தொடர் அமைந்திருத்தல் சிறக்கும்.*

*2) தென்கடல் தென்வரை என்னும் இரண்டு உதாரணங் களும் நச்சினார்க்கினியத்திற் போல ஈண்டும் இடம்பெறுதல் வேண்டும்.*

*3) கிழக்கும் மேற்கும் திரிந்து நின்றன.*

## நச்சினார்க்கினியம்

### 432. [1]பெருந்திசைகளொடு கோணத்திசை புணர்தல்

**திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் உகரமும்**
**கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்**
**ஒற்றுமெய் திரிந்து னகாரம் ஆகும்**
**தெற்கொடு புணரும் காலை யான.**

இது பெருந்திசைகளொடு கோணத்திசைகள் புணர்த்தலின், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) திரிபு வேறு கிளப்பின் - அப்பெருந்திசைகளொடு கோணத்திசைகளை வேறாகப் புணர்க்குமிடத்து; ஒற்றும்......புலவர் - அவ்வுகரம் ஏறி நின்ற ஒற்றும் அவ்வீற்று உகரமும்[2] கெட்டு முடிதல்வேண்டும் என்று சொல்லுவர் புலவர்; தெற்கொடு புணரும்காலை - அது தெற்கு என்னும் திசையொடு புணருங்காலத்து; ஆன ஒற்று மெய் திரிந்து னகாரம் ஆகும் - அத்திசைக்குப் பொருந்தி நின்ற றகார ஒற்றுத் தன்வடிவு திரிந்து னகார ஒற்றாய் நிற்கும் எ-று.

திரிந்து என்றதனான், வடக்கு என்பதன்கண் ககர வொற்றுக் கெடுத்து முடித்துக்கொள்க.

வருமாறு: வடகிழக்கு வடமேற்கு தென்கிழக்கு தென்மேற்கு என வரும்.

வேறு என்றதனான், திசைப் பெயரொடு பொருட் பெயர் வரினும் இம்முடிபு கொள்க.

வடகடல் வடசுரம் வடவேங்கடம் தென்குமரி தென்சுரம் தென்னிலங்கை என வரும்.

மெய் என்றதனான், உயிர்கெட்டுத் திரிந்தும் மெய் கெட்டும் முடிவனவும் உள, திசைப்பெயர் முன்னர்ப் பொருட்பெயர் வந்துழி என்றுணர்க.

கிழக்கு என்பது கரை கூரை என்பவற்றொடு புணருமிடத்து, கீழ்கரை கீழ்கூரை என, நிலைமொழியிறுதி உகரம் மெய்யொடும் கெட்டு அதன்மேல் நின்ற ககர ஒற்றும் ழகரத்தில் அகரமும் கெட்டு முதலெழுத்து நீண்டு முடிந்தன.

மேற்குகரை கூரை என்பன, மீகரை மீகூரை என, நிலைமொழியீற்று உகரம் மெய்யொடும் கெட்டு அதன்மேல் நின்ற றகரவொற்றும் கெட்டு ஏகாரம் ஈகாரமாகி முடிந்தன.

இன்னும் இதனானே, மேன்மாடு மேல்பால் மேலைச் சேரி[3] என்றாற்போல்வனவும் செய்கையறிந்து முடிக்க. *(27)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***432.*** *1.* இச்சூத்திரத்து முன்னடிகள் ஒரு சூத்திரமாகவும், பின்னடிகள் மற்றொரு சூத்திரமாகவும் இருத்தல் வேண்டும் என்பர் சாத்திரியார். 414ஆம் சூத்திரத்தையும் அவ்வாறே அவர் கொண்டமை காண்க.

*2.* உயிர்மெய் வருதலின் குற்றியலுகரம் கெட்டது; உயிர்வரின் கெடாது என்க.

*3.* ஐகாரச் சாரியையும் இயைபு வல்லெழுத்தும் கொடுக்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***433.*** திரிபுவேறு கிளப்பின்.....காலை யான.

"'திரிந்து' என்றதனான், வடக்கு என்பதன்கண் இடை நின்ற ககரவொற்றுக் கெடுக்க" என்றனர் உரைகாரர். முற்சூத்திரத்தினின்றும் மெய்யொடும் என்றதனை அதிகரித்துக் கொள்ளின் இவ்வாறு கூறல் வேண்டா.

இறுதி யிரண்டடிகளையும் தனிச் சூத்திரமாகக் கொள்ளின் நலம்.

*433.* [சாத்திரியார் கூறியவாறு 'மெய்யொடும்' என்னும் சொல் ஒன்று மாத்திரம் அதிகரியாது; 'இறுதி மெய்யொடும்' என்னும் தொடரே அதிகரிக்க வேண்டுதலின், அவ்வதிகாரத்தால் ஈற்றுயிர்மெய் கெடுதலொன்றும் 'வேண்டா கூறலாய்' முடியும்; ஈற்றயல் ககரவொற்றினை அதிகாரத்தால் கெடுக்குமாறில்லை. உரைகாரர் இலேசினாற் கொண்டமையே சாலப் பொருந்துவதென்க.]

இறுதியடிகளைத் தனிச் சூத்திரமாகக் கோடல் சாத்திரியார் கருத்து. அது பொருந்தும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**432. திரிபுவேறு கிளப்பின்.....காலை' யான.**

ஆசிரியர் வடக்கு என்னும் சொல்லில், ககரமெய் கெடுதற்கு விதி கூறினாரல்லர். அதனால் அவர்காலத்தில் 'வடகு' என்றே எழுதுவர் என்று தோன்றுகிறது. பாகு-பாக்கு, பிறகு-பிறக்கு, காபு-காப்பு என்னும் சொற்களை நோக்கின், வடகு வடக்கு என்னும் இரண்டு வடிவமும் அமையுமன்றே? இவ்விரண்டனுள் ககரம் இரட்டித்தது பிற்கால வழக்கு, மற்றையது முற்கால வழக்கு என்று உய்த்துணர்தல் கூடும்.

*432.* [குணக்கு குடக்கு கிழக்குப் போன்ற சொல்லாக்கத்தை நோக்குமிடத்து வடக்கு என்பதே சொல்லாக இருத்தல் வேண்டும் என்றும் தோன்றுகிறது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**432. திரிபுவேறு கிளப்பின்......காலை யான.**

'வடக்கு' என்னும் சொல்லின் ககரவொற்றுக்குக் கேடு கூறாமையான், இத்திசையின் பெயர் 'வடகு' என ஆசிரியர் காலத்து வழங்கியிருத்தல் வேண்டும் என்பார் ரெட்டியார். கிழக்கு மேற்கு குணக்கு குடக்கு என்பவற்றை நோக்க வடக்கு என்பதே நேரிது என்பது புலப்படும். ககரவொற்றுக்கேடு இலேசினாற் கோடற்கு இழுக்கில்லை என்க.

இத்திசைப் பெயர்கள் ஏனைப் பொருட் பெயரொடு புணருங்கால் எய்தும் திரிபு வேறுபாடுகளை உணர்த்தும் சூத்திரம் இருந்து கெட்டிருத்தல் வேண்டும் எனக் கருத வேண்டியுளது. அத்திரிபுகளை 'உரையிற் கோடல்' என்னும் உத்தியாற் கொள்க.

*432.* [இச்சூத்திரவுரையுள் திசைச்சொற்கள் என வரும் மூன்றும் திசைப்பெயர்கள் என்றிருப்பின் சிறக்கும்.]

## இளம்பூரணம்

### *434. பத்து என்னும் எண்ணுப்பெயரோடு ஒன்றுமுதல் எட்டு ஈறாய எண்ணுப்பெயர் புணருமாறு*

**ஒன்றுமுத லாக எட்டன் இறுதி**
**எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்**
**குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே**
**முற்றஇன் வரூஉம் இரண்டுஅலங் கடையே.**

இச்....எனின், இவ்வீற்று எண்ணுப் பெயரோடு எண்ணுப்பெயர்க்கு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) ஒன்று என்னும் சொல் முதலாக எட்டு என்னும் சொல் இறுதியாகவுள்ள எல்லா எண்ணுப்பெயரும், பத்து என்னும் எண்ணுப்பெயர்முன் வரின், அப்பத்து என்னும் சொல்லின் குற்றியலுகரம் தான் ஏறிநின்ற மெய்யொடும் கெட்டு முடியும்; இரண்டு அல்லாத எண்ணுப்பெயரிடத்து முடிய 'இன்' வந்து புணரும் எ-று.

வருமாறு: பதினொன்று[1] பதின்மூன்று பதினான்கு பதினைந்து பதினாறு பதினேழு பதினெட்டு - என வரும்.

நிலைமொழி முற்கூறாததனான், பிறமொழியும் அவ் இன் பேறு கொள்க.

(உ-ம்.) ஒன்பதின்பால் ஒன்பதின் கூறு - என வரும்.

முற்ற என்றதனான், மேல் எடுத்தோத்தானும் இலே சானும் இன் பெற்றவழி, பதிற்றொன்று[2] பதிற்றிரண்டு- என்றாற் போல முடிபுகள் வேறுபட வருவனவெல்லாம் கொள்க. (28)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**434.** 1) பத்து+இன்+ஒன்று> பத்+இன்+ஒன்று> பதின்+ஒன்று=பதினொன்று. குறியதன் முன்னர்த் தன் உரு இரட்டாதாயிற்று. சூ. 137 விதியான், உயிர் மெய்யொடு சிவணி முடிந்தது.

2) பத்து + இன் + ஒன்று > பத்+இன்+ஒன்று> பத்+ இற்+ஒன்று> பத்+இற்றொன்று = பதிற்றொன்று. 120ஆம் சூத்திரவிதியான் 'இன்'னின் னகரம் றகரமாயிற்று. 'குறியதன் முன்னர்த் தன்னுரு' இரட்டியது, 160ஆம் சூத்திர விதியான். பத்+இற்றொன்று என்புழி மாத்திரம் ஒற்று இரட்டிலது. 460ஆம் சூத்திர உரையில் வேறாக உரைத்தல் காண்க.

மொழியியலார் இம்முடிபுகளை ஏலார்.

நன்னூல் ஆசிரியர் இற்றுச் சாரியை கொண்டார்.

## நச்சினார்க்கினியம்

### 433. பத்து, முதலெட்டு எண்களொடு புணருமாறு

**ஒன்றுமுத லாக எட்டன் இறுதி**
**எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்**
**குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே**
**முற்ற இன்வரூஉம் இரண்டுஅலங் கடையே.**

நிறுத்த முறையானே ஆறு ஈற்றுக் குற்றுகரமும் பொருட்பெயர் முதலியவற்றின்கண் புணருமாறு உணர்த்தி, இனி அவ்வீற்று எண்ணுப்பெயர் முடிக்கின்றார். இஃது அவற்றுள் பத்து என்னும் எண்ணுப்பெயரோடு எண்ணுப் பெயர் வந்து புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஒன்று.....எண்ணும் - ஒன்று என்னும் எண் முதலாக எட்டு என்னும் எண் ஈறாயுள்ள எல்லா எண்ணுப் பெயர்களும்; பத்தன்முன் - பத்து என்னும் எண்ணுப் பெயரின் முன்வரின்; குற்றியல்......கெடுமே - அப்பத்து என்னும் சொல்லின் குற்றுகரம் தான் ஏறி நின்ற மெய்யொடும் கெடும்; இரண்டு அலங்கடை முற்ற இன்வரும் - ஆண்டு இரண்டு அல்லாத எண்ணுப்பெயர்களிடத்து முடிய இன்சாரியை இடைவந்து புணரும் எ-று.

வருமாறு: பதினொன்று பதின்மூன்று பதினான்கு பதினைந்து பதினாறு பதினேழ் பதினெட்டு என வரும்.

நிலைமொழி முற்கூறாததனான், பிற எண்ணின் முன்னர்ப் பிறபெயர் வந்துழியும் இன்பெறுதல் கொள்க.

ஒன்பதின்கூறு ஒன்பதின்பால் என வரும்.

முற்ற என்றதனான், பதினான்கு என்புழி வந்த இன்னின் னகரம் வருமொழிக்கண் கருவி செய்து கெடுத்து முடிக்க.[1] *(28)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***433.*** 1.பத்து+இன்+நான்கு> பத்+இன்+நான்கு> பதின்+நான்கு> பதி+னான்கு = பதினான்கு.

குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டவில்லை (160). 138ஆம் சூத்திரவிதியான் 'பதின்' எனப்புணர்க்க. 149ஆம் சூத்திர விதியான் வருமொழி நகரம் திரிந்தது. நிலைமொழி னகரத்தை இவ்விலேசினான் கெடுக்க. னகரக்கேட்டைப் பொதுவிதியான் (160) முடிக்கலாகாமை உணர்க. வருமொழித் திரிபு பொதுவிதியான் அமையினும், எண்ணுப்பெயரை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பாராதலின், நிலைமொழித் திரிபு கிளந்தோதாவழி இலேசினான் முடிக்கப்படும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***433.*** ஒன்றுமுத லாக.....இரண்டலங் கடையே.

பத்து என்பதனோடு ஒன்பது என்னும் எண் சேர்ந்து, சாரியை பெறாமல், பத்தொன்பது என வரும் என்று ஆசிரியர் விதித்திலர், பத்து என்பது புள்ளியீறாகலானும், 'புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது' என்று மேலே கூறினாராக லானும் என்க. குற்றுகரவீற்றோடு உயிர் சேர்ந்து வருதல் இதனானும் அறியப்படும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***433.*** **ஒன்று முதலாக....இரண்டலங் கடையே.**

*(எ-டு.) பத்து+ஒன்று> பத்+இன்+ஒன்று= பதினொன்று. பதின்மூன்று பதினான்கு பதினைந்து பதினாறு பதினேழ் பதினெட்டு என வரும். பதினான்கு என்புழிச் சாரியையினது னகரக்கேடு 'நெடியதன் முன்னர்' (160) என்னும் விதியாற் கொள்க.*

***433.*** *['பத்+இன்+ஒன்று' என்னும் புணர்நிலைக்கண் 'குறியதன் முன்னர்த் தன்னுருவு' இரட்டாது 'பதின்' என முடிந்தது, குற்றுகரம் ஏறிய வல்லினமெய் தான் நில்லாது கெட்டமையின் பிறிதொரு தகரம் இரட்டி ஆண்டு வருதற்கு இயையாமை பற்றி.]*

**இளம்பூரணம்**

## *435. 'பத்து' இரண்டு வருவழித் திரியுமாறு*

**பத்தன்ஒற் றுக்கெட னகாரம் இரட்டல்**
**ஒத்தது என்ப இரண்டுவரு காலை.**

இச்.....எனின், மேல் இன் பெறாது என்று விலக்கிய அதற்குப் பிறிதுவிதி வகுத்....ற்று.

*(இ-ள்.)* பத்து என்னும் சொல்லின் நின்ற தகரவொற்றுக் கெட, னகரவொற்று வந்து இரட்டுதல் பொருந்திற்று என்று சொல்லுப, இரண்டு என்னும் எண் வருங்காலத்து எ-று.

வருமாறு: பன்னிரண்டு - என வரும். (29)

**நச்சினார்க்கினியம்**

## 434. அவ்வெண்ணுப் பெயர் இரண்டு வருவழி முடியுமாறு

**பத்தன்ஒற் றுக்கெட னகாரம் இரட்டல்**
**ஒத்தது என்ப இரண்டுவரு காலை.**

இது மேல் இன்பெறாது என்று விலக்கிய இரண்டற்குப் பிறிது விதி கூறுகின்றது.

(இ-ள்.) பத்தன்.....இரட்டல் - பத்து என்னும் சொல்லின் நின்ற தகரஒற்றுக் கெட னகரஒற்று இரட்டித்து வருதல்; இரண்டு வருகாலை ஒத்தது என்ப - இரண்டு என்னும் எண் வரும் காலத்திற் பொருந்திற்று என்பர் ஆசிரியர் எ-று.

வருமாறு : பன்னிரண்டு.

'குற்றியலுகரம் மெய்யொடும் கெடும்' (433) என்னும் விதி இதற்கும் மேலனவற்றிற்கும் கொள்க. (29)

**வேங்கடராசுலு ரெட்டியரர் உரைக்குறிப்பு**

**434.** **பத்தன்ஒற் றுக்கெட......இரண்டுவரு காலை.**

பத்து என்னும் பொருளில் பான் என்னும் சொல் லொன்று வழங்குகின்றது. அஃது இருபான் முப்பான் எனவும் வரும். ஆகலின், பான் என்னும் சொல்லோடு இரண்டு என்பது சேர்ந்து பன்னிரண்டு என்றாயிற்று என்று கொள்ளுதலே அமைதியாகும். நிலைமொழி முதலில் உள்ள நெடில் குறுகுதல் பிறாண்டும் காணலாகும். இவ்வாறே, பான் என்னும் சொல்லொடு ஒன்று முதலிய எண்ணுப்பெயர்கள் சேர்ந்து, பன்னொன்று பன்னான்கு பன்னாறு என்று வருதல் ஈண்டறியத்தக்கது. இவற்றால், பான் என்னும் சொல்லோடு ஒன்று முதலிய எண்ணுப்பெயர்கள் வழங்கின எனவும், பிற்காலத்தே அவை அருகலாயின எனவும் கொள்ளலாம்.

***434.*** ['ஒன்பது' பத்து என்பதன் முன்னர்வரின், ஒன்று முதலாக எட்டனிறுதி எல்லா எண்ணும் 'குற்றியலுகரம் மெய்யொடும்' கெட்டு 'இன்'பெற்று முடிந்தாற் போல முடியாது, குற்றுகரமாகிய புள்ளியீற்றுமுன் உயிரேறி முடியும் என, பத்து+ஒன்பது என்ற புணர்ச்சி முடிபை விளக்கினார் இவ்வுரையாளர். 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' (408) என்ற சூத்திரத்து இவர் கொண்ட பொருள் 'குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே' எனவரும் இச்சூத்திரக் குறிப்பினாற் புரைபடுதல் காண்க.

பன்னிரண்டன் நிலைமொழி 'பான்' என்பது மொழியியல் வல்லுநராகிய இவ்வுரைகாரர் துணிபு, மொழியியல் நூலார் ஆசிரியர் தொல்காப்பியனார் நூலுள்ளும் பொருந்தாமை சிலவற்றைச் சுட்டிச் செல்லுதல் காணலாம்.]

## இளம்பூரணம்

### *436. பத்தன்முன் ஆயிரம் வருவழியும் இன்சாரியை தோன்றுதல்*

**ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது.**

இச்.....எனின், இதுவும் எண்ணுப் பெயர்க்கு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) மேற்கூறிய பத்து என்னும் எண்ணுப்பெயர் முன்னர், ஒன்று முதலாகிய எண்ணுப்பெயரேயன்றி, ஆயிரம் என்னும் எண்ணுப்பெயர் வந்தாலும், மேல் ஈறுகெட்டு இன் பெற்ற இயல்பின் திரியாதே முடியும் எ-று.

வருமாறு: பதினாயிரம் - என வரும். *(30)*

## நச்சினார்க்கினியம்

### *435. 'ஆயிரம்' வருவழி அது முடியுமாறு*

**ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது.**

இஃது ஆயிரம் என்னும் எண்ணுப்பெயர் வரின் வரும் முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) ஆயிரம்....திரியாது - முற்கூறிய பத்தன் முன்னர், ஒன்று முதலியனவேயன்றி, ஆயிரம் என்னும் எண் வந்தாலும் ஈறுகெட்டு இன்பெற்று முடியும் இயல்பின் திரியாது எ-று.

வருமாறு: பதினாயிரம் என வரும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.[1] (30)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***435.*** 1. 433ஆம் சூத்திர விதியை உம்மை தழீ இயிற்று.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***435.*** **பத்தன்ஒற் றுக்கெட.......இரண்டுவரு காலை.**

நச்சினார்க்கினியத்தில் 'குற்றியலுகரம் மெய்யொடும் கெடும்' என்ற விதி இதற்கும் மேலனவற்றிற்கும் கொள்க - என்ற சொற்றொடர் உள்ளது. முற்சூத்திரத்தில், ஒன்று முதலாக எட்டன் இறுதி குற்றியலுகரம் மெய்யொடும் கெடுமே எனக் கூறப்பட்டமையான் இத்தொடர் ஈண்டு மிகை என்க.

***435.*** ['மிகை' என்று இவர் குறிக்கும் நச்சினார்க் கினியத்தில் வரும் சொற்றொடர், மீண்டும் கூறி நினைவுறுத்தல் மாத்திரையே, ஆசிரியர் அனுவதிக்குமாறு போல. 'கூறிய இயற்கை குற்றிய லுகரம், ஆறன் இறுதி அல்வழி யான' (438) என்புழி அவ்வனுவாதம் காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***435.*** **ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது.**

பதினாயிரம் என வரும். பத்தாயிரம் என்பது வழூஉ வழக்கு.

## இளம்பூரணம்

### *437. நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வருவழி இன்சாரியைப் பேறு*

**நிறையும் அளவும் வரூஉங் காலையும்**
**குறையாது ஆகும் இன்னென் சாரியை.**

இச்.....எனின், இஃது எண்ணுப்பெயரொடு நிறைப் பெயரும் அளவுப்பெயரும் புணருமாறு கூறு....ற்று.

(இ-ள்.) மேல்நின்ற பத்து என்பதன்முன் நிறைப் பெயரும் அளவுப்பெயரும் வருங்காலத்தும், அவ் இன் என்னும் சாரியை குறையாது வந்து முடியும் எ-று.

(உ-ம்.) பதின்கழஞ்சு தொடி பலம் - எனவும், கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு - எனவும் வரும்.

'குறையாதாகும்' என்றதனான், பத்து என்பதன் முன்னர்ப் பொருட்பெயர்க்கு வரும் முடியும் கொள்க.

(உ-ம்.) பதின்றிங்கள் பதிற்றுமுழம் பதிற்றுவேலி பதிற்றிதழ் - என வரும். (31)

## நச்சினார்க்கினியம்

### *436. நிறையும் அளவும் வருவழி, அது முடியுமாறு*

**நிறையும் அளவும் வரூஉங் காலையும்**
**குறையாது ஆகும் இன்னென் சாரியை.**

இஃது எண்ணுப்பெயரொடு நிறைப்பெயரும் அளவுப் பெயரும் புணர்கின்ற புணர்ச்சி கூறுகின்றது.

(இ-ள்.) நிறையும்....காலையும் - முற்கூறிய பத்து என்பதன் முன்னர் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வருங்காலத்தும்; இன்னென்சாரியை குறையாதாகும் - அவ் இன் என்னும் சாரியை குறையாது வந்து முடியும் எ-று.

(உ-ம்.) பதின்கழஞ்சு தொடி பலம் எனவும், பதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், பதிற்றகல்[1] பதிற்றுழக்கு எனவும் வரும்.

'குறையாதாகும்' என்றதனான், பொருட்பெயரும் எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் வந்துழியும் இன் கொடுத்து வேண்டும் செய்கை செய்து முடிக்க.

பதிற்றுவேலி யாண்டு முழம் அடுக்கு எனவும், பதின்றிங்கள் எனவும், பதிற்றுத்தொடி எனவும் வரும், பதிற்றொன்று என்பது போல, இரண்டுமுதற் பத்தளவும் ஒட்டுக.

இவ்வீற்றின் னகரம் றகர மாதல் 'அளவாகு மொழி முதல்' (121) என்புதனுள் 'நிலைஇய' என்பதனான் முடிக்க. இவற்றிற்கு ஒற்று இரட்டுதலும், உகரம் வருதலும், வல்லெழுத்துப் பெறுதலும், 'ஒன்று முதலாக' (433) என்பதனுள் முற்ற என்பதனான் கொள்க.[2]

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***436.*** 1. பத்து+அகல் > பத்து+இன்+அகல்> பத்+இன்+அகல்> பத்+இற்ற்+அகல்> பதிற்ற்+அகல்= பதிற்றகல் என முடிக்க. நிலைமொழிக் குற்றுகரம் மெய்யொடும் கெட்டது (433). இன் சாரியை னகரம் றகரமாயிற்று (121). அஃது இரட்டுதல் 'முற்ற' என்ற இலேசினான் (433) கொள்ளப்படும். பத்+இன்=பதின் என முடியும்வழிக் குற்றொற்று இரட்டாமை கொள்க.

2. பத்து+தொடி> பத்து+இன்+தொடி> பத்+இன்+தொடி> பத்+இற்ற்+உ+தொடி> பதிற்று+த்+தொடி= பதிற்றுத்தொடி. ஒற்று இரட்டிய பின்னர் உகரம் பெறுதலும் வல்லெழுத்துப் பெறுதலும் 'முற்ற' (433) என்பதனாற் கொள்ளப்படும்.

இன்சாரியை போல 'இற்று'ச் சாரியையும் கொண்டால் இவ்விடர்ப்பாட்டுப் புணர்நிலை வேண்டா என்பர் மொழி யியல் நூலார்.

## இளம்பூரணம்

### *438. வருமொழி 'பத்து' இடையொற்றுக்கெட ஆய்தமாதல்*

**ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்**
**நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம்**
**வந்துஇடை நிலையும் இயற்கைத்து என்ப**
**கூறிய இயற்கைக் குற்றிய லுகரம்**
**ஆறன் இறுதி அல்வழி யான.**

இச்....எனின், இஃது எண்ணுப் பெயரோடு எண்ணுப் பெயர்க்கு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) ஒன்று முதலாக ஒன்பது ஈறாகச் சொல்லப் படுகின்ற எண்ணுப்பெயர்களின் முன்னர், வருமொழியாய் வந்து நின்ற பத்து என்னும் சொல்லினது தகரவொற்றுக் கெட, ஆய்தமானது வந்து இடைநிலைபெறும் இயல்புடைத்து என்று சொல்லுவர். அவற்றுள் ஆறு என்னும் ஈறு அல்லாத விடத்துக் குற்றியலுகரம் மேற்கூறிய இயற்கையாய் மெய்யொடும் கெட்டு முடியும் எ-று.

வருமாறு: ஒருபஃது இருபஃது - என வரும்.

வந்து என்றதனான், ஆய்தமாய்த் திரியாது கெட்டு ஒருபது என்றும் ஆம். (32)

## நச்சினார்க்கினியம்

### *437. ஒன்றுமுதல் ஒன்பான் எண்ணுப் பெயர், 'பத்து' வருவழி முடியுமாறு*

**ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்**
**நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம்**
**வந்துஇடை நிலையும் இயற்கைத்து என்ப**
**கூறிய இயற்கை குற்றிய லுகரம்**
**ஆறன் இறுதி அல்வழி யான.**

இஃது ஒன்றுமுதல் ஒன்பான் எண்ணுப் பெயரொடு பத்து என்னும் எண்ணுப்பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) ஒன்று .....முன்னர் - ஒன்று முதல் ஒன்பது ஈறாகக் கூறுகின்ற எண்ணுப்பெயர்களின் முன்னர்; நின்ற....கெட - வருமொழியாக வந்து நின்ற பத்து என்னும் சொல்லினது தகரஒற்றுக் கெட; ஆய்தம் வந்து.....என்ப - ஆய்தமானது வந்து இடையே நிலைபெறும் இயல்பை யுடைத்தென்று கூறுவர் ஆசிரியர்; ஆறன் இறுதி அல்வழியான - அவற்றுள் ஆறு என்னும் ஈறு அல்லாத விடத்து; குற்றியலுகரம் கூறிய இயற்கை - குற்றியலுகரம் முற்கூறிய இயற்கையாய் மெய்யொடும் கெட்டு முடியும் எ-று.

இங்ஙனம் வருமாறு மேற்சூத்திரங்களுள் காட்டுதும்.

'வந்து' என்றதனான், ஆய்தமாகத் திரியாது தகரஒற்றுக் கெட்டு ஒருபது என்று நிற்றலும் கொள்க. (32)

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***437.*** **ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்**

.....................

**ஆறன் இறுதி யல்வழி யான.**

பத்து என்னும் எண்ணுப்பெயரில் ஈற்றயலிலுள்ள தகரமெய் கெடும் என்றும், அதற்கீடாக அவ்விடத்தே ஆய்தவெழுத்து வந்து நிற்கும் என்றும் ஆசிரியர் கூறியுள்ளார். பஃது என்பதுவே இயல்பான சொல் என்றும், அதிலுள்ள ஆய்தம் தன்முன் நின்ற தகரவொலி போன்று ஒலிக்கு மாதலின், அப்பஃது என்னும் சொல்லே பத்து எனத் திரிந்தது என்றும் கொள்ளுதல் அமைதியாகும். ஆதலின், ஒருபஃது முதலியவற்றில் பஃது இயல்பான சொல்லே.

*437.* [பத்து என்பதே இயல்பான சொல் என்ற ஆசிரியர் கருத்துக்கு மாறாக, பஃது என்பதே இயல்பான சொல்; அதுதான் ஆய்தம் தகரமாய்த் திரிந்து பத்து என ஆம் என்பார் இவ்வுரைகாரராம் மொழியியல் வித்தகர்.]

## இளம்பூரணம்

### *439. நிலைமொழி ஒன்று இரண்டு என்பன ஒரு இரு எனத் திரிதல்*

**முதல்ஈர் எண்ணின்ஒற்று ரகரம் ஆகும்**
**உகரம் வருதல் ஆவயி னான்.**

இச்.....எனின், மேற்கூறிய முடிபிற்கு உரியதொன்று உணர்த்துதல் நுதலிற்று.

*(இ-ள்.)* அவற்றுள், முதற்கண் நின்ற இரண்டு எண்ணின் ஒற்று ரகரஒற்றாம்; அவ்விடத்து உகரம் வருக எ-று.

வருமாறு: ஒருபஃது - என வரும். *(33)*

## நச்சினார்க்கினியம்

### *438. ஒன்று இரண்டு, ஒரு இரு எனத் திரிதல்*

**முதல்ஈர் எண்ணின் ஒற்று ரகரம் ஆகும்**
**உகரம் வருதல் ஆவயி னான.**

இது மேற்கூறியவற்றின் சிலவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

*(இ-ள்.)* முதல்.....ஆகும் - அவற்றின் முதற்கண் நின்ற இரண்டு எண்ணினுடைய னகர ஒற்றும் ணகர ஒற்றும் ரகர ஒற்றாகத் திரிந்து நிற்கும்; ஆவயினான உகரம் வருதல் அவ்விடத்து உகரம் வருக எ-று.

வருமாறு : ஒருபஃது என வரும். ஒன்று என்பதன் ஈற்றுக்குற்றுகரம் மெய்யொடும் கெடுத்து, னகரஒற்றினை ரகர ஒற்றாக்கி உகரம் ஏற்றி ஒரு என நிறுத்தி, நின்ற பத்து என்பதன் தகரஒற்றுக்கெடுத்து ஆய்தமாக்கிப் பஃதென வருவித்து, ஒருபஃது என முடிக்க.

மேல் வருவனற்றிற்கும் சூத்திரங்களாற் கூறும் சிறப்பு விதி ஒழிந்தவற்றிற்கு இதுவே முடிபாகக் கொள்க. *(33)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***439.*** **முதல்ஈர் எண்ணினொற்று.......ஆவயி னான.**

நச்சினார்க்கினியத்தில் "மேல் வருவனவற்றிற்கும் சூத்திரங்களாற் கூறும் சிறப்புவிதி ஒழிந்தவற்றிற்கும் இதுவே முடிபாகக் கொள்க" என்ற தொடர் உள்ளது. மேல்வரும் சூத்திரங்கள் ஒவ்வோர் எண்ணிற்குமுள்ள சிறப்புவிதி கூறுகின்றமையானும், 'ஒன்று முதல்' (438) என்ற சூத்திரம் அவற்றின் பொதுவிதியைக் கூறுகின்றமையானும், இச்சூத்திரம் ஒன்று இரண்டு இவ்விரண்டனைப் பற்றி மாத்திரம் கூறுகின்றமையானும், இத்தொடர் இடைச் செருகல் எனத் தோற்றுகிறது.

***439.*** [முதலீரெண்ணும் ஒரு-இரு-ஆதல், அளந்தறி கிளவிக்கண்ணும் நிறையின் கிளவிக்கண்ணும் மென்கணமும் இடைக்கணமும் குறித்து வரு கிளவியாக வரினும், நூறு அவ்வாறு வரினும், பொருந்தும் என்றுணர்த்த வேண்டி, நச்சினார்க்கினியர் குறிப்பிட்ட இத்தொடர் இடைச்செருகல் அன்று என்பது தெளியப்படும். இவ்வீரெண்கள் நீங்கலாகச் சிறப்புச் சூத்திரங்கள் தொடர்கின்றமையும், பொதுவிதி ஈற்றுக் குற்றியலுகரம் மெய்யொடும் கெடுதலை மாத்திரம் குறிக்கின்றமையும் காண்க.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***438.*** **முதலீ ரெண்ணினொற்று......ஆவயினான.**

இரண்டு என்னும் சொல் அடுத்த நூற்பாவான் முடியும். அச்சூத்திரம் இதன் பின்னிரண்டடிகளாக அமைந்து ஒன்றாக இருத்தல் வேண்டும். உரையாளர் வழக்கு நோக்கி ஈண்டு இரண்டாக வைத்து உரை கூறப்பட்டதென்க.

## இளம்பூரணம்

### 440. ஆண்டு இரண்டன் ரகரம் கெடுதல்

**இடைநிலை ரகரம் இரண்டுஎன் எண்ணிற்கு**
**நடைமருங்கு இன்றே பொருள்வயி னான.**

இதுவும் அது.

(இ-ள்.) அவ் இரண்டு என்றும் எண்ணிற்கு இடைநின்ற ஏகாரம், அம்மொழி பொருளாமிடத்து நடக்கும் இடமின்றிக் கெடும் எ-று.

வருமாறு : இருபஃது - என வரும். *(34)*

## நச்சினார்க்கினியம்

### 439. இடைநிலை ரகரம் இரண்டுஎன் எண்ணிற்கு நடைமருங்கு இன்றே பொருள்வயி னான.

இதுவுமது.

(இ-ள்.) இரண்டென் எண்ணிற்கு இடைநிலை ரகரம் - இரண்டு என்னும் எண்ணிற்கு இடைநின்ற ரகரம்; பொருள் வயினான - அம்மொழி பொருள் பெறுமிடத்து; நடை மருங்கு இன்று - நடக்கும் இடமின்றிக் கெடும் எ-று.

வருமாறு: இருபஃது என வரும்.

இதற்கு ரகரவுயிர்மெய் இதனாற் கெடுத்து, ஏனைய கூறியவாறே கூட்டி முடிக்க.

பொருள் எனவே, எண்அல்லாப் பெயரும் கொள்க.

இருகடல் இருவினை இருபிறப்பு என வரும். (34)

## இளம்பூரணம்

### *441. (நிலைமொழி) மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகுதல்*

**மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* மூன்று என்னும் எண்ணும், ஆறு என்னும் எண்ணும் நெடுமுதல் குறுகிமுடியும் எ-று.

வருமாறு : முப்பஃது அறுபஃது - என வரும். *(35)*

## நச்சினார்க்கினியம்

### *440. மூன்றும் ஆறும், முன் அறு - எனத் திரிதல்*

**மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* மூன்றும்.....குறுகும் - மூன்று என்னும் எண்ணும் ஆறு எண்ணும் எண்ணும் நெடுமுதல் குறுகி முடியும் எ-று.

வருமாறு: அறு எனக் குறுக்கிப் பஃது என வருவித்து அறுபஃது என முடிக்க. *(35)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***440.*** மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்.

***441.*** மூன்றன் ஒற்றே பகார மாகும்.

இவை இரண்டு சூத்திரம். உரையாளர் ஒன்றாக வைத்து உரை கூறுவர்.

## இளம்பூரணம்

### *442. அவ்வழி மூன்றன் னகரம் பகரம் ஆதல்*

**மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) மூன்று என்னும் எண்ணின்கண் நின்ற னகர வொற்றுப் பகரமாய் முடியும் எ-று.

வருமாறு: முப்பஃது - என வரும். *(36)*

## நச்சினார்க்கினியம்

### *441. மூன்றன் னகாரம் பகாரமாதல்*

**மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) மூன்றன்.....ஆகும் - மூன்று என்னும் எண்ணின்மேல் நின்ற னகரஒற்றுப் பகரஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : முப்பஃது என வரும். *(36)*

## இளம்பூரணம்

### *443. நான்கன் னகரம் றகரம் ஆதல்*

**நான்கன் ஒற்றே றகாரம் ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) நான்கு என்னும் எண்ணின்கண் நின்ற னகார வொற்று றகார வொற்றாய் முடியும் எ-று.

வருமாறு : நாற்பஃது - என வரும். *(37)*

### நச்சினார்க்கினியம்

## *442. நான்கன் னகாரம் றகாரமாதல்*

**நான்கன் ஒற்றே றகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* நான்கன்......ஆகும் - நான்கு என்னும் எண்ணின்கண் நின்ற னகரஒற்று றகரஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : நாற்பஃது என வரும். *(37)*

### இளம்பூரணம்

## *444. ஐந்தன் ஒற்று மகரம் ஆதல்*

**ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஐந்து என்னும் எண்ணின்கண் நின்ற நகார வொற்று மகாரவொற்றாய் முடியும் எ-று.

வருமாறு : ஐம்பஃது - என வரும்.

ஆறன் நெடுமுதல் குறுகியவாறே நின்று அறுபஃது- என வரும்.

ஏழ் குற்றுகர ஈறு அன்று [1]. *(38)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

***444.*** 1) இவ்வாக்கியம் இடைச்செருகல் என்க.

### நச்சினார்க்கினியம்

## *443. ஐந்தன் நகாரம் மகாரமாதல்*

**ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஐந்தன்......ஆகும் - ஐந்து என்னும் எண்ணின் கண் நின்ற நகரஒற்று மகரஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : ஐம்பஃது என வரும்.

ஏழ் குற்றியலுகரஈறு அன்மை உருபியலுள் *(194)* காண்க.[1] *(388 - 394)* *(38)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***443.*** 1. இவ்வாக்கியம் இடைச்செருகலாய் இருத்தல் கூடும் என்பர்.

## இளம்பூரணம்

### *445. எட்டன் ஒற்று ணகரம் ஆதல்*

**எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* எட்டு என்னும் எண்ணின்கண் நின்ற டகார வொற்று ணகார வொற்றாய் முடியும் எ-று.

வருமாறு : எண்பஃது - என வரும். *(39)*

## நச்சினார்க்கினியம்

### *444. எட்டன் டகாரம் ணகாரமாதல்*

**எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* எட்டன்.....ஆகும் - எட்டு என்னும் எண்ணின் கண் நின்ற டகர ஒற்று ணகரஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : எண்பஃது என வரும். *(39)*

## இளம்பூரணம்

### *446. ஒன்பது, பத்தொடு புணர்வழித் தொண்ணூறு என முடிதல்*

**ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்**
**முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்**
**பஃதுஎன் கிளவி ஆய்த பகரம்கெட**
**நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி**
**ஒற்றிய தகரம் றகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* நிலைமொழியாகிய ஒன்பது என்னும் சொல்லின் ஒகரத்திற்கு மேலாகத் தகரம் ஒற்றாய் மிக்கு வரும்; முன்சொன்ன ஒகரத்தின் முன்னர் னகரவொற்று இரண்டு ணகர வொற்றாய் மிக்கு வரும்; வருமொழியாகிய பஃது என்னும் சொல், தன்கண் பகரமும் ஆய்தமும் கெட, நிலைமொழியில் இரட்டிய ணகரத்தின் பின்னர் ஊகாரமாகிய எழுத்து நிற்றல் வேண்டும்; வருமொழியாகிய பத்து என்பதன் ஈற்றதன்மேல் ஏறிய உகரம் கெடாது பிரிந்து நிற்ப, ஒற்றாய் நின்ற தகரம் றகாரவெற்றாம் எ-று.

இஃது ஒன்பதும் பத்தும்[1] என நின்றால் முடியற்பாலது என்பது.

'பகர ஆய்தம்' என்னாத முறையன்றிய கூற்றினான், நிலைமொழிக்கண் பகரக் கேடும் கொள்க[2].

குற்றியலுகரமும் அஃது ஏறிய மெய்யும் முன்னர் மாட்டேற்றான் *(28; 32)* கெட்டன.

வருமாறு : தொண்ணூறு - என வரும். *(40)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***446.** 1)* ஒன்பஃதும் பஃதும் என்றிருத்தல் வேண்டும்.

2) 'ஆய்த பகரம்' கெடுதலை நிலைமொழி வருமொழி என இரண்டன்கண்ணும் கொண்டிருப்பின், நிலைமொழிக் கண் பகரக்கேட்டினை இலேசான் கொள்ள வேண்டியிராது என்பர் பின்னுரையாளர். தொல்லுரைகாரர் இருவருமே இந்நயத்தினை நெகிழ்த்துப்போயினர், நிலைமொழி வருமொழி யிரண்டன்கண்ணும் ஒருசேரத் திரிபு கூறார் ஆசிரியர் எனக் கருதிப் போலும்.

## நச்சினார்க்கினியம்

## *445. ஒன்பஃது பத்து வருவழி முடியுமாறு*

**ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்**
**முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்**
**பஃதுஎன் கிளவி ஆய்த பகரம்கெட**
**நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி**
**ஒற்றிய தகரம் றகரம் ஆகும்.**

இஃது எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) ஒன்பான்.....ஒற்றும் - ஒன்பது என நிறுத்திப் பஃது என வருவித்து முடிக்குங்கால், நிலைமொழியாகிய ஒன்பது என்னும் எண்ணினது ஒகரத்திற்கு முன்னாக ஒரு தகர ஒற்றுத் தோன்றி நிற்கும்; முந்தை....இரட்டும் : முன்சொன்ன ஒகரத்திற்கு முன்னர் நின்ற னகரஒற்று ணகரஒற்றாய் இரட்டித்து நிற்கும்; பஃது.....கெட - வருமொழியாகிய பஃது என்னும் சொல் தன்கண் ஆய்தமும் பகரமும் கெட்டுப்போக[1]; ஊகாரக் கிளவி நிற்றல் வேண்டும் - நிலைமொழியில் இரட்டிய ணகரத்தின் பின்னர் ஊகாரமாகிய எழுத்து வந்து நிற்றலை ஆசிரியன் விரும்பும்; ஒற்றிய....ஆகும் - வருமொழியாகிய பத்து என்பதன் ஈற்றின்மேல் ஏறிய உகரம் கெடாது பிரிந்து நிற்ப, ஒற்றாய் நின்ற தகரம் றகரஒற்றாய் நிற்கும் எ-று.

வருமாறு : தொண்ணூறு.

இதனை, ஒற்றாய் வந்து நின்ற தகரஒற்றின்மேல் நிலை மொழி ஒகரத்தை ஏற்றித் 'தொ' வ்வாக்கி, ணகர ஒற்று இரட்டி, அதன்மேல் வருமொழிக்கண் பகரமும் ஆய்தமும் கெட, வந்து ஊகாரம் ஏற்றித் 'தொண்ணூ' ஆக்கி, 'பகர ஆய்தம்' என்னாத முறையன்றிக் கூற்றினான் நிலைமொழிக்கண் பகரமும் ஆய்தமும் கெடுத்துக் குற்றியலுகரம் மெய்யொடும் கெடுத்து, வருமொழி இறுதித் தகர ஒற்றுத் திரிந்து நின்ற றகர ஒற்றின்மேலே நின்ற உகரம் ஏற்றித் தொண்ணூறு என முடிக்க. (40)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***445.*** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. ஒன்பஃது + பஃது என நிறுத்திப் புணர்க்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***446.*** **ஒன்பான் ஒகரமிசைத்....றகாரம் ஆகும்.**

"'பகர ஆய்தம்' என்னாத முறையன்றிய கூற்றினான் நிலைமொழிக்கண் பகரக்கேடு கொள்க" என இளம் பூரணரும், "'பகர ஆய்தம்' என்னாத முறையன்றிக் கூற்றினான் நிலைமொழிக்கண் பகரமும் ஆய்தமும் கெடுத்து" என நச்சினார்க்கினியரும் கூறினர். ஆசிரியர் குறைவுபடச் சூத்திரித்தனர் எனக் கொள்வதைக் காட்டிலும் 'பஃதென் கிளவி' என்பது ஒன்பஃது பஃது இரண்டிலும் இருப்பதைக் குறிக்கின்றது எனக்கொள்ளலாம்.

***446.*** [சாத்திரியார் கருத்தினையே ரெட்டியாரும் தழுவினார்; அவரைப் பாலசுந்தரம் அவர்களும் பின்பற்றி னார். நிலைமொழி வருமொழிகளை ஒன்பஃது + பஃது என்று தொல்லுரையாளர் கொண்டனரேனும், பஃது என் கிளவி நிலைவருமொழி இரண்டிலும் நிகழுமாற்றை நினைந் திலரே.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***445.*** **ஒன்பான் ஒகரமிசைத்......றகரம் ஆகும்.**

நிலைமொழியாகிய ஒன்பஃது என்னும் எண்ணிலுள்ளது என்பது, மேல் 'ஒன்றுமுதல் ஒன்பான்' என்ற சூத்திரத்தால் கெட்டது. ஆசிரியர் 'பஃதென் கிளவி ஆய்த பகரம் கெட' என்றதற்கு உரையாளர், "பஃது என்னும் சொற்கள் இரண்டிலுமுள்ள ஆய்தமும் பகரமும் கெட" என்று உரைகூறராய், அது வருமொழியிலுள்ள ஆய்தத்தையும் பகரத்தையும் குறித்ததாகக்கொண்டு உரை கூறினமையின், "'பகரஆய்தம்' என்னாத முறையன்றிக் கூற்றினான் நிலைமொழிக்கண் பகரமும் ஆய்தமும் கெடுத்து.......முடிக்க" எனல் வேண்டுவதாயிற்று.

தொண்ணூறு என்பது முன்னுள்ள நூறு (தொள்+நூறு); அஃதாவது நூற்றுக்கு முன் இருப்பது என்று கேரள பாணினீய ஆசிரியர் கூறுகிறார். இவ்வாறாயின், தொன்னூறு தொல்லாயிரம் என வருமேயன்றி, தொண்ணூறு தொள்ளாயிரம் என்று வாராதன்றே ? அவர், ஒன்பது என்னும் சொல் தொன்பது என்பதன் சிதைவு என்று கொண்டார்; தெலுங்கிலும் தொம்மிதி என்று வழங்குதலானும், தொன்பது என்பது பத்தற்கு முன் இருப்பது என்னும் பொருள் ஓராற்றால் தருதலானும், அதுவே அமைதியான சொல்லாகும் என்பது அவர் கருத்து.

இனி, விடு - விள், நடு - நள் என்பன போலவே, தொடு என்னும் சொல்லிற்குத் தொள் முதனிலை ஆகும். ஆகலின், தொண்ணூறு என்பது நூற்றைத்தொடுவது என்னும் பொருளதாகலாம். இதுவும் சிறப்பதாயில்லை.

***445.*** [ஒன்பஃது + பஃது = தொண்ணூறு என முடிந்து நின்ற சொல்வழக்கிற்குத் தொல்காப்பியனார் சூத்திரம் அமைத்தாரன்றி, நிலைமொழி வருமொழி பற்றிய சொற்பிறப் பாராய்ச்சியுள் புக்கிலர். தொள்ளாயிரம் என்புழியும் இவ்வாறே கொள்க.

'ஆய்த பகரம் கெட' என்பதனை வருமொழிக்கே சொல்லியதாக உரையாளர் கொண்டு, இலேசினான் நிலைமொழிப் பகர ஆய்தங்களைக் கெடுத்தனர். இரு மொழிக்கண்ணும் இக்கேட்டினைக் கொள்ள வேண்டும் என்ற சாத்திரியார் கருத்தினை இவ்வுரைகாரரும் சுட்டினார்.

இந்நிலைமொழி வருமொழிகளைக் குறிப்பதில் மொழியியல் நூலாரிடையும் கருத்து வேறுபாடுண்டு. தொள்ளாயிரம் என்புழியும் அது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***445.*** **ஒன்பான் ஒகாமிசை......றகர மாகும்.**

ஒன்பான் என்பது ஒன்பஃது என்பதன் திரிபுப் பெயர். பஃது என்பதும் பத்து என்பதன் திரிபாகும்.

*வருமாறு: ஒன்பஃது+பஃது=தொண்ணூறு என வரும்.*

*திரிந்தமுறை: ஒன்பஃது> தொன்பஃது> தொண்ண் பஃது> தொண்ண்> தொண்ணூ; பஃது> து> று = தொண்ணூறு.*

## இளம்பூரணம்

### ***447. ஒன்று முதல் ஒன்பான்கள் நிலைமொழியாக நிற்ப, அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு***

**அளந்தறி கிளவியும் நிறைஎன் கிளவியும்**
**கிளந்த இயல தோன்றுங் காலை.**

இச்....எனின், மேற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான் களோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறு.....ற்று.

(இ-ள்.) மேற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான்களின் முன்னர், அளந்து அறியப்படும் அளவுப்பெயர்ச் சொல்லும், நிறை என்னும் பெயர்ச்சொல்லும்[1] தோன்றுங்காலத்து, அவ்வொன்று முதல் ஒன்பான்கள், மேல் பத்து என்பதனொடு புணரும்வழிக் கிளந்த இயல்பினவாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* ஒரு கலம் இருகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி - எனவும், கழஞ்சு தொடி பலம் - எனவும் வரும்.

தோன்றுங்காலை என்றதனான், அவ்வெண்களின் முன் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்ற எண்ணுப் பெயரை எல்லாம், இவ்விதியும் பிறவிதியும் எய்துவித்து முடித்துக் கொள்க.

*(உ-ம்.)* ஓரொன்று ஓரிரண்டு ஈரொன்று ஈரிரண்டு ஒருமுந்திரிகை இருமுந்திரிகை ஓரரைக்கால் ஈரரைக்கால் ஒருகால் இருகால் ஓரரை ஈரரை ஒருமுக்கால் இருமுக்கால் - என ஒட்டிக் கொள்க. *(41)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***447.*** *1)* நிறைப்பெயர்ச்சொல்லும் என்பதே பொருள்.

**நச்சினார்க்கினியம்**

***446. ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு அளவு நிறைப் பெயர்கள் முடியுமாறு***

**அளந்துஅறி கிளவியும் நிறையின் கிளவியும்**
**கிளந்த இயல தோன்றுங் காலை.**

இது மேற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* அளந்தறி......கிளவியும் - முற்கூறிய ஒன்று முதல் ஒன்பான்களின் முன்னர், அளந்தறியப்படும் அளவுப் பெயரும் நிறைப்பெயரும்; தோன்றுங்காலை - தோன்றுங் காலத்து; கிளந்த இயல - ஆறன் ஈறு அல்வழிக் குற்றுகரம் மெய்யொடும் கெட்டு, முதல் ஈர் எண்ணின் ஒற்று ரகரமாய் உகரம் வந்து, இடைநிலை ரகரம் இரண்டற்குக் கெட்டு,

மூன்றாம் ஆறும் நெடுமுதல் குறுகி, நான்கன் ஒற்று வன்கணத்து றகரமாய், எட்டனொற்று ணகரமாய் முடியும் எ-று.

(உ-ம்.) ஒருகலம் இருகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், ஒருகழஞ்சு இருகழஞ்சு கஃசு தொடி பலம் எனவும் வரும்.

அகல் உழக்கு என்பன முன்னர் (455) முடிந்தும்.

இவை முதல் ஈரெண்ணின் செய்கை.

தோன்றுங்காலை என்றதனான், இவ்வெண்ணின் முனனர், எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்ற எண்ணுப்பெயர்கள் எல்லாம் இவ்விதியும் பிறவிதியும் எய்தவித்து முடித்துக்கொள்க.

ஒருமூன்று ஒருநான்கு இரு மூன்று இருநான்கு ஒருகால் இருகால் ஒருமுந்திரிகை இருமுந்திரிகை ஒரு முக்கால் இருமுக்கால் என்பன பிறவும் கொணர்ந்து ஒட்டுக.

இனிப் பிறவிதி எய்துவது: ஓரொன்று ஓரிரண்டு ஓரைந்து ஓராறு ஓரேழ் ஓரெட்டு ஓரொன்பது எனவும், ஈரொன்று ஈரிரண்டு ஈரைந்து ஈராறு ஈரேழு ஈரெட்டு ஈரொன்பது எனவும், மூவொன்று, மூவிரண்டு மூவைந்து மூவாறு மூவேழு மூவெட்டு மூவொன்பது எனவும், 'முதலீர் எண்ணின்முன் உயிர்' (455) என்னும் சூத்திரத்தான் உயிர்க்கு எய்திய பிறவிதியும், 'மூன்றன் முதனிலை நீடலு முரித்து' (457) என்ற பிறவிதியும் பெற்றுப் பிற செய்கைகளும் பெற்று முடிந்தன. நாலொன்று நாலிரண்டு நாலைந்து நாலாறு நாலேழு நாலெட்டு நாலொன்பது என்பன நான்கன் ஒற்றே லகார மாகும் (453) என்ற விதிபெற்று முடிந்தன.

பிறவும் இவ்வொற்றேயன்றி, அளவும் நிறையும் அன்றி வருவன எல்லாம் இலேசான் முடிக்க. (41)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**446.** 1. அளவும் நிறையுமன்றிப் பிற பொருட்பெயராக வருவன எல்லாம் - என்று பொருள் கொள்க.

## இளம்பூரணம்

***448. நிலைமொழி மூன்றன் னகரம் வருமொழிமுதல் வந்த ஒற்றாய்த் திரிதல்***

**மூன்றன் ஒற்றே வந்தது ஒக்கும்.**

இச்....எனின், இது மாட்டேறு எய்தாதற்கு வேறு முடிபு கூறு.......ற்று.

(இ-ள்.) மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று, வருமொழியாய் வந்த அளவுப்பெயர் நிறைப்பெயரின் முதல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும் எ-று.

(உ-ம்.) முக்கலம் சாடி தூதை பானை - எனவும், கழஞ்சு தொடி பலம் - எனவும் வரும்.

மாட்டேற்றானே (37), நாற்கலம் சாடி தூதை பானை- எனவும், நாற்கழஞ்சு தொடி பலம்[1] - எனவும் வரும். (42)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**448.** 1) நான்கனொற்றுத் திரிதற்குச் சூத்திரம் இல்லாமையான், மாட்டேற்றானே அத்திரிபு கொள்வதாக உதாரணம் கூறினார்.

## நச்சினார்க்கினியம்

***447. மூன்றன் னகாரம் வந்த வல்லொற் றாதல்***

**மூன்றன் ஒற்றே வந்தது ஒக்கும்.**

இது மேல் மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) மூன்றன்.....ஒக்கும் - மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று, வருமொழியாய் வந்த அளவுப் பெயர் நிறைப்பெயர்களின் முன்னர் வந்த வல்லொற்றிற்கு ஒத்த ஒற்றாய்த் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) முக்கலம் சாடி தூதை பானை எனவும், முக்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

'நான்கன் ஒற்றே றகார மாகும்' (442) என்ற முன்னை மாட்டேறு நிற்றலின், நாற்கலம் சாடி தூதை பானை எனவும், நாற்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். (42)

## இளம்பூரணம்

### *449. ஐந்தன் நகரஒற்று வருமொழி வல்லெழுத் திற்கு இனமெல்லெழுத்தாய்த் திரிதல்*

**ஐந்தன் ஒற்றே மெல்லெழுத்து ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) ஐந்தாவதன்கண் நின்ற நகார ஒற்று மேல் வருகின்ற வருமொழி முதல் வல்லெழுத்திற்கு ஏற்ற மெல்லெழுத்தாய் முடியும் எ-று.

(உ-ம்.) ஐங்கலம் சாடி தூதை பானை - எனவும் ஐங்கழஞ்சு தொடி பலம் - எனவும் வரும். (43)

## நச்சினார்க்கினியம்

### *448. ஐந்தன் நகாரம் வந்த வல்லொற்றிற் கேற்ற மெலியாகத் திரிதல்*

ஐந்தன் ஒற்றே மெல்லெழுத்து ஆகும்.

இதுவும் அது.

(இ-ள்.) ஐந்தன்.....ஆகும் - ஐந்தாவதன்கண் நின்ற நகர-ஒற்று வருமொழி வல்லெழுத்துக்கு ஏற்ற மெல்லெழுத்தாகத் திரிந்து முடியும் எ-று.

(உ-ம்.) ஐங்கலம் சாடி தூதை பானை எனவும், ஐங்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

ஏகாரம் ஈற்றசை. (43)

## இளம்பூரணம்

### 450. மேலைய திரிபுஇரண்டும் வன்கணம் வருவழியே என்பது

**கசதப முதல்மொழி வரூஉங் காலை.**

இச்....எனின், மேற்கூறிய மூன்றற்கும் ஐந்தற்கும் வருமொழி வரையறுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) மூன்றன் ஒற்று வந்தது ஒப்பதூஉம்,[1] ஐந்தன் ஒற்று மெல்லெழுத்து ஆவதூஉம், அவ்வளவைப் பெயர் நிறைப் பெயர் ஒன்பதினும் (தொகை. 28) வன்கணமாகிய கசதப - முதல்மொழிகள் வந்தவிடத்து எ-று.

மேல் மாட்டேற்றானே (35), அறுகலம் சாடி தூதை பானை - எனவும், அறுகழஞ்சு தொடி பலம் - எனவும் வரும்.

ஏழ் குற்றுகரஈறு அன்மையின் மாட்டேறு ஏலா தாயிற்று.[2] (44)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**450.** 1) நான்கனொற்று றகாரமாய் முடிவதூஉம் - என இடையே இத்தொடரை இணைத்துரைப்பின் உரை நிரம்பும்.

2) இவ்வாக்கியம் இடைச்செருகலாதலின் விலக்கப் படும்.

## நச்சினார்க்கினியம்

### 449. இத்திரிபுகள் வன்கணம் வருவழியே என்றல்

**க ச த ப முதல்மொழி வரூஉங் காலை.**

இது முற்கூறிய மூன்றற்கும் ஐந்தற்கும் வருமொழி வரையறுக்கின்றது.

(இ-ள்.) கசதப.....காலை - மூன்றன் ஒற்று வந்தது ஒப்பதூஉம், ஐந்தன் ஒற்று[1] மெல்லெழுத்து ஆவதூஉம், அவ் அளவுப்பெயர் நிறைப்பெயர் ஒன்பதினும் வன்கணமாகிய கசதபக்கள் முதன்மொழியாய் வந்தவிடத்து எ-று.

அது முன்னர்க் காட்டினாம்.

'நெடுமுதல் குறுகும்' (440) என்று மாட்டேற்றானே, ஆறு நெடுமுதல் குறுகிற்று.

(உ-ம்.) அறுகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், அறுகழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

அகல் உழக்கு என்பன மேற்காட்டுதும் (458 உரை.)

ஏழ் குற்றுகர ஈறு அன்மையின் மாட்டேறு ஏலாதாயிற்று[2]. (44)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**449.** 1, 2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**450.** க ச த ப முதன்மொழி வரூஉங் காலை.

இச்சூத்திரமும் இதன் முன்னருள்ள இரண்டு சூத்திரங் களும் ஒன்றாயிருத்தல் வேண்டும் எனச் சிதம்பரம்பிள்ளை கூறுதல் பொருந்தும்.

"ஏழு ஏழ் குற்றுகரவீறு அன்மையின் மாட்டேறு ஏலாதாயிற்று" என்று இருவர் உரைப்பதிப்புக்களிலும் காணப்படும் தொடர் இடைச்செருகலாயிருத்தல் கூடும்.

***450.*** [இருவருரைப் பதிப்புக்களிலும் காணப்படும் இடைச்செருகல் தொடரை இனங்கண்டு புலப்படுத்தி யுள்ளார் இவ்வுரைகாரர். ஏழு ஏழ் இவை குற்றுகரவீறு அன்மையை உரையாளர் இருவரும் நினைவுறுத்த வேண்டா. சாத்திரியார் உரையில் 'ஏழு' என்று காணப்படுவது அச்சுப் பிழை போலும்.]

## இளம்பூரணம்

***451. மென்கணமும் உயிர்க்கணமும் வருவழி எட்டு 'எண்' எனவே நிற்றல்***

**ந ம வ என்னும் மூன்றொடு சிவணி**
**அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே.**

இச்....எனின், வேண்டா கூறி வேண்டியது முடித்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* அளவுப்பெயர் நிறைப்பெயர்களில் மென் கணத்து இரண்டும் இடைக்கணத்து ஒன்றும் ஆகிய ந ம வ - என்னும் மூன்றனொடும் பொருந்தி உயிர்க்கணத்து அகர முதல்மொழி வரினும், உம்மையால் அவ் உயிர்க்கணத்து ஒழிந்த உகரமும் கூறாத வல்லெழுத்துக்களும் வரினும், எட்டு என்பதன்முன் மேற்கூறிய விகாரமே விகாரமாக *(39)* வேறொரு விகாரமின்றி இயல்பாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* எண்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு - எனவும், தொடி பலம் - எனவும் வரும்.

இவ்வேண்டா கூறலான், எண்ணகல் எனத்தொடர் மொழிக்கண்[1] ஒற்று இரட்டுதல் கொள்ளப்பட்டது. *(45)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***451.*** *1)* தொடர்மொழியாக வருமிடத்து என்று பொருள் கொள்க.

எண்+அகல் என்புழி ஒற்றிரட்டுதல் 'குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டலும்' (161) என்று பொது விதியாற் கொள்ளப்படாது. ஆசிரியர் எண்ணுப்பெயரினை விதந்தோதியே முடிப்பாராதலின், இச்சூத்திரத்து 'வேண்டா கூறல்' ஆகிய இலேசினான் இம்முடிபு கூறினார் உரையாசிரியர். 145ஆம் சூத்திரத்து விதியே ஈண்டு நிகழ்தலின், இச்சூத்திரம் வேண்டா கூறலாக இளம்பூரணர் கருதுகிறார். நச்சினார்க்கினியரும் இதனை வழிமொழிந்தார்.

**நச்சினார்க்கினியம்**

***450. மென்கணமும் இடைக்கணமும் வரும்வழியும், எட்டு 'எண்' எனவே நிற்றல்***

**ந ம வ என்னும் மூன்றொடு சிவணி**
**அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே.**

இது வேண்டாது கூறி வேண்டியது முடிக்கின்றது, ஞநமயவ (144) முதலிய சூத்திரத்துள் கூறியவற்றைக் கூறுதலின்.

(இ-ள்.) எட்டன்முன் - எட்டு என்பதன் முன்னர்; நமவ....வரினும் - அளவுப் பெயர்களின் முன்னர் மென்கணத்து இரண்டும் இடைக்கணத்து ஒன்றும் ஆகிய நமவ என்னும் மூன்றனொடு பொருந்தி உயிர்க்கணத்து அகரம் வரினும், உம்மையான், உயிர்க்கணத்து உகரம் வரினும், கூறாத வல்லெழுத்துக்கள் வரினும்; இயல்பு - முற்கூறிய வாறே டகாரம் ணகரமாய் வேறொரு விகாரமின்றி இயல்பாய் முடியும் எ-று.

நமவ என்னும் மூன்றும் வந்தாற்போல அகரம் வரினும் என்பது பொருள்.

(உ-ம்.) எண்ணாழி மண்டை வட்டி (150) எனவும், எண்ணகல் எண்ணுழக்கு (160) எனவும், எண்கலம் சாடி தூதை பானை (444) எனவும் வரும்.

**ஒன்றென முடித்தலான்**, வன்கணத்து நிறைப்பெயரும் கொள்க. எண்கழஞ்சு தொடி பலம் என வரும்.

இவ்வேண்டா கூறலான், எண்ணகல் எனக் குற்றுகர ஈறாய்க் கேடும் *(433)* திரிவும் பெற்று[1] உயிர் வருமொழியான தொடர்மொழிக்கண்[2] ஒற்று இரட்டுதல் கொள்க. *(45)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***450.*** 1. குற்றியலுகரம் மெய்யொடும் கெடுதல் கேடு; டகரம் ணகரம் ஆதல் திரிபு.

2. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***451.*** **ந ம வ என்னும்......எட்டன்முன் இயல்பே.**

(இ-ள்.) எட்டு என்பதன் முன்னர் முற்கூறப்பட்ட வல்லெழுத்துக்களோடு ந ம வ அ இவை வரின், 'எட்ட னொற்றே ணகாரம் ஆகும்' *(445)* என்ற சூத்திரத்திற் கூறப் பட்ட தன்மையைப்பெறும்.

'எட்டன்முன் இயல்பே' என்றவிடத்து 'முன்' என்ற சொல்லை இருமுறை கொண்டு, எட்டன்முன் - முன் இயல்பே - என உரைத்தல் வேண்டும். அவ்வாறு 'கிளை' என்ற சொல்லை 415ஆம் சூத்திரத்தில் இருமுறை கொண்டது காண்க. அவ்வாறு கொள்ளாது 'இயல்பே' எனக்கொண்டு, "இது வேண்டாது கூறி வேண்டாது கூறி வேண்டியது முடிக்கின்றது, 'ஞ ந ம ய வ' *(145)* என்னும் சூத்திரத்துள் கூறியவற்றையே கூறுதலின்" என நச்சினார்க்கினியர் கூறினார்.

"இவ்வேண்டா கூறலான் எண்ணகல் எனத் தொடர் மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்ளப்பட்டது" என்ற இளம்பூரணர் கூற்றும் ஒவ்வாது. அவ்வாறு ஒற்றிரட்டல் எதனாற் பெறப்படும் எனின், 'குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டலும்' *(161)* என்ற சூத்திரத்தான் என்க.

**451.** ['எட்டு' என்னும் எண்ணுப்பெயர் குற்றுகரம் மெய்யொடும் கெட்டு டகரம் ணகரமாய்த் திரிந்து 'எண்' என விதியீறாக நிற்க, அகல் உழக்கு என்னும் அளவுப் பெயர்கள் குறித்து வரு கிளவியாக வருமிடத்து, ணகர விதியீறு இரட்டித்து முடிதலை 'வேண்டாது கூறி வேண்டியது முடித்தல்' என்னும் உத்தியாற் கொண்டனர் உரைகாரர், இவ்வாறு எண்ணுப்பெயர் முடிபினைக் 'குறியதன் முன்னர்த் தன்னுரு விரட்டலும்' *(161)* என்னும் பொதுவிதியான் அடக்கலாகாமையின்.]

## இளம்பூரணம்

## *452. ஐந்து, மூன்றும் இவற்றின் இடையொற்று ந ம வருவழி அவ்வந்த ஒற்றாகவே திரிதல்*

**ஐந்தும் மூன்றும் நம வருங்[1] காலை**
**வந்தது ஒக்கும் ஒற்றுஇயல் நிலையே.**

இச்.....எனின், ஐந்து என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும், நகர முதல்மொழியும் மகர முதல் மொழியும் வருமொழியாய் வருங்காலத்து, தங்கண் நின்ற ஒற்று நடக்கும் நிலைமை சொல்லின், அவ்வருமொழி முதல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும் எ-று.

(உ-ம்.) முந்நாழி மும்மண்டை ஐந்நாழி ஐம்மண்டை - என வரும்.

மூன்றும் ஐந்தும் என்னாத முறையன்றிய கூற்றினான், நானாழி என்னும் முடிபின்கண், விகாரமாகிய[2] னகரத்தின் முன்னர் வருமொழி நகரத்திரிபும், அது காரணமாக நிலைமொழி னகரக் கேடும் கொள்ளப்பட்டன[3]. *(46)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**452.** 1) 'நமவரு காலை' என்பதே பொருந்தும் பாடமாகத் தோன்றுகிறது.

2) நான்கு+நாழி> நான்+நாழி> நான்+னாழி> நா+னாழி = நானாழி.

'நிலைமொழி விகாரமாகிய னகரம்' என்று இளம்பூரணர் உரையுள் காணப்படுகிறது பொருந்தவில்லை. னகரம் ஆண்டு இயல்பாக நின்றது. (இது நச்சினார்க்கினியர் உரையானும் தெளிவாம்)

3) வருமொழி நகரம் னகரமாகத்திரியும்; 'லனஎன வரூஉம்' (150) என்பது விதி. நிலைமொழி னகரக்கேடு இலேசாற் கொள்ளப்படும். 'நெடியதன் முன்னர்' (159) என்னும் பொதுவிதி கூறற்க. எண்ணுப்பெயரை ஆசிரியர் விதந் தோதியே முடிப்பாராதலின், ஆசிரியர் அவ்வாறு கிளந்து கூறாவிடத்துச் சூத்திரத்து இலேசினான் அதனை முடித்தல் உரையாசிரியர்தம் கொள்கை.

**நச்சினார்க்கினியம்**

**451. ந ம - வருவழி, ஐந்து மூன்று இவற்றின் ஒற்று வந்த ஒற்றாதல்**

> **ஐந்தும் மூன்றும் நம வரு காலை**
> **வந்தது ஒக்கும் ஒற்றுஇயல் நிலையே.**

இதுவும் மேல்மாட்டேற்றான் எய்தியதோடு (441, 443) ஒவ்வா முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) ஐந்தும்.....காலை - ஐந்து என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும் நகரமுதல்மொழியும் மகர முதல் மொழியும் வருமொழியாய் வருங்காலத்து; வந்தது ஒக்கும்- மேற்கூறியவாறே மகரமும் பகரமும் ஆகாது, வருமொழி முதல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும் எ-று.

(உ-ம்.) ஐந்நாழி ஐம்மண்டை, முந்நாழி மும்மண்டை என வரும்.

'மூன்றும் ஐந்தும்' என்னாத முறையன்றிக் கூற்றினான், நின்றவாறே நின்று முடிதலும், வருமொழி முதல்நின்ற நகரம் னகரமாகத் திரிய (144) நிலைமொழி னகரம் கெடுதலும் (462) கொள்க.[1] (46)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*451.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க. நிலைமொழி னகரம் நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும் (160) என்னும் விதியாற் கெடுக்கலாகாமை உணர்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**452. ஐந்தும் மூன்றும்.....ஒற்றியல் நிலையே.**

"'மூன்றும் ஐந்தும்' என்னாத முறையன்றிய கூற்றினான், நானாழி என்னும் முடிபின்கண் விகாரமாகிய னகரத்தின் முன்னர் வருமொழி நகரத்திரியும், அதன் காரணமாக நிலைமொழி னகரக்கேடும் கொள்ளப்பட்டன" என்றார் இளம்பூரணர். நானாழியோடு நான் மண்டையையும் சேர்த்துக் கூறினார் நச்சினார்க்கினியர்.

நான்கு+நாழி என்னுமிடத்து, 'அளந்தறி கிளவியும்' (447) என்ற சூத்திரத்தால் குகரக்கேடும், னகரஒற்று றகர வொற்றாய்த் திரிதலும் கொள்ளல்வேண்டும். ஆனால் றகர வொற்றின்பின் க ச ப ற இவை நான்கே வரும் என்று நூன்மரபிற் கூறப்பட்டமையான் (23, 30), ஈண்டுக் குகரக் கேட்டை மாத்திரம் கொள்ளல் வேண்டும். அப்போது நான்+ நாழி என்றிருக்க, வருமொழி நகர ஆகாரம் 'லனஎன வரூஉம் புள்ளி முன்னர்' (150) என்றதனான் னகர ஆகாரமாய்த் திரிய, 'நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்' என்றதனான் நிலைமொழி னகரஈறு கெட நானாழி என்ற உருவம் பெறப்படும். இவ்வாறு கொள்ளுதல் நேரிதாயிருக்க, முறையன்றிய கூற்றினான் இதனை உரைகாரர் கொள்ளுதல் வேண்டா. குகரக்கேட்டின் பின்னர், றகரத்தின் பின்னர் மகரம் வருதற்கின்மையான், நான்மண்டை என்ற உருவமும் பெறப்படும்.

***452.*** [கிளந்தோதும் எண்ணுப்பெயர் நிலைமொழியாக நிற்க, அளவுப்பெயர் முதலியன குறித்துவரு கிளவியாகத் தோன்றுமிடத்து, நிலைமொழித் திரிபினைப் பொது விதியான் ஆசிரியர் முடியார் என்பது தொல்லுரையாளர் கருத்து. வருமொழித் திரிபு பொதுவிதியான் முடிதல் கூடும். நிலைமொழித்திரிபு கிளந்தோதப்படாவழி, அதனை 'முறை யன்றிக் கூற்று' - மிகைச்சொல்-முதலான இலேசான் அடக்கிக் கூறுவர் உரைகாரர்.

நானாழி என்புழி, நிலைமொழியீற்றுக் குற்றுகரம் எண்ணும் பெயர்(ப் பொது)விதியான் *(434, 438)* மெய்யொடும் கெட்டுப்போக, வருமொழி முதல் நகரம் லனஎன வரூஉம் என்னும் விதியான் னகரமாகத் திரியும். நிலைமொழியீற்று னகரம் 'நெடியதன் முன்னர்' என்னும் பொதுவிதியான் கெடாது. முறையன்றிக் கூற்றினான் கெடுக்கப்படும். நான்கு+நாழி> நான்+நாழி> நான்+னாழி> நா+னாழி= நானாழி என முடிந்தவாறு.]

**இளம்பூரணம்**

## ***453. மூன்றன் ஒற்று வகரம் வருவழி அவ்வகரமாகத் திரிதல்***

**மூன்றன் ஒற்றே வகாரம் வருவழி**
**தோன்றிய வகரத்து உருபுஆ கும்மே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று, வகர வருமொழி வருமிடத்து, வருமொழியாய்த் தோன்றிய வகரத்து உருபாய் முடியும் எ-று.

*(உ-ம்.)* முவ்வட்டி - என வரும்.

தோன்றிய என்றதனான், முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்றுமாம்.

இன்னும் அதனானே, முதல் நீளாது ஒற்றின்றி முவட்டி என்றும் ஆம். *(47)*

## நச்சினார்க்கினியம்

### *452. வகரம் வருவழி, மூன்றன் னகாரம் வகாரமாதல்*

**மூன்றன் ஒற்றே வகரம் வருவழித்**
**தோன்றிய வகரத்து உருஆ கும்மே.**

இதுவும் அது.

(இ-ள்.) மூன்றன் ஒற்று-மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று; வகரம் வருவழி - வகர முதல்மொழி வருமிடத்து; தோன்றிய......ஆகும் - அவ்வருமொழியாய்த் தோன்றிய வகரத்தின் வடிவாய் முடியும் எ-று.

(உ-ம்.) முவ்வட்டி[1] என வரும்.

'தோன்றிய' என்றதனானே, முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்றுமாம். (47)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***452.*** 1. 440ஆம் சூத்திரவிதியான் மூன்று நெடுமுதல் குறுகிற்று.

## இளம்பூரணம்

### *454. நான்கன் ஒற்று அவ்வழி லகர மாதல்*

**நான்கன் ஒற்றே லகாரம் ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) நான்காம் எண்ணின்கண் நின்ற னகார ஒற்று, வகரம் வந்தால், லகர ஒற்றாய்த் திரிந்து முடியும்.

(உ-ம்.) நால்வட்டி - என வரும். (48)

**நச்சினார்க்கினியம்**

### *453. நான்கன் னகாரம் லகாரமாதல்*

**நான்கன் ஒற்றே லகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* நான்கன்.....ஆகும் - நான்காம் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று, வகர முதல்மொழி வந்தால் லகர ஒற்றாகத் திரிந்தது முடியும் எ-று.

*(உ-ம்.)* நால்வட்டி என வரும்.

**இளம்பூரணம்**

### *455. ஐந்தன் ஒற்று அவ்வழிக் கெடுதல்*

**ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகரஒற்று, வகரம் வந்தால், முன் நின்ற வடிவு கெட்டு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஐவட்டி - என வரும்.

முந்தை என்றதனான், நகரவொற்றுக் கெடாது அவ்வகரமாய்த் திரிந்து ஐவ்வட்டி என்றுமாம். *(49)*

**நச்சினார்க்கினியம்**

### *454. ஐந்தன் நகாரம் கெடுதல்*

**ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஐந்தன்......கெடும் - ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகரஒற்று, வகர முதல்மொழி வந்தால் முன்நின்ற வடிவு கெட்டு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஐவட்டி என வரும்.

'முந்தை' என்றதனான், நகரஒற்றுக் கெடாது வகர ஒற்றாகத் திரிந்து ஐவ்வட்டி எனச் சிறுபான்மை வரும். *(49)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**454. ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே.**

முந்தையது கெடும் - தன்முன் வரும் வகரவொற்றாய்த் திரிந்து பின்னர்க் கெடும். முந்தையதாய்க் கெடும் என்றதனான், சிறுபான்மை கெடாது ஐவ்வட்டி என வருதலுமாம்.

**454.** ['முந்தையது' என்றதற்கு உரையாசிரியன்மார் முன்னின்ற வடிவு என்று கொண்ட பொருளே சிறக்கும்.] தி.வே.கோ.

## இளம்பூரணம்

**456. ஒன்று, இரண்டு - உயிர்க்கணம் வருவழி ஓர் ஈர் ஆதல்**

**முதல்ஈர் எண்ணின்முன் உயிர்வரு காலைத்**
**தவல்என மொழிப உகரக் கிளவி**
**முதல்நிலை நீடல் ஆவயி னான.**

இதுவும் அது.

*(இ-ள்.)* முற்பட்ட இரண்டு எண்ணின்முன், உயிர் முதல் மொழி வருங்காலத்து, உகரமாகிய எழுத்துக் கெடும் என்று சொல்லுவர்; அவ்வெண்ணின் முதற்கண் நின்ற எழுத்துக்கள் அவ்விடத்து நீண்டு முடியும் எ-று.

*(உ-ம்.)* ஓரகல் ஈரகல் ஒருழக்கு ஈருழக்கு - என வரும். *(50)*

## நச்சினார்க்கினியம்

**455. உயிர்வருவழி, முதல் ஈரெண்ணும் ஓர், ஈர்-ஆதல்**

**முதல்ஈர் எண்ணின்முன் உயிர்வரு காலை**
**தவல்என மொழிப உகரக் கிளவி**
**முதல்நிலை நீடல் ஆவயி னான.**

இது மாட்டேற்றான் (446) எய்திய உகரத்திற்கு (438)க் கேடு கூறி முதல் நீள்க என்றலின், எய்தியது விலக்கிப் பிறிது விதி கூறுகின்றது.

(இ-ள்.) முதல்.....காலை - ஒரு இரு என முடிந்து நின்ற முதல் இரண்டு எண்ணின் முன்னர், உயிர் முதல்மொழி வருமொழியாய் வருங்காலத்து, உகரக்கிளவி தவல் என மொழிப - நிலைமொழி உகரம் ஆகிய எழுத்துக் கெடுதல் ஆம் என்று சொல்லுவர் புலவர்; ஆவயினான முதல்நிலை நீடல் - அவ்விரண்டு எண்ணின்கண் நின்ற முதலெழுத்துக்கள் நீண்டு முடியும் எ-று.

(உ-ம்.) ஓரகல் ஈரகல் ஓருழக்கு ஈருழக்கு என வரும். (50)

**இளம்பூரணம்**

## 457. உயிர் வருவழி, மூன்று நான்கு ஐந்து என்பன, வகரம் வருவழிப்போல் திரிந்து முடிதல்

**மூன்றும் நான்கும் ஐந்துஎன் கிளவியும்**
**தோன்றிய வகரத்து இயற்கை ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) மூன்று என்னும் எண்ணும் நான்கு என்னும் எண்ணும் ஐந்து என்னும் எண்ணுச் சொல்லும், மேல் தோன்றி முடிந்த வகரத்து இயற்கையாய் (47, 48, 49), மூன்றன்கண் வகர ஒற்றாயும், நான்கன்கண் லகர ஒற்றாயும், ஐந்தன்கண் ஒற்றுக் கெட்டும் முடியும் எ-று.

(உ-ம்.) முவ்வகல் முவ்வுழக்கு - எனவும், நாலகல் நாலுழக்கு - எனவும், ஐயகல் ஐயுழக்கு[1] - எனவும் வரும்.

'தோன்றிய' என்றதனான், மேல் மூன்று என்பது முதல் நீண்டவிடத்து, நிலைமொழி னகரஒற்றுக் கெடுத்துக் கொள்க.

இயற்கை என்றதனான், தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்க.[2] (51)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*457.* 1) ஈண்டு யகரம் உடம்படுமெய் என்க. (63ஆம் சூத்திர உரை)

2) அகல், உழக்கு என்பன வருமொழியாக, இவ்வாறு தொடர்மொழி வருமிடத்து என்று பொருள் செய்க.

## நச்சினார்க்கினியம்

### *456. மூன்று நான்கு ஐந்து - இவற்றின் ஒற்று, வகரம் வருவழிக் கூறிய இயல்பின ஆதல்*

**மூன்றும் நான்கும் ஐந்துஎன் கிளவியும்**
**தோன்றிய வகரத்து இயற்கை ஆகும்.**

இதுவும் அது

(இ-ள்.) மூன்றும்....ஆகும் -மூன்று என்னும் எண்ணும் நான்கு என்னும் எண்ணும் ஐந்து என்னும் எண்ணும், முன்னர்த் தோன்றி நின்ற வகரம் வருமொழிக்குக் கூறிய இயல்பாக (452-454), மூன்றின்கண் வகரஒற்றாயும், நான்கின்கண் லகரஒற்றாயும் ஐந்தின்கண் ஒற்றுக் கெட்டும் முடியும்.

(உ-ம். முவ்வகல் முவ்வுழக்கு என இதற்குத் 'தோன்றிய' என்றதனான் ஒற்றிரட்டுதல் கொள்க. நால்கல் நாலுழக்கு ஐயகல் ஐயுழக்கு[1] என வரும்.

'தோன்றிய' என்றதனான் மேல் (457) மூன்று என்பது முதல் நீண்டவிடத்து நிலைமொழி னகர ஒற்றுக் கெடுத்துக் கொள்க.

'இயற்கை' என்றதனான் தொடர்மொழிக்கண்[2] ஒற்று இரட்டுதல் கொள்க. 'மூன்றன் ஒற்றே' முதலிய மூன்று சூத்திரமும் கொணர்ந்து முடிக்க. (51)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*456.* 1, 2. ஈண்டு யகரம் உடம்படுமெய் என்க. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

433ஆம் சூத்திர உரைக்குறிப்புக் காண்க. நிலைமொழிக் குற்றொற்றிரட்டுதல், நிலைமொழி னகரவொற்றுக் கெடுதல் என்னுமிவை இலேசான் முடிக்கப்பட்டவாறு காண்க; பொது விதிகள் ஆண்டுச் செல்லா.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*457.* **மூன்றும் நான்கும்......இயற்கை யாகும்.**

தோன்றிய என்றதனான் ஒற்றிரட்டுதலைக் கொண்டார் நச்சினார்க்கினியர். வாலிழந்த நரியும் நரியே ஆகலின் 'முவ்' என்பதும் 'மூ' என்பதே. அப்போது ஒற்றிரட்டுதலை 'குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டலும்' (161) என்றதனான் கொள்ளலாம். 'தோன்றிய' என்றதனான், "மேல் மூன்று என்பது முதல் நீண்டவிடத்து நிலைமொழி னகரஒற்றுக் கெடுத்துக் கொள்க" என்றனர் உரைகாரர். இவ்வாறு கூறவேண்டுவதின்று, மூன்று என்பது முவ் என இச்சூத்திரத்தான் ஆகின்றமையின்.

*457.* [மேற்கூறிய (451) அமைதி ஈண்டும் கொள்க.

'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான், நெடுமுதல் குறுகிய நிலையில் மூன்று என்னும் நிலைமொழி 'முன்று' எனவே கொள்ளப்படும். இந்நயம் நோக்கி உரையாளர் உரைத்துப்போந்தனர் என்க.]

**இளம்பூரணம்**

***458. 'உழக்கு' வருவழி, பொதுவிதியான் குறுகிநின்ற 'மூன்று' நீண்டு முடிதலும் உண்மை***

**மூன்றன் முதல்நிலை நீடலும் உரித்தே**
**உழக்குஎன் கிளவி வழக்கத் தான.**

இதுவும் அது.

*(இ-ள்.)* மூன்று என்னும் எண்ணின்கண் முதல் நின்ற எழுத்து[1], உழக்கு என்னும் கிளவியது வழக்கிடத்துக் குறுகாது நீடலும் உரித்து எ-று.

வருமாறு: மூவுழக்கு - என வரும்.

'வழக்கத்தான' என்றதனான் அகல் என்றதன்கண்ணும் இச்செய்கை கொள்க.

வருமாறு: மூவகல் - என வரும். (52)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

***458.*** 1) 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான் 'முன்று' என்னாது 'மூன்று' என்றார். 'மூன்று' நெடுமுதல் குறுகி 'முன்று' என நிற்பினும், முடிபு கூறுமிடத்து மூன்று எனக்கூறினும் அது 'முன்று' எனவே கருதப்படும்.

### நச்சினார்க்கினியம்

### *457. 'உழக்கு' வருவழி, நெடுமுதல் குறுகிய 'முன்று' நீண்டு முடிதல்*

**மூன்றன் முதல்நிலை நீடலும் உரித்தே**
**உழக்குஎன் கிளவி வழக்கத் தான.**

இது முன்னர்க் குறுகும் என்றதனை நீண்டு முடிக என்றலின், எய்தியது விலக்கிற்று.

*(இ-ள்.)* மூன்றன்......உரித்தே - மூன்று என்னும் எண்ணின் முதல் நின்ற எழுத்து நீண்டு முடிதலும் உரித்து; உழக்கு....வழக்கத்தான - அஃது யாண்டெனின், உழக்கு என்னும் சொல் முதலும் வழக்கிடத்து எ-று.

வருமாறு: மூவுழக்கு.

'வழக்கத்தான' என்றதனான், அகல் என் கிளவிக்கும் முதனிலை நீடலும் கொள்க. மூவகல் என வரும். இன்னும் அதனானே, நிலைமொழி னகரஒற்றுக் கெடுக்க.

மூழக்கு மூழாக்கு[1] என்னும் மரூஉமுடிபு இவ் வோத்தின் புறனடையான் முடிக்க. (52)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***457.*** *1.* மூவுழக்கு மூவாழாக்கு என்பன புணர்நிலை முடிபு.

**இளம்பூரணம்**

***459. அவ்வழி, குறுகி நின்ற 'ஆறு' நீண்டு முடிதல்***

**ஆறுஎன் கிளவி முதல்நீ டும்மே.**

இதுவும் அது.

(இ-ள்.) ஆறு என்னும் சொல்[1], உயிர் முதல்மொழி வந்தால், முன் குறுகி நின்ற முதலெழுத்து நீண்டு முடியும் எ-று.

(உ-ம்.) ஆறகல் ஆறுழக்கு - என வரும். (53)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***459.*** 1) 'அறு' என்னாது 'ஆறு' என்றார், 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான். பிறவும் மேலைச் சூத்திரவுரைக் குறிப்பிற் கூறியவாறு கொள்க.

**நச்சினார்க்கினியம்**

***458. நெடுமுதல் குறுகிய ஆறு நீண்டு முடிதல்***

**ஆறுஎன் கிளவி முதல்நீ டும்மே.**

இதுவும் அது.

(இ-ள்.) ஆறென்....நீடும் - ஆறு என்னும் எண்ணுப் பெயர் அகல் உழக்கு என்பன வரின், முன்னர்க் குறுகி நின்ற முதலெழுத்து (440) நீண்டு முடியும் எ-று.

அறு என்னாது ஆறு என்றார், திரிந்ததன் திரிபு அது என்னும் நயத்தான்.[1]

வருமாறு : ஆறகல் ஆறுழக்கு என வரும். (53)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**458.** 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**458. ஆறென் கிளவி முதல்நீ டும்மே.**

ஆறகல் ஆறுழக்கு என வரும். ஏகாரம் இசைநிறை, நீடாது (அறு என) நின்றவழி உடம்படுமெய் பெற்றுப் புணர வேண்டுதலின் நீண்டது. நீண்டவழிக் குற்றியலுகரமாய் விடுதலின் அதன்கண் உயிரேறி முடிந்தது. மூன்று (457), ஆறு எனத் 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தாற் கூறப்பட்டன.

## இளம்பூரணம்

### 460. 'ஒன்பது' நாற்கணமும் வருவழி 'இன்' பெற்று முடிதல்

**ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை இயற்கை.**

இதுவும் அது.

(இ-ள்.) ஒன்பது என்னும் எண்ணினது இறுதி, தன் வடிவுநிலை திரியாது, சாரியை மொழியாகிய இன் பெற்று முடிதல் வேண்டும் எ-று.

(உ-ம்.) ஒன்பதின் கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு. எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

*உருபு என்றதனான், ஒன்பதிற்றகல் என்புழி, இரட்டிய றகரமாகக்*[1] *கொள்க.* *(54)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***460.*** *1)* ஒன்பது + இன் + அகல் = ஒன்பதிற்றகல். *434 (2)* காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *459. அளவு நிறைப்பெயர் வருவழி, ஒன்பது 'இன்' பெறுதல்*

**ஒன்பான் இறுதி உருவுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே.**

இது குற்றுகரம் மெய்யொடும் கெடாது நின்று இன் பெறுக என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

(இ-ள்.) ஒன்பான்.....திரியாது - அளவும் நிறையும் வருவழி, ஒன்பது என்னும் எண்ணின் இறுதிக் குற்றுகரம் தன் வடிவு நிலை திரியாது நின்று; சாரியைமொழி இன் பெறல் வேண்டும் - சாரியைச்சொல் ஆகிய இன்பெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

(உ-ம்.) ஒன்பதின் கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

*சாரியை மொழி என்றதனான், இன்னோடு உகரமும் வல்லெழுத்தும் கொடுத்துச் செய்கை செய்து முடிக்க.*

ஒன்பதிற்றுக்கலம் சாடி என எல்லாவற்றோடும் ஒட்டுக[1].

'உருவு' என்றதனான், ஒன்பதிற்று என ஒற்று இரட்டுதல் எல்லாவற்றிற்கும் கொள்க.

இன்னும் அதனானே, ஒன்பதினாழி என்புழி, வந்த இன்னின் னகரக் கேடும் கொள்க.[2]

'அளவாகு மொழிமுதல்' (121) என்பதன்கண் 'நிலைஇய' என்னும் இலேசான் இன்னின் னகரம் றகரம் ஆதல் கொள்க. (54)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***459.*** 1. ஒன்பது+இன்+கலம்> ஒன்பது+இற்ற்+உ+கலம்> ஒன்பதிற்று+க்+கலம் + ஒன்பதிற்றுக்கலம், [உகரப் பேறும் வல்லொற்றுப்பேறும் 'முற்ற' (433) என்பதனாற் கொள்க. 436 (2) உரை] 'உருவு' என்றதனான், 'இன்'னின் னகரம் றகரமாக இரட்டி உகரம் பெறுதலைக் கொள்க. முன்னர்க் கூறியது 'பத்து' என்ற நிலைமொழிக்கு; ஈண்டு இலேசாற் கொண்டது 'ஒன்பது' என்ற நிலைமொழிக்கு என வேறுபாடு கொள்ளல் வேண்டும்.

'இன்' சாரியை போலவே இற்றுச் சாரியை நன்னூலார் கொண்டார். 'இன்' னை இடர்ப்பட்டு 'இற்று' எனத் திரிக்க வேண்டா என்பர் மொழியியல் நூலார்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***459.*** **ஒன்பான் இறுதி.....சாரியை மொழியே.**

'ஒன்பான்' என ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியதனான், ஒன்பது என்னும் சொல் அது என்னும் ஈறுகெட்டு ஆன் - சாரியை பெற்று வருதல் செய்யுள் வழக்கு எனக்கொள்க.

இனி, 'சாரியை மொழியே' என்றதனான், உயிர் முதலாகிய அளவுப்பெயர் வருமிடத்து, ஒன்பதிற்றகல் ஒன்பதிற்றுழக்கு என்று, 'இன்' 'இற்று' எனத் திரிதலும் கொள்க. ஒன்பதிற்றுக்கலம் என, வல்லெழுத்து வருங்கால் இன் இற்றாதல் ஒப்புமையாக்கத்தான் வந்த வழக்காதலின் அதனை இவ்வியற் புறனடையாற் கொள்க.

## இளம்பூரணம்

### *461. 'நூறு' வருவழி, நிலைமொழி ஒன்று முதல் ஒன்பான்கள் முற்கூறிய தன்மைய ஆதல்*

**நூறுமுன் வரினும் கூறிய இயல்பே.**

*இச்....எனின், ஒன்று முதல் ஒன்பான்களொடு நூறு என்பதன் முடிபு கூறு.....ற்று.*

*(இ-ள்.) நூறு என்பது ஒன்றுமுதல் ஒன்பான்கள்முன் வரினும், மேல் பத்து என்பதனொடு புணரும்வழிக் கூறிய இயல்பு எய்தி முடியும் எ-று.*

*வருமாறு: ஒருநூறு இருநூறு அறுநூறு எண்ணூறு- என வரும். இவை மாட்டேற்றானே முடிந்தன. (55)*

## நச்சினார்க்கினியம்

### *460. ஒன்றுமுதல் ஒன்பான் எண்களொடு நூறு புணருமாறு*

**நூறுமுன் வரினும் கூறிய இயல்பே.**

*இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களொடு நூறு என்பதனைப் புணர்க்கின்றது.*

*(இ-ள்.) முன் - ஒன்று முதல் ஒன்பான்களின் முன்னர்; நூறு வரினும் கூறிய இயல்பே - நூறு என்னும் எண்ணுப் பெயர் வந்தாலும், மேல் பத்து என்பதனொடு புணரும்வழிக் கூறிய இயல்பு எய்தி முடியும் எ-று.*

*அது குற்றுகரம் மெய்யொடும் கெட்டு (433, 437), மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகி (440), முதல் ஈரெண்ணின் ஒற்று ரகரமாய் உகரம் பெற்று (438), இடைநிலை ரகரம் இரண்டன்கண் கெட்டு (439) முடிதலாம்.*

*(உ-ம்.)* ஒருநூறு இருநூறு அறுநூறு எண்ணூறு என வரும். இவை மாட்டேற்றான் முடிந்தன. மாட்டேறு ஒவ்வாதன மேற்கூறி முடிப்ப. *(55)*

**இளம்பூரணம்**

## *462. அவற்றுள் மூன்றன்ஒற்று நகாரம் ஆதல்*

**மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும்.**

இச்....எனின், முன்சொன்ன மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று நகர ஒற்றாகும் எ-று.

வருமாறு : முந்நூறு - என வரும். *(56)*

**நச்சினார்க்கினியம்**

## *461. மூன்றன் னகாரம் நகாரமாதல்*

**மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும்.**

இது மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறுமுடிபு கூறுகின்றது.

*(இ-ள்.)* மூன்றன்.....ஆகும் - மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று நகரஒற்றாகும் எ-று.

வருமாறு : முந்நூறு என வரும். *(56)*

**இளம்பூரணம்**

## *463. நான்கும் ஐந்தும் தம்ஒற்றுத் திரியாமை*

நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா

இதுவும் அது.

*(இ-ள்.) நான்கு என்னும் எண்ணும், ஐந்து என்னும் எண்ணும் தம் ஒற்றுக்கள் நிலைதிரியாது முடியும் எ-று.*

வருமாறு : நானூறு[1] ஐந்நூறு - என வரும்.

'மெய்' என்றதனான் நானூறு என்புழி வருமொழி ஒற்றாகிய நகரக்கேடு கொள்க.[2]

இன்னும் அதனானே, ஒற்றின்றி ஐநூறு என வரு முடிவும் கொள்க. *(57)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***463.*** **1) நான்கு + நூறு> நான்+நூறு> நான்+னூறு>, நா+னூறு = நானூறு.**

**2. இக்குறிப்புப் பொருந்தவில்லை. 452 (3), 471 (2) காண்க.**

**452ஆம் சூத்திரவுரைக் குறிப்பு (2) ஈண்டும் பொருந்தும். வருமொழி நகரம் னகரமாகத் திரிதற்கு 150ஆம் சூத்திர விதி கொள்க. நிலைமொழி னகரக்கேடு இலேசினாற்றான் கொள்ளப்படும். முன் வரைந்த குறிப்பினை ஈண்டும் கொள்க.**

**நான்கு+நூறுனி நான்+நூறுனி நான்+ஊறு=நானூறு என முடிவதாக இளம்பூரணருரையுள் காணப்படுவது ஏற்கு மாறில்லை. 452ஆம் சூத்திரவுரையொடு பெரிதும் மாறு பாடுதல் காண்க. நச்சினார்க்கினியர் உரைத்த முடிபே பொருந்தும்.**

**நச்சினார்க்கினியம்**

***462. நான்கு ஐந்து - இவற்றின் ஒற்றுத் திரியாமை***

**நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா.**

இதுவும் அது.

(இ-ள்.) நான்கும்...திரியா - நான்கு என்னும் எண்ணும் ஐந்து என்னும் எண்ணும் தம் ஒற்றுக்கள் நிலைதிரியாது முடியும் எ-று.

(உ-ம்.) நானூறு ஐந்நூறு என வரும்.

'மெய்' என்றதனான், நானூறு என்புழி, வருமொழி நகரத்துள் ஊகாரம் பிரித்து, 'லனஎன வரூஉம்' (149) என்றதனான் னகரஒற்று ஆக்கி, ஊகாரம் ஏற்றி, நிலைமொழி னகரம் கெடுத்துக் கொள்க.[1] (451 உரை) (57)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**462.** 1. னகரக்கேடுபொதுவிதியான் (160) அன்று என்பது குறிப்பு.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**463.** **நான்காம் ஐந்தும் ஒற்றுமெய் திரியா.**

நான்கு+நூறு> நான்+நூறு (461)> நான்+னூறு (150)> நானூறு (161) என இவ்வாறு வருமொழி னகரவொற் றினைக் கொள்ளாது ['நெடியதன் முன்னர்' (161)] "'மெய்' என்றதனான் நானூறு என்புழி வருமொழி ஒற்றாகிய நகரக்கேடு கொள்க" என இளம்பூரணரும், 'மெய்' என்றதனான் நானூறு என்புழி வருமொழி நகரத்துள் ஊகாரம் பிரித்து 'லன என வரூஉம்' என்றதனான் னகரவொற்றாக்கி ஊகாரம் ஏற்றி நிலைமொழி னகரம் கெடுத்துக் கொள்க (161)" என நச்சினார்க்கினியரும் கூறினர். அவ்வாறு கொள்ள வேண்டுதலின்று, 'ஐஞ்ஞூறு' (செய். 101) என்ற தொடர் இளம்பூரணத்தில் உள்ளது. இது நச்சினார்க்கினியத்தில் இல்லை. இஃது இடைச்செருகலாயிருத்தல் கூடும்.

***463.*** [எண்ணுப்பெயர் முடிபினை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பார். ஆதலின், 'மெய்' என்ற மிகையானே, நச்சினார்க்கினியர் நிலைமொழி னகரத்தைக் கெடுக்க (161) என்றார்; வருமொழி நகரத்தை 'லனஎன வரூஉம்' என்னும் பொதுவிதியால் னகரவொற்றாக்கவேண்டும் என்றார். இளம்பூரணருரையில் வருமொழி நகரக்கேடு இலேசினாற் கொள்ளப்பட்டது. அவர் பிறவிடங்களிற் கொண்ட கருத்திற்கு இது பொருந்திற்றன்று. ஆகலின் இவ்வுரைப்பகுதி இடைச்செருகலாக இருத்தல் வேண்டும். மிகையாற் கொள்ளும் செய்தியில் நச்சினார்க்கினியர் பெரும்பான்மையும் இளம்பூரணரை வழிமொழிதலாகவே காணுதலின் , இளம்பூரணருரை ஈண்டு இடைச்செருகலாதல் வேண்டு மெனத் துணியலாம்.

452ஆம் சூத்திரத்துக் குறிப்புரையைக் காண்க.]

**இளம்பூரணம்**

***464. ஒன்பதன் முன்னர் நூறு புணர்ந்து தொள்ளாயிரம் என முடிதல்***

**ஒன்பான் முதல்நிலை முந்துகிளந் தற்றே**
**முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்**
**நூறுஎன் கிளவி நகார மெய்கெட**
**ஊஆ ஆகும் இயற்கைத்து என்ப**
**ஆயிடை வருதல் இகார ரகாரம்**
**ஈறுமெய்[1] கெடுத்து மகாரம் ஒற்றும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஒன்பது என்னும் சொல்லின் முதல்நின்ற ஒகரம், பத்து என்பதனொடு புணரும்வழிக் கூறியவாறு போல, ஒகரமிசைத் தகர-ஒற்று மிகும்; அவ்வொகரத்தின் முன்

நின்ற ணகர ஒற்று இரண்டு ளகர ஒற்றாம். வருமொழியாகிய நூறு என்னும் சொல்லும் நகரமாகிய மெய்கெட, அதன்மேல் ஏறிய ஊகாரம் ஆகாரம் ஆம் இயல்பையுடைத்து என்பர்; அம் மொழியிடை ஓர் இகரமும் ரகரமும் வரும்: இதற்கு ஈறாகிய குற்றியலுகரத்தினையும் அஃது ஏறிநின்ற றகார ஒற்றினையும் கெடுத்து[2], ஒரு மகரம் ஒற்றாய் வந்து முடியும் எ-று.

மெய்கெடுத்து என்றதனான், நிலைமொழிக்கண் நின்ற பகரம் கெடுக்க.

வருமாறு : தொள்ளாயிரம் - என வரும். (58)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***464.*** *1)* ஈறுமெய்: உம்மைத்தொகை - 473ஆம் சூத்திரத்திலும் இவ்வாறே கொண்டுள்ளமை காண்க.

*2)* நிலைமொழித் துகர உயிர்மெய் 'குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே' என்ற இவ்வியல் 28ஆம் சூத்திர விதியால் கெடும்.

**நச்சினார்க்கினியம்**

## *463.* ஒன்பது நூறு வருவழி முடியுமாறு

**ஒன்பான் முதல்நிலை முந்துகிளந் தற்றே**
**முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்**
**நூறுஎன் கிளவி நகார மெய்கெட**
**ஊஆ ஆகும் இயற்கைத்து என்ப**
**ஆயிடை வருதல் இகார ரகாரம்**
**ஈறுமெய் கெடுத்து மகரம் ஒற்றும்.**

இதுவும் அது.

*(இ-ள்.)* ஒன்பான்....அற்று - ஒன்பது என்னும் எண்ணின் முதல் நின்ற ஒகரம், மேல் பத்து என்பதனொடு புணரும்வழிக் கூறியவாறு போல ஒரு தகரம் ஒற்றி அதன்

மேல் ஏறிமுடியும்; முந்தை....இரட்டும் - அவ் ஒகரத்தின் முன்நின்ற ணகர ஒற்று ளகரஒற்றாய் இரட்டித்து நிற்கும்; நூறு...என்ப - வருமொழியாகிய நூறு என்னும் எண்ணுப் பெயர் நகரமாகிய மெய்கெட அதன்மேல் ஏறிய ஊகாரம் ஆகாரமாம் இயல்பையுடைத்து என்பர் புலவர்; ஆயிடை இகரம் ரகரம் வருதல் - அம்மொழியிடை ஓர் இகரமும் ரகரமும் வருக; ஈறு....ஒற்றும் - ஈறாகிய குற்றுகரத்தினையும் அஃது ஏறிநின்ற றகரஒற்றினையும் கெடுத்து ஒரு மகரஒற்று வந்துமுடியும் எ-று.

'மெய்' என்றதனான், நிலைமொழிக்கண் பகரம் கெடுக்க.

வருமாறு : தொள்ளாயிரம் என வரும்.

இதனை, ஒன்பது என்னும் ஒகரத்தின் முன்னர் வந்த தகர ஒற்றின்மேலே ஒகரத்தை ஏற்றி, பகரம் கெடுத்து, குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுத்து, நின்ற ணகரஒற்றினை இரண்டு ளகர ஒற்றாக்கி, நூறு என்பதன் நகரம் கெடுத்து, ஊகாரம் ஆகாரம் ஆக்கி, ளகரத்தின்மேலேற்றி, இகரமும் ரகரமும் வருவித்து, விகாரப்பட்ட உயிராகிய ஆகாரத்தின்முன் உடம்படுமெய் யகாரம் வருவித்து *(140)*, றகர உகரம் கெடுத்து, மகரஒற்று வருவித்து முடிக்க. *(58)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***464.*** **ஒன்பான் முதனிலை....மகாரம் ஒற்றும்.**

'முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்' என்பதற்கு "முன்னின்ற ணகரவொற்று இரண்டு ளகரவொற்றாம்" என உரைகாரர் பொருள் கூறி, 'மெய்' என்றதனான் நிலைமொழிக்கண் நின்ற பகரத்தைக் கெடுக்குமாறு கூறினர். அவ்வாறு கூறாது, 'ஒன்பான் இறுதி' *(460)* என்றவிடத்து 'இறுதி' என்பதற்கு இறுதியெழுத்துக்கள் எனப்பொருள் கொள்வது போன்று, ஈண்டு 'முந்தை' என்றதற்கு

"முன்னருள்ள எழுத்துக்களது இடத்தில்" எனப்பொருள் கொண்டு 'ஒற்று ளகரம்' என்றதற்கு "ஒற்றாகிய ளகரம்" எனவும் பொருள் கொள்ளின், பகரக் கேட்டினை ஆசிரியர் கூறாதுபோயினர் என்ற குற்றம் அவர்மேல் நில்லாது.

*464.* ['முந்தை' என்பதற்கு இவர்கூறும் பொருள் ஏலாது. அப்பொருள் ஏற்குமெனக் கொள்ளினும், 'ஒற்றே ளகாரம்' ஒற்றாகிய ளகாரம் எனப் பொருள்படாது. முந்தை ஒற்றே என்புழி ஏகாரம் பிரிநிலை. உரையாளர்தம் உரையே பொருந்துவது என்க. பகரக்கேட்டினை இலேசினாற் கோடற்கண் இழுக்கேதும் இல்லை.]

**வேங்கடராசுலு ரெட்டியரர் உரைக்குறிப்பு**

*463.* **ஒன்பான் முதனிலை.....மகரம் ஒற்றும்.**

இவ்வாசிரியர் கூற்று அமையாது என்று கருதி நன்னூலார் சின்னூலார் பின்னூலார் பலரும் பலவாறு கூறினர். அவையும் இத்தன்மையனவே.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*463.* **ஒன்பான் முதனிலை......மகார மாகும்.**

இத்திரிபு சொற்பிறப்பு அடிப்படையிற் கூறப்பட்ட தன்று, வழங்கற்பாடு பற்றிய இலக்கணநெறி என்பார் 'இயற்கைத் தென்ப' என்றார். 'யிகர ரகரம்' என்றது அவ்வவ் உயிர்மெய்களை என்றறிக.

*463.* [உரையாசிரியன்மார் கொண்ட 'இகார ரகாரம்' என்பதனை விடுத்து, 'யிகர ரகரம்' எனப்பாடம் கொண்டார் இவ்வுரைகாரர். 'மாயிரு ஞாலம்' என ஆகாரவீற்றிற்கு யகர உடம்படுமெய் வருதலை இவரும் உடன்படுதலின் (140 உரை), பண்டைய பாடத்தையே கொண்டிருப்பினும் சாலும்.]

## இளம்பூரணம்

### *465. ஒன்றுமுதல் ஒன்பான்கள் முன்னர் ஆயிரம் புணருமாறு- முதல் ஈரெண்கள் ஓர் இர் என நிற்றல்*

**ஆயிரக் கிளவி வரூஉங் காலை**
**முதல்ஈர் எண்ணின் உகரம் கெடுமே.**

*இச்....எனின், அவ் ஒன்று முதல் ஒன்பான்கள் ஆயிரம் என்பதன்முன் வரின் முடியும் முடிபு கூறு....ற்று.*

*(இ-ள்.)* ஆயிரம் என்னும் சொல், ஒன்று முதல் ஒன்பான்கள்-முன் வருங்காலத்து, முதல் ஈர் எண்ணின்கண் பெற்று நின்ற உகரம் கெட்டு முடியும் எ-று.

வருமாறு: ஓராயிரம் இராயிரம் - என வரும். *(59)*

## நச்சினார்க்கினியம்

### *464. ஒன்று, இரண்டு-எண்களோடு 'ஆயிரம்' முடியுமாறு*

**ஆயிரக் கிளவி வரூஉங் காலை**
**முதல்ஈர் எண்ணின் உகரம் கெடுமே.**

இஃது அவ்வொன்று முதல் ஒன்பான்களோடு ஆயிரம் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஆயிரக்.....கெடும் - ஆயிரம் என்னும் சொல், ஒன்று முதல் ஒன்பான்கள் முன் வருங்காலத்து, ஒரு இரு என்னும் இரண்டு எண்ணின்கண் பெற்றுநின்ற உகரம்கெட்டு முடியும் எ-று.

'உகரம் கெடும்' எனவே, ஏனையன முன்னர்க் கூறிய வாறே நிற்றல் பெற்றாம்.

வருமாறு: ஓராயிரம் இராயிரம் என வரும். *(59)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***465.*** **ஆயிரக் கிளவி......உகரம் கெடுமே.**

ஈண்டு, ஒன்று இரண்டு என்பன ஒரு இரு என ஆகும் என்று கூறிய பின்னரே ஆங்குள்ள உகரம்கெடும் எனக் கூறுதல் பொருந்தும் ஆகலான், 'ஆயிரக் கிளவி வரூஉங் காலை, முற்கூறு இயற்கை பெறுத லுரித்தே' எனத் தனிச் சூத்திரமாகவும், 'முதலீர் எண்ணின் உகரம் கெடுமே' என்பது ஒரு தனிச்சூத்திரமாகவும் இருந்திருத்தல் வேண்டும். 'முற்கூறியற்கை பெறுத லுரித்தே' எனக் கூறியிராவிடின், 'மூன்றனொற்றே வகாரம் ஆகும்' (467) என்றது தொடங்கி 'ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்' (470) ஈறாகவுள்ள சூத்திரங்களிற் கூறியவற்றால் முவ்வாயிரம் - நாலாயிரம் - ஐயாயிரம் - அறாயிரம் - என்பனவற்றிற்கு இலக்கணம் முழுமையும் கூறப்படாததேயாகும்.

***465.*** *[இது கருதியே நச்சினார்க்கினியர் 'முதலீர் எண்ணின் ஒற்று' (438) என்னும் சூத்திரவுரையுள் இறுதிக்கண், "மேல் வருவனவற்றிற்கும், சூத்திரங்களாற் கூறும் சிறப்புவிதி ஒழிந்தவற்றிற்கும் இதுவே முடிபாகக் கொள்க" என்று கூறினார். (உரையுள் இப்பகுதி இடைச்செருகல் ஆகலாம் என்று சாத்திரியார் கூறியது முன்னர் (439) மறுக்கப்பட்டமை காண்க.)*

*இடையே சூத்திரங்கள் நழுவியிருப்பினும், உரையாளர்தம் உரையால் அக்குறை நிரம்பியுள்ளமை காணலாம்.]*

**இளம்பூரணம்**

***466.*** ***ஆண்டு ஒகர இகரங்கள் நீடலும் உடைமை***

**முதல்நிலை நீடினும் மானம் இல்லை.**

இச்....எனின், எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு...ற்று.

(இ-ள்.) அம்முதல் ஈர் எண்ணினும் முதற்கண் நின்ற ஒகர இகரங்கள் நீண்டு முடியினும் குற்றமில்லை எ-று.

வருமாறு : ஓராயிரம் ஈராயிரம் - என வரும். (60)

**நச்சினார்க்கினியம்**

*465. அவை ஓர், ஈர் - என உயிர் நீடலுமாம்*

**முதல்நிலை நீடினும் மானம் இல்லை.**

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்.) முதனிலை...இல்லை-அம்முதல் ஈரெண்ணின் முதற்கண் நின்ற ஒகார இகாரங்கள் நீண்டு முடியினும் குற்றமில்லை எ-று.

வருமாறு : ஓராயிரம் ஈராயிரம் என வரும். (60)

**இளம்பூரணம்**

*467. மூன்றன் ஒற்று வகார மாதல்*

**மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும்.**

இச்....எனின், இதுவும் மாட்டேற்றோடு ஒவ்வா முடிபு கூறு...ற்று.

(இ-ள்.) மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று வகர ஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : முவ்வாயிரம் என வரும்.

முன் (60) 'நிலை' என்றதனான். முதல் நீண்டு வகர ஒற்றுக் கெட்டு மூவாயிரம் என்றும் வரும். (61)

### நச்சினார்க்கினியம்

## *466. மூன்றன் னகாரம் வகாரமாதல்*

**மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும்.**

இது மூன்று என்னும் எண் ஆயிரத்தொடு புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.) மூன்றன்....ஆகும் - மூன்று என்னும் எண்ணின் கண் நின்ற னகரஒற்று வகரஒற்றாகத் திரிந்து முடியும் எ-று.*

*முன்னிற் சூத்திரத்து நிலை என்றதனான் (465), இதனை முதனிலை நீட்டி, வகரஒற்றுக் கெடுத்து மூவாயிரம்[1] என முடிக்க.* *(61)*

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*466. 1. வ் : உடம்படுமெய் அன்றென்க.*

### இளம்பூரணம்

## *468. நான்கன் ஒற்று லகார மாதல்*

**நான்கன் ஒற்றே லகாரம் ஆகும்.**

இதுவும் அது.

*(இ-ள்.) நான்காம் எண்ணின்கண் நின்ற னகரஒற்று லகர ஒற்றாய் முடியும் எ-று.*

வருமாறு : நாலாயிரம் - என வரும். *(௬௨)*

### நச்சினார்க்கினியம்

## *467. நான்கன் னகாரம் லகாரமாதல்*

**நான்கன் ஒற்றே லகாரம் ஆகும்.**

இது நான்கு என்னும் எண் அதனொடு புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) நான்கன்.....ஆகும் - நான்கு என்னும் எண்ணின்கண் நின்ற னகரஒற்று லகரஒற்றாகத் திரிந்து முடியும் எ-று.

வருமாறு : நாலாயிரம் என வரும். (62)

**வேங்கடராகுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**467. நான்கண் மெய்யே லகாரம் ஆகும்.**

நால் என்னும் முதனிலையோடு ஆயிரம் என்பது சேர்ந்து நாலாயிரம் என்றாயது எனல் அமைதி.

**467.** [மொழியியல் நூலார், நான்கு என்பது 'நால்கு' என்ற அடிப்படைச் சொல்லின் திரிபாகக் கருதுதலின், 'நான்கன் னகரம்' லகரமாகத் திரிதல் வேண்டா எனக் கருதுவர். 'பால்புரை புரவி நால்குடன் பூட்டி' என்பது நான்கினது தொல்லுருவத்தைப் புலப்படுத்துகிறது என்ப. (பொருந.165)]

**இளம்பூரணம்**

***469. ஐந்தன் ஒற்று யகாரமாதல்***

**ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும்.**

இதுவும் அது.

(இ-ள்.) ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகரஒற்று யகர ஒற்றாய் முடியும் எ-று.

வருமாறு : ஐயாயிரம் என வரும்.

முன்னர் (51) இவ்வாறு ஓதாமையான், ஐயகல் ஐயுழக்கு உடம்படுமெய் பெற்றன.[1] (63)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**469.** 1) ஈண்டு யகரம் எழுத்துப்பேறு என்க.

**நச்சினார்க்கினியம்**

## *468. ஐந்தன் னகாரம் யகாரமாதல்*

**ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும்.**

இஃது ஐந்து என்னும் எண் அதனொடு புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஐந்தன்.....ஆகும் - ஐந்து என்னும் எண்ணின் கண் நின்ற நகரஒற்று யகரஒற்றாகத் திரிந்து முடியும் எ-று.

வருமாறு : ஐயாயிரம்[1] என வரும். *(63)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***468.*** 1. ய் : உடம்படுமெய் அன்றென்க.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***468.*** **ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும்.**

நகரமெய் யகரமாதற்குச் சிறிதும் இயைபின்மையின், இவ்விதி சொன்னிலையை நோக்கிக் கூறியதே ஆகும். ஐந்து என்பதன் முதனிலையாகிய ஐ என்பதனோடு ஆயிரம் என்னும் சொல் சேர்ந்து ஐயாயிரம் என்றாகியிருக்கின்றது. இவ்வாறே ஐ என்னும் முதனிலையோடு உயிர்முதன் மொழிகளும் பிறவெழுத்துக்கள் முதலாம் மொழிகளும் சேர்ந்து வருகின்றன. 'ஐயீராயிரத்து' (செய்.101) 'ஐயுணர் வெய்தியக் கண்ணும்' (குறள் 354) எனவும், 'ஐவகை யடியும்' (செய். 50) எனவும் வருவன காண்க.

***468.*** [ஐந்தன் நகரஒற்று யகரமாகத் திரிதலை மொழி யியலார் உடன்படாது வேறுமுடிபு கூறுதலை ரெட்டியா ருரையுள் காணலாம். வருமொழி உயிர்க்கணமாகவும் இடைக் கணமாகவும் வருமிடத்து, 'ஐந்து' முடியுமாறு இலக்கிய இலக்கண எடுத்துக்காட்டாற் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வுதாரணங்களைச் சாத்திரியாரும் சுட்டினார்.]

## இளம்பூரணம்

### 470. ஆறு அறு எனக் குறுகி நிற்பவே, ஈற்று உகரம் கெட்டு முடிதல்

**ஆறன் மருங்கின் குற்றிய லுகரம்**
**ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்..**

இதுவும் அது.

(இ-ள்.) ஆறாம் எண்ணின்கண் நின்ற குற்றியலுகரம் தான் ஏறிய மெய்யாகிய றகரஒற்றுக் கெடாது நிற்ப, உகர மாகிய அவ்வீறுதானே கெட்டு முடிதல் வேண்டும் எ-று.

வருமாறு : ஆறாயிரம் - என வரும்.

'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான்[1], 'ஆறன் மருங்கின்' என ஓதப்பட்டது. ஆறு என்பது அறு எனக் குற்றியலுகரம் முற்றியலுகரமாக ஓதப்பட்டு நின்றமையின், அவ் உகரக்கேடு (உயிர் வருவழி) ஓதப்பட்டது.

'ஈறு' எனவும் 'மெய்' எனவும் அவ்வுயிர்மெய்யைப் பிரித்துச் செய்கை ஓதினமையான், அவ்வுயிர்மெய்யினை ஒற்றுமை நயத்தான்[2] குற்றியலுகரம் என ஓதினானாகக் கொள்க.

ஆறன் மருங்கின் ஈறு மெய் ஒழியக் கெடும் என்னாது, குற்றியலுகரம் என்று ஓதினமையான், நெடுமுதல் குறுகாதே நின்று ஆறாயிரம் என்றுமாம்.

இன்னும் அதனானே, ஆறாகுவதே (சொல். வேற்.18) என்றாற் போலப் பொருட்பெயர்க்கண் வருமுடிபும் கொள்க.

மேல் மாட்டேற்றானே (39) எண்ணாயிரம் என்பது முடிந்தது. (64)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**470.** 1) 'ஆறு' நெடுமுதல் குறுகி 'அறு' என நிற்கும். 'திரிந்ததன் திரிபு பிறிது' என்னும் நயத்தால் ஆறு என ஓதினும் அஃது 'அறு'வே எனக்கொள்ளல் வேண்டும். வேண்டவே, அதனிறுதி முற்றியலுகரமாதலின் உயிர்முதல் வருமிடத்துக் கெட்டது என்க. குற்றியலுகரமாயின் கெடாது தன்மேல் உயிரேற இடங்கொடுக்கும் என்பது ஆசிரியர் கொள்கை.

முற்றுகரமே உயிர்வருமிடத்துக் கெடுதலை ஆசிரியர் 177 258 259 298 299 300 374 375ஆம் சூத்திரங்களிற் கூறியுள்ளமை காண்க.

2) றுகரமாகிய உயிர்மெய்யினை ஒற்றுமை நயத்தான் குற்றியலுகரமாக ஓதினார்; வேற்றுமை நயத்தான், தான் ஏறிய மெய் கெடாது நிற்க முற்றியலுகரம் கெடுதல் வேண்டும் என்று பிரித்து ஓதினார். (குற்றியலுகரம் ஈண்டு முற்றுகரத்தையே குறித்தது என்க.)

### நச்சினார்க்கினியம்

**469. முதல் குறுகிநின்ற 'ஆறு' ஈறு முற்றுகரம் கெட்டு முடிதல்**

ஆறன் மருங்கின் குற்றிய லுகரம்
ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்.

இஃது ஆறு என்னும் எண் அதனொடு புணருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) ஆறன்.....உகரம் - ஆறு என்னும் எண்ணின்கண் நின்ற குற்றியலுகரம் நெடுமுதல் குறுகி அறு என முற்றுகரமாய் நிற்றலின்; மெய் ஒழிய ஈறு கெடுதல் வேண்டும் - அது தானேறிய மெய்யாகிய றகர ஒற்றுக் கெடாது நிற்ப, முற்றுகரமாகிய ஈறுதான் கெட்டுப் போதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

வருமாறு : அறாயிரம் என வரும்.

முன்னர் 'நெடுமுதல் குறுகும் '(440) என்றவழி 'அறு' என நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினார் என்பது பெற்றாம். என்னை? குற்றியலுகரமாயின் ஏறி முடிதலின். இது குற்றுகரம் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினார்.

முற்றியலுகரம் 'ஈறுமெய் ஒழியக் கெடும்' எனவே, குற்றுகரம் கெடாது ஏறிமுடியும் என்பது **அருத்தாபத்தியான்** பெறுதும்.

ஆறாயிரம் என வரும்.

'மருங்கு' என்றதனான், பிற பொருட்பெயர்க்கண்ணும் நெடுமுதல் குறுகாது நின்று முடிதல் கொள்க.

'ஆறாகுவதே' (சொல். 80 நச்.) என வரும். (64)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***469.*** "இனி ஆசிரியர் 'நூறென் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு, ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே' என்றும், 'ஆறன் மருங்கின் குற்றிய லுகரம், ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்' என்றும், நூறு என்னும் எண் முன்னும் ஆறு என்னும் எண்முன்னும் முறையே ஒன்று முதலிய எண்களும் ஆயிரமும் வந்து புணரின், குற்றியலுகரம் கெட நின்ற ஒற்றின்மேல் உயிர்வந்து ஒன்றி முடியும் என்றார்.

"எனவே, 'ஒன்றின முடித்தல்' என்பதனான், ஏனைக் குற்றியலுகர ஈறும் உயிர்முதல்மொழி வந்து புணர்வழிக் குற்றியலுகரம் கெட்டு, நின்ற ஒற்றின்மேல் உயிர்வந்து ஒன்றி முடியும் என்பதூஉம் பெறப்பட்டதாகலின், ஈண்டும் அவ்வாறே குற்றியலுகரம் கெட நின்ற தகரவொற்றின்மேல் எகரவுயிர் வந்தொன்றி (எழுத்து+எனப்படுவ=) 'எழுத்தெனப்படுவ' என முடிந்தது.

"அஃதேல், நாகரிது என்புழி, முன்னர்க் குற்றுகர ஓசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டும் கூடி நின்றல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், குற்றியலுகரத்து இறுதி முன்னும் புள்ளியீற்று முன் போல உயிர்முதன்மொழி வந்தால் அவ்வுயிரேறி முடியும் என்னாமோ எனின், என்னாம். என்னை? அங்ஙனம் கூறுவார்க்கு, கதவழகிது கனவழகிது என்புழியும் முன்னர் முற்றுகரவோசையும் பின்னர் உயிரோசையும் கூடியல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், அவற்றையும் முற்றுகரத்தின்மேல் உயிரேறி முடிந்தது எனக் கூறல் வேண்டும்; அவ்வாறன்றி முற்றுகரம் கெட நின்ற ஒற்றின் மேல் உயிரேறி முடியும் என்பதே எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆகலானும், குற்றியலுகரத்திற்கும் உயிர் என்னும் குறியீடு கொண்டமையின், ஒற்றின்மேலன்றி உயிரின்மேல் உயிரேறுதல் பொருந்தாமையானும், நாகரிது என்புழி, இதழ் சிறிது குவிதலாகிய முயற்சி ஆண்டுப்பெறப்படாமையின், குற்றியலுகரவோசை ஆண்டு உண்டென்றல் பொருந்தாமை யானும், 'ஆறன் மருங்கின்' என்றல் தொடக்கத்துச் சூத்திரங் களொடு முரணுதலானும், யகரம் வருவழி இகரம் குறுகி உகரத்தின்மேல் ஏறி முடியும் என்னாது, 'இகரம் குறுகும், உகரக்கிளவி துவரத் தோன்றாது' என்றார் ஆகலானும் என்பது.

"இங்ஙனம் கூறிய ஆசிரியர் கருத்து நோக்காது, 'யாம் பிடித்ததே சாதிப்போம்' என்னும் கருத்தான், 'புள்ளியொடு நிலையல்' என்பதனொடு மாட்டெறிந்து 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' எனப் புணரியல் முதற்கண் கூறிய சூத்திரத்தினைப் 'புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது' என அவ்வியலின் இறுதிக்கண் கூறிய சூத்திரத்தொடு மாட்டெறிந்து பொருள் கூறி, ஆறாயிரம் நூற்றொன்று முதலியவற்றிற்கும் சூத்திரக்கிடக்கை முறை நோக்காது, குற்றியலுகரத்தைப் புள்ளியீற்றொடு தாங்கள் மாட்டெறிந்த தற்கு ஏற்பவே பொருளுரைத்தார், மாட்டேற்று முறைமை உணராத உரையாசிரியரை உள்ளிட்டோர் எனவுணர்க."

-முதற்சூத்திர விருத்தியில் சிவஞான முனிவர்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**470.** ஆறன் மருங்கின்......கெடுதல் வேண்டும்.

நெடுமுதல் குறுக்கமே (அறு) முதலில் வரும் என நினைத்து உரைகாரர் இச்சூத்திரத்துள்ள குற்றியலுகரம் முற்றியலுகரம் எனப் பொருள்படக் கூறப்பட்டது என்றனர். அது பொருந்தாது.

மூன்று+பத்து என்றிருக்க, 'ஒன்றுமுதல் ஒன்பான்' (438) என்ற சூத்திரத்தான் 'று' கெட, அதன்பின்னர் 'மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்' (441) என்றதனான் முன்+பத்து என ஆகும் என்று கூறப்பட்டமையானும், அறுபஃது அறுநூறு என்றவிடத்து இறுதியெழுத்துக் கெடாதது நோக்கி 'ஆறன் இறுதி அல்வழி யான' (438) எனக் கூறப்பட்டதாயினும், அறாயிரம் என்றவிடத்து இறுதிக் குற்றியலுகரம் கெடும் என்று கூறல் வேண்டுமாகலானும், புணர்ச்சி கூறுமிடத்து நிறுத்த சொல்லின் ஈறாகு எழுத்தைப் பற்றியும் குறித்து வரு கிளவியின் முதலெழுத்தைப் பற்றியும் முன்னர்க் கூற வேண்டுவது இன்றியமையாதது ஆகலானும், ஈண்டு ஆசிரியர் 'குற்றியலுகரம்' எனக் கூறியதே நேரிதாகும்.

**470.** [இறுதிக் குற்றுகரம் கெடும் என்று இவ்வுரைகாரர் சிவஞான முனிவரைப் பின்பற்றிக் கூறுகிறார். அது பொருந் தாமையை ரெட்டியார் உரைநோக்கி உணரலாம்.

தான் ஊர்ந்த மெய் கெடாது நிற்ப முற்றியலுகரமே உயிர் முதல் மொழி வருமிடத்துக் கெடும். குற்றியலுகரம் தான் கெடாதே நின்று வருமொழி முதல் உயிரேற இடங் கொடுக்கும் என்பது தொல்லுரையாளர் கருத்து. முற்றுகரம் உயிர் வருவழிக் கெடுதல் 177, 259, 264, 300, 375, 392 என்னும் சூத்திரங்களான் உணரலாம்.]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***469.*** ஆறன் மருங்கின்....கெடுதல் வேண்டும்.

இச்சூத்திரத்தில் 'குற்றியலுகரம்' என்றது, 'அறு' என்னும் சொல்லிலுள்ள முற்றியலுகரத்தை என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறிய பொருளே அமைவுடையது. சிவஞானமுனிவர் கூறிய பொருள் அமைதியின்று.

***469.*** [திரிந்ததன் திரிபு பிறிது என்னும் நயத்தான் ஆறு என்பதனை அறு எனக்கொண்டு ஆண்டு நின்ற இறுதி யெழுத்தினைக் குற்றியலுகரமாகக் கொள்ளாது முற்றுகர மாகக் கொண்ட பண்டையுரையாளரைப் பின்பற்றி ரெட்டியார் உரை கூறினார். சிவஞான முனிவர் கருத்து மறுக்கப்பட்டது. முற்றுகரம் கெடுவது போலக் குற்றிய லுகரம் கெடுவதாக யாண்டும் ஆசிரியர் கூறார். எனக் கொள்க.

'சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவமணி
ஒட்டிய மெய்யொழித்து உகரம் கெடுமே.' *(176 நச்.)*
'சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே.'
'அன்றுவரு காலை........
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்' *(257,258)*

'ஞநமவ இயையினும் உகரம் நிலையும்.'
'நகர இறுதியும் அதனோ ரற்றே.'
'வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.'*(297-299)*

'வல்லென் கிளவி தொழிற்பெயர் இயற்றே.' *(373)*
'நாயும் பலகையும் வருஉங் காலை
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே' *(374)*
'ஆயிரம் வருவழி உகரம் கெடுமே.' *(393)*

உயிர் வருமிடத்து, நிலைமொழியீற்று முற்றுகரம் தானூர்ந்த மெய்யினை நிறுத்திவிட்டுத் தான் கெட்டுப் போதலை இச்சூத்திரங்களான் உணரலாம்.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*469.* ஆறன் மருங்கின்.....கெடுதல் வேண்டும்.

*(இ-ள்.) ஆறு என்னும் சொல்லிடத்ததாகிய குற்றிய லுகர ஈறு ஆயிரம் என்பதனொடு புணருமிடத்துத் தான் ஊர்ந்து நின்ற மெய் கெடுதலினின்று ஒழியத் தான்மட்டும் கெடும்.*

*முன் மாட்டேற்றான் (440) குறுகிநின்ற அறு என்பது ஆயிரத்தொடு புணருங்காலை நீண்டு நிற்கும் என்பார், ஆறன் உகரம் என்னாது 'குற்றியலுகரம்' என்றார். முதல் நீண்டா லன்றி அது குற்றியலுகரம் எனற்கு ஏலாமை யறிக. ஆறு+ஆயிரம்= ஆறாயிரம் என வரும்.*

*இனி உரையாசிரியன்மார் அறு என முதல் குறுகி நின்ற சொல்லுக்கே இவ்விதி கூறினார் என்றும், குற்றுகரமாயின் உயிரேறி முடியுமாகலின் கேடு கூறவேண்டா என்றும் கூறி, 'அறாயிரம்' என இருவகை வழக்கினும் இல்லாததொன்றை எடுத்துக்காட்டியுள்ளனர்.*

*ஆசிரியர் இவ்வியலுள் குற்றியலுகர எண்ணுப் பெயர்ப் புணர்ச்சிக்குப் பொதுவாகச் சிலவிதிகளைக் கூறிப் பின் வருவனவற்றை அவற்றொடு மாட்டெறிந்து, பின்னர் வேண்டும் சிறப்பு விதிகளைக் கூறிவருகின்றார். அம் முறைமையான் ஒன்றுமுதல் ஒன்பான் ஈறாய எண்ணுப் பெயர்கள் அளவைப் பெயர்களொடு புணர்தற்கு விதியாக முதற்கண் 'ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்' (437) என்னும் சூத்திரத்தான் பொதுவிதி கூறுங்காலை, அதனை 'ஒன்று முதலாக எட்டன் இறுதி' (433) என்னும் சூத்திரத்தி லுள்ள விதியொடு மாட்டேற்றிக் கூறுமிடத்து, ஆறு என்னும் சொல்லைத் தவிரப் பிறவெல்லாம் ஈற்றுக் குற்றியலுகரம் மெய்யொடும் கெடும் எனப் பெறப்படவைத்தார். ஆண்டு ஆறு என்பதனை நீக்கிய காரணம், அது பத்து என்பதனொடு புணருமிடத்து முதல்குறுகி முற்றுகர ஈறாய் (440) நின்று புணர்தலினாலேயாம். பின்னர், உயிர் முதலாகிய அளவுப்*

பெயர்களொடு புணர்தற்கண் அறு என்பது முதல் நீடும் (458) என்றார். அவ்வழி அது குற்றியலுகரமாக மாறி, ஆறகல் - ஆறுழக்கு - எனப் புணர்ந்தது. பின்னர் நூறு என்பதனொடு புணரும் விதியை (460) மாட்டேற்றிக் கூறலின், மீண்டும் ஆறு என்பது அறு என முற்றுகரமாகத் திரிகிறது.

பின்னர், ஒன்று முதலாகிய எண்ணுப்பெயர்கள் ஆயிரத்தொடு புணருமிடத்து, 'ஒன்றுமுதல் ஒன்பான்' (437) 'ஒன்று முதலாக எட்டன்' (433) என்னும் விதிகள் தொடர்தலான், அவ்விதிகளின்படி ஆறு 'அறு' எனக் குறுகி முற்றுகரமாய் மெய்யொடும் கெடாது நிற்கும். இச்சூத்திர (469) விதிப்படி முதல் நீண்டு குற்றியலுகரமாகி நிற்றலின், 437, 433 ஆகிய சூத்திரங்களின் விதிப்படி குற்றியலுகர ஈறு மெய்யொடும் கெடுதல் வேண்டும். அஃதாவது ஆறு என்பது ஆயிரத்தொடு புணருங்கால் நெடுமுதல் குறுகுதல் இல்லை என்பதை 'ஆறன் மருங்கின் குற்றியலுகரம்' எனப் பெறப்பட வைத்தமையான், அது குற்றியலுகரமாய் நின்றது, அவ்வழி, 'ஒன்று முதலாக எட்டன் இறுதி' (433) என்னும் விதிப்படி மெய்யொடும் கெடும். அங்ஙனம் மாட்டேற்றான் 'மெய் யொடும் கெடும்' என நின்ற விதியை விலக்குதற் பொருட்டு 'ஈறு மெய்யொழியக் கெடுதல் வேண்டும்' என்றார் என்க.

**469.** [ 'குற்றியலுகரம்' என்பது 'திரிந்ததன் திரிபு பிறிது' என்னும் நயத்தினான் முற்றியலுகரமே. குற்றியலுகரம் என்னும் இச்சொல்லைத் தவிர இதனைக் குற்றியலுகரம் என்று கோடற்கு முன்னைய இயைபு ஏதுமின்று. அறாயிரம் இருவகை வழக்கினும் இல்லாததொன்று என்னும் இவ்வுரைகாரர், முவ்வாயிரம் (466) முவ்வட்டி (452) ஐவ்வட்டி (454) என்று விதிப்படி புணர்ந்தவற்றிற்கு இருவகை வழக்கினும் இன்று சான்றுகாட்ட இயலுமோ? தம்காலத்து இருவகை வழக்கினும் இல்லனவற்றை உரையாசிரியன்மார் குறிப்பிட்டனர் என்று கோடல் ஏற்புடைத்தாகாது. உயிர் ஏறி முடியும் குற்றியலுகரம் மெய்யை நிறுத்திவிட்டுத் தான் கெட்டது என்று கூறுவதனாற் கிட்டும் பயன் ஏதேனு

முண்டா? சூ. 201 430 433 437 என்பவற்றுள் குற்றியலுகரம் மெய்யொடும் கெடுதலைக் கூறிய ஆசிரியர், முற்றியலுகரம் மெய்யொழித்துத் தான்மாத்திரம் கெடுதலை சூ. 176இல் குறிப்பிடுவர். இவ்வாறு குறிக்குமவர், இச்சூத்திரத்து மாத்திரம் 'குற்றியலுகரம் மெய்யொழித்துக் கெடும்' என்று கூறுவாரா? கூறுவாரல்லர் என்க.] -தி.வே.கோ.

## இளம்பூரணம்

### 471. ஒன்பது இன்சாரியை பெற்று முடிதல்

ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே.

இதுவும் அது.

(இ-ள்.) ஒன்பது என்னும் எண்ணின் இறுதிக் குற்றிய லுகரம் தன் வடிவுநிலை திரிந்து கெடாது, சாரியை யாகிய மரபினையுடைய இன்பெற்று முடிதல் வேண்டும் எ-று.

வருமாறு : ஒன்பதினாயிரம் - என வரும்.

உருபு என்றும் நிலை என்றும் சாரியை மரபு என்றும் கூறிய மிகுதியான், ஆயிரம் அல்லாத பிற எண்ணின் கண்ணும், பொருட்பெயரிடத்தும், இன்னும் உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் முடிபும் கொள்க.[1]

(உ-ம்.) ஒன்பதிற்றுக்கோடி ஒன்பதிற்றொன்று - ஒன் பதிற்றுத் தடக்கை (பரி. 3) ஒன்பதிற்றெழுத்து (தொகை.28) என வரும்.

இன்னும் அவ்விலேசானே, மேல் எண்ணாயிரம் என்ற வழி, ஒற்றிரட்டுக் கொள்க.[2] (65)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

471. 1) 'இன்' சாரியை னகரம் றகரமாதற்கு விதி 122ஆம் சூத்திரத்தாற் கொள்க. ஒன்பது+இன்= ஒன்பதின் எனமுடியும். இன்னின் னகரம் இரட்டிய றகரமாதல் இவ்வியல் 72ஆம்

சூத்திரத்து 'திரியா' என்னும் இலேசினான் கொள்ளப் பட்டமை காண்க. 'ஒன்பதின்+கோடி' எனப் புணருமிடத்து, னகரம் றகர ஒற்றாக இரட்டும்; இச்சூத்திர இலேசினான் உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடிதல் கொள்ளப்படும். படவே, ஒன்பதின்+உ+கோடி> ஒன்பதிற்ற்+உ+க்+கோடி= ஒன்பதிற்றுக்கோடி என முடியும்.

*2)* 'குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டல்' என்பதனை *161*ஆம் சூத்திர விதியாற் கொள்ளாது இலேசினான் கொண்டார், ஆசிரியர் எண்ணுப்பெயர் முடிபினைப் பொது விதியாற் கொள்ளாது விதந்தோதுவார் ஆதலின். இக்குறிப்பு முன்னரும் [*452 (3)*] காண்க. இலேசினாற் கோடலை, ஆசிரியர் கிளந்தோதற்கு ஒப்பாக உரையாசிரியர் கொண்டனர்.

## நச்சினார்க்கினியம்

### *470.* *ஒன்பது இன்சாரியை பெறுதல்*

ஒன்பான் இறுதி உருவுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மரபே.

இஃது ஒன்பது என்னும் எண் அதனொடு புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* ஒன்பான்.....திரியாது - ஒன்பது என்னும் எண்ணின் இறுதிக் குற்றுகரம் தன் வடிவுநிலை திரிந்து கெடாது; சாரியை மரபு இன்பெறல் வேண்டும் - சாரியை யாகிய மரபினையுடைய இன்பெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

வருமாறு : ஒன்பதினாயிரம் என வரும்.

'உருவு' என்றும் 'நிலை' என்றும் சாரியை மரபு என்றும் கூறிய மிகையான், ஆயிரம் அல்லாத பிற எண்ணின்கண்ணும் பொருட்பெயரிடத்தும் 'இன்'னும் உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் முடிபு கொள்க.[1]

ஒன்பதிற்றுக்கோடி ஒன்பதிற்றொன்பது ஒன்பதிற்றுத் தடக்கை ஒன்பதிற்றெழுத்து என வரும்.

இன்னும் இவ்விலேசானே, வேறொரு முடிபின்மையின் கூறாதொழிந்த எண்ணாயிரம் என்றவழி ஒற்றிரட்டுதலும்[2], ஈண்டுக் கூறியவற்றிற்கு ஒற்றிரட்டுதலும்[3] கொள்க.

'அளவாகு மொழிமுதல்' (121) என்பதனுள் 'நிலைஇய' என்றதனான், னகரம் றகரம் ஆதல் கொள்க. *(65)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***470.*** 1. 'இன்'சாரியையது னகரம் றகரமாகத் திரிந்து இரட்டுதல் 459ஆம் சூத்திரத்து மிகையாற் கொள்ளப்பட்டது. உகரமும் வல்லெழுத்தும் பெறுதல் இச்சூத்திரத்து இலேசினாற் கொள்ளப்பட்டது. 477ஆம் சூத்திரத்து இலேசினானே, வன்கணம் வருவழி நிலைமொழி ஒன்பது பெறும் இன் சாரியையது னகரம் றகரமாக இரட்டுதலும், உகரம் பெறுதலும், வரும் வல்லெழுத்து மிகுதலும் என இம்மூன்று திறமும் ஒருசேரக் கொள்ளப்படும்.

'இன்' இற்று எனத் திரியும் என்று தெளிவுறக் குறிப்பிடாத குறை நச்சினார்க்கினியர் உரையுள் காணப்படுகிறது. மூன்று சூத்திரத்து மிகையால் குறிப்பிடும் இத்திரிபை, ஒன்பது நிலைமொழியாக அதிகாரப்படும் தொடக்கத்தேயே முழுமையாக அவர் குறிப்பிட்டிருக்க வேண்டும் எனவும் தோன்றுகிறது.

2. நிலைமொழிக் குற்றொற்று இரட்டுதலை இலேசினாற் கொண்டார். (சூ. 433 உரைக்குறிப்புக் காண்க.)

3. இன்சாரியை னகரம் றகரமாகத் திரிந்து இரட்டுதல் நிலைமொழிச் செய்கை.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**470.** ஒன்பான் இறுதி.....சாரியை மரபே.

'ஒன்பான் இறுதி உருவுநிலை திரியாது' எனவே, குற்றுகரம் கெடாது நின்றே 'இன்' என்பதனோடு புணர்தல் தெளிவாகும். இதனானும் மேற்சூத்திரத்திற் குறித்தது 'அறு' என்னும் முற்றுகர ஈற்றுச்சொல்லையே என்பது போதரும், ஆறு என்னும் எண்ணுப்பெயரிலுள்ள குற்றுகரவுயிர் கெடுதற்கு விதி கூறினாராயின், ஈண்டும் 'ஒன்பான் இறுதி உயிர்கெட வேண்டும்' என்று கூறல் வேண்டுமன்றே?

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**470.** ஒன்பான் இறுதி.....சாரியை மரபே.

இச்சூத்திரத்திற்கு முன்னர் எட்டு என்பது ஆயிரத்தொடு புணர்தற்குரிய விதி கூறிய சூத்திரம் இருந்திருத்தல் வேண்டும். அது காணாமையான், இச்சூத்திரத்து 'உருவுநிலை திரியாது' என்றதனான், எட்டு என்பதன் ஒற்றுத் திரியாமல் எண்ணாயிரம் எனப் புணரும் எனக்கொள்க.

## இளம்பூரணம்

## 472. ஒன்று முதல் ஒன்பான்கள் முன்னர் நூறாயிரம் முடியுமாறு

நூறா யிரம்முன் வரூஉங் காலை
நூறுஎன் இயற்கை முதல்நிலைக் கிளவி.

இச்.....எனின், ஒன்று முதல் ஒன்பான்களொடு, நூறு என்னும் அடையடுத்து ஆயிரம் என்பது முடியுமாறு கூறு...ற்று.

(இ-ள்.) நூறாயிரம் என்னும் அடையடுத்த மொழி, ஒன்று முதன் ஒன்பான்கன்முன் வருங்காலத்து, முதனிலைக் கிளவியாகிய ஒன்று என்னும் எண், மேல் ஒன்று முதல்

ஒன்பான்கஒளாடு முடிந்த நூறு என்னும் சொல் அவ் ஒன்றனொடு முடிந்த விகார இயற்கை எய்தி முடியும். வழிநிலைக் கிளவியாகிய இரண்டு முதல் எண்கள் விகாரம் எய்தியும், எய்தாது இயல்பாயும் முடியும் எ-று.

வருமாறு : ஒரு நூறாயிரம் - என வரும்.

இரு நூறாயிரம் இரண்டு நூறாயிரம், முந்நூறாயிரம் மூன்று நூறாயிரம், நானூறாயிரம் நான்கு நூறாயிரம், ஐந்நூறாயிரம் ஐந்து நூறாயிரம், அறு நூறாயிரம் ஆறு நூறாயிரம், எண்ணூறாயிரம் எட்டு நூறாயிரம், ஒன்பது நூறாயிரம் - என வரும்.

**உரையிற் கோடல்** என்பதனான், தொள்ளாயிரம் என்ற மாட்டேறு சென்றதேனும், அவ்வாறு முடியாது என்று கொள்க.

'முன்' என்றதனான், இன்சாரியை பெற்று ஒன்பதி னூறாயிரம் என்றுமாம்.

'நிலை' என்றதனான், மூன்றும் ஆறும் இயல்பாய் முடியும் முடிபின்கண் நெடுமுதல் குறுகாமை கண்டுகொள்க.

இன்னும் அதனானே, நானூறாயிரம் என்புழி வரு மொழி நகரக்கேடு கொள்க.[1] *(66)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***472.*** 1) நான்கு+நூறாயிரம், குற்றியலுகரம் மெய் யொடும் கெடவே *(434)*, நான்+நூறாயிரம் என்றாம்; வருமொழி நகரம் 150ஆம் சூத்திரவிதியான் னகரமாகத் திரிய, நான்+னூறாயிரம் ஆம். இச்சூத்திரத்து இலசினான் நிலை மொழி னகரம் கெடவே, நானூறாயிரம் என முடியும். வருமொழி பொதுவிதியான் முடியும். நிலைமொழி எண்ணுப்பெயர் பொதுவிதியான் முடியாது, சிறப்புவிதியான் முடிபெய்தல் வேண்டும். ஆசிரியர் அச்சிறப்புவிதி ஓதாவழிச் சூத்திரத்து இலேசினான் முடிப்பது உரையாசிரியர்தம் கொள்கை.

ஈண்டு உரையாசிரியர் இலேசினான் கொண்ட முடிபு பிறழ்ந்துள்ளமை காண்க. வருமொழி நகரக்கேடு கொள்க என்று எழுதுகிறார். நான்கு+நூறாயிரம்> நான்+நூறாயிரம்> நான் + ஊறாயிரம் = நானூறாயிரம் - என உரையாசிரியர் முடிப்பது நச்சினார்க்கினியர் உரையுள் காணப்பட்டிலது. வருமொழி பொதுவிதியான் முடிவதும், நிலைமொழி சிறப்புவிதியான் முடிவதும் ஈண்டுப் பிறழ நிகழ்ந்துள்ளமை 452ஆம் சூத்திரவுரைக் குறிப்புள்ளும் (2), (3) காண்க. நிலைமொழி னகரம் 161ஆம் சூத்திரத்துப் பொதுவிதியான் முடிக்கலாகாமையும் உணர்க.

## நச்சினார்க்கினியம்

### *471. ஒன்றுமுதல் ஒன்பான் எண்களொடு நூறாயிரம் முடியுமாறு*

நூறா யிரம்முன் வருஉங் காலை
நூறன் இயற்கை முதல்நிலைக் கிளவி.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களொடு நூறு என்னும் எண்அடை அடுத்த ஆயிரம் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்.) நூறாயிரம்.....காலை - நூறாயிரம் என்னும் அடையடுத்தமொழி, ஒன்றுமுதல் ஒன்பான்கள் முன் வருமொழியாய் வருங்காலத்து; முதனிலைக் கிளவி நூறன் இயற்கை - ஒன்று என்னும் முதனிலைக்கிளவி, ஒன்று முன் நூறு என்னும் எண்ணொடு முடிந்தாற்போல விகாரம் எய்தி முடியும்; எனவே, வழிநிலைக்கிளவியாகிய இரண்டு முதலிய எண்கள் விகாரம் எய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும் எ-று.

வருமாறு : ஒரு நூறாயிரம் என வரும்.

ஏனையன இருநூறாயிரம் இரண்டு நூறாயிரம், முந் நூறாயிரம் மூன்று நூறாயிரம், நானூறாயிரம் நான்கு

நூறாயிரம், ஐந்நூறாயிரம் ஐந்து நூறாயிரம், அறுநூறாயிரம் ஆறு நூறாயிரம், எண்ணூறாயிரம் எட்டு நூறாயிரம், ஒன்பது நூறாயிரம் என வரும்.[1]

இவ்விகாரப்பட்டனவற்றிற்குக் குற்றுகரம் மெய் யொடும் கெடுத்து முதல் ஈரெண்ணின் ஒற்று ரகரமாக்கி உகரம் வருவித்து, மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுக்கி, மூன்றன் ஒற்று நகரமாக்கி, நான்கும் ஐந்தும் ஒற்று மெய் திரியா ஆக்கி, எட்டன் ஒற்று ணகாரமாக்கி, இலேசுகளாற் கொண்ட செய்கைகளில் வேண்டுவனவும்[2] கொணர்ந்து முடிக்க.

**ஏற்புழிக்கோடல்** என்பதனான், தொள்ளாயிரம் என்ற முடிபினொடு மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியா தென்று கொள்க.[3] 'முன்' என்றதனான், இன்சாரியை பெற்று ஒன்பதினூறாயிரம் என்றுமாம். 'நிலை' என்றதனான், மூன்றும் ஆறும் இயல்பாக முடிவுழி நெடுமுதல் குறுகாமை கொள்க.[4] *(66)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***471.*** 1. இரண்டு முதலிய எண்ணுப்பெயர்களும் அவற்றின் திரிபாகிய இரு முதலியனவும் நூறாயிரம் என்னும் வருமொழியுள் நூறு என்பதற்குத் தாம் அடைமொழி யாதல் கூடாது; தொகைப்பொருள் மாறுபடாதெனினும், நூறா யிரமே வருமொழி.

2. எண் என்பதன் ணகாரம் இரட்டலும், நான் என்பதன் னகாரம் கெடுதலும் என இவை.

3. ஒன்பது+நூறாயிரம் என்னும் புணர்நிலையே கூறப்பட்டதன்றி, ஒன்பது+நூறு என்னும் புணர்நிலை ஈண்டு இடம் பெறாது என்பது.

4. மூன்று நூறாயிரம், ஆறு நூறாயிரம் என்க.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*471.* நூறா யிரமுன்......முதனிலைக் கிளவி.

உரையாளர், "முதனிலைக் கிளவிக்கு இவ்வாறு விதி கூறவே, வழிநிலைக் கிளவி விகாரம் எய்தியும் எய்தாததும் வரும்" என்று கூறி உதாரணம் காட்டினர். இரண்டு நூறாயிரம்-மூன்று நூறாயிரம் - என்னுமிடத்து, நூறாயிரம் என்பது தனிச் சொல்லாய் நிற்பது போல, இருநூறாயிரம் - முந்நூறாயிரம் - என்னுமிடத்து, நூறாயிரம் என்பது தனிச்சொல்லாய் நிற்றலின்று. ஆண்டு, இருநூறு - முந்நூறு - என்பவை ஒருமொழித் தன்மையில் நின்று, ஆயிரம் என்னும் வரு மொழியோடு புணர்ந்தன எனினும் ஒக்கும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*471.* நூறா யிரமுன்....முதனிலைக் கிளவி.

முதனிலைக் கிளவியை மாட்டெறிந்து கூறி ஏனைய வற்றைக் கூறாமையின், அவை இரண்டு நூறாயிரம், மூன்று நூறாயிரம்......ஒன்பது நூறாயிரம் -எனத் திரியாது வருமென்பது ஆசிரியர் கருத்தாம்.

இதனை ஒன்றுமுதல் ஒன்பான் எண்ணுப் பெயர்கட்குப் பொதுவாகவும், ஒன்று என்பதற்குச் சிறப்பாகவும் கூறியதாகக் கொள்வர் உரையாசிரியன்மார்.

ஆசிரியர் கருத்து ஏனைய எண்கள் திரியாவென்பதே யாம். என்னை? இருநூறாயிரம் முந்நூறாயிரம் என வரின், நிலைமொழி இருநூறு முந்நூறு என்றும் வருமொழி ஆயிரம் என்றும் பொருள்படும்; ஒரு நூறாயிரம் என்பதன்கண் அவ் ஐயம் நிகழாது. ஒன்று நூறாயிரம் என நிற்பின் ஒன்றுபட்ட அல்லது பொருந்திய நூறாயிரம் எனப் பொருள்திரிபு நேரிடும் என்க.

*471.* [ஏனைய எண்கள் திரியா என்று கூறும் இவ்வுரைகாரர், 392ஆம் சூத்திர உரையுள், 'கூறிய' என்றதனான் சிறுபான்மை எழுநூறாயிரம் என வருதலை அடக்கிக் கொள்கிறார்; நூறாயிரத்திற்கு 'எழு' அடையாகாமல், இப்புணர்நிலை எழுநூறு+ஆயிரம் என நிலைவருமொழிகள் செய்யவும் இடனாமாறு நோக்கிற்றிலர்.]

## இளம்பூரணம்

## *473, நூறு என்பதனோடு, ஒன்றுமுதல் ஒன்பான்கள் புணருமாறு*

நூறுஎன் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு
ஈறுசினை[1] ஒழிய இனஒற்று மிகுமே.

இச்....எனின், நூறு என்பதனோடு ஒன்றுமுதல் ஒன்பான்களைப் புணர்த்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* நூறு என்னும் சொல், ஒன்று முதல் ஒன்பான்களொடு புணருமிடத்து, ஈறாகிய குற்றியலுகரமும் அவ்வுகரம் ஏறிய மெய்யாகிய சினையும் கெடாது நிற்ப, சினைக்கு இனமாகிய ஒற்று[2] மிக்கு முடியும் எ-று.

வருமாறு : நூற்றொன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழ்[3] எட்டு ஒன்பஃது - என வரும்.

'ஈறுசினை' என்றோதிய மிகையானே, நூறு என்பதனொடு, பிற எண்ணும், பிற பொருட்பெயரும், இவ்விதியும் பிறவிதியும் பெற்று முடியுமாறு கொள்க.

(உ-ம்.) நூற்றுக்கோடி நூற்றுப்பத்து நூற்றுத் தொண்ணூறு எனவும், நூற்றுக்குறை நூற்றடுக்கு எனவும் வரும். *(67)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*473.* 1) ஈறுசினை : உம்மைத் தொகை ; 464 ஆம் சூத்திரத்துள்ளும் காண்க.

*2)* இவ்வியல் ஆறாம் சூத்திரத்துள்ளும் இவ்வாட்சி காண்க.

*3)* **அடிகளாசிரியர் பதிப்பில்** ஏழு என்றுள்ளது; அச்சுப் பிழை போலும். ஏழ் என்றிருத்தல் வேண்டும்.

**நச்சினார்க்கினியம்**

## *472. ஒன்றுமுதல் ஒன்பான் எண்ணுப்பெயர் வருவழி, நூறு முடியுமாறு*

**நூறுஎன் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு**
**ஈறுசினை ஒழிய[1] இனஒற்று மிகுமே.**

இது நூறு என்பதனோடு ஒன்று முதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

*(இ-ள்.)* நூறு.....ஒன்பதற்கு - நூறு என்னும் எண்ணுப் பெயர் ஒன்றுமுதல் ஒன்பான்களொடு புணருமிடத்து; ஈறு சினை ஒழியா-ஈறாகிய குற்றுகரம் தன்னாற் பற்றுப்பட்ட மெய்யொடும் கெடாது நிற்ப; இன ஒற்று மிகும் - அச் சினைக்கு இனமாகிய றகர ஒற்று மிக்க முடியும் எ-று.

வருமாறு : நூற்றொன்று என வரும். இரண்டு முதல் ஒன்பது அளவும் செய்கையறிந்து ஒட்டுக.

'ஈறுசினை ஒழிய' என்றோதிய மிகையான், நூறு என்பதனொடு பிற எண்ணும் பிற பொருட்பெயரும் இவ்விதியும் பிறவிதியும் எய்தி முடிதல் கொள்க.

நூற்றுப்பத்து - நூற்றுக்கோடி - நூற்றுத்தொண்ணூறு - எனவும், நூற்றுக்குறை - நூற்றிதழ்த்தாமரை - நூற்றுக்காணம் - நூற்றுக்கான் மண்டபம் - எனவும், இனஒற்று மிக்கன கொள்க.

இன்னும் இதனானே, இருநூற்றொன்று இரண்டு நூற்றொன்று என நூறு அடையடுத்தவழியும் கொள்க. (68)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*473.* நூறென் கிளவி.......இனவொற்று மிகுமே.

"'ஈறு சினை' என்று ஓதிய மிகையானே, இருநூற்றொன்று இரண்டு நூற்றொன்று என நூறு அடையடுத்த வழியும் கொள்க" என்றார் நச்சினார்க்கினியர். இதனை 'அடையொடு தோன்றினும்' (111) என்றதனாற் கொள்ளல் கூடும்.

*473.* [நூறு அடையடுத்த வழியும் இவ்விதியான் முடியுமாற்றை 'ஈறுசினை' என்றோதிய மிகையான் நச்சினார்க்கினியர் அடக்கினார். அஃது 'அடை யொடு தோன்றினும்' என்னும் பொதுவிதியான் பெறப்பட்டாது, ஆசிரியர் எண்ணுப்பெயர் முடிபினை விதந்தே ஓதுவாராகலின் என்க.]

**வேங்கடராகவலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*472.* நூறென் கிளவி....இனவொற்று மிகுமே.

'ஈறுசினை' என்றது 'இறுதிச்சினை' (234) என்பது போல வந்தது. ஈறாகிய சினையெழுத்து றுகரம். ஒழிய - தவிர. ஈறாகிய சினையெழுத்தேயன்றி இனவொற்று மிகும் என்றவாறு. 'ஈறுசினை ஒழிய' (469), 'ஒட்டிய மெய்ஒழித்து' (176) என்னுமிடத்து, ஒழிதல் என்னும் சொல்லின் பொருளை நோக்குக. இனவொற்று மிகவே, 'நூற்று' என அமையும். புள்ளியீற்றுமுன் (138) என்னும் சூத்திரத்தான், குற்றுகர வீற்றுமேல் ஒன்று இரண்டு ஐந்து ஆறு எட்டு ஒன்பது என்னும் உயிர்முதன் மொழிகள் ஏறிமுடியும். மெய்ம் முதன் மொழிகள் வருமிடத்துக் குற்றியலுகரம் கெடாதாகலின் நூற்றுமூன்று - நூற்று நான்கு - என்று வரும்.

சிவஞானமுனிவர், இச்சூத்திரத்தானும் 'ஆறன் மருங்கிற் குற்றியலுகரம்' என்னும் சூத்திரத்தானும் குற்றியலுகரம் கெட நின்ற ஒற்றின்மேல் உயிர்வந்து ஒன்றி முடியும்

என்று ஆசிரியர் விதித்தார் என்று பொருள்கொண்டார். நூறு என்பதில் குற்றியலுகரம் கெட்டதாயின், நூற்றுமூன்று நூற்று நான்கு என்று வருதல் அமையாது. ஒன்றுமுதல் ஒன்பது முடியவுள்ள ஒன்பது எண்ணுப்பெயர்களுக்கும் ஒருங்கே விதி கூறியிருப்ப, அவற்றுள் மூன்று நான்கு என்னும் இரண்டு எண்ணுப்பெயர்கட்கு மட்டும் ஒருவிதியும், ஏனைய ஏழற்கும் ஒருவிதியும் ஆமோ? மூன்று நான்கு என்பவை மெய்ம்முதன்மொழி ஆகலின் அவை வந்தவழிக் குற்றிய லுகரம் கெட்டிலது எனின், இவ்விரண்டு எண்ணுப்பெயர் வரும்வழிக் குற்றுகரம் கெடாதிருக்கும் என்று அடுத்து வேறு சூத்திரத்தால் சிறப்புவிதி கூறியிருத்தல் வேண்டுமென்றே ? ஆசிரியர் அவ்வாறு கூறாததனான் சிவஞான முனிவர் கூற்றுப் பொருந்துவதன்று.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**472.** நூறென் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு
ஈறுசினை ஒழியா இனஒற்று மிகுமே.

(இ-ள்.) நூறு என்னும் எண்ணுப்பெயர், ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள எண்ணுப்பெயர் வருமிடத்து, ஈறாகிய குற்றியலுகரமும் அஃது ஊர்ந்து நின்ற றகரமும் நீங்கா: ஆண்டு அச்சினையெழுத்தாகிய றகர ஒற்று மிகும்.

ஈறுசினை என்றது உம்மைத்தொகை. ஈறும் சினையும் என விரித்து ஒழியா என்பதற்கு வினை முதலாக்குக.

நூற்றொன்று - நூற்றிரண்டு....நூற்றொன்பது - என வரும். இருநூற்றொன்று முந்நூற்றொன்று என அடையடுத்து வரினும் இதுவே விதியெனக் கொள்க.

'ஈறுசினை ஒழியா' என்பதே பாடம் என்பது "ஈறாகிய குற்றியலுகரமும் அவ்வுகரம் ஏறிய மெய்யாகிய சினையும் கெடாது நிற்ப என்னும் இளம்பூரணர் உரையான் தெளியப்பட்டது.

அன்றி, 'ஒழிய' என்பதே பாடமாகக் கருதின் அவருரை பொருந்தாததாகும். என்னை? சூத்திர அமைதியை நோக்கின், 'ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே' என்பதற்கு "ஈறுசினை மிகாதொழிய இனவொற்று மிகும்" என்பது பொருளாதலன்றி, "ஈறு கெடாது நிற்ப" எனப் பொருள் கோடற்கு இயையாதென்க. காரணம், பிற சூத்திரங்களில் ஒழிய என்பது (தொடர்ந்து வரும்) கெடும் என்ற சொல்லையே நோக்கி நிற்கின்றது; ஆயின் இச்சூத்திரத்து மிகும் என்பதை நோக்கி நிற்கின்ற தாகலின் என்க.

*472.* [சூத்திரப் பொருளுரைக்கும் வாக்கிய முடிபு ஏற்ப இலது. நீங்கா என்னும் முற்று நீங்காது என வினையெச்சமாக நிற்றல் வேண்டும். 'எண்ணுப்பெயர்...நீங்காது...ஒற்று மிகும்' என்பது வாக்கிய முடிபு.

இவ்வுரைகாரர் 'ஈறுசினை' என்பதனை உம்மைத் தொகையாகக் கொண்டாற் போல, 209ஆம் சூத்திரத்துள் 'இறுதி வகரம்' என்னும் தொடர்க்கு உரையாசிரியன்மார் உம்மைத்தொகையாகப் பொருள் கொண்டனர். "பொருள் வேறுபடாது செல்லின் இதுவுமோர் உரைநலம்" என்று கருதாது, அவ்வுரையை இவர் ஏற்றிலர்.

இருநூற்றொன்று முந்நூற்றொன்று என்னும் புணர் நிலைத் தொடர்களில் இரண்டும் மூன்றும் 'நூற்றொன்று' என்பதற்கு அடையாதலேயன்றி, இருநூறு + ஒன்று- முந்நூறு+ ஒன்று - என்றும் புணர்நிலை அமையும். மேலைச் சூத்திரக் குறிப்பு நோக்குக.

ஒழிதல் - தங்குதல் என்னும் பொருட்டாக உரை யாசிரியன்மார் கொண்டனர். 'மன்னர் வாய்மொழி, நம்பால் ஒழிகுவ தாயின்' (சிலப். 26 : 11). அத்தங்குதலை விளக்கவே, 'கெடாது நிற்ப' என்று 'ஒழிய' என்ற சொற்குப் பொருள் கூறினர். ஒழித்து-தங்கச்செய்து.

சூ. 176 'ஒட்டிய மெய் ஒழித்து' - தான் பொருந்திய மெய்யினை நிறுத்தி;

283. 'மெய்அவண் ஒழிய' - தன்னான் ஊரப்பட்ட மெய் கெடாது அச்சொல் லிடத்தேயே நிற்க;

315. 'முதனிலை ஒழிய (முன்னவை கெடுதலும்')- முன்நின்ற அகரம் கெடாது நிற்ப;

347 'மெய் ஒழித்து' - ஏறி நின்ற மெய்யை ஒழித்து (நிறுத்தி);

350. 'அப்பெயர் மெய்ஒழித்து (அன்கெடு வழியும்')- அவ்வியற்பெயரில் தான் ஏறிய மெய் நிற்க;

469. 'ஈறுமெய் ஒழிய(க் கெடுதல் வேண்டும்') - தான் ஏறிய மெய்யாகிய நகரவொற்றுக் கெடாது நிற்ப;

472. 'ஈறுசினை ஒழிய (இனவொற்று மிகுமே')- ஈறாகிய குற்றியலுகரம் தன்னாற் பற்றப்பட்ட மெய்யொடும் கெடாது நிற்ப.

இவ்விடத்தெல்லாம் 'ஒழித்து' நிற்கச்செய்து எனவும், எச்சதத்திரிபாக (ஒழிய) நிற்க எனவும் பொருள்படுதல் காணலாம். ஒழிய என்னும் நான்கும் (உரிய இடத்தே கெடாது) நிற்ப என்று பொருள்படவே வந்துள.

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்த பொருள் மேற்குறித்தவை. இளம்பூரணர்க்கும் இதுவே பொருள்.

'ஈறுசினை ஒழிய' என்று கொண்ட பாடம் பொருந்தும் படியை இவ்வாற்றால் தெளிக.]

## இளம்பூரணம்

### *474. அதனோடு, ஒன்றுமுதல் ஒன்பான்கள் அடையடுத்தவழிப் புணருமாறு*

அவைஊர் பத்தினும் அத்தொழிற்று ஆகும்.

இச்....எனின், அந்நூறு என்பதனோடு, பத்து, ஒன்று முதல் ஒன்பான்கள் அடையடுத்தவழி புணருமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* அந்நூறு என்பது, ஒன்று முதல் ஒன்பான் ஊரப்பட்ட பத்தினொடு புணருமிடத்தும், அத்தொழிற்றாய் இனஒற்று மிக்கு முடியும் எ-று.

வருமாறு : நூற்றொருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எழுபஃது எண்பஃது - என வரும்.

'ஆகும்' என்றதனான், நிலைமொழி அடையடுத்து வரும் முடிபும் கொள்க.

*(உ-ம்.)* ஒரு நூற்றொருபஃது - என ஒட்டுக. *(68)*

## நச்சினார்க்கினியம்

### *473. ஒருப·:து முதலியன வருவழியும், 'நூறு' அற்றாதல்*

அவைஊர் பத்தினும் அத்தொழிற்று ஆகும்.

இஃது அந்நூறு என்பதனொடு, பத்து, ஒன்று முதல் எட்டு எண்கள் அடையடுத்த வழிப்[1] புணருமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* அவை ஊர் பத்தினும் - அந்நூறு என்பது நின்று, முற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான்களை[1] ஊர்ந்து வந்த பத்து என்பதனொடு புணருமிடத்தும்; அத்தொழிற்று ஆகும் ஈறுசினை ஒழியா இன ஒற்று மிக்கு முடியும் எ-று.

வருமாறு : நூற்றொருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எழுபஃது எண்பஃது[2] என வரும்.

மற்று, நூற்றொன்பது அவை ஊரப்பட்டு வந்தது அன்மை உணர்க.

'ஆகும்' என்றதனான், ஒருநூற்றொருபஃது இருநூற்றொருபஃது என நிலைமொழி அடையடுத்து[3] முடியும் முடிபும் கொள்க. *(68)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*473.* 1. **ஏற்புழிக் கோடலான்** ஒன்பான் என்பது நீக்கப்படும் என்க.

*2. ஒன்பஃது எனத் தவறாக அடுத்து எண்ணற்க.*

*3. நிலைமொழி ஒருநூறு இருநூறு முந்நூறு என அடையடுத்து வரினும், வருமொழியொடு கூடியவழிப் பொருள் மாறுபடாது என்க, அது சிற்றெண்ணே யாதலின்.*

**இளம்பூரணம்**

## *475. அதனோடு, அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு*

அளவும் நிறையும் ஆயியல் திரியா
குற்றிய லுகரமும் வல்லெழுத்து இயற்கையும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.

இச்....எனின், அந்நூறு என்பதனொடு புணருமிடத்து, அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறு.....ற்று.

(இ-ள்.) அந்நூறு என்பதனொடு புணருமிடத்து, அளவுப்பெயரும் நிறைப்பெயரும் மேற்கூறிய இயல்பின்

திரியாதே நின்று, இனஒற்று மிக்கு முடியும். அவ்விடத்துக் குற்றியலுகரம் கெடாமையும், இனஒற்று மிக்கு வன்தொடர் மொழியாய் நின்றமையான் வருமொழி வல்லெழுத்து மிகும் இயல்பும், மேல் வன்தொடர்மொழிக்குக் கூறிய தன்மைய[1] என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* நூற்றுக்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு - எனவும், கழஞ்சு தொடி பலம்-எனவும் வரும்.

'திரியா' என்றதனான், நூறு என்பது அடையடுத்த வழியும் இவ்விதி கொள்க.

*(உ-ம்.)* ஒருநூற்றுக்கலம் இருநூற்றுக்கலம் - என ஒட்டுக. *(69)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*475.* 1) இவ்வியல் 21ஆம் சூத்திரத்திற் கூறிய முடிபு என்க.

**நச்சினார்க்கினியம்**

### *474. அளவு நிறைப் பெயர் வருவழியும் அற்றாதல்*

> அளவும் நிறையும் ஆயியல் திரியா
> குற்றிய லுகரமும் வல்லெழுத்து இயற்கையும்
> முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.

இது நூறு என்பதனோடு அளவுப்பெயரும் நிறைப் பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

*(இ-ள்.)* அளவும்.....திரியா - நூறு என்பதனோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணருமிடத்து, முற்கூறிய இயல்பின் திரியாது இனஒற்று மிக்கு முடியும்; குற்றியல்......இயற்கையும் - அவ்விடத்துக் குற்றியலுகரம்

கெடாமையும், இனஒற்று மிக்கு வன்தொடர்மொழியாய் நிற்றலின் வருமொழி வல்லெழுத்து மிகும் இயல்பும்; முற்கிளந்தன்ன.....புலவர் - 'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே' (426) என வன்தொடர்மொழிக்குக் கூறிய தன்மையவாய் முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* நூற்றுக்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

'திரியாது' என்றதனான், நூறு என்பது அடையடுத்த வழியும் இவ்விதி கொள்க.

அஃது ஒரு நூற்றுக்கலம் இருநூற்றுக்கலம் என வரும். (69)

## இளம்பூரணம்

### *476. ஒன்றுமுதல் எட்டு ஈறாகிய எண்கள் அடையடுத்த பத்தனோடு, ஒன்றுமுதல் ஒன்பான்கள் புணருமாறு*

**ஒன்றுமுதல் ஆகிய பத்துஊர் கிளவி**
**ஒன்றுமுதல் ஒன்பாற்கு ஒற்றுஇடை மிகுமே**
**நின்ற ஆய்தம் கெடுதல் வேண்டும்.**

இச்.....எனின், ஒன்று முதல் எட்டு ஈறாக எண்கள் அடையடுத்த பத்தனோடு ஒன்றுமுதல் ஒன்பான்களைப் புணர்த்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* ஒன்று முதல் எட்டு ஈறாக பத்து என்னும் எண் ஊரப்பட்ட சொற்கள், அவ்ஒன்று முதல் ஒன்பான்கள் வருமொழியாய் வந்து புணருமிடத்து, ஆண்டு நின்ற ஆய்தம் கெட்டு முடிதல் வேண்டும்; கெட்டவழி, இன ஒற்றாய் ஒரு தகர ஒற்று இடைமிக்கு முடியும் எ-று.

வருமாறு : ஒரு பத்தொன்று இருபத்தொன்று, ஒருபத்திரண்டு இருபத்திரண்டு, ஒருபத்து மூன்று இருபத்து மூன்று-என ஒட்டிக்கொள்க.

நின்ற என்றதனான், மேல் (71, 72) ஒரு பதிற்றுக்கலம் என்னு முடிபிற்கு இன் பேறும் கொள்க. (70)

## நச்சினார்க்கினியம்

### *475. ஒருப.:து முதலிய எண்கள், ஒன்று முதல் ஒன்பானொடு புணர்தல்*

ஒன்றுமுதல் ஆகிய பத்துஊர் கிளவி
ஒன்றுமுதல் ஒன்பாற்கு ஒற்றுஇடை மிகுமே
நின்ற ஆய்தல் கெடுதல் வேண்டும்.

இஃது ஒன்றுமுதல் எட்டு ஈறாகிய எண்கள் அடை அடுத்த பத்தனோடும் ஒன்றுமுதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

(இ-ள்.) ஒன்று....கிளவி - ஒன்றுமுதல் எட்டு ஈறாகப் பத்து என்னும் எண்ணேறி ஒருசொல்லாகி நின்ற ஒருபஃது முதலிய எண்கள்; ஒன்றுமுதல் ஒன்பாற்கு - ஒன்றுமுதல் ஒன்பான்கள் வருமொழியாய் வந்து புணருமிடத்து; நின்ற... வேண்டும் - பஃது என்பதன்கண் நின்ற ஆய்தம் கெட்டு முடிதலை விரும்பும் ஆசிரியன்; ஒற்று இடை மிகும் - ஆண்டு இனஒற்றாகிய ஒரு தகரஒற்று இடை மிக்கு முடியும் எ-று.

வருமாறு : ஒருபத்தொன்று இருபத்தொன்று ஒரு பத்திரண்டு இருபத்திரண்டு என எல்லாவற்றொடும் ஒட்டுக.

இவற்றுள் ஒருபத்தொன்று ஒருபத்திரண்டு என்னும் எண்கள் அதிகாரத்தால் நின்ற நூறு என்பதனோடும் அடுத்து வரும்[1] என்றுணர்க. (70)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

475. 1. நூற்றொருபத்தொன்று முதலாகக் காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*475.* ஒன்றுமுத லாகிய ...... கெடுதல் வேண்டும்.

*இவ்வாய்தம் மேலே 437ஆம் சூத்திரத்தான் விதிக்கப் பட்டதாகும். 'திரிந்ததன் திரிபு அது' என்னும் நயத்தான், 'ஒன்று முதலாகிய பத்தூர் கிளவி' என்றார். அதிகாரத்தான் நூற்றொருபத்தொன்று என அடையடுத்துவரினும் கொள்க.*

## இளம்பூரணம்

### *477. அவ்வடையடுத்த பத்தனோடு ஆயிரம் வந்து முடியுமாறு*

**ஆயிரம் வரினே இன்என் சாரியை**
**ஆவயின் ஒற்றுஇடை மிகுதல் இல்லை.**

*இச்....எனின், அவ் அடையடுத்த பத்தனோடு ஆயிரத்தினைப் புணர்த்தல் நுதலிற்று.*

*(இ-ள்.) அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவிமுன் ஆயிரம் என்பது வரின், இடைவந்து புணரும் சாரியை இன் ஆம்; அவ்விடத்து முற்கூறிய (70) ஒற்று இடைமிகுதலின்றி முடியும்[1] எ-று.*

*வருமாறு : ஒருபதினாயிரம் இருபதினாயிரம் - என ஒட்டுக.*

*'ஆவயின்' என்றதனான், ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு உகரமும் வல்லெழுத்துப் பேறும் கொள்க. (71)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*1) சாரியைப் பேறு இனவொற்று இடைமிகுதலை விலக்காது; ஆகலின் அதனைக் கிளந்தோதியே விலக்கினார் என்க.*

## நச்சினார்க்கினியம்

### *476. ஆயிரம் வருவழி, அவ்வெண்கள் இன் பெறுதல்*

**ஆயிரம் வரினே இன்னென் சாரியை**
**ஆவயின் ஒற்றுஇடை மிகுதல் இல்லை.**

இஃது ஒருபஃது முதலியவற்றோடு ஆயிரத்தைப் புணர்க்கின்றது.

*(இ-ள்.)* ஆயிரம்....சாரியை - அவ் ஒன்று முதலாகிய பத்தூர் கிளவி ஆயிரத்தொடு புணருமிடத்து இன்சாரியை பெறும்; ஆவயின்....இல்லை - அவ்விடத்துத் தகரஒற்று இடைவந்து மிகாது எ-று.

*(உ-ம்.)* ஒருபதினாயிரம் இருபதினாயிரம் என எண்பதின்காறும் ஒட்டுக. இவை நூற்றொருபதினாயிரம் எனவும் வரும்.

ஆவயின் என்றதனான், நூறாயிரத்தொருபத்தீராயிரம் என்றாற்போல அத்துப்பெறுதலும் பிறவும்[1] கொள்க. *(71)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***476.*** 1. நூறாயிரத்துப் பன்னீராயிரம் முதலாகக் கொள்க. ஒருபத்தீராயிரம் என்பதனைப் பன்னீராயிரமாகப் புணர்த்த வாறு. ஒருபானீராயிரம் எனவும் புணர்க்க.

## இளம்பூரணம்

### *478. அவற்றோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்து முடியுமாறு*

**அளவும் நிறையும் ஆயியல் திரியா.**

இச்....எனின், அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவிமுன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறு....ற்று.

*(இ-ள்.)* அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவிமுன், அளவுப்பெயரும் நிறைப்பெயரும், மேல் ஆயிரத்தொடு புணரும்வழி முடிந்த இயல்பின் திரியாதே நின்று இன் பெற்று முடியும் எ-று.

*(உ-ம்.)* ஒருபதின்கலம் இருபதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு - எனவும், ஒரு பதின்கழஞ்சு தொடி பலம் - எனவும் கொள்க.

'திரியா' என்றதனான், ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு இன்னின் னகரம் இரட்டிய றகரம் ஆகலும், 'ஒருபதினாழி' என்னும் முடிபின்கண் வருமொழி நகரம் திரிந்தவழி நிலைமொழியில் னகரக்கேடும் கொள்க.[1] (72)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***478.*** 1) வருமொழி நகரம் 150ஆம் சூத்திரவிதியான் னகரமாகத் திரியும்; நிலைமொழியில் னகரக்கேடு திரியா என்ற இலேசினான் கொள்ளப்படும். (161ஆம் சூத்திரப் பொதுவிதி செல்லாதென்க.) சூத்திரப்பொருளில், 'அவ் வொன்று முதல் ஒன்பான்கள் முன்பு எய்திய முடிபுநிலை எய்தி முடியும்' என்னும் தொடரின்கண் முதல் ஒன்பான்கள் என்னும் சொற்களை நீக்குக. (நீக்கிப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.)

**நச்சினார்க்கினியம்**

***477. அளவும் நிறையும் வருவழியும் 'இன்' தோன்றுதல்***

**அளவும் நிறையும் ஆயியல் திரியா.**

இஃது ஒன்று முதலாகிய பத்தூர் கிளவி முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணர்க்கின்றது.

*(இ-ள்.)* அளவும்....திரியா - ஒருபஃது முதலிய எண்களின் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால், ஒற்று இடைமிகாது இன்சாரியை பெற்று முடியும் எ-று.

(உ-ம்.) ஒருபதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், ஒருபதின் கழஞ்சு தொடி பலம் எனவும் வரும், இவற்றிற்கு நூறு அடையடுத்து[1] ஒட்டுக.

'திரியா' என்றதனான், ஒருபதிற்றுக்கலம் இருபதிற்றுக் கலம் என்னும் தொடக்கத்தனவற்றின்கண், இன்னின் னகரம் றகரமாகத் திரிந்து இரட்டுதலும், உகரமும் வல்லெழுத்தும் பெறுதலும் கொள்க.[2]

இன்னும் இதனானே, ஒருபதினாழி என்றவழி நகரம் திரிந்துழி (149) நிலைமொழி னகரக் கேடும்[3] கொள்க.

'அளவும் நிறையும் அதனோ ரன்ன' என்று பாட மோதுவார், முன்னர்ச் சூத்திரத்து 'ஆவயின்' என்றதனானும், அதன் முன்னர்ச் சூத்திரத்து 'நின்ற' என்றதனானும் இவற்றை முடிப்பார். (72)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***477.*** 1. 'நூறு' அடையடுப்பின் 472ஆம் சூத்திர விதியான் ஈறுசினை யொழிய இனவொற்று மிக்கு முடியும் என்றார்.

2. இன்சாரியை 'இற்று' எனத்திரிந்து வலிமிகுதல் இலேசினான் விளங்கக் கூறப்பட்டது.

3. நிலைமொழி னகரக்கேடு இலேசினாற் கொள்ளப் பட்டவாறு காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***478.*** அளவும் நிறையும் ஆயியல் திரியா.

'திரியா' என்றதனான், ஒருபதினாழி என்னும் முடிபின் கண் வருமொழி நகரம் திரிந்தவழி நிலைமொழியின்

னகரக்கேடும் கொள்க - என்றனர் உரைகாரர். இதனை 'நெடியதன் முன்னர்' (161), 'குறுமையும் நெடுமையும்' (50) என்ற சூத்திரங்களாற் கொள்ளல் தகும்.

**478.** [ஆசிரியர் விதந்தோதும் எண்ணுப்பெயர் முடிபிது. நிலைமொழியாக நிற்கும் அதன் திரிபினைப் பொதுவிதியான் உரைகாரர் முடியாது இலேசினான் முடித்தார். இதுவே அவர் மரபு என்பது முன்னும் சுட்டப்பட்டுள்ளது. (452: குறிப்புக் காண்க) வருமொழித் திரிபு 'லன என வரூஉம்' என்பதனாற் கொள்ளப்படலாம்; நிலைமொழித்திரிபு பொதுவிதியான் அமையாது. ஆதலின் உரைகாரர் நிலைமொழியீற்று னகரம் கெடுதலை இலேசினாற் கொண்டனர் என்க.]

## இளம்பூரணம்

***479. முதனிலை எண் ஒன்று என்பது, வன்மை மென்மை இடைக்கணம் வருவழி, ஒரு எனத்திரிந்து முடிதல்***

> **முதல்நிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்**
> **ஞநமத் தோன்றினும் யவவந்து[1] இடையினும்**
> **முதல்நிலை இயற்கை என்மனார் புலவர்.**

இச்.....எனின், ஒன்றுமுதல் ஒன்பான்களொடு பொருட் பெயரைப் புணர்க்கின்றது.

(இ-ள்.) முதல்நிலை எண்ணாகிய ஒன்று என்னும் எண்ணின்முன் வல்லெழுத்து முதல்மொழி வரினும், ஞ ந மக்களாகிய மெல்லெழுத்து முதல்மொழி வரினும், ய வக் களாகிய இடையெழுத்து முதல்மொழி வரினும், அவ்வொன்று முதல் ஒன்பான்கள் முன் எய்திய முடிபுநிலை (சூ. 33) எய்தி முடியும் என்று சொல்லுவர். எனவே, வழி நிலை எண்ணாகிய இரண்டு முதலாகிய எண்கள், அம் முதனிலை முடிபாகிய விகாரம் எய்தியும் எய்தாது இயல் பாயும் முடியும் எ-று.

(உ-ம்.) ஒருகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு - என வரும்.

இருகல் இரண்டுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு - என ஒன்பதின்காறும் ஒட்டுக.

ஒன்பதின்கல் எனச் சென்றதேனும், வழக்கின்மையின் ஒழிக்க.

'நிலை' என்றதனான், மாட்டேற்றுக்கு ஏலாத ஞ க ர யகரங்களின் முடிபு கொள்ளப்பட்டது.[2] (73)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*479.* 1) 'வவ்வந்து' என்று சாத்திரியார் பாடம் கொண்டார்; ஆவோ டல்லது யகர முதலாது (65) ஆதலின் யகர முதன்மொழி வந்தியைதல் பொருந்தாது என்பார். ஒரு யாழ் என்ற முடிபு அடுத்துவரும் சூத்திர விதியாற் பொருந்தாமை உணரப்படும்.

2) கிளந்தோதாவழி மாட்டேறு பெரும்பான்மை வன்கணத்திற்கே செல்லும். சூ. 397, 403 காண்க. சிறுபான்மை இயைபுள்வழி இயல்புகணமும் கொள்ளப்படும். அளவு நிறை எண்ணுப் பெயர்களுள் ஞ க ர யகர முதன்மொழிகள் இன்மை அறிக (சூ. 171). பிறபொருட்பெயர் வருமொழியாக நிகழின், இவ்விரண்டு முதன்மொழிகள்மேல் மாட்டேறு செல்லாமையின், இவ்விலேசினான் அவ்விரண்டினையும் தழுவி முடிபு கொண்டார் உரையாசிரியர்.

**நச்சினார்க்கினியம்**

### *478. வன்கணம் மென்கணம் இடைக்கணம் வருவழி, ஒன்று 'ஒரு' ஆதல்*

முதல்நிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞ ந மத் தோன்றினும் யவவந்து[1] இயையினும்
முதல்நிலை இயற்கை என்மனார் புலவர்.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களொடு பொருட் பெயரைப் புணர்க்கின்றது.

*(இ-ள்.)* முதல்நிலை எண்ணின்முன் - ஒன்று என்னும் எண்ணின்முன்; வல்லெழுத்து.........இயையினும் - வல் லெழுத்து முதல்மொழி வரினும், ஞநமக்களாகிய மெல்லெழுத்து முதல்மொழி வரினும், யவக்களாகிய இடை யெழுத்து முதல்மொழி வரினும்; முதல்நிலை......புலவர் - அவ்ஒன்று முதல் ஒன்பான்கள் முன் எய்திய முடிபுநிலை எய்தி முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

எனவே, வழிநிலை எண்ணாகிய இரண்டு முதலாகிய எண்கள், அம்மூன்று கணமும் முதல்மொழியாய் வரின், முதனிலை முடிபாகிய விகாரம் எய்தியும் எய்தாது இயல் பாயும் முடியும் என்பது.

*(உ-ம்.)* ஒருகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும்[2], இருகல் இரண்டுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும் ஒட்டுக.

இவ்வெண்களின் குற்றியலுகரம் மெய்யொடும் கெட்டு முதல் ஈர் எண்ணின் ஒற்று ரகரமாய் உகரம் வந்தது. இருகல் முதலியவற்றிற்கு இடைநிலை ரகாரம் கெடுக்க[3].

முக்கல் மூன்றுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு என ஒட்டுக, இதற்கு நெடுமுதல் குறுக்கி, 'மூன்றன் ஒற்றே வந்தது ஒக்கும்' *(447)* என்றதனான் முடிக்க.

முன்னர் எண்ணுப்பெயரும் அளவுப்பெயரும் நிறைப் பெயரும் வருவழிக் கூறிய விகாரங்களிற் பொருட் பெயர்க்கும் ஏற்பன கொணர்ந்து முடித்து, எல்லாவற்றிற்கும் 'நிலை' என்றதனான் ஒற்றுத் திரித்து முடிக்க. அவை மூன்றற்கும் ஐந்தற்கும் ஞகரம் வருவழி ஞகர ஒற்றாதலும், மூன்றற்கு யகரம் வருவழி வகர ஒற்றாதலும் ஆம்.

நாற்கல் நான்குகல் சுனை துடி பறை - நான்ஞாண் நான்கு ஞாண் நூல் மணி - நால்யாழ் நான்குயாழ் - நால்வட்டு நான்குவட்டு;

ஐங்கல் ஐந்துகல் சுனை துடி பறை - ஐஞ்ஞாண் ஐந்து ஞாண் நூல் மணி - ஐ யாழ் ஐந்து யாழ் - ஐவட்டு ஐந்துவட்டு;

அறுகல் ஆறுகல் துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு;

ஒன்பது கல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு என ஒட்டுக. ஒன்பதின்கல் எனச் சென்றதேனும் (470), வழக்கின்மையின் ஒழிக்க.

இன்னும் மாட்டேறு இன்றி வருவனவற்றிற்கெல்லாம் முடிபு 'நிலை' என்றதனான் முடிக்க. (73)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*478.* 1. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

2. ஒருயாழ் : ஓர்யாழ் என்ற முடிபே பொருந்துமாறு வரும் சூத்திரவிதியான் தெளிவுறும்.

3. இரண்டன் இடைநிலை ரகாரம் கெடுக்க என்று கொள்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*479.* முதனிலை எண்ணின்முன்....என்மனார் புலவர்.

'ஆவோ டல்லது யகரமுத லாது' (65) என்று முன்னர்க் கூறியிருத்தலானும், மேலைச் சூத்திரத்தில் 'அதன்நிலை உயிர்க்கும் யாவரு காலையும்' (480) என்று கூறுவதனானும், இச்சூத்திரத்தில் 'ஞநமத் தோன்றினும் வவ்வந் தியையினும்' என்றே ஆசிரியர் கூறியிருத்தல் கூடும். பின்னர்ச் சூத்திரத்து 'ஓர் யாழ்' என்ற உதாரணம் கூறியிருக்க, ஈண்டு 'ஒருயாழ்' என்பது பொருந்துமா ?

***479.*** [சாத்திரியார் கருத்துச் சாலப் பொருந்துவது. இந்நுட்பம் இவர் குறிப்புரை வெளிவந்த பின்னரும் பின்னுரையாளர் ஏற்காமை என்னோ ?]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***478.*** **முதனிலை எண்ணின்முன்......என்மனார் புலவர்.**

(இ-ள்.) நிலைமொழியாக முதற்கண் நிற்கும் எண்ணுப் பெயர்களின் முன் கசதபக்கள் வரினும், ஞநமத் தோன்றினும், யவ வந்தியையினும், மேலே எண்ணுப்பெயர் அளவைப் பெயர்கட்கு ஓதிய இலக்கணத்தனவாகும் என்று கூறுவர் புலவர். அஃதாவது ஈறு முதலியன திரிந்தும் திரியாது இயல்பாயும் வரும் என்றவாறு.

(எ-டு.) ஒரு கனி சுனை தலை பகல் எனவும், ஒரு ஞாண் நூல் மணி எனவும், ஒரு யாழ் வட்டு எனவும் வரும். இருகனி சுனை - முக்கனி சுனை - நாற்கனி சுனை - ஐங்கனி சுனை - அறுகனி சுனை - என ஏனையவற்றொடும் ஒட்டிக் கண்டு கொள்க. இவை நிலைமொழி திரிந்து புணர்ந்தன.

இரண்டுகனி மூன்றுகனி பத்துக்கனி நூறுகனி ஆயிரங்கனி என இவை திரியாது இயல்பாய்ப் புணர்ந்தன. ஏனையவற்றொடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

இவற்றுள், ஒன்று என்னும் எண்ணுப்பெயரும், 'ஒன்று முதலாகிய பத்தூர் கிளவியும்' திரிந்தே புணரும். ஒன்பது, பத்து, நூறு, ஆயிரம் என்பவை திரியாதே புணரும். ஏனையவை இருநிலையாயும் புணருமென ஓர்ந்தறிந்து கொள்க.

இனி 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்னும் உத்தியான், உயிர் முதல்மொழி வருமிடத்து, மூன்று முதலாய எண்ணுப்பெயர்கள் திரிந்தும் திரியாதும் முடியும் முடிபுகளையும் ஈண்டே கொள்க. வருமொழி எழுத்தே

பற்றிக் கூறியதனான் வருமொழி எண்ணுப் பெயர்களுக்கும் இம்முடிபு ஒக்குமெனக் கொள்க.

*(எ-டு.)* முவ்வணி நாலணி ஐயணி ஆடை இலை என ஒட்டிக் கண்டுகொள்க. இவை திரிந்து புணர்ந்தன. மூன்றணி நான்கணி ஐந்தணி ஆறணி - இவை திரியாது புணர்ந்தன. ஆறு எட்டு ஒன்பது பத்து நூறு என்பவை உயிர்வரின், ஏறி முடிதலன்றித் திரியா என்க.

இனி, முவ்வொன்று முவ்விரண்டு மும்மூன்று, நாலிரண்டு நான்மூன்று நானான்கு, ஐயிரண்டு ஐம்மூன்று ஐந்நான்கு, ஆறிரண்டு அறுமூன்று அறுநான்கு, எண்ணிரண்டு எண் மூன்று - என ஏனைய எண்ணுப்பெயரொடும் கூட்டி இருநிலைமையாகவும் புணருமாறு கண்டுகொள்க.

## இளம்பூரணம்

### *480. அவ்வெண் உயிரெழுத்தும் யாவும் வருவழி ஒர் எனத் திரிதல்*

**அதன்நிலை உயிர்க்கும் யாவரு காலை**
**முதல்நிலை ஒகரம் ஓஆ கும்மே**
**ரகரத்து உகரம் துவரக் கெடுமே.**

இச்.....எனின், ஒன்று முதல் ஒன்பான்களொடு பொருட்பெயருள் உயிர்முதல்மொழி முடியுமாறும், மேற் கூறிய யகரம் வேறுபட முடியுமாறும் கூறு....ற்று.

*(இ-ள்.)* அவ்வொன்று முதல் ஒன்பான்களொடு புணருமிடத்து, உயர் முதல்மொழி வந்தவிடத்தும் யா முதல் மொழி வந்த விடத்தும், முதனிலை எண்ணாகிய ஒன்று என்பதன்கண் ஒகரம் ஓகாரமாம்; அவ்விடத்து ரகரத்து உகரம் கெட்டுமுடியும். எனவே, வழிநிலை எண்களுள் உயிர் முதல்மொழி வந்தவிடத்து முற்கூறியவாறே இருவாற்றானும் முடியும் எ-று.

*(உ-ம்.) ஓரடை ஓராடை - எனவும், இருவடை இருவாடை[1] இரண்டடை இரண்டாடை - எனவும், உயிர்முதல் மொழிகளை ஒட்டிக்கொள்க.*

*யா முதல்மொழி ஓர்யாழ் என வரும்.*

*'துவர' என்றதனான், இரண்டு என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும் செய்யுளகத்து ஈரசை[2] எனவும் மூவசை எனவும் (செய். 11) முதல்நீண்டு வேறுபட முடியுமாறு கொள்க.*

*'அதனிலை' என்றதனான், முதனிலை நீளாதே நின்று உகரம் கெட்டு ஒரடை ஒராடை ஒர்யாழ் - என வரும் முடிபும் கொள்க. (74)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*480. 1) இரு+அடை, இரு+ஆடை.*

*2) ஆயின் செய்யு ளகத்து 'இரண்டு' உயிர் வருவழி ஈர் எனத் திரிந்து புணர்தலை ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியமையான் அறியலாம். இருவடை, இருவாடை என்னும் புணர்ப்பு வருமொழி முதல் வகரம் எனக்கோடற்கும் உரிமையின், ஈரடை ஈராடை என்னும் புணர்ப்பே பொருந்துமாறு உணரப்படும். 'உம்மை யெச்சம் இருவீற் றானும்' (எச்ச.40) என்னுமிடத்து ஈற்றானும் எனக்கொள்ளாது 'வீற்றானும்' என்றே கொள்ளப்படுதல் காண்க. வீறு - வேறுபாடு, 'முதலீர் எண்ணின்முன்'(456) என்ற விதியான் முடித்தலே ஏற் புடைத்து என்க.*

## நச்சினார்க்கினியம்

### *479. உயிர்க்கணமும் யாவும் வருவழி அஃது ஓர் ஆதல்*

அதன்நிலை உயிர்க்கும் யாவரு காலை
முதல்நிலை ஒகரம் ஓஆ கும்மே
ரகரத்து உகரம் துவரக் கெடுமே.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களொடு பொருட் பெயருள் உயிர்முதல்மொழி முடியுமாறும், மேற்கூறிய (478) யகாரம் வேறுபட முடியுமாறும் கூறுகின்றது.

(இ-ள்.) முதல்நிலைக்கு - ஒன்று என்னும் எண்ணின் திரிபாகிய ஒரு என்னும் எண்ணிற்கு; உயிரும் யாவும் வருகாலை - உயிர் முதல்மொழியும் யாமுதல் மொழியும் வருமொழியாய் வருங்காலத்து;அதன்நிலை - அம்முத னிலையின் தன்மை இவ்வாறாம்; ஒகரம் ஓ ஆகும் - ஒகரம் ஓகாரமாய் நீளும்; ரகரத்து உகரம் துவரக்கெடும் - ரகரத்துமேல் நின்ற உகரம் முற்றக்கெட்டு முடியும் எ-று.

நான்காவதனை 'முதல்நிலை' யொடு கூட்டி, அதன் கண் நின்ற உம்மையை உயிரொடும் 'யா' வொடும் கூட்டுக.

எனவே, வழிநிலை எண்கள் உயிர்முதல்மொழி வந்த விடத்து முற்கூறியவாறே இருவாற்றானும் முடியும்.

(உ-ம்.) ஓரடை ஓராகம் ஓரிலை ஓரீட்டம் ஒருலை ஓரூசல் ஓரெழு ஓரேடு ஓரையம் ஓரொழுங்கு ஓரோலை ஓரௌவியம் என வரும்.

குற்றியலுகரம் மெய்யொடும் கெடுத்து முதல் எண்ணின் ஒற்று ரகரம் ஆக்குக. ஓர்யாழ் ஓர்யானை[1] என வரும்.

'துவர' என்றதனான், இரண்டு என்னும் எண்ணின் இகரத்தை நீட்டி ரகரத்துள் உகரத்தைக் கெடுத்து, ஈரசை ஈர் யானை எனவும், மூன்று என்னும் எண்ணின் னகரஒற்றுக் கெடுத்து மூவகை மூயானை எனவும் முடிக்க. இவை செய்யுள் முடிபு.

இன்னும் இதனானே, இங்ஙனம் வருவன பிறவும் அறிந்து முடித்துக் கொள்க. (74)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*479.* 1. மேலைச் சூத்திரத்து உரையுள் 'ஒருயாழ்' என்ற முடிபு பொருந்தாமை காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*479.* அதனிலை உயிர்க்கும்.....துவரக் கெடுமே.

'அதன்நிலை' என்றது, அந்நிலை என்னும் சுட்டுப் பொருட்டாய் நின்றது.

இனி ஆசிரியர் ஈரசை ஈரளபு ஈரியல ஈரடி ஈரெழுத்து ஈரொற்று எனப் பயில வழங்குதலான், 'இரண்டென் கிளவியும் அதனோ ரற்றே' என ஒரு சூத்திரம் யாத்திருத்தல் வேண்டும், அது காணப்பெறாமையின், மொழிந்த பொருளோடு.....முடித்தல் என்னும் உத்தியான், இரண்டு என்பதன் விதியீறாகிய இரு என்னும் சொல்லின் இகரம் ஈகாரமாய் ரகரத்து உகரம் கெட்டு, ஈரணி ஈராடை.... ஈரெளவியம் எனவும், ஈர்யாழ் ஈர்யானை எனவும் வருமென அமைத்துக்கொள்க.

## இளம்பூரணம்

### *481. இரண்டு முதல் ஒன்பான்கள் முன்னர் மா வந்து புணருமாறு*

இரண்டுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்
வழங்குஇயல் மாஎன் கிளவி தோன்றின்
மகர அளபொடு நிகரலும் உரித்தே.

இச்....எனின், இரண்டு முதல் ஒன்பான்கள் முன்னர், அளவு முதலிய மூன்றற்கும்1 உரிய மா என்பது புணருமாறு கூறு......ற்று.

(இ-ள்.) இரண்டு முதலாக ஒன்பது ஈறாகச் சொல்லப் படுகின்ற எண்களின் முன்னர் வழக்கின்கண்ணே கிடக்கின்ற விலங்குமா அல்லாத அளவு முதலியவற்றிற்கு உரிய மா என்னும் சொல் தோன்றின், இயல்பாய் முடிதலேயன்றி,

மேற்கூறிய மண்டை என்னும் அளவுப் பெயரோடு ஒத்து வேறுபட முடிவனவும் பெறும் எ-று.

வருமாறு : இரண்டுமா இருமா, மூன்றுமா மும்மா - என ஒன்பதின்காறும் இவ்வாறு ஒட்டுக.

'இரண்டு முதல் ஒன்பான்' என எடுத்தமையின், ஒன்றற்கு ஒருமா என்னும் முடிபேயன்றி ஒன்றுமா என்னும் முடிபு இல்லையாயிற்று.

இவற்றுள் மிக்க எண்ணொடு குறைந்த எண் வருங்கால் உம்மைத்தொகையாகவும், குறைந்த எண்ணொடு மிக்கது வரின் பண்புத்தொகையாகவும் முடித்தார் என்க.[2] *(75)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***481. 1)*** அளவு முதலிய மூன்றற்கும் உரிய பெயராக 'மா' வழங்குவதனை உரையாசிரியன்மார் இருவரும் கூறினர். ஆயின் 171ஆம் சூத்திரவுரையுள் மா நிறைப்பெயராகவே இடம்பெறுகிறது.

ஈண்டு 'மா' நீள அகல நீட்டலளவைப் பெயராற் பெறப்படும் பரப்பளவைக் குறிக்கும் அளவைப் பெயராம். 'ஒருமா இல்லதும் பன்னாட் காகும்' *(புறநா. 184)* என வருவது காண்க.

*2)* ஆயிரத்துப் பத்து : உம்மைத்தொகை; பதினாயிரம் : பண்புத்தொகை.

**நச்சினார்க்கினியம்**

### *480. 'மா' வருவழி, இரண்டுமுதல் ஒன்பான் எண்கள் திரியுமாறு*

**இரண்டுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்**
**வழங்குஇயல் மாஎன் கிளவி தோன்றின்**
**மகர அளவொடு நிகரலும் உரித்தே.**

இஃது இரண்டுமுதல் ஒன்பான்களின் முன்னர் அளவு முதலிய மூன்றற்கும் உரிய மா என்பது[1] புணருமாறு கூறுகிறது.

*(இ-ள்.)* இரண்டு....முன்னர் - இரண்டு என்னும் எண் முதலாக ஒன்பது என்னும் எண் ஈறாக நின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர்; வழங்கியல்....தோன்றின் - வழக்கின் கண்ணே நடந்த அளவு முதலியவற்றிற்குரிய 'மா' என்னும் சொல் வருமொழியாய் வரின்; மகர.....உரித்து - அவ் வெண்ணுப்பெயர்களின் முன்னர்த் தந்து புணர்க்கப்படும் மண்டை என்னும் அளவுப் பெயரோடு ஒத்து விகாரப்பட்டு முடிதலும் உரித்து; உம்மையான், விகாரப்படாது இயல்பாய் முடிதலும் உரித்து எ-று.

வழக்கியல், வழங்கியல் என விகாரம். மகர அளவு: மகர முதல்மொழியாகிய அளவுப்பெயர் எனப் பண்புத் தொகை. அஃது 'அளந்தறி கிளவியும்' *(446)* என்பதனுள், ஒரு மண்டை என முடித்தாம்.

வருமாறு : இருமா மும்மா நான்மா ஐம்மா அறுமா எண்மா ஒன்பதின்மா என, முன்னர்க் கூறிய சூத்திரங்களான் விகாரப்படுத்தி முடிக்க. உம்மையான், விகாரப்படுத்தாது இரண்டுமா மூன்றுமா நான்குமா ஐந்துமா ஆறுமா எட்டுமா ஒன்பதுமா எனவும் முடிக்க.

புள்ளிமயங்கியலுள் 'அளவும் நிறையும்' *(389)* என்னும் சூத்திரத்தான், ஏழ் என்பது நெடுமுதல் குறுகி உகரம் வந்து புணருமாறு கூறினார். அதனான் ஈண்டு எழுமா என முடிக்க. ஏழ்மா என முடிதல் வழக்கின்று.

இரண்டு முதல் ஒன்பான் என்று எடுத்தோதினமையின், ஒன்றற்கு ஒருமா என்னும் முடிபேயன்றி ஒன்றுமா[2] என்னும் முடிபு இல்லையாயிற்று.

'வழங்கியல் மா' என்றார், விலங்குமாவை நீக்குதற்கு.[3] *(75)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**480.** 1. 'மா' நிறைக்குரிய பெயராகவே தொகைமரபு 28ஆம் சூத்திரத்து உரையாசிரியன்மார் இருவரானும் குறிக்கப்பட்டுள்ளது.

2. 'ஒன்று தேரினான்' என ஒன்று திரிபின்றிப் பொருட் பெயரொடு முடிந்தநிலை சீவக. 417ஆம் பாடலில் காணப்படுகிறது.

3. 'விலங்குமா, மாமரம் முதலியவற்றை' என்று சாத்திரியார் நச்சினார்க்கினியர் உரையுள் விடுபட்டவற்றை நிரப்பியுரைப்பார்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**481.** இரண்டுமுதல் ஒன்பான்.....நிகரலும் உரித்தே.

"'வழங்கியல் மா' என்றார், விலங்குமாவை நீக்குதற்கு" என்ற நச்சினார்க்கினியருரையில், 'விலங்குமாவை' என்பதற்குப் பிரதியாக 'விலங்கு மரம்' முதலியவற்றை என்றிருத்தல் வேண்டும். ஒருகால் இஃது இடைச்செருகலாய் இருத்தலும் கூடும்.

**481.** [இவ்வுரைகாரர் குறிப்பிட்டது பொருந்து மெனவே தோற்றுகிறது.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**480.** இரண்டுமுதல் ஒன்பான்.....நிகரலு முரித்தே.

ஆசிரியர் முகத்தலளவை நிறுத்தலளவை எண்ண லளவைப் பெயர்களையே விதந்து இதுகாறும் விதி கூறி வந்தமையான், வரையறையுடைய இம் 'மா' என்னும் நீட்டலளவைப் பெயர் அவற்றுள் அடங்காமை கருதி, மண்டை என்னும் முகத்தலளவைப் பெயரொடு மாட்டெறிந்து கூறி, இஃது இயல்பாயும் புணர்தலான் எதிர்மறையும்மை கொடுத்தமைத்தார்.

இருமா மும்மா நான்மா ஐம்மா அறுமா எண்மா எனவும், இரண்டுமா மூன்றுமா....ஒன்பதுமா எனவும் வரும். எழுமா ஏழுமா என்பவை ழகர வீற்றுள் அடங்கும்.

இனி ஒன்றன் கூறாகிய ஒருமா இருமா மும்மா நான்மா என்பவற்றை நிலைமொழி வருமொழி செய்து புணர்ப்பினும் இவ்விதி ஒக்குமெனக் கொள்க. மா என்பது இருபதின் ஒருகூறு.

***480.*** [உதாரணத்தில் அறுமா என்றிருத்தல் வேண்டும். நீட்டலளவையாலன்றிப் பரப்பளவாகிய மாவினைத் துணிதல் கூடாமையின் மா நீட்டலளவை என்றார் இவர்.]

**இளம்பூரணம்**

## *482. லகார னகார ஈற்றுச் செய்யுள் முடிபு*

**லனஎன வருஉம் புள்ளி இறுதிமுன்**
**உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்**
**அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்**
**செய்யுள் தொடர்வயின் மெய்பெற நிலையும்**
**வேற்றுமை குறித்த பொருள்வயி னான.**

இச்.....எனின், லகார னகார ஈற்றுச் செய்யுள் முடிபு கூறு......ற்று.

*(இ-ள்.)* ல ன - என்று சொல்லவருகின்ற புள்ளியீற்றுச் சொல் முன், உம் என்னும் சாரியையும் கெழு என்னும் சாரியையும் உளப்படப் பிற சாரியையும், அப்பெற்றிப்பட்ட மரபினையுடைய மொழியிடைத் தோன்றி, செய்யுள் மொழிகளைத் தொடர்ந்து சொல்லுமிடத்து மெய்ம்மை பெற நிலைபெற்று முடியும், வேற்றுமை குறித்த பொருட் புணர்ச்சிக்கண் எ-று.

*(உ-ம்.)*

*'வானவரி வில்லும் திங்களும் போலும்'*

*'கல்கெழு கானவர் நல்குறு மகளே'*

*(குறுந். 71) எனவும்,*

*'மாநிதிக் கிழவனும் போன்ம்' (அகநா. 66)*

*'கான்கெழு நாடு' (ஷ 98) எனவும் வரும்.*

'மொழியிடைத் தோன்றி' என்ற மிகையான், பிற ஈற்றுள்ளும் இச்சாரியை பெற்று முடிவன கொள்க.

*(உ-ம்.) 'துறைகெழு மாந்தை' (நற். 35) வளங்கெழு திருநகர் (அகநா. 17) - எனவரும்.*

அன்ன மரபின் என்றதனான், சாரியை காரணமாக வல்லெழுத்துப் பெறுதலும், அது காரணமாக நிலைமொழி ஈறு திரிதலும், சாரியையது உகரக்கேடும், எகர நீட்சியும் கொள்க.[1]

*(உ-ம்.)* பூக்கேழூரன் (ஐங். 1) வளங்கேழ் திருநகர் - என்று அவ்வாறு வந்தமை அறிக.

மெய்பெற என்றதனான், இச்சாரியைப் பேற்றின்கண் ஈற்று வல்லெழுத்து வீழ்க்க.[2] *(76)*

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

***482.*** *1) பூக்கேழூரன் : சாரியை காரணமாக வல்லெழுத்துப் பேறு*

*வளங்கெழு : நிலைமொழி யீற்று மகரம் சாரியை நோக்கித் திரிதல்.*

*கெழு - **கேழ்** : சாரியை யீற்று உகரம் கெட்டவழி, முதல்நிலை எகரம் நீடல்.*

*2) வளங்கெழு திருநகர் : வளம் என்னும் மகர ஈறு கெட்டு, வரும் வல்லெழுத்து மிக்கு முடிதல் விதி (311). 'கெழு' ச்சாரியை பெற்றவழி அவ்வியைபு வல்லெழுத்து வீழ்தலை இலேசினாற் கொண்டார் உரையாசிரியர். சாரியைப் பேறு இயைபு வல்லெழுத்துப் பேற்றினை விலக்காது என்னும் கொள்கையை இறுதிவரை கடைப்பிடித்து வருமாறு காண்க.*

*'முடிகெழு வேந்தர்' என்பது புள்ளியீறு அல்லாதவழி வந்த சாரியை என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். பதி.)* **அடிகளாசிரியர்** குறிப்பு இது.

**நச்சினார்க்கினியம்**

### *481. புள்ளி மயங்கியலுள் எஞ்சிநின்ற செய்யுள் முடிபு*

**லனஎன வருஉம் புள்ளி இறுதிமுன்**
**உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்**
**அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்**
**செய்யுள் தொடர்வயின் மெய்பெற நிலையும்**
**வேற்றுமை குறித்த பொருவயி னான.**

*இது புள்ளி மயங்கியலுள் ஒழிந்து நின்ற செய்யுள் முடிபு கூறுகின்றது.*

*(இ-ள்.) லன என....முன் - லகார னகாரம் என்று கூற வருகின்ற புள்ளியீற்றுச் சொற்களின் முன்னர்; உம்மும்...... பிறவும் - உம் என்னும் சாரியையும் கெழு என்னும் சாரியையும் உட்படப் பிறசாரியையும்; அன்ன....தோன்றி - அப்பெற்றிப்பட்ட மரபினையுடைய மொழியிடத்தே தோன்றி; செய்யுள்....... நிலையும் - செய்யுட் சொற்களைத் தொடர்புபடுத்திக் கூறுமிடத்துப் பொருள்பட நிற்கும்; வேற்றுமை.... வயினான- வேற்றுமையைக் குறித்த பொருட்புணர்ச்சிக்கண் எ-று.*

(உ-ம்.) வானவரி வில்லுந் திங்களும் போலும் ; இதற்கு உம் என்னும் சாரியையின் மகரத்தை 'அம்மின் இறுதி' (129) என்னும் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனான் பிற சாரியையும் திரியும் என நகர ஒற்றாக்கி, நிலைமொழி லகர ஒற்றின்மேல் உயிரேற்றி முடிக்க.

'வில்லும் திங்களும் போலும்' என்பதற்கு வில்லிடைத் திங்கள் போலும் என ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க.

'கல்கெழு கானவர் நல்குறு மகளே' (குறுந்.71): இதற்குக் கல்லைக் கெழீஇயின என உரைக்க.

'மாநிதிக் கிழவனும் போன்ம்' (அகநா. 66): இதற்குக் கிழவனைப் போன்ம் என உரைக்க; இவ்வும்மை சிறப்பன்று.[1]

'கான்கெழு நாடு' (அகநா. 98): இதற்குக் கானைக் கெழீஇய என உரைக்க.

இனி, 'அன்ன மரபின் மொழியிடை' என்றதனான், கெழு என்றது பிற சொல்லிடத்தே 'பணைகெழு பெருந்திறற் பல்வேல் மன்னர்' (மதுரைக். 234) 'துறைகெழு மரந்தை' (நற்.35) என இயல்பாக[2] வருவனவும், 'வளங்கெழு திருநகர்' (அகநா. 17) 'பயங்கெழு மாமழை' (புறநா. 266) என நிலைமொழி யீற்றெழுத்துத் திரிய வருவனவும் கொள்க.

இன்னும் இதனானே, இச்சாரியையது உகரக்கேடும் எகர நீட்சியும் கொள்க. 'பூக்கேழ் தொடலை நுடங்க எழுந்து' (அகநா. 28) 'துறைகேழூரன் கொடுமை காணி' (ஐங்.11); இவற்றிற்கு இரண்டாவதும், ஏற்புழி மூன்றாவதும் விரிக்க.[3]

'செங்கேழ் மென்கொடி' (அகநா. 80) என்புழிக் கெழு என்னும் உரிச்சொல் 'எழுத்துப் பிரிந்திசைத்தல்' (சொல்.395) என்பதனான் நீண்டதென்று உணர்க.4 'மெய்' என்றதனான், 'பூக்கேழ்' என்புழி லகரவொற்று மிகுதல் கொள்க.

இன்னும் சான்றோர் செய்யுட்கண் பிற சாரியை பெற்று விகாரங்கள் எய்தி முடிவனவற்றிற்கு எல்லாம் இச்சூத்திரமே விதியாக முடித்துக் கொள்க. (76)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*481.* 1. சிறப்பும்மை என்று கொள்ளற்க என்றவாறு.

2. நிலைமொழியீறு திரியாமல் இயல்பாக என்றவாறு.

3. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

4. 'பிரிந்திசைத்தல் இவண் இயல்பின்று' எனவே, 'திரிந்திசைத்தல்' இயல்பாம் எனக்கொண்டு, 'கெழு' கேழ் என ஈற்றுகரம் கெட்டு அது கெட்டவழி முதல் நீண்டு இவ்வாறு திரிந்திசைக்கும் என்றார்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*481.* லனஎன வருஉம் புள்ளி யிறுதிமுன்
உம்மும் கெழுவும்.....பொருள்வயி னான.

'உம்' இடைச்சொல்லும் 'கெழு' உரிச்சொல்லுமாம். இவை முறையே 'இடை' எனவும் 'ஐ' எனவும் வேற்றுமைப் பொருளாயும், உடைய என்னும் ஆறன்சொல்லுருபாயும் வருவன. வானவரி வில்லும் திங்களும் போலும் - வானவரி வில்லிடைத் திங்களைப் போலும்; மாநிதிக் கிழவனும் போன்ம் - மாநிதிக் கிழவனைப் போலும்; கல்கெழு கானவர்- மலையையுடைய கானவர் - எனப் பொருள் தருமாறு கண்டு கொள்க.

கெழு என்பதற்குப் பொருந்திய எனப் பொருள் கூறின், அது வினைநிலைப்பட்டவாறாகும் அன்றி உரிச்சொல் நிலையினதாகாது என்க.

இவற்றின் இலக்கணப் பயனைத் தேறாமல் உரை யாசிரியன்மார் இவற்றைச் சாரியை என்ப. சாரியை என்பது

உருபினை நிலைமொழியொடு இணைப்பதற்கு வருவது. இவை உருபின் பயத்தவாயும் சொல்லுருபாயும் நிற்றலின் சாரியை எனற்கேலாமை அறிக.

'உம்' என்பது எண்ணுப்பொருளும் எச்சப் பொருளும் பயவாது இரண்டாவதற்கும் ஏழாவதற்கும் உரிய உருபின் பொருள் தோன்ற நின்றது. கெழு என்பது கெழுமுதல் என்னும் பொருள் பயவாது ஆறாவதன் பொருள் தோன்ற நின்றது.

*481.* ['கெழு' என்பதற்குப் பொருந்திய என்று பொருள் கூறின் அது வினைநிலைப்பட்டவாறாமன்றி உரிச்சொல் நிலையிற்றாகாது என்றார் இவர். 'தடமருப் பெருமை' என்புழித் தட என்னும் உரிச்சொற்கு வளைந்த எனப் பெயரெச்சப் பொருட்டாகவன்றி பிறவாறு பொருள் கூறுதல் என்னை? புலப்பாடு கருதியே சொல்லினது பொருள் செல்வதென்க.

வேற்றுமையுருபினை நிலைமொழியோடு இணைக்க வருவனவே சாரியை என்ற இலக்கணம் நிரம்பாது. அக்கும் இக்கும் ஆனும் ஏயும் முதலாயின சாரியைகள் அன்ன இலக்கணத்த அல்ல என்பது வெளிப்படை. ஆகலின், உம்மும் கெழுவும் சாரியைகளாகக் கொண்ட உரை யாசிரியன்மார் கூற்றுப் பொருந்தா தென்றல் சாலாது என்பது.]

**இளம்பூரணம்**

***483. இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படா மொழிகள்***

**உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்**
**குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி**
**நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்**
**உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்**
**ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்**
**செய்யும் செய்த என்னும் கிளவியின்**

மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும்
தம்இயல் கிளப்பின் தம்முன் தாம் வரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்
அன்னவை எல்லாம் மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத் தோன்றா.

இச்....எனின், இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படா மொழிகள் இவையென, அவற்றை எடுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உயிரெழுத்தும் புள்ளியெழுத்தும் ஈறாகிக் குறிப்பின்கண்ணும் பண்பின்கண்ணும் இசையின்கண்ணும் தோன்றி ஒருநெறிப்பட்ட வாராக் குறைச்சொற்களாகிய உரிச்சொற்களும்,

ஐந்து பாலினையு அறியவரும்[1] பண்புத்தொகை மொழிகளும், செய்யும் செய்த - என்னும் பெயரெச்சச் சொற்களின்படி ஒருங்கு நடக்கும் வினைச்சொல் தொக்க[2] வினைத்தொகையும்,

எண்கள்தம் இயல்பு கிளக்குமிடத்து நிறுத்தசொல்லும் குறித்து வரு கிளவியுமாய் வாராது தம்முன் தாம் வரும் தொகுதி உளப்பட,

பிறவும் அத்தன்மைய எல்லாம், வழக்கிடத்து மருவி நடந்த இடத்துள்ளள் ஆகலான், அவ்வாறே கொள்ளப்படும்; புணர்ச்சி இயன்ற நிலைமைக்கண் அவற்றின் முடிபு விளங்கத் தோன்றா எ-று.

(உ-ம்.) விண் விணைந்தது - கார் கறுத்தது - ஒல்லொலித்தது - இவை குறைச்சொற்கிளவி ஆயினமையின் முடிக்கப்படா ஆயின. விண்ணென விசைத்ததென இடைச்சொல்லொடு கூடியவழிப்[3] புணர்க்கப்படும்.

கருஞ்சான்றான் என்பது பண்புத்தொகை. இது கரும் எனப் பண்பு உணர நின்றது. கருஞ்சான்றான் எனத் தொகையாயவழி, கரும் என்பது கரியான் எனப் பால்காட்டி நிற்றலின்[4] புணர்க்கப்படாதாயிற்று.

கொல்யானை என்றது வினைத்தொகை. அதுவும் கொல் எனத்தொழின்மை உணர நின்றது. கொல் யானை எனத்தொகையாயவழி, கொன்ற எனக் காலங்காட்டி நின்றமையின்[5] புணர்க்கப்படாதாயிற்று.

ஓரொன்று என இது தம்முன் தாம் வந்த எண்[6], இது நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியும் அன்மையின் புணர்க்கப்படாதாயிற்று. இதுதானே ஓரொன்றாக் கொடு என்புழிப் புணர்க்கப்படும்.

'பிறவும்' என்றதனான், முடியாதன உண்டான், கரியன் என்பன. இவை உண் எனவும் கருமை எனவும் பிரித்து நிறுத்தியவழி, ஆனும் அன்னும் குறித்து வருகிளவி அன்மையான், வந்து புணராமையின் புணர்க்கப்படா ஆயின.[7]

'தோன்றி' என்றதனான், 'கொள்ளெனக் கொண்டான்' என்புழி, கொள் என்பதனை என என்பதனொடு புணர்க்கப் படாமை[8] கொள்க.

மெய்யொருங்கியலும் என்றதனான், உண்டான் என்புழிச் செய்கையும் காலமும் பாலும் தோற்றி நிற்குமாறு பிரித்துப் புணர்க்கப்படாமை[9] கொள்க. (77)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

*483. 1)* நச்சினார்க்கினியர் உரையுள் விளக்கம் காண்க.

2) காலவெழுத்து இடைநிலையும், காலங்காட்டும் உம் இறுதிநிலையும், மறைந்து நிற்கும் எனப் பொருள் கொள்க.

3) எனவெனெச்சமாகக் குறிப்புப் பொருள் உணர வரும்வழி என்க.

4) ஆண்பாலை யுணர்த்தும் விகுதி பண்படிச்சொல் லொடு புணருமிடத்தேயே பொருள்படுவான் செல்லும் என்றார். இவ்வாறே ஏனைய நாற்பாலையும் கொள்க.

4),5) பண்புத்தொகையும் வினைத்தொகையும் விரிக்குமிடத்து முறையே ஒருபாலும் ஒருகாலமும் தோன்ற விரிக்கலாமின்றி, ஐம்பாலும் முக்காலமும் ஒருங்கு தொக்க அவ்வாற்றல் தோன்ற விரித்தல் கூடாமையின், அவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படா என்பது கருத்து. இக்கருத்து நச்சினார்க்கினியர் உரையுள் தோன்றப் புலப்படும்.

6) தன்முன் தான் வந்த - என ஒருமை கொள்க, 'ஒன்று' என்பதே நிலைமொழியும் வருமொழியும் ஆதலின். 'ஒன்ப தொழித்தஎண் ஒன்பது மிரட்டின்' என்ற நன்னூலார் கொள்கை ஈண்டு ஏலாது. 'ஓரொன்று' : இதனை நிலைமொழி வருமொழி செய்யற்க. இதனையே நிறுத்த சொல்லாகக் கொள்ளின், ஓரொன்று + ஆக = ஓரொன்றாக என நிறுத்தி, 'கொடு' என்பதனைக் குறித்துவரு கிளவியாகக் கொண்டு முடிக்கலாம் என்றார்.

7) பகுபதவுறுப்புக்கள், 'பகுதி'யை நிலைமொழியாக நிறுத்திப் புணர்ப்பதற்குக் குறித்து வருகிளவி ஆகாமையான், ஒருமொழிப்புணர்ப்பாகிய இவ்வுறுப்புக்களின் புணர்நிலை கூடாது என்பது உரையாசிரியர் கருத்து. இறுதிநிலை, 'வினைசெயல் மருங்கிற் காலமொடு வரூஉம்' (இடை.2) இடைச்சொல் என இவ்விரண்டுமன்றிப் பிற பகுபத வுறுப்புக்களை ஆசிரியர் பெயர் சுட்டிலர்.

*8) எனவென் எச்சம் ஒரு சொல்லாக வழங்கப் படுவதன்றி, வினைப்பகுதியோடு 'என' வைப் புணர்த்தலான் அமையாது என்பது.*

*9) வினைமுற்றினை முதனிலையும் காலங்காட்டும் இடைநிலையும் பால்காட்டும் இறுதி நிலையுமாகப் பிரித்துப் புணர்த்து முடித்துக் காட்டடல் பொருந்தாது என்றார்.*

**நச்சினார்க்கினியம்**

## *482. இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படாத சொற்கள் இவை எனல்*

**உயிரும் புள்ளியும் இறுதி யாகி**
**குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி**
**நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்**
**உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்**
**ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்**
**செய்யும் செய்த என்னும் கிளவியின்**
**மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும்**
**தம் இயல் கிளப்பின் தம்முன் தாம் வரூஉம்**
**எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்**
**அன்னவை எல்லாம் மருவின் பாத்திய**
**புணரியல் நிலையிடை உணரத் தோன்றா.**

*இஃது இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படாத சொற்கள் இவையென அவற்றை எடுத்துணர்த்துகின்றது.*

*(இ-ள்.) உயிரும்.....கிளவியும் - கூறுங்கால் உயிரும் புள்ளியும் ஈறாக நிற்பனவாம் சொல்லாகி, குறிப்பினானும் இசையினானும் பண்பினானும் பிறந்து, ஒருவழிப்பட வாராத சொல் தன்மை குறைந்த சொற்களாகிய உரிச்சொற்களும்; உயர்திணை...மொழியும் - உயர்திணை அஃறிணை என்னும் அவ்விரண்டிடத்தும் உளவாகிய, ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்து பாலினையும் அறிதற்குக் காரணமாகிய பண்புகொள் பெயர் தொகும் தொகைச் சொல்லும்;*

செய்யும்....மொழியும் - செய்யும் செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய காலம் காட்டும் உம்மும் அகரமும் ஒரு சொற்கண்ணே சேரநடக்கும் புடைபெயர்ச்சி தொக்குநிற்கும் சொற்களும்;

தம் இயல்....உளப்பட - தமது தன்மை கூறுமிடத்து, நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியுமாய் வாராது, தம்முன்னர்த் தாமே வந்து நிற்கும் எண்ணுப்பெயரினது தொகுதியும் உளப்பட; அன்னவை பிறவும் எல்லாம் - அத் தன்மையவாகிய பிறவும் எல்லாம்; மருவின் பாத்திய - உலகத்து மருவி நடந்து வழக்கினது பகுதியைத் தம் இலக்கணமாக வுடைய;

புணரியல்.......தோன்றா - ஒன்றோடொன்று புணருதல் நடந்த தன்மையிடம் விளங்கத் தோன்றா எ-று.

(உ-ம்.) கண் விண்ண விணைத்தது, விண் விணைத்தது: இவை குறிப்புச்சொல்; ஆடை வெள்ள விளர்த்தது, வெள் விளர்த்தது: இவை பண்புரிச்சொல்; கடல் ஒல்ல ஒலித்தது, ஒல்லொலித்தது : இவை இசையுரிச்சொல். 'ஒல்லொலிநீர் பாய்வதே போலும் துறைவன்' என்றார் செய்யுட்கண்ணும். இவை உயிர்-ஈறாயும் புள்ளியீறாயும் நிற்றலின் ஒன்றன்கண் அடக்கலாகாமையின், 'நெறிப்பட வாரா' என்றார். 'விண்ண விணைத்தது' தெறிப்புத் தோன்றத் தெரிந்தது என்றும், 'விண் விணைத்தது' தெரிப்புத் தெறித்தது என்றும் ஆம். ஏனைய வற்றிற்கும் இவ்வாறே உணர்க. இங்ஙனம் நிற்றலின் தன்மை குறைந்த சொல்லாயிற்று. 'வினையே குறிப்பே' (சொல் 260 நச்.) என்னும் சூத்திரத்திற்கூறிய 'என' என்பதனை இவற்றொடு கூட்டியவழி இடைச்சொல்லாதலின், விண்ணென விணைத்தது[1] எனப்புணர்க்கப்படுமாறுணர்க.

இனி, கரும்பார்ப்பான் - கரும்பார்ப்பனி - கரும் பார்ப்பார் - கருங்குதிரை - கருங்குதிரைகள் - என வரும் இவற்றுள், கரியனாகிய பார்ப்பான் - கரியளாகிய பார்ப்பனி- கரியராகிய பார்ப்பார் - கரியதாகிய குதிரை - கரியனவாகிய

குதிரைகள் - என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்புகொள் பெயர்[2] தொக்கவாறு காண்க. இவற்றுள் கருமை என்னும் பண்புப்பெயர் தொக்கதேல், கருமையாகிய பார்ப்பான் என விரித்தல் வேண்டும்; அங்ஙனம் விரியாமையின்[3] பண்பு கொள் பெயர் தொக்கது என்றுணர்க.

வெற்றிலை - வெற்றுப்பிலி - வெற்றடி - வெற்றெனத் தொடுத்தல் - என்றாற் போல்வனவற்றுள், வெறுவிதாகிய இலை என்பது பாக்கும் கோட்டுநூறும் கூடாததாகிய பண்புணர்த்தி ஈறு தொகுதலின், 'மருவின் பாத்திய'தாய் நின்று ஒற்றடுத்தது[4]. வெறுவிதாகிய உப்பிலி என்றது, சிறிதும் உப்பிலி என நின்றது.ஏனையவும் அன்ன. இங்ஙனம் ஐம்பாலும் தொகுத்தற்குரிய முதனிலை ஆதலின் புணர்த்த லாகாமை கூறினார்.

இனி, ஆடரங்கு - செய்குன்று - புணர்பொழுது - அரிவாள் - கொல்யானை- செல்செலவு - என நிலம் முதலாகிய பெயரெச்சம் தொக்க வினைத்தொகைகளை விரிக்குங்கால் (சொல். 236 நச்.) ஆடின அரங்கு எனச் செய்த என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த அகர ஈறு இறப் புணர்த்தியும், ஆடாநின்ற அரங்கு - ஆடும் அரங்கு - எனச் செய்யும் என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த உம் ஈறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தியும், அவற்றான் ஆய புடைபெயர்ச்சியைத் தோற்றுவித்து இரண்டு பெயரெச்சமும் ஒரு சொற்கண் ஒருங்கு தொக்கு நிற்றலின், அதனை ஒரு பெயரெச்சத்தின் அடக்கிப் புணர்க்கலாகாமையின் புணர்க்கலாகாது[5] என்றார். உம் இறுதி நிகழ்வும் எதிர்வும் உணர்த்துமாறு 'வினையின் தொகுதி' (சொல். 415 நச்.) என்னும் எச்சவியற் சூத்திரத்துள் கூறுதும். இவ் உம்மீறு இரண்டு காலமும் ஒருங்குணர்த்துதற் சிறப்பு நோக்கிச் செய்து என்பதனை ஆசிரியர் முற்கூறாயினார்.

இனி, பத்து என நிறுத்திப் பத்து எனத்தந்து புணர்க்கப் படாது பப்பத்து எனவும் பஃபத்து எனவும் வழங்குமாறு

உணர்க. ஒரோவொன்று என்பதும் அது. அதுதானே 'ஓரொன்றோரொன்றாகக் கொடு' என்றாற் புணர்க்கப்படும்.[6]

இனி, பத்து என நிறுத்திப் பத்துஎனத் தந்து புணர்க்கப் படாது பப்பத்து எனவும் பஃபத்து எனவும் வழங்குமாறு உணர்க.

ஒரோவொன்று என்பதும் அது. அதுதானே 'ஓரொன் றோரொன்றாகக் கொடு' என்றாற் புணர்க்கப்படும்.[6]

இனி, 'அன்ன பிறவும்' என்றதனானே, உண்டான் என்புழி, உண் என்னும் முதனிலையும் -காலம் காட்டும் டகரமும் - இடனும் பாலும் உணர்த்தும் ஆனும் - ஒன்றனோடு ஒன்று புணர்க்கப்படா, அவை நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியும் அன்மையின்.[7]

கரியன் என்புழி, கரு என நிறுத்தி அன் எனத் தந்து புணர்க்கப்படாது, அஃது இன்னன் என்னும் பொருள் தருதலின்.[8]

ஏனை வினைச்சொற்களும் இவ்வாறே பிரித்துப் புணர்க்கலாகாமை உணர்க.

இன்னும் அதனானே, கொள்ளெனக் கொண்டான் என்புழி, கொள் என்பதனை என என்பதனொடு புணர்க்கப் படாமையும்,[9] ஊரன் வெற்பன் முதலிய உடைப் பெயர்களும்[10] (சொல். 167 நச்.), பிறவும் புணர்க்கப் படாமையும் கொள்க.

இவ்வாசிரியர் புணர்க்கப்படா என்ற இச்சொற் களையும் வடநூற்கண் முடிந்த அனகன் அனபாயன் அகளங்கன் முதலிய வடசொற்களையும் பின்னுள்ளோர் முடித்தல் முதனூலொடு மாறுகொளக் கூறலாம் என்றுணர்க. (77)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

*482.* 1. எனவென் எச்சமாகக் குறிப்புப்பொருள் தோன்ற வருதல் காண்க.

2. பாலுணர்த்தும் இறுதிநிலையைப் 'பண்புகொள் ஈறு' என்றார்.

3. பண்பும் பண்பியும் ஒன்றாக மாட்டாமையான் என்க.

4. வெறுமை+இலை : றகர ஒற்று இரட்டித்து ஈறுகெட்டு முடிந்தது.

5. முக்காலத்தையும் காட்டவல்ல பெயரெச்ச வுறுப்பினை ஒரு காலம் காட்டுவதாக விரித்தல் பொருந்தாமை காண்க.

6,7,9. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.

8. நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியுமாகக் கரு+அன் நில்லாமை காண்க.

10. ஊரன் என்பதனையும், உடைப்பொருளும் உடையானுமாக நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியு மாகப் பிரித்து முடிக்கலாகாமை உணர்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*483.* உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
...............உணரத் தோன்றா.

'செய்யும் செய்த என்னும் கிளவியின், மெய்பொருங் கியலும் தொழில்தொகு மொழியும்' என்பது வினைத் தொகையைக் குறிக்கும். அங்குக் காலத்தைக் காட்டும் வினைப்பகுதி தொக்கது காண்க. ஈண்டுத் தொழில் என்றது வினையின் ஒருபகுதி எனப் பொருள்படும். ஆகலின்,

'வினையின் தொகுதி காலத் தியலும்' (சொல். 415) என்ற சூத்திரத்திற்கு இளம்பூரணர் கூறிய பொருள் பொருந்துமன்றி, சேனாவரையர் கூறும் பொருள் பொருந்தாது.

*483.* [சாத்திரியார் 'காலத்தைக் காட்டும் வினையின் பகுதி' வினைத்தொகையில் மறைந்துளது என்றார். வினைப்பகுதி என்றற்குப் பெயரெஞ்சு கிளவியாகிய வினைச்சொல்லில் காலங்காட்டவல்ல இடைநிலை யுறுப்போ இறுதிநிலை யுறுப்போ தொக்கதாகக் கொள்ளல் வேண்டும்.]

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*482.* உயிரும் புள்ளியும் இறுதி யாகிச்

......................

புணரியல் நிலையிடை உணரத் தோன்றா.

குறைச்சொற்கிளவி முதலியன 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' என்று ஆசிரியர் கூறியதற்கு உரையாளர் கூறியிருக்கும் காரணங்கள் பாராட்டற்பாலன.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*482.* உயிரும் புள்ளியும்......... உணரத் தோன்றா.

வரலாறு :

பசப்பு பசலை பசத்தல் பசந்தாள் பசந்து பசந்த பசவா எனப் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாக வரும் 'பச' என்னும் உரிச்சொற்கு அடியாகக் குறிப்புப் பற்றி வருவது பச் என்னும் குறைச்சொல்லாகும்.

உவப்பு உவகை உவந்தான் உவந்து உவந்த உவவா என்னும் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாக வரும் 'உவ 'என்னும் உரிச்சொற்கு அடியாகக் குறிப்புப் பற்றி வருவது 'உவ்' என்னும் குறைச்சொல்லாகும்.

கார் கரி கருப்பு கருமை கருத்தல் கரிந்தான் கரிந்து கரிந்து கரியா எனப் பெயர்வினைகட்கு முதனிலையாக வரும் 'கரு' என்னும் உரிச்சொல்லின் அடி பண்பு பற்றி வரும் 'கர்' என்னும் குறைச்சொல்லாகும்.

ஆர்வம் ஆர்ப்பு ஆர்த்தல் ஆர்த்தான் ஆர்த்து ஆர்த்த ஆர்த்திலா எனப் பெயர்வினைகட்கு முதனிலையாக வரும் ஆர் என்னும் உரிச்சொற்கு அடி இசைபற்றி வரும் அர் என்னும் குறைச்சொல்லாகும்.

அங்ஙனம் நிற்கும் பச் உவ் கர் அர் என்னும் குறைச் சொற்கள், மேல்வந்த (அகர உகர) இடைச்சொல்லொடு கூடியும் (அர் ஆரென) நீண்டும் பச உவ ஆர் என நிற்பவை, நிலைமொழி வருமொழி செய்து புணர்க்க இயலாமல் மரூஉ முடிபு போல நிற்றலின், அவ்வாறு வருவனவற்றை யெல்லாம் 'மருவின் பாத்திய' என்றார்.

இங்ஙனமாக ஒருமொழிப் புணர்ச்சியாய்ப் பால் காட்டும் ஈறுகளொடும் காலங்காட்டும் உறுப்புக்களொடும் இணைந்து, நாடன் ஊரன் எனவும் வந்தான் கண்டான் எனவும் வருவனவும், பிரித்துப் புணர்க்கப்படா என்பது போதரும்.

அடிநிலையாகிய குறைச்சொற்கள் பொருந்தும் எழுத்துக்களைப்பெற்று நிரம்பிப் பெயர்வினைகளின்பாற் படுதற்கு உரியவாய், உரு குரு அலமரல் தெருமரல் அதிர்வு விதிர்ப்பு தட கய நளி உறு தவ - என நிற்பின், உருகெழு கடவுள் -குருமணித்தாலி-அலமரல்ஆயம் - எனவும், மன அதிர்வு - கைவிதிர்ப்பு - எனவும் நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்பெறும் என்க.

ஒவ்வொன்று இவ்விரண்டு மும்மூன்று நன்னான்கு அவ்வைந்து அவ்வாறு எவ்வேழு எவ்வெட்டு ஒன்னொன்பது பப்பத்து - என அளவைப் பொருட்டாய் வழக்கின்கண் தம்முன் தாம் வரும் எண்ணுப்பெயர்களின் நிலைமொழி வரையறையின்றித் திரிந்து நிற்றலின், அவையும் பிரித்துப் புணர்க்கப்படா என்றார்.

ஓரொன்று ஈரிரண்டு நானான்கு ஐயைந்து என வரின் புணர்க்கப்படும். இவை உறழ்ச்சிப் பொருள் பற்றி நிற்கும்.

## இளம்பூரணம்

### *484. இவ்வதிகாரப் புறனடை*

**கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்**
**வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்**
**விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்**
**வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்**
**நன்மதி நாட்டத்து என்மனார் புலவர்.**

இச்....எனின், இவ்வதிகாரப் புறனடை உணர்த்து...ற்று.

(இ-ள்.) முன் எடுத்தோதின அல்லாதன செய்யுளிடத்து வேறுபட வருவனவற்றையும், வழக்கு நடக்குமிடத்து மருவுதலொடு வேறுபட வருவனவற்றையும், முன்சொன்ன முடிபிற்கையின் வேறுபடத்தோன்றின், நல்லறிவினது ஆராய்ச்சியான், வழக்கு இயலுமிடத்து அவற்றின் முடிபு வேறுபாடுகளை அறிந்து நடத்துக என்று சொல்லுவர் புலவர் எ-று.

(உ-ம்.) நறவங்கண்ணி, கள்ளியங்கோடு, புன்னையங் கானல் (அகநா. 80) பொன்னந்திகரி (புறநா. 365), ஆரங் கண்ணி, கானலம் பெருந்துறை (ஐங். 158) - என இவை வேற்றுமைக்கண்[1] அம்முப்பெற்று முடிந்தன.

'நெய்தலஞ் சிறுபறை'[2] என்பது, அல்வழிக்கண் அம்முப்பெற்று முடிந்தது.

'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை' (நற். 62) என்பது, ரகர ஈறு அத்துப்பெற்று முடிந்தது.

முளவுமா (மலைபடு. 176), பிணவுநாய் (ஷ 177) என்பன, அல்வழிக்கண் மென்கணத்துக் குறியதன் இறுதிச் சினைகெட்டு உகரம் பெற்று முடிந்தன[3].

'அஞ்செவி நிறைய மந்திரம் கூறி' என்பது, அகம் என்னும் நிலைமொழி செவி என்னும் வருமொழியொடு வேறுபட முடிந்தது.[4]

'ஆயிடை' (தொல். பாயி.) என்பது, அவ் என்னும் வகர ஈறு வேறுபட முடிந்தது[5].

தடவுத்திரை தடவுத்தோள்[6] - என்பன உரிச்சொல் முடிபு.

'அருமருந்தன்னான்' எனற்பாலது 'அருமருந்தான்' என மரூஉவாய் முடிந்தது. சோணாடு, மலாடு - என்பனவும் அது, பொதியில் என்பதும் அது[7]. (78)

**எழுத்ததிகாரம் இளம்பூரணம் முற்றிற்று.**

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

**484.** 1) நறவினை (தேனை) யுடைய கண்ணி, கள்ளியினது கோடு, புன்னையையுடைய கானல், பொலிவினையுடைய திகிரி, ஆர் மலரால் தொடுத்த கண்ணி, கானலின்கண் உள்ள பெருந்துறை என்று பொருள்செய்க.

2) நெய்தலாகிய சிறுபறை என இருபெயரொட்டு.

3) முளவுமா - முள்ளம்பன்றி; பிணவுநாய் - பெண்நாய். 235ஆம் சூத்திரத்தான் வேற்றுமை முடிபு கூறினார். இவை இருபெயரொட்டாகிய அல்வழி முடிபு.

ஈண்டு முளா, பிணா என்பன மென்கணம் வரும்வழி இறுதிச் சினையாம் ஓர் அகரக்குறில் கெட்டு நின்ற அகர ஈற்றோடு உகரம் பெற்று, முளவுமா பிணவுநாய் என முடிந்தன. ('பிணா' என்பது போல 'முளா' என ஒரு 'குறியதன் இறுதி' ஆகார வீற்றுச் சொல் உண்டா என்பது தெரிந்திலது. முளவுமா என்ற புணர்மொழியே முள்ளம் பன்றியைக் குறிக்கிறது. உரையாசிரியர் கூற்றுச் சொற் பிறப்பியலொடு பொருந்தாமை காணலாம்.)

4. அகச்செவி எனப் பொது விதியான் முடியாது 'அங்கை' (316) போலவே 'அஞ்செவி' என முடிந்தது.

5) வேங்கடமும் குமரியுமாகிய எல்லையிடங்கள் இரண்டனைக் குறிக்க வரும் நிலைமொழி 'அவ்' 'இடை'யொடு புணருமிடத்து அவ்விடை எனக் குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டி (161)ப் பொதுவிதியான் முடியாது, வகரம் கெட்டு அகரம் நீண்டு யகரவுடம்படுமெய் பெற்று (இவ்வாறு வேறுபட) முடிந்தது.

6) உரிச்சொல் உகரச்சாரியை பெற்றது.

7) பொதுவில் பொதியில் என முடிந்தமை மரூஉ முடிவாம். "எல்லார்த் தேவர்களுக்கும் பொதுவாகிய இல் பொதியில் என்பது" என்பது இறையனார் களவியல் உரை (சூ. உ-எழுத்து உ-எண்).

இவ்வதிகாரப் புறனடையான் நச்சினார்க்கினியரும் அடியார்க்கு நல்லாரும் புணர்நிலை முடிபுகள் சுட்டிய பகுதிகள் சிலவற்றை **அடிகளாசிரியர்** குறிப்பிடுகிறார். அவை வருமாறு:

"நும் என்னும் சொல் நீஇர் என முழுவதும் திரியாது மகரம் நிற்பத் திரிந்து நீம் என நின்றது." (சீவக. 1932 நச். உரை)

"'இரவு தலைப்பெயரும்' என்பதனை 'இரவுத்தலை என்றார்'. தடவுத்திரை போல வல்லெழுத்துப் பெற்றது." (சிலப். 4 : 80 அடியார்க். உரை)

"பொது+இல்=பொதியில். உகரவீறு இகரமாய்த் திரிந்து உடம்படுமெய்யும் பெற்று முடிந்தது". (சிலப். 1 : அடியார்க். உரை)

'கிளந்த வல்ல' என்னும் இவ்வதிகாரப் புறனடையால் இவ்வுரைகாரர் இருவரும் இப்புணர்ச்சி முடிபுகள் கொண்டனர்.

இனி, கலி. 92இல் நச்சினார்க்கினியர், தம் உரையுள் "மா+இனம்=மாயினம் என, மரூஉ வாய் யகரவுடம்படுமெய் பெற்றது என்பார்." (எழுத். 140ஆம் சூத்திர வுரையுள், யகர வகர உடம்படுமெய்கள் வரையறை யுடையவாய் வருமாற்றை உரையாசிரியர் இருவரும் குறிப்பிட்டனர்.)

**நச்சினார்க்கினியம்**

## *483. அதிகாரப் புறனடை*

கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத்து என்மனார் புலவர்.

இஃது இவ்வதிகாரத்து எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றை யெல்லாம் இதனானே முடிக்க என அதிகாரப்புறனடை கூறுகின்றது.

*(இ-ள்.)* கிளந்த......திரிநவும் - முன்னர் எடுத்தோதப் பட்டன அல்லாத சொற்கள் செய்யுளிடத்துத் திரிந்து முடிவனவும்; வழங்கியல்.....திரிநவும் - நால்வகை வழக்கும் நடக்குமிடத்து மருவுதலொடு திரிந்து முடிவனவும்;

விளம்பிய......தோன்றின் - முன்னர்க் கூறிய இலக்கண முறைமையினின்றும் வேறுபடத் தோன்றுமாயின்;

நன்மதி நாட்டத்து - *(அவற்றை)* நல்ல அறிவினது ஆராய்ச்சியாலே: வழங்கியல்....புலவர் - வழக்கு முடிந்து நடக்குமிடத்தே, முடிபுவேறுபாடுகளை அறிந்து நடாத்துக என்று கூறுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* தடவுத்திரை என உகரமும் வல்லெழுத்தும் பெற்றும், தடவுநிலை (புறநா. 140) என உகரம் பெற்றும் அகர ஈற்று உரிச்சொல் வந்தது.

அதவத்தங்கனி என வேற்றுமைக்கண் அகரஈறு அத்துப் பெற்றது. 'கசதபத் தோன்றின்' (203) என, பகர ஈற்றின் முன்னர்த் தகரம் கொடுக்க.[1]

'நறவங் கண்ணி நற்போர்ச் செம்பியன்
குரவ நீடிய கொன்றையங் கானல்'

என, ஆகார இறுதி குறியதன் இறுதிச் சினை கெட்டு இருவழியும் அம்முப் பெற்றன.[2]

'முளவுமா தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ' (மலைபடு.176)

என, அவ்வீறு அல்வழிக்கண் அம்முப் பெறாத முடிபு பெற்றன.[3]

'திண்வளி விசித்த முழவோ டாகுளி' (மலைபடு.3)
'சுறவெறி மீன்' 'இரவழங்கு சிறுநெறி' (அகநா. 318)

என, இவை உகரம் பெறாமல் வந்தன[4].

'கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை' (அகநா.97)

என, இகர ஈறு வேற்றுமைக்கண் அம்முப் பெற்றது.[5]

'தீயி னன்ன வொண்செங் காந்தள்' (மலைபடு. 145)

என, ஈகார ஈறு வேற்றுமைக்கண் இன் பெற்றது.[6]

'நல்லொழுக்கம், காக்கும் திருவத் தவர்' (நாலடி. 57)

என, உகர ஈறு வேற்றுமைக்கண் அத்துப் பெற்றது[7]

'ஏப்பெற்ற மான் பிணை போல' (சீவக. 2965)

என, ஏகார ஈறு வேற்றுமைக்கண் எகரம் பெறாது வந்தது[8].

'கைத்துண்டாம் போழ்தே' (நாலடி. 19)
'கைத் தில்லர் நல்லர்' எனவும்,

'புன்னையங் கானல்' (அகநா. 80) 'முல்லையந் தொடையல்' எனவும், ஐகார ஈறு வேற்றுமைக்கண் அத்தும் அம்மும் பெற்றன.[9]

'அண்ணல் கோயில் வண்ணமே (சீவக. நாமகள்.126)

என, ஓகார ஈறு யகர உடம்படுமெய் பெற்றது (293).

இனி, 'அஞ்செவி நிறைய ஆலின' (முல்லைப். 89)

என அல்வழிக்கண் ககரமும் அகரமும் கெட்டன.[10]

'மரவம் பாவை வயிறாரப் பருகி'
'மரவ நாகம் வணங்கி மாற்கணம்'

என, இருவழியும் மகரம் விகாரப் பட்டு அம்முப் பெற்றன.[11]

'காரெதிர் கானம் பாடினே மாக' (புறநா. 144)
'பொன்னந் திகிரி முன்கமத் துருட்டி' (ஷ்ஷ 365)
'பொன்னங் குவட்டிற் பொலிவெய்தி'

என, னகரஈறு இருவழியும் அம்முப் பெற்றன.[12]

'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை' (நற்.62)

என, ரகர ஈறு வேற்றுமைக்கண் அத்துப் பெற்றது.[13]

'நாவலந் தண்பொழில்' (சிலப. 17 : 1 : 3)
'கானலம் பெருந்துறை' (அகநா. 5, ஐங். 158)

என, லகர ஈறு வேற்றுமைக்கண் அம்முப் பெற்றன. 'நெய்தலஞ் சிறுபறை' : இஃது அல்வழிக்கண் அம்முப் பெற்றது[14].

'ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல்' (குறுந். 43) என்புழி, ஆயிடை என்பது உருபாதலின், 'நீட வருதல்' (208) என்பதனான் முடியாது நீண்டு வகரஒற்று வேறுபட முடிந்தது.[15] அ என்னும் சுட்டு 'அன்றி யனைத்தும்' எனத் திரிந்தது. (224).

'முதிர்கோங்கின் முகை' (குறிஞ்சிக். 20) எனவும், 'காய் மாண்ட தெங்கின் பழம்' (சீவக. 31) எனவும் குற்றுகர ஈறு இன்பெறுதலும் கொள்க.[16]

'தொண்டுதலை யிட்ட பத்துக்குறை' (செய்.97 ) என ணகரம் இரட்டாது தகரஒற்று டகரஒற்றாய்க் குற்றியலுகரம் ஏறி முடிந்தது.[17]

இங்ஙனம் செய்யுளுள் பிறவும் திரிவன உளவேனும், இப்புறனடையான் முடிக்க.

அருமருந்தான் என்பது ரகரவுகரம் கெட்டு அருமருந்தான் என முடிந்தது.[18]

'சோழனாடு' சோணாடு என அன்கெட்டு முடிந்தது; பாண்டி நாடும் அது.

'தொண்டைமானாடு' தொண்டைநாடு என ஈற்றெழுத்துச் சில கெட்டு முடிந்தது.

மலையமானாடு மலாடு என முதலெழுத்து ஒழிந்தன பலவும் கெட்டு முடிந்தது.

பொதுவில் என்பது பொதியில் என உகரம் திரிந்து இகரமாய் யகரஉடம்படுமெய் பெற்று முடிந்தது.

பிறவும் இவ்வாறே திரிந்து மருவி வழங்குவன எல்லாம் இப்புறனடையான் அமைத்துக்கொள்க.[19] *(78)*

**நச்சினார்க்கினியம் முற்றிற்று.**

## நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***483.*** *1. அத+அத்து+அம்+கனி= அதவத்தங்கனி (சூ.140,129).*

*2. நறா + கண்ணி > நற+அம்+கண்ணி (சூ. 140, 129)- வேற்றுமை. குரா+நீடிய > குர + அம் + நீடிய (சூ. 140); மகரக் கேடு கொள்க -அல்வழி.*

*3. இளம்பூரணர் உரைக்குறிப்புக் காண்க.*

*4. முழ + ஒடு : வகரம் உடம்படுமெய் என்றார். சுற+எரி= ஈண்டும் அது.*

உகரம் பெற்று முழவு சுறவு என நின்று, உயிர் வருவழி முற்றுகரம் கெட்டது என்றும் கொள்ளக்கூடும். உகரம் பெறாமல் முடிப்பது இவர் கருத்து.

# ஒத்த நூற்பாக்கள்

## குற்றியலுகரப் புணரியல்

### *சூத்திரம்-1*

.......................................வன்மைமேல் உகரம்
உறுவது நையும் தொடர்மொழிப் பின்னும்
நெடிற்பின்னுமே. **வீ. சோ. 2**

தொடர்நெடில் கீழ்வன்மை மேல் உகரம்.....குன்றும்.**நேமி.4**

நெடிலோடு ஆய்தம் உயிர்வலி மெலிஇடைத்
தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்
அஃகும் : பிறமேல் தொடரவும் பெறுமே. **நன். 94**

நெடிலோடு...........
............................
அஃகும் என்மனார் ஆயுங் காலே. **இ.வி. 16**
....................................

ஈரெழுத் தொருமொழி இடைத்தொடர் உயிர்த்தொடர்
.............................
.............................உகரம் குறுகிடன். **மு.வீ.புணரியல் 228**

### *சூத்திரம்-2*

அவற்றுள்,
ஈரெழுத் தொருமொழி இடைத்தொடர் ஆகா.
(ஈரொற்றுத் தொடர்மொழி என்றே இருத்தல் வேண்டும்)

மு.வீ.பு. 230

## சூத்திரம்-3

இருவழி மருங்கினும் குற்றிய லுகரம்
எல்லாம் குறுகாது என்மனார் புலவர். மு.வீ.பு.231

## சூத்திரம்-4

வன்தொடர் அல்லன முன்மிகா அல்வழி. நன். 181,இ.வி.100

## சூத்திரம் - 5

இகரம் குறுகி வரும் குற்றுகரம்பின் ய-வரினே. வீ.சோ.3

தொடர்நெடில்கீழ் வன்மைமேல் உகரம் ய - பின்பு
அடைய வரும் இகரம்......குன்றும். நேமி.4

யகரம் வரக்குறள் உ- திரி இகரமும்
..................................குறிய. நன். 93

யகரம் வரக்குறள் உ - தப வருஉம்
இகரமும்..................குறிய. இ.வி.15

யகரம் வருவழி இகரம் குறுகும். மு. வீ. பு. 232

## சூத்திரம் - 6

நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
ட ற - ஒற்று இரட்டும் வேற்றுமை மிகவே. நன்.183, இ.வி.102

நெடிலோடு..........வேற்றுமைப் பொருட்கே. மு.வீ.பு. 233

## சூத்திரம் - 7

ஒற்றிடை மிகாக் குற்றுகரமும் உளவே,
வல்லினம் மிகல்அத் திறத்தினுள் இலவே. மு.வீ.பு.235

***சூத்திரம் - 8***

இடைத்தொடர் ஆய்தத்தொடர் ஒற்று இடையின்
மிகா நெடில் உயர்த்தொடர் முன்மிகா
வேற்றுமை. **நன்.**182,**இ.வி.**101

இடைத்தொடர் ஆய்தத் தொடர் இயல்பாகும். **மு.வீ.பு.** 237

***சூத்திரம் - 9***

மென்தொடர் மொழியுள் சில வேற்றுமையில்
தம்இன வன்தொடர் ஆகா மன்னே. **நன்.**184, **இ.வி.**103.

***சூத்திரம் - 10***

மரப்பெயர்க் கிளவி அம்மொடு - சிவணும். **மு.வீ.பு.** 239

***சூத்திரம் - 11*** **மு.வீ.பு.** 240

***சூத்திரம் - 12***

நெடில்தொடர் வன்தொட ரில்சில அம்இடை
வரற்கும் உரியன ஆகும் என்ப. **மு. வீ. பு.** 241

***சூத்திரம் - 13***

அக்கொடு வருஉம் மொழியுமார் உளவே. **மு.வீ.பு.** 242

***சூத்திரம் - 15*** **மு.வீ.பு.** 244

***சூத்திரம் - 16***

அவற்றுள்,
பெண்டு அன்னொடு வருஉம் பெற்றித் தாகும். **மு.வீ.பு.** 245

***சூத்திரம் - 17***

சுட்டின்முன் ஆய்தம் அன்வரின் கெடுமே. **நன்.** 251

யாது என் இறுதியும்.........ஆவயி னான,
(தொல். உருபியல் 28) **இ. வி.** 156

யாதும் ஆய்தச் சுட்டும் அன்பெறும்
ஆவயின் ஆய்தம் அழியும் சுட்டே. மு.வீ.பு. 246

## சூத்திரம் - 18

ஆவி நிலையும் ஆய்தப் புள்ளி. மு.வீ.பு. 247

## சூத்திரம் - 19

ஏனைய கணம்வரின் இல ஆகும்மே. மு.வீ.பு. 248

## சூத்திரம் - 20

வன்தொடர் அல்லன முன்மிகா அல்வழி. நன். 180
அல்வழிக்கண் எலாம் மிகாது இயல்பாகும். மு.வீ.பு. 249

## சூத்திரம் - 21

வன்தொடர் அல்லன முன்மிகா அல்வழி. நன். 180
வல்லெழுத்து இயையின் வன்தொடர் மிகுமே. மு.வீ.பு. 250

## சூத்திரம் - 22

சுட்டுமுதல் நீடிய மென்தொடர் மொழியும்
யாகார வினாமுதல் மென்தொடர் மொழியும்
அவ்வியல் நிலைபெறும் ஆயுங் காலே. மு.வீ.பு. 251

## சூத்திரம் - 23

அவற்றுள்,
யாகார வினா இயல்பாகலும் உளவே. மு.வீ.பு. 252

## சூத்திரம் - 24

அந்நான்கு மொழியும் தம்நிலை திரியா. மு.வீ.பு. 253

## சூத்திரம் - 25

உண்டு-என் பெயரே உண்மை செய்யின்,
இயல்பு ஆதலும், ஈறு அழிதலும், ணகாரம்
ளகாரம் ஆதலும், உரியன ஆகும். மு.வீ.பு.254

### சூத்திரம் - 26

மு.வீ.பு. 255

### சூத்திரம் - 27

திசையொடு திசையும் பிறவும் சேரின்,
நிலை ஈற்று உயிர்மெய் க - ஒற்று நீங்கலும்,
றகரம் னல - வாத் திரிதலும் ஆம்பிற.நன்.186,இ.வி.பு.105,மு.வி.பு.256

### சூத்திரம் - 28

ஒன்றுமுதல் (ஈரைந்து ஆயிரம் கோடி
எண்நின்ற அளவும் பிற)வரின் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத்து இன்னும் (இற்றும்
ஏற்பது) ஏற்கும். நன். 197, இ.வி.115

இரண்டுஒழித்து ஏனைய இருநான்கு எண்களும்
பத்தின் முன்வரும் காலை யான
குற்றிய லுகரம் முற்றக் கெடுமே
ஒன்பான் ஒழிய இன்னொடு வரும் என்ப. மு.வீ.பு. 257

### சூத்திரம் - 29

இரண்டு முன்வரின் பத்தின்ஈற்று உயிர்மெய்
கரந்திட ஒற்று ன-ஆகும் என்ப. நன்.198, இ.வி.116மு.வீ.பு.258

### சூத்திரம் - 30

(ஒன்றுமுதல் ஈரைந்து) ஆயிரம் (கோடி)
.............வரின்..............................
.................இன்னும்..................
(ஏற்பது) ஏற்கும். நன்.197, இ.வி. 115
ஆயிரம் வரினும் இன்னொடு நிலையும். மு. வீ. பு. 259

### சூத்திரம் - 31

நன். 197, இ. வி. 115 -இவற்றுள் ஏற்றவாறு அமைத்துக்
கொள்க.

நிறையும் அளவும் நேருங் காலைக்
குறையா தாகும் இன் - என் சாரியை. மு.வீ.பு. 260

### சூத்திரம் - 32

முதல் இருநான்காம் எண்முனர்ப் பத்தின்
இடைஒற்று ஏகல் ஆய்தம் ஆகல்
எனஇரு விதியும் ஏற்கும் என்ப. நன். 195

ஒன்றுமுதல் எட்டூஈற்று எண்முனர்ப் பத்தின்
இடைஒற்று...........என்ப. இ. வி. 113

ஒன்றுமுதல் ஒன்பான்முன் பத்திடை
மெய்கெட ஆய்தம் ஆறுஅல்லா வழியே. மு.வீ.பு. 261

### சூத்திரம் - 33, 34

ஒன்றன் புள்ளி ரகரம் ஆக,
இரண்டன் ஒற்று உயிர்ஏக உ - வருமே. நன். 189, இ. வி. 107

ஒன்றன் ஒற்றே ரகாரம் ஆகும்;
இரண்டன் ஒற்று உயிர்ஏக உ - வருமே. மு. வீ. பு. 263

### சூத்திரம் - 35

எண்நிறை அளவும் பிறவும் எய்தின்,
......................................................
.......................................மூன்று ஆறு
(ஏழ்) குறுகும்.

மூன்றன் உறுப்பு அழிவும் வந்ததும் ஆகும்.
நன். 188,190,இ.வி.108

மூன்றன் மெய்யே பகாரம் ஆகும். மு.வீ.பு. 264

### சூத்திரம் - 36

நான்கன் மெய்யே (ல) ற - ஆகும்மே. நன். 191, இ.வி. 109

நான்கன் மெய்யே றகாரம் ஆகும். மு.வீ.பு. 265

### சூத்திரம் - 37 மு.வீ.பு. 266

## சூத்திரம் - 38

எட்டன் உடம்பு ண - ஆகும் என்ப. நன். 193, மு.வீ.பு. 267

## சூத்திரம் - 39, 57

ஒன்பானொடு பத்து நூறதனை, ஓதுங்கால்
முன்பாம் தகரம், ணள - முன்பு இரட்டும்; - பின்பான
எல்லாம் கெட்டு ஆறுஇரண்டு ஆவியின்பின் வல்லுகரம்
நல்ஆயிரம் ஈறாய் நாட்டு. நேமி.21

ஒன்பானொடு பத்தும் நூறும், ஒன்றின்,
முன்னதின் ஏனைய முரணி ஒவ்வொடு
தகரம் நிறீஇப் பஃதுஅகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே. நன். 194, மு.வீ.பு.285

ஒன்பானொடு பத்தும் நூறும் ஒன்றின்,
ஒன்றிய இரண்டும் ஊறும் ஆயிரமும்
என்று திரிய இறுதிய கெடுவழி
நின்ற னகரம் நிரலே ணள - வாய்
இரட்ட ஒகரமிசைத் தகரம் இரட்டும். இ. வி. 112

## சூத்திரம் - 40

அளவும் நிறையும் வரின் இயல் பாகும். மு. வீ. பு. 269

## சூத்திரம் - 41

மூன்றன் உறுப்பு (அழிவும்) வந்ததும் ஆகும். நன். 190, இ.வி.108
மூன்றன் புள்ளி வந்ததும் ஆகும். மு.வீ.பு. 270

## சூத்திரம் - 42

ஐந்தன்ஒற்று (அடைவதும்) இளமும் (கேடும்). நன்.192, இ.வி.110
ஐந்தன் ஒற்றே மெல்லெழுத் தாகும். மு. வீ. பு. 271

## சூத்திரம் - 43

வல்லெழுத்து வருஉம் காலை யான. மு.வீ.பு. 272

## சூத்திரம் - 45

மூன்றந் உறுப்பு (அழிவும்) வந்ததும் ஆகும். நன.190,இ.வி.108
ஐந்தும் மூன்றும் நம-வருகாலை
ஒற்றியல் நிலைகெட வந்ததும் ஆகும். மு. வீ. பு. 273

## சூத்திரம் - 46 மு. வீ. பு. 274

## சூத்திரம் - 47

நான்கன் மெய்யே ல (ற) - ஆகும்மே. நன்.191, இ.வி.109
நான்கன் மெய்யே லகாரம் ஆகும். மு.வீ.பு.275

## சூத்திரம் - 48

ஐந்தன் ஒற்று (அடைவதும் இனமும்) கேடும். நன்.192,இ.வி.110
ஐந்தன் ஒற்றே அடியொடு கெடுமே. மு.வீ.பு. 276

## சூத்திரம் - 49

ஒன்றும் இரண்டும் உயிர்வரு காலை
உகரம் கெடுதல் ஆவயி னான. மு. வீ. பு. 277

## சூத்திரம் - 50

மூன்றன் உறுப்பு (அழிவதும்) வந்ததும் ஆகும். நன்.190,இ.வி.108
நான்கன் மெய்யே ல (ற) - ஆகும்மே. நன். 191, இ.வி.109
ஐந்தன் ஒற்று (அடைவதும் இனமும்) கேடும். நன்.192,இ.வி.110
மூன்றும் நான்கும் ஐந்தும் தோன்றிய
வகரத்து உருவாய் வழங்கும் என்ப. மு.வீ.பு. 278

## சூத்திரம் - 51

உழக்கு வரின்முதல் நீளும்மூன்று எண்ணே. மு.வீ.பு.279

## சூத்திரம் - 52

ஆறும் அவ்வியல்பிற்று ஆகும் (என்ப). மு.வீ.பு. 280

## சூத்திரம் - 53

ஒன்பான் இன்னொடும் ஒழுகும் என்ப. மு.வீ.பு. 281

## சூத்திரம் - 54

நூறு - என் கிளவி வரின்இயல்பு ஆகும். மு.வீ.பு. 282

## சூத்திரம் - 55

மூன்றன் மெய்யே நகாரம் ஆகும். மு.வீ.பு. 283

## சூத்திரம் - 56

நான்கும் ஐந்தும் முதல்நிலை திரியா. மு.வீ.பு. 284

## சூத்திரம் - 58

உகரம் கெடும் முதலோடும் இரண்டும்
ஆயிரம் முன்வரும் காலை யான. மு.வீ.பு. 286

## சூத்திரம் - 60

மூன்றன் மெய்யே வகாரம் ஆகும். மு.வீ.பு.287

## சூத்திரம் - 61

நான்கன் மெய்யே லகாரம் ஆகும். மு.வீ.பு. 288

## சூத்திரம்-62

ஐந்தன் மெய்யே யகாரம் ஆகும்.

## சூத்திரம் - 63

ஆறு-என் கிளவி அதன்நிலை திரியா. மு.வீ.பு. 290

## சூத்திரம் - 64

ஒன்பான் இன்னொடு வருமென மொழிப. மு.வீ.பு. 291

## சூத்திரம் - 65

நூறாயிரம் வரின் இயல்பா கும்மே. மு.வீ.பு. 292

## சூத்திரம் - 66, 67 மு.வீ.பு. 293, 294

## சூத்திரம் - 68

அளவொடு நிறைவரின் அவ்வியல் நிலையும். மு.வீ.பு. 295

## சூத்திரம் - 69

ஒருபஃது ஆதிமுன் ஒன்றுமுதல் ஒன்பான்
எண்ணும் அவைஊர் பிறவும் எய்தின்
ஆய்தம் அழியஆண்டு ஆகும் தவ்வே. நன். 196

ஒருபது ஒருபஃது ஆதிஒன்று ஆதி
ஒன்பதும் அவைஊர் பிறவும் எய்தின்
கெடுதலும் திரிதலும் இல்லெனமொழிப. இ.வி.114

ஒன்றுமுதல் ஆகிய பத்துஊர் கிளவி
ஒன்றுமுதல் ஒன்பாற்கு ஒற்றிடை மிகுமே. மு.வீ.பு.296

## சூத்திரம் - 70

ஆயிரம் வரினே இன்னே சாரியை
ஆவயின் ஒற்றிடை மிகாது இயல்பாகும். மு.வீ.பு. 297

## சூத்திரம் - 71 மு. வீ. பு. 297

---

### இப்பகுதியில்
### சுருக்கெழுத்து விளக்கம்

| | |
|---|---|
| இ. வி. | இலக்கண விளக்கம் |
| நன். | நன்னூல் |
| நேமி. | நேமிநாதம் |
| மு. வீ. பு. | முத்துவீரியம் - புணரியல் |
| வீ. சோ. | வீரசோழியம். |



## தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம்

# எடுத்துக்காட்டு அகரவரிசை

[கணேசய்யர் தொகுத்த அகரவரிசையை அடிப்படையாகக் கொண்டது]

(எண் - நூற்பாவெண்)

நம்மை 188, 161

## தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - இளம்பூரணம்

# உரைப்பொருள் அகரவரிசை

## (எண் - நூற்பாவெண்)

[அடிகளாசிரியர் பதிப்பைப் பெரும்பாலும் தழுவி உரைக்கப்பட்டன.]

## தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம்

# உரைப்பொருள் அகரவரிசை

## (எண் - நூற்பாவெண்)

[கணேசய்யர் தொகுத்த அகரவரிசையை அடிப்படையாகக் கொண்டது.]

### அ

## இ

ஈ



உ

**ஊ**

எ



ஏ

## ஐ



## ஒ

## ஓ



## ஔ



## க

கீ



கு

த



தா



தி



து



தூ



தெ

தே



தொ



ந



நா



நி

நீ



நு



நூ



நெ



ப

பா



பீ



பு

### பூ



### பெ



### பொ



### ம

**மெ**



**மொ**



**ய**



**யா**

வா



வி



வெ



வே



ழ



ள



ற

ண





# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.